# பெரிப்ளூஸ்

## (கி.பி. 50 — 80)

(கி.பி. முதல் நூற்றாண்டில் இந்தியப் பெருங்கடலில்
நடைபெற்ற வாணிக வரலாறு)

வி. எஸ். வி. இராகவன்

மணிவாசகர் நூலகம்

12-பி, மேல சன்னதி,
சிதம்பரம்

241, லிங்கிச்செட்டித் தெரு,
சென்னை-600 001.

முதல் பதிப்பு: டிசம்பர் 1977.


**ஆசிரியரின் நூல்கள்**

**டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன்**

அவர்கள் நூல்களின் தமிழ்ப்பெயர்ப்பு

1. இந்தியப் பெரியார்கள்
2. கௌதம புத்தர்
3. மதத்தில் கிழக்கும் மேற்கும்
4. இந்தியாவின் இதய ஒலி
5. சுதந்தரமும் பண்பாடும்
6. மதமும் பண்பாடும்

**பிற**

7. பிளினி
8. பெரிப்ளூஸ்
9. மெகஸ்தனிஸ்
10. தாலமி
11. யுவான் சுவாங்
12. பாஹியான்
13. மார்க்கோபோலோ
14. செந்தமிழ்ச் சிலம்பு
15. புதுநாடு கண்ட பெரியார்கள்
16. கலிவரின் பயணங்கள்
17. இராபின்சன் குரூசோ
18. சிந்துபாது
19. அறவழிகாட்டிய ஆன்றோர்கள்
20. வறுமையிற் செம்மை
21. ரிப்வான் விங்கிள்
22. வெனிசு நகரத்து வணிகன்
23. ஒதெல்லோ
24. மணிமேகலை
25. காந்திப் பெரியார்

**மற்றும் பல**

பதிப்பாசிரியர்:
**ச. மெய்யப்பன் எம்.ஏ.**

விலை ரூ. **16-00**

அச்சிட்டோர்

ஸ்ரீ ராஜராஜேஸ்வரி கம்பைன்ஸ், 42, பத்ரையன் தெரு சென்னை-1.

# பதிப்புரை

"பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
தமிழ்மொழியில் பெயர்த்தல் வேண்டும்;
இறவாத புகழுடைய புது நூல்கள்
தமிழ்மொழியில் இயற்றல் வேண்டும்."

என்பது தேசியகவி பாரதியாரின் திருவாக்கு.

"பெரிப்ளூஸ்" ரோமானியர் காலத்தில் கடற்பயணத்திற்கு உதவியளிக்கும் வகையில் வழங்கப்பட்ட குறிப்புகளின் தொகுப்பு ஆகும். இது வரலாறு எனும் பகுதியைச் சார்ந்தது.

கி.பி. முதல் நூற்றாண்டில் இந்தியாவிற்கும் மேலைநாடுகளாகிய அரேபியா, ஆப்பிரிக்கா, ரோம் முதலிய நாடுகளுடன் நடந்தேறிய வாணிக முறைகளும்; இந்தியாவின் அக் காலத் துறைமுகங்களும்; அவற்றுள் ஏற்றுமதி இறக்குமதி செய்யப்பட்ட பண்டங்களும், தமிழகத்தில் சேர, சோழ, பாண்டிய அரசர்களின் தலைநகரங்களும்; அவர்கள் நாட்டின் துறைமுகங்களும்; இமயமலை, பொதியில்மலை, விந்தியமலை, மலையாளநாட்டுமலை, இலங்கையின் ஆதாம் சிகரம் முதலியவைபற்றிய சுவைமிக்க செய்திகளும்; பொற்கட்டி, போளம், சடாமாஞ்சி, மிளகு இலவங்கபத்திரி முதலான பொருள்கள் ஏற்றுமதி செய்யப்பட்ட விவரங்களும்; பொன் நாணயங்கள், மது பானவகைகள், கண்ணாடிப் பொருள்கள் முதலியன இறக்குமதி செய்யப்பட்ட விவரங்களும்; எகிப்து நாட்டில் இந்திய மூலிகைகளின் உதவிகொண்டு சடலங்கள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்குக் கெடாத வண்ணம் பாதுகாத்து வைக்கப்பட்ட முறைகளும் ஆகிய இவைபோன்ற செய்திகள் பலவற்றைக் கி.பி. முதல் நூற்றாண்டில் ஆதாரச் செய்திகளாகத் தரும் நூல் இஃதொன்றேயாகும். இச் செய்திகள் இன்றேல், வரலாறு மண்மூடி, இருளில் புதைந்து விட்டிருக்கும்.

"பெரிப்ளூஸ்" எனும் இந் நூல் முழுமையும் இப்பொழுது தான் முதன்முதலாகத் தமிழில் வெளிவருகிறது. இப் புத்தகத்தை மணிவாசகர் வெளியீடாகக் கொணர்வதில் நாங்கள் பெருமைப் படுகிறோம்.

வரலாற்றில் சிறந்த இந் நூலில் வரும் பகுதிகளுக்கு, வரலாற்றில் புகழ் பெற்ற பேராசிரியர்கள் பலருடைய நூல்களிலிருந்து ஆங் காங்கே மேற்கோள்கள் காட்டப்பட்டுள்ளன. தமிழ் இலக்கியங் களிலிருந்து ஆங்காங்கே பொருத்தமான ஒப்புமைப்பகுதிகள்

சேர்க்கப்பட்டுள்ளன. ஊர்ப் பெயர்கள் உருவான விதங்களும் ஆங்காங்கே குறிப்பிடப்பட்டுள்ளன. தமிழ்கூறும் நல்லுலகம் இவற்றை நன்முறையில் வரவேற்கும் என நம்புகிறோம்.

பல வரலாற்று ஆராய்ச்சி நூல்களுக்கு ஆசிரியரான **திரு. வி. எஸ். வி. இராகவன்** அவர்களே இந் நூலின் ஆசிரியர். **டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன்** அவர்களின் உலகு புகழ் தத்துவ நூல்களின் தமிழ்ப் பெயர்ப்பாளர். மற்றும் நூற்றுக்கும் மேற்பட்ட புத்தகங்களுக்கு ஆசிரியர். இவர் சிறந்த பதிப்பாசிரியரும்கூட. ஆயிரத்துக்கும் மேற்பட்ட நூல்களைச் சீரிய முறையில் பதிப்பித்துள்ளார்.

தமிழ் ஆராய்ச்சிகளிலும், வரலாற்று நூல்கள் ஆராய்ச்சிகளிலும் நாட்டம் பெருகிவரும் இந் நாளில், காலத்துக் கேற்ற பணியாக இதை வெளியிடுகிறோம்.

விரிவான வரலாற்றுத் துறைபற்றிய இந் நூலை ஊதிய நோக்கு ஒன்றையே கருதி வெளியிட இயலாது, இலட்சிய நோக்கோடு வெளியிடுகின்றோம்.

"**பெரிப்ளுஸ்**" எனும் இந்நூலுடன் "**பிளினி**", "**மெகஸ்தனிஸ்**", "**தாலமி**" ஆகிய வரலாற்று நூல்களும் இதே வரிசையில் வெளி வந்துள்ளன.

எங்கள் நூலுக்குத் தமிழன்பர்கள் நல்கிவரும் ஆதரவு, இந் நூலுக்கும் தொடர்ந்து கிடைத்து, எங்களைப் பெரிதும் ஊக்குவிக்கும் என நம்புகிறோம்.

புதிய எழுத்தாளர்களை இனங்கண்டு அறிமுகம் செய்வதிலும், புது வகை நூல்களைப் பதிப்பிப்பதிலும் தன்னிகரற்று விளங்கும் உயர்திரு **ச. மெய்யப்பன் எம்.ஏ.** அவர்கள் இந் நூல் வெளிவர உறுதுணையாய் அமைந்தார்கள்.

தமிழன்னைக்குக் காணிக்கையாக இந் நூலை அத் தேவியின் திருப்பாதங்களில் வைத்து மகிழ்கின்றோம்.

**மெ. மீனாட்சி சோமசுந்தரம்**



பெரிப்ளூஸ்[1] என்பது ரோமானியர் காலத்தில் கடல்பயணத் துக்கு உதவியளிக்கும் வகையில் வழங்கப்பட்ட குறிப்புகளின் தொகுப்பு ஆகும். ஆங்கிலத்தில் இதைப் பயணக் குறிப்புகள்[2] என்றும், கடற்படம்[3] என்றும் வழங்குவர். இஃது அக் காலத்தில் கி.பி. முதல் நூற்ருண்டில், வணிகர்களும் பொதுமக்களும் கடற் பயணத்தை மேற்கொள்ளும்பொழுது, தமக்கு முன்னர் அவ் வழியே கடற் பயணம் மேற்கொண்டு சென்ற பயணி களால் எழுதிவைக்கப்பட்ட குறிப்புகளுமாகும். அக் காலத்தில் கிரேக்க மொழியில் எவர் தம் கடற் பயணத்தைப் பற்றிக் குறிப்புகள் எழுதிவைத்தாலும், அக் குறிப்புகள் யாவும் ‘பெரிப்ளூஸ்’ எனும் பொதுப் பெயராலேயே வழங்கப்பட்டன. ‘பெரி’[4]என்ற சொல்லுக்குச் சுற்றிலும் என்ற பொருளும், ‘ப்ளூஸ்’[5] என்பதற்குக் கடல்பயணம் என்றும் பொருள் உண்டு. ஆக, பெரி-ப்ளூஸ் என்பது கடல் சுற்றுப்பயண வரலாறு எனும் பொருள் தந்து நிற்கும் இலத்தீன் மொழிச் சொல்லாகும். ஸெனேபான்[6] என்பார் எழுதிய பெரிப்ளூஸ் நூலும் ஒன்று உள்ளது.

இப் புத்தகத்தில் கொடுக்கப்பட்டுள்ள செய்திகள் யாவும் செங் கடலிலும்,[7] அராபியன் கடலிலும்,[8] இந்தியப் பெருங்கடலிலும்,[9] வங்காள விரிகுடாவிலும்[10] கி.பி. முதல் நூற்ருண்டில் நடைபெற்ற கடல் வாணிகமுறைகளைக் குறிப்பிடும் பயண வரலாறுகளாகும். மார்க்கோபோலோ[11] (கி.பி. 1254-1324), கொலம்பஸ்[12] (கி.பி. 1451-1506) முதலான பெருந்தகைப் பயணிகளின் குறிப்புகளைப்போல், பெரிப்ளூஸும் முதல்முதல் கடல் வாணிகத்தைப்பற்றி[13] எழுத்து களால் பொறிக்கப்பட்ட அதிசய மனிதப் பண்புகள் அடங்கிய ஆதாரச் சான்றுப்புத்தகமாகும்.[14] மேலைநாடுகளுடன் கீழைநாடுகள் நடாத்திய வாணிகமுறைகளும், அவற்ருல் ஏற்பட்ட தொடர்புகளும், அவை மனித நாகரிகம் ஏற்பட்டதிலிருந்து எவ்வாறு இடைவிடாது நடைபெற்று வருகின்றன என்பனபோன்ற செய்திகளையும் ஆதார பூர்வமாகக் கூறும் முதல் வரலாற்று நூல் இதுவேயாகும். எகிப்தும்,[15] கிரீஸும்[16] ரோமப்பேரரசும்[17] அறிவுபெறத் தொடங்கு வதற்கு முன்னரே, அவை நாகரிகத்தின் சிகரம் எனப் போற்றப்படு வதற்குப் பன்னூற்ருண்டுகளுக்கு முன்னரே, பாரசீகமும் பாரசீக

[1]Periplus [2]Traveller's Guide [3]Sailing Sea-chart [4]Peri [5]Ploos [6]Xenophon [7]Red Sea [8]Arabian Sea [9]Indian Ocean [10] Bay of Bengal [11]Marcopolo [12]Columbus [13]Sea-trade [14]Human Document [15]Egypt [16]Greece [17]Roman Empire

வளைகுடாவைச்[18] சுற்றியுள்ள பிரதேசங்களும் உயர்ந்த நாகரிக நிலையை அடைந்துவிட்டிருந்தமையை வரலாற்றுவாயிலாக அறி கிறோம். அங்கிருந்து மேற்காகவும், கிழக்காகவும் பண்பாடுகள் பரவலாயிற்று. இந்தியாவின்[19] பொருள்களும், தமிழ் நாட்டு[20] நீர் வளமும், நிலவளமும், மலைவளமும், கடல்வளமும் அன்னியர் பலரை அன்புடன் அழைத்து ஆதரவளித்து அறிவுத்துறையிலும் ஓங்கிவளர ஊக்கமளித்து நின்றன. முத்தும், பொன்னும், மணியும், அகிலும் துகிலும் ஆரமும் அளவின்றிக் கிடைக்கும் பகுதி களைக் கொண்ட அகண்ட இந்தியா, அன்று நாடுகள் யாவற்றிலும் தலைசிறந்து விளங்கிவந்தது கண்கூடு. மற்றும், ஆப்பிரிக்காவில்[21] எகிப்தியர்[22] நாகரிகமடைந்ததும், அவர்களின் அரசர்களுடைய உடல்களைப் பாதுகாத்துவைக்கப்[23] போதிய வாசனைப்பண்டங்களை[24] இந்தியாவிலிருந்து வரவழைக்கத் தொடங்கிய பொழுதே, மேலை நாட்டு வாணிகம் மேன்மேலும் வளர்ச்சி பெறுவதாயிற்று. நைல் நதி[25] வழியாகவும், யூப்ரடீஸ்,[26] டைகிரீஸ் நதிகள்[27] வழியாகவும் இந்தியாவிலிருந்து கொண்டுசெல்லப்பட்ட வாசனைப்பண்டங்கள், மிளகு,[28] போளம்,[29] சடாமாஞ்சி,[30] முத்து,[31] நவரத்தினங்கள்[32] ஆடைகள், பட்டுத்துணிகள், பொற்கட்டிகள்,[33] உலோகங்கள் ஆகியவை ரோமப் பேரரசுக்குச்[34] சென்றன. அப் பேரரசின் அரசரும் அரசியும் அப் பொருள்களைப் பெரிதும் விரும்பி விலைக்கு வாங்கினர். தம் மக்களை வாங்கவும் ஊக்கினர். அவர்கள் வாங்கின பொருளுக்குப் பதில் பண்டமாகப் பவளம்,[35] கண்ணாடி, பொற் காசுகள்[36] முதலியவற்றைக் கொடுத்தனுப்பினர். இவ்வாறு இந்தியா வின் பொருள்கள் ரோமப் பேரரசுவரை வாணிகம் மூலமாகப் பரவி வரலாயிற்று.

வாணிகம் பெருகப் பெருகக் கப்பல்களும் பெருகின. முதல் முதல் கடற்கரை ஓரமாகவே சென்று வாணிகம் நடத்திய நாடுகள், பின்னர் கடல் நடு வழியாகப் புது வழிகளைக் கண்டுபிடித்து, போக்குவரத்துச் சாதனங்களைச் செம்மைப்படுத்தி, வாணிகத்தை வளர்க்கலாயின.

இவ்வாறு பெருகிய வாணிகம் நாளடைவில் ரோமானியர்களை இந்தியாவிற்கே பயணமேற்றுச் செல்லவேண்டும் என்ற எண் ணத்தைத் தூண்டிற்று. ரோமப் பேரரசில் செல்வம் கொழித் திருந்தது. மக்களோ புதுமையைக் காணத் துடித்துக்

[18]Persian Gulf [19]India [20]Tamilnadu [21]Africa [22]Egyptians [23]Embalming [24]Spices [25]Nile [26]Euphrates [27]Tigris [28]Pepper [29]Myrrh [30]Spikenard [31]Pearl [32]Gems [33]Gold bars [34]Roman Empire [35]Coral [36]Gold coins

கொண்டிருந்தனர். முதலில் மத்திய தரைக்கடல் நாடுகளே[37] வாணிக முறையில் ஈடுபட்டுப் புகழ் பெற்றிருந்ததுபோக, கி. பி. முதல் நூற்றாண்டிலேயே ரோமப் பேரரசின் தலைநகரான ரோம் நகருக்கே[38] அவ் வாணிபம் மாறி நிலைகொள்வதாயிற்று.

இவ்வாறு வணிகர் கடல் ஓரமாகச் சிறு படகுகளிலும், கப்பல் களிலும் சென்று கொண்டிருக்க, ரோம அரசாட்சியின் கீழ்ப் பணிபுரிந்து வந்த ஹிப்பலஸ்[39] என்பவர், அந் நாட்டிலிருந்து இந்தியாவுக்கு எந்த மாதத்தில் நல்ல உதவியான காற்று அடிக் கிறது என்று கண்டுபிடித்து, அக் காற்றின் உதவி கொண்டு, சிந்து நதியின்[40] கழிமுகத்தை அடைந்துவிட்டார். அவ்வாறு அவர் வந்து சேர்ந்த ஆண்டு கி. பி. 47 ஆகலாம். இதற்குப் பிறகு அக் காற்றின் உதவியைக் கொண்டே, ஆண்டுக்கு ஒருமுறை ரோமப் பேரரசி லிருந்து இந்தியாவுக்குக் கப்பல்கள் பெரிய உருவில் நடுக்கடல் பயணமேற்று வந்து போயின.

இவ்வாறு, கிரேக்க நாட்டில்[41] பிறந்து, எகிப்திய[42] நாட்டில் வளர்ந்து கப்பலூர்ந்து இந்தியா வந்த ஒருவர் தாம் வழிதோறும் கண்ட புதுமைகளையும், ஆங்காங்கு இருந்த துறைமுகங் களையும், அங்கு ஏற்றுமதி இறக்குமதி செய்யப்பட்ட பொருள் களையும், மக்கள் வரலாறு, நாட்டு வரலாறு, மலை வரலாறு, நதி வரலாறு ஆகப் பல வரலாற்று விளக்கங்களையும் நமக்குச் சிறப்பு வாய்ந்த ஒரு நிதியமாகக் கொடுத்துள்ளார். அவர் கொடுத்துதவிய வரலாறே 'பெரிப்ளூஸ்' என்ற பெயரால் வழங்கப்பட்டு வருவ தாயிற்று. பற்பல நூற்றாண்டுகள் வரை வாணிக வரலாறுகளுக்கும், கடல் துறைமுக இருப்பிடங்களுக்கும், இடத்தின் பூகோள அமைப் பிற்கும் இந் நூலே ஓர் ஆதார நூலாக விளங்கி வந்தது. இவ் வணிகப் பெருமகனார்—பெயர் தெரியாப் பெருமகனார்—எழுதி வைத்த குறிப்புகளைப் பின்னர் விளங்கிய ஸ்டிராபோ[43] (கி. மு. 64-கி.பி. 24), பிளினி[44] (கி. பி. 23-79), தாலமி[45] (கி.பி. 119-161) முதலான வரலாற்றாசிரியர்களால் பல விதமாகப் பயன்படுத்தப் பட்டுத் திருத்தியும், புதுக்கியும் எடுத்தாளப்பட்டன. அன்றைய உலகத்தின் இடங்களின் பெயர்களும், நதிகள், மலைகள், மரங்கள், பழங்கள், விலங்குகள், மக்கள்தொகுதிகள், மக்களின் பழக்க வழக்கங்கள் ஆகியவற்றின் வரலாறுகளையும் நாம் இன்றைக்குத் தெரிந்து கொள்ள முடிகிறதென்றால், அதற்கு முக்கிய ஆதாரமா யிருப்பது இப் பெரிப்ளூஸ் எனும் நூலேயாகும். இப் பெரிப்ளூஸ்

[37]Mediterranean Lands [38]Rome [39]Hippalus [40]Indus [41]Greece [42]Egypt [43]Strabo [44]Pliny [45]Ptolemy

நூலாசிரியரின் எழுத்துகள் பொன்னுல் பொறிக்கப்பட வேண்டியவையே.

இனி இந்நூல் இயற்றிய ஆசிரியரைப் பற்றிச் சிறிது நோக்குவோம். இவருடைய இயற்பெயர் இன்னதென்பது தெரியக்கிடைக்கவில்லை. 'பெரிப்ளூஸ்' என்ற சொல் பயணக் குறிப்புகளின் பெயரே தவிர, அக் குறிப்புகளைத் தொகுத்தளித்த ஆசிரியரின் பெயர்அன்று. இவ் வாசிரியர் எகிப்தியக்-கிரேக்கர்[46] ஆவார். அதாவது பிறப்பில் கிரேக்கர்;[47] வாழ்ந்து வளர்ந்தது எகிப்திய நாட்டில்.[48] இச் செய்தி அதிகாரம் 29-ல் "எங்கள் எகிப்திய நாட்டில்" என்று இவராலே கூறப்படும் சொற்களால் தெரியவருகிறது. இவர் தம் சொந்த யுக்தியினுலேயே இன்னல்களை எதிர்த்துக் கடல் நடுவே பயணம் செய்து, இந்தியப் பெருநாட்டின் கடற்கரையை வந்தடைந்தார். அராபியன் கடல், வங்காள விரிகுடா, இந்தியப்பெருங்கடல் ஆகியவற்றின் கரைகளில் உள்ள துறைமுகங்களில் தங்கி, ஆங்காங்கு நிலவிவந்த பழக்கங்களையும், பண்டங்களையும், துறைமுகங்களின் பெயர்களையும் கொடுத்துள்ளார். இக் குறிப்புகளை நம் பண்டைத் தமிழ் நூல்களான சிலப்பதிகாரம், மணிமேகலை, புறநானூறு, அகநானூறு, பத்துப்பாட்டு, எட்டுத்தொகை போன்ற நூல்களில் கிடைக்கப்பெறும் செய்திகளுடன் ஒப்பிட்டுப் பார்க்க மிகவும் உதவியாயிருக்கும். இவ்வாசிரியர் தமிழகத்தை 'டிமிரிகா'[49] என்று கூறுவதிலிருந்து, நம் நாடு முன்னர் 'தமிழகம்'[50] என்ற பெயராலேயே வழங்கி வந்ததென்பதும் தெரிகிறது. மற்றும், கி.பி. முதல் நூற்றுண்டில் இந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட பொருள்களின் பெயர்களும், இறக்குமதி செய்யப்பட்ட பண்டங்களின் பெயர்களும் நமக்குத் தெரியவருகின்றன. இக் குறிப்புகள் யாவும் பொன்னே போல் போற்றத்தக்கனவாகும்.

ஆனுல், இந் நூலின் ஆசிரியர் நன்றாக, ஒழுங்கு முறையில் கல்வி கற்றவர் அல்லர் என்பது இவர் எழுத்துகளால் தெரிய வருகின்றது. இவர் எழுதும் வகை கோவையாகக் கூறப்படாததிலிருந்தும், இலக்கண முறைப்படி வாக்கியங்கள் எழுதப்படாமல் பல இடங்களில் மயக்கம் தரும் பொருள்களை உண்டாக்குமாறு கொடுத்திருப்பதிலிருந்தும், இவரது ஒழுங்காகக் கல்வி கற்காத நிலைமை தெற்றென விளங்குகின்றது. இலக்கியத்தில் இவை இடம் பெறுவிட்டாலும், வரலாற்று ஏடுகளில் ஒரு நிரந்தரமான இடத்தை வகிக்கும் என்பது முக்காலும் உறுதி.

இனி பெரிப்ளூஸ் இயற்றப்பட்ட காலத்தைப் பற்றிச் சிறிது நோக்குவோம்.

[46]Egyptian-Greek [47]Greek [48]Egypt [49]Dimirica [50]Tamilaham

இந் நூலில் அதிகாரம் 57-ல் ஹிப்பலஸ்[51] என்ற பெயர் குறிப் பிடப்பட்டுள்ளது. ''இவரே மாலுமிகள் யாவருக்கும் தலைமை வகிக் கும் தகுதியுடையவர்,'' என்று கூறியுள்ளார். அவ்வாறான காற்று கண்டுபிடித்த ஆண்டு கி. பி. 47 ஆகும்.[52] இவ்வாண்டிற்கு முன் பெரிப்ளுஸ் ஆசிரியர் தம் குறிப்புகளை எழுதியிருக்க முடியாது. மற்றும், ''அக் காற்றைத் தொடர்ந்து இன்னும் கப்பல்கள் நடுக் கடலில் பயணமேற்கின்றன,'' என்று கூறும்பொழுது, இவர் குறிப்புகள் எழுதத் தொடங்கிய காலம் கி.பி. 50 ஆகலாம் எனக் கூறப்படுகிறது. ஆக, கி.பி. 50ஐ முதல் எல்லையாகக் கொள்ளலாம்.

பிளினி[53] எனும் வரலாற்றாசிரியரின் காலம் கி.பி. 23-79. இவர் தாம் எழுதிய இயற்கை வரலாற்றைக்[54] கி.பி.77-ல் வெளியிட்டார்.[55] பெரிப்ளுஸில் கூறப்படும் பல பகுதிகளைப் பெயர் மாற்றத்துடன் பிளினி குறித்துள்ளார். ஆக, பெரிப்ளுஸ் கி.பி. 77-க்குமேல் நூலை எழுதி வெளியிட்டிருக்க முடியாது. ஆக, இறுதி எல்லையாகிய கி.பி. 77-க்கு வந்துவிட்டோம்.

மேலும், பெரிப்ளுஸ் நூலில் குறிப்பிடப்படுவதிலிருந்து, ரோமப் பேரரசு இந்தியாவுடனும், மற்றும் ஆப்பிரிக்கா நாடுகளுடனும் மிக வும் போற்றத்தக்க முறையில் வாணிகம் நடத்தி வந்ததென்றும், அவ் வாணிகம் உன்னத நிலையில் இருந்ததென்றும் தெரியவருகிறது. ரோமப் பேரரசு[56] தீக்கிரையான ஆண்டு கி.பி.64 ஆகும். அதற்குப் பின்னர் ரோம் நாட்டு வாணிகம் குறைந்து விட்டது. அது மீண்டும் தன் பழைய நிலையை அடைய 50 ஆண்டுகள் ஆயின. இப் பெருந் தீயைப்பற்றி ஒரு நிகழ்ச்சி இன்றும் கூறப்படுகிறது: ''ரோம் நகரம் தீயினால் எரிந்து கொண்டிருக்கும்போது, நீரோ[57] அரசர் பிடில் வாசித்துக் கொண்டிருந்தார்,'' என்பதே. நீரோ அரசர் கி.பி. 54 முதல் கி.பி. 68வரை அரசாண்டு வந்தார். ரோம் நகருடன் வாணி கம் உன்னத நிலையில் இருந்தது என்று கூறியதாலும், ரோம் நகரம் கி.பி.64-ல் தீப்பற்றி எரிந்துவிட்டதால், அதற்கும் முன்னரே பெரிப்ளுஸ் எழுதப்பட்டிருக்கவேண்டும். கி.பி. 64 என்று குறுகிய எல்லைக்கு வந்துவிட்டோம்,

மற்றும் பெரிப்ளுஸ் நூலில், அதிகாரம் 26-ல் காரிபியல்[58] என்னும் அரசர் குறிப்பிடப்படுவதால், ''யூடிமான் அரேபியா[59] அவ் வரசரால் அண்மையில் அழிக்கப்பட்டது,'' என்று கூறுவதால்,

[51]Hippalus [52]An Advanced History of India, By R.K. Mookerji, M.A; page 137. [53]Pliny [54]Natural History [55]The Early History of India, By V.A. Smith, page 218 fn. [56]Roman Empire [57]Nero [58]Charibeal [59]Eudemon Arabia

பெரிப்ளூஸின் ஆசிரியர் காலத்திலேயே அந் நிகழ்ச்சி நடந்துள்ளது. காரிபியல் ஆண்டுவந்த காலம் கி.பி. 40-70 ஆதலால், இயூடிமான் அழிக்கப்பட்ட ஆண்டு கி.பி. 50 என வரலாற்றாசிரியர்கள் ஒப்புக்கொள்வதால், இன்னும் பக்கத்து எல்லையாகிய கி.பி. 50ஐ அடைகிறோம். இந் நூல் எழுதி, பரவிப் புகழ் எய்துவதற்குச் சில ஆண்டுகள் ஆகியிருக்குமாதலால், இந் நூல் கி.பி. 50 முதல் 60 வரையில் உள்ள காலத்தில் இயற்றப்பட்டிருத்தல்வேண்டும் என்பது உறுதியாகிறது. ஆக, பெரிப்ளூஸின் ஆசிரியர் ஒரே முறை அல்லாமல் பலமுறை இந்தியா வந்து போயிருக்கக்கூடும் என்ற காரணத்தால், பெரிப்ளூஸ் நூலின் காலம் கி.பி. 50–80 என்பது கொள்வது பொருத்தமே.

வரலாற்றுக்குப் பலவகைகளில் உதவியளிக்கும் பெரிப்ளூஸ் எனும் இந் நூலைத் தமிழில் பெயர்த்துள்ளோம். இப் புத்தகத்தில் தமிழ் நாட்டுக்குரிய வரலாற்றுச் செய்திகள் பல அடங்கியுள்ளன. இச் செய்திகள், தமிழ்நாட்டின் அன்றைய நிலையை மேலைநாட்டினர் எழுதிய குறிப்புகளுடன் ஒப்பிட்டுப்பார்க்க உதவும் என்றே கருதப்படுகிறது. இந் நூலின் ஆங்கிலப் பிரதிகளின் ஆசிரியர்களுக்கும், அவ்வப்பொழுது அக் குறிப்புகளுக்கு விளக்கங்கள் வெளியிட்ட பேராசிரியர்கள் பலருக்கும் குறிப்பாகப் பேராசிரியர்கள் மாக்ஸ் முல்லர்,[60] வின்சென்ட் ஸ்மித்,[61] மேக்ரிண்டில்,[62] ஷாஃப்,[63] டாக்டர் எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார்,[64] கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி,[65] ஆர். கே. முகர்ஜி,[66] ஆர்னல்ட் டாயின்பீ,[67] டி. கே. ஜோசப்,[68] சத்தியநாதையர்[69] முதலிய வரலாற்றுப் பேராசிரியர்கள் பலருக்கும் என் அன்பு கலந்த நன்றியும் வணக்கமும் உரியதாகுக!

மற்றும் மூலபாடத்திலுள்ள ஊர்கள், அரசர்ப் பெயர்கள், தாவர விலங்குகள் பெயர்கள், மக்கள் தொகுதிப் பெயர்கள் ஆகியவற்றிற்குச் சரியான தமிழ்ப்பெயர்களை ஆங்காங்குக் கொடுத்து, அவை விளக்கப்பட்டுள்ளன. இவ் ஆராய்ச்சிக் குறிப்புகளைத் தமிழ் கூறும் நல்லுலகம் நன்முறையில் போற்றும் என்பதே எனது நம்பிக்கை.

மற்றும் ஹெரடோடஸ்,[70] பிளினி,[71] மெகஸ்தனிஸ்[72] ஸ்டிராபோ,[73] தாலமி[74] ஆகியவர்களின் நூல்களிலிருந்து ஆதாரம் காட்டுவதற்

[60]Maxmuller [61]Vincent A. Smith [62]Mc Crindle [63]Shoff [64]Dr.S. Krishnaswamy Iyengar M.A. [65]K. A. Nilakanta Sastri M.A. [66]R.K Mookerji [67]Arnold Toynbee [68]T.K. Joseph [69]Sathianathaiyer M.A. L.T., [70]Herodotus [71]Pliny [72]Megasthenes [73]Strabo [74]Ptolemy

காகச் சில செய்திகள் கொடுக்கப்பட்டுள்ளன. அக் குறிப்புகளை வெளியிட்ட பேராசிரியர்கள் பலருக்கும் யான் பெருங்கடப் பாடுடையவன் ஆவேன்.

வரலாற்றுத் தொடர்புடைய இந் நூலை ஏற்று, மேன்மேலும் என்னை இப் பணியில் ஊக்குவிக்குமாறு ஆசிரிய அறிஞர்களையும், தமிழன்பர்களையும் வேண்டிக் கொள்கிறேன். அன்பர்கள் அளிக்கும் அரிய ஊக்கமே இதைப்போன்ற பல நூல்கள் யாத்தற் குரிய பெருந்தூண்டுகோலாய் அமையும் என்பது உறுதி, உறுதி.

இதற்குமுன் வெளிவந்த எனது **மெகஸ்தனிஸ்,**[75] **பிளினி**[76] **யுவான் சுவாங்,**[77] **ஃபாஹியான்,**[78] **மார்க்கோபோலோ,**[79] **புதுநாடு கண்ட பெரியார்கள்**[80] முதலான வரலாற்று நூல்களுக்குத் தமிழ் அன்பர்கள் ஆதரவு அளித்ததுபோல, இந் நூலுக்கும் பேராதரவு அளிப்பார்களாக!

நல்ல தமிழ் நூல்கள் வெளியிடுவதை வாழ்வு நோக்கமாகக் கொண்டு, அரிய ஆய்வு நூல்களைத் துணிந்து வெளியிடும் **உயர் திரு. ச. மெய்யப்பன் M.A.** அவர்கள் இந் நூல் வெளிவர உறுதுணையாக இருந்தார்கள். அவர்கட்கு என் உளங்கனிந்த நன்றி உரித்தாகுக!

வாழ்க தமிழ்! வளர்க தமிழ்ப் பண்பாடு! வெல்க, வரலாற்றுச் சான்றுகள்!

எல்லாம் வல்ல இறைவன் அருள் புரிக!

**வி. எஸ். வி. இராகவன்**

[75] Megasthenes [76] Pliny [77] Yuwan Chwang [78] Fa-Hien
[79] Marcopolo [80] Great Travellers and Explorers.

# உள்ளுறை

## பகுதி I

### (அயல் நாடுகள்)

## பகுதி II

### (இந்தியா)

# பெரிப்ளூஸ்

## 1. முஸெல். பெரெனிஸ்

எரித்திரியன் கடலில்[1] நிர்மாணிக்கப்பட்ட பலவேறு துறைமுகங்களுள் எகிப்தியத் துறைமுகமாகிய[2] முஸெல் துறைமுகம்[3] முக்கியமானதும், முதன்மை வாய்ந்தது மாகும். இதைச் சுற்றி வாணிகச் சந்தைகள்[4] கூடும் இடங்கள் உள்ளன.

இத் துறைமுகத்திலிருந்து கீழ்நோக்கி வலப்பக்க மாக 1800 ஸ்டேடியா[5] கடலில் சென்றால், பெரெனிஸ்[6] எனும் இடத்தை அடையலாம். இந்த இரண்டு இடங் களில் விளங்கும் துறைமுகங்களும் எகிப்து நாட்டின்[7] எல்லைக்குள்ளாகவே உள்ளன. மற்றும், அவை எரித் திரியன் கடலுக்கு வெளியே காணப்படும் இரண்டு விரி குடாக்கள்[8] ஆகும்

### விளக்கவுரை

**பெரிப்ளூஸ் (PERIPLUS):** பெரிப்ளூஸ் என்பது ரோமானியர் காலத்தில் வழங்கியதும், பயணத்திற்கு உதவும் குறிப்புகளைத் தொகுத்துக் கூறப்படும் சொல்லாகும். ஆங்கிலத்தில் இது கடல் வழிப்படம் (Sailing Chart) என்றும், பயணிகளின் கைக்குறிப்பேடு (Travellers' Hand Book) என்றும் வழங்கப்படுகிறது. இவை அக் காலத்தில் மக்கள் பயணம் மேற்கொள்ளும்பொழுது, எந்தெந்த வழிகளில் கப்பல்கள் செலுத்தப்படவேண்டும் என்பதைக் குறிப்பு களாக எழுதி வைத்த பயணச் செய்திகளாகும். அக் காலத்தில் எவர் பயணக் குறிப்புகள் எழுதி வைத்தாலும் அப் பயணக் குறிப்புகள் யாவும் 'பெரிப்ளூஸ்' (Periplus) என்ற பொதுப் பெயராலேயே வழங்கப்பட்டு வந்தது. பெரிப்ளூஸ் என்ற சொல்லில் உள்ள 'பெரி' என்பதற்குச் சுற்றிலும் என்றும்,

'ப்ளூஸ்' என்பதற்குக் கடற் பயணம் என்றும் பொருள் உண்டு.(Peri- Ploos: Peri-Around; ploos — Voyage circum-navigation).

ஆகையால், பெரிப்ளூஸ் என்பது கடல் சுற்றுப்பயண வரலாறு என்ற பொருளிலேயே வழங்கப்பட்டு வந்தது.

**1. எரித்திரியன் கடல் (Erythrean Sea)**

எரித்திரியா(Erythrea) என்றால் சிவப்பு என்பது பொருள். ஆகையால் இச் சொல் செங்கடலையும் (Red Sea) பொதுவாக, இந்தியப் பெருங்கடலையும் (Indian Ocean), அராபியக் கடலையும் (Arabian Sea), பாரசீக வளைகுடாவையும் (Persian Gulf) குறிப்பிடுகிறது. எத்திரியன் கடலுக்கு அரசன் ஒருவன் இருந்தான்; அவனைப்பற்றிய வரலாறுகள் பல பாரசீக மொழியில் வழங்கி வருகின்றன. அவ்வரசனின் பெயர் எரித்திரியன் (Erythrean King) என்பதும், அச் சொல்லே சிவப்பரசன் (Red King) என்று பின்னர் வழங்கப்பட்டு வந்ததென்றும், அந்தச் சிவப்பரசனுக்குச் சேர்ந்த கடல், செங்கடல் (Red Sea) என்று வழங்கப்பட்டதென்றும் வரலாற்று ஏடுகளில் காணக்கிடைக்கும் செய்திகளாகும். இதன் ஆதிப்பெயர் எரித்திரியம் மேர் (Erythreum Mare) இந்தியப் பெருங்கடல் முன்னர் இண்டிகஸ் ஓசேனஸ்(Indicus Oceanus) என்றும்,செங்கடல் அராபிகஸ் சைனஸ் (Arabicus Sinus) என்றும், பாரசீக வளைகுடா பெர்சிகஸ் சைனஸ் (Persicus Sinus) என்றும் வழங்கப்பட்டன. செங்கடல் இலத்தீன் மொழியில் (Latin) மேர் ரூப்ரம் (Mare Rubrum) என்று வழங்கப்பட்டது.

—(Vide A Smaller Clasical Dictionary, page 212)

**2. எகிப்தியத் துறைமுகம் (Egyptian Port)**

எகிப்து நாட்டின் கடற்கரையில் விளங்கிய ஆற்றுக் கழிமுகத் துறைமுகத்தைக் குறிப்பிடும்.

போர்ட் (Port), ஹார்பர் (Harbour) என்ற இவ்விரு சொற்களும் முன்னர் வெவ்வேறு பொருள்களில் பயன்படுத்தப்பட்டு வந்தன போர்ட் (Port) என்பது ஆற்றின் கழிமுகத்துடன் தொடர்பு கொண்டு, அதன் நுழைவாயிலில் இருந்ததக் கருதப் பட்டது. அதனால்தான் அதற்குக் கேட்வே (Gateway) என்னும் பொருள் கொள்ளப்பட்டது

ஹார்பர் (Harbour) என்பது கப்பல் நிற்கும் துறைமுகங்களைக் குறிப்பிட்டது. ஆற்றுடன் தொடர்பு கொள்ளாமல், கப்பல் தங்குவதற்கு மட்டும் வசதியும், பாதுகாப்புமுள்ள இடமாகக் கருதப்பட்டது.

ஆனால் நாளடைவில் இவ்விரு சொற்களும் ஹார்பர் (Harbour) என்ற சொல்லின் பொருளிலேயே வழங்கப்பட்டு வருவனவாயின.

**3. முஸெல் துறைமுகம்** (Mussel Harbour)

இப்பொழுது இத் துறைமுகம் ராஸ் - அபு - முகமத் (Ras-Abu-Mohmed) என்று வழங்கப்படுகிறது. இதன் பழைய பெயர் மையோஸ் ஆர்மஸ் (Myos Hormus). இதன் இருப்பிடம்: 29° · 0' வ × 34° · 50' கி. இத் துறைமுகம் தாலமி பிலடெல்பஸ் (Ptolemy Philadelphus) (கி மு. 285 – கி. மு. 247) என்ற அரசரால் கி. மு. 274-ல் நிர்மாணிக்கப்பட்டதென்று வரலாற்றாசிரியர்கள் ஒரு முகமாகக் கருதுகின்றனர். இதற்குத் தெற்கில் பெரெனிஸ் (Berenice) எனும் சந்தை கூடும் நகரம் காணப்படுகிறது.

**4. வாணிகச் சந்தைகள் கூடுமிடங்கள்** (Commercial Markets)

வாணிகத்தை மேற்கொண்டு கூடும் இடங்கள் வாணிகச் சந்தைகள் எனப்பட்டன. இவ்வாறு சந்தை கூடும் வாணிக நகரங்கள் (Market Towns) ஆங்காங்குப் பல இருந்தன. அவற்றுள் ஒன்று பெரெனிஸ். இதைப்பற்றி அடுத்துவரும் குறிப்பு 6-ல் காணலாம்.

**5. ஸ்டேடியா** (Stadia)

ஒரு ஸ்டேடியா என்பது ஏறக்குறைய ஒரு பர்லாங்குத்(Furlong) தொலைவைக் குறிப்பிடும் சொல்லாகும். சரியாகக் குறிப்பட வேண்டுமெனில், ரோமன் அளவில் 605 அடிகளும், ஆங்கில அளவில் 606 அடிகளும், ஒலிம்பிக் அளவில் 600 அடிகளும் ஆகும். கிரேக்க நாட்டைச் சார்ந்த சைரீனில் (Cyrene) வசித்து வந்த வரலாற்றாசிரியர் எரடாஸ்தெனிஸ் (Eratosthenes) (கி.மு. 276–196) கணக்குப்படி, ஒரு ஸ்டேடியா, 700 அடிகள் கொண்டதாகும். ஆயினும், ஒலிம்பியா (Olympia) என்ற கிரேக்க நாட்டு அளவினையே அடிப்படை அளவாக,—அலகாகக்—கொள்ளப்பட்டதால், ஒரு ஸ்டேடியாவுக்குச் சராசரி 600 அடிகள் என்று கொள்வதே

பொருத்தமானது. பிளினி (Pliny) என்ற வரலாற்றாசிரியரும் (கி. பி. 23-79) இதே அளவில்தான் கணக்கிட்டுள்ளார்.

—(பிளினி—பகுதி I, அதிகாரம் 1, குறிப்பு—26, பக்கம் 12)

**6. பெரெனிஸ்** (Berenice)

இத் துறைமுகம், முன்னர்க் கூறப்பட்ட தாலமி பிலடெல்பஸின் தாயார் பெயரால் நிர்மாணிக்கப்பட்டதாகும். இது ராஸ்-பினஸ் (Ras Benas) என்ற துறைமுகத்துக்கு அருகில் இருந்ததாகத் தெரியவருகிறது. இதன் இருப்பிடம்: 23°·55' வ X 35°·34' கி. நவீன உம்-எல்-கைடப் (Umm-El-Ketef) எனும் வளைகுடாவுடன் ஒருங்கு சேர எண்ணப்படுகிறது. இங்கே முன்னர் இருந்த அழிபாடுகள் இன்றும் காணப்பெறுகின்றன. இதன் நடுவில் எகிப்தியக் கோயில் ஒன்று உள்ளது. இதன் உட்புறத்தில், கிரேக்க மக்களால் நிர்மாணிக்கப்பட்ட பேர் உருவங்களும், புரியாத சித்திர எழுத்துகளின் (Hieroglyphic) வடிவங்களும் காணப்படுகின்றன என்று வரலாற்றாசிரியர்கள் கூறுகின்றனர். இத் துறைமுகம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் மிகச்சிறந்ததாயும், முக்கியமானதாயும் விளங்கிற்று.

**7. எகிப்து நாடு** (Egypt)

உலக நாகரிகங்கள் பிறந்த இடங்களுள் மிகத் தொன்மையானதும், முக்கியமானதுமான இடம் எகிப்து நாடேயாகும். எகிப்து பிரமிடுகளுக்குப் (Pyramids) பெயர் பெற்றது. நைல்-நதி நாகரிகம் செழித்து வளர்ந்த இடம் இதுவே. பழங்கால மக்களுக்குத் தெரிந்திருந்த நதிகள் நான்கு; அவையாவன; கங்கைநதி, சிந்துநதி, டைகிரிஸ் நதி- யூப்ரட்டிஸ் நதி, நைல் நதி. இவற்றுள் நைல்நதி எகிப்தில் பாய்ந்து, மிக்க புகழ் பெற்றிருந்தது. எகிப்து புகழ்பெறக் காரணம் நைல் நதியே.

**8. இரண்டு விரிகுடாக்கள்** (Two Bays)

பெரெனிஸ் (Berenice), முஸெல் (Mussel) ஆகிய இரு துறைமுகங்களும் விளங்கிய இரு விரிகுடாக்கள் இங்குக் குறிப்பிடப்படுகின்றன.

# 2. பெர் பெர் நாடு

வலப்புறமுள்ள கடற்கரையில், பெரெனிஸுக்கு[1] அடுத்தாற்போன்று காணப்படும் நாடு பெர்பெர்[2] நாடா கும். இதன் கடலோரமாக மீன் தின்னும் வலைஞர்கள்[3] இங்கும் அங்குமாகப் பள்ளத்தாக்கிலுள்ள குகைகளில் வசித்து வருகின்றனர். இன்னும் சற்று உள்ளே சென்றால், பெர்பெர் என்ற மக்கள் உள்ளனர். அவர்களுக்கும் அப் பால், காட்டு விலங்குகளின் ஊன் புசிப்பவர்களும், கன்றுக்குட்டிகளைத் தின்பவர்களும்[4] வசிக்கிறார்கள். ஒவ்வொரு குடியும் அதன் அதன் தலைவரால் ஆளப்பட்டு வருகின்றது. அதற்குமப்பால், மேற்குநோக்கிய நாடுகளில் மெரோ[5] என்ற பெயரால் வழங்கப்படும் நகரம் ஒன்று உள்ளது.

## விளக்கவுரை

**1. பெரெனிஸ்** (Berenice)

பண்டைக்கால வணிக சந்தை கூடும் நகரங்களுள் முக்கியமான தாகும். மற்றும் அதிகாரம் 1, குறிப்பு-6 பார்க்கவும்.

**2. பெர்பெர் நாடு** (Berber Country)

இது நாகரிகமற்றவர் நாட்டைக் குறிப்பதாகும். அநாகரிகம் எனும் பொருள்படும் பார்பாரிக் (Barbaric) எனும் சொல்லின் சிதைவே பெர்பெர் என்பதாகும். அவர்கள் வட ஆப்ரிக்கா தேசத்து ஹெமிடிக் (Hemetic) வகுப்பினைச் சார்ந்தவர் ஆவர். முன் னர் கிரேக்க, ரோம நாட்டு நாகரிகத்தைச் சாராதவர் யாவரும் பார்பாரிக் என்றே வழங்கப்பட்டனர். அச் சொல் நாளடைவில் காட்டுமிராண்டிகளையும், அநாகரிக மக்களையும் குறிப்பதாயிற்று.

—(Vide Latin English Dictionary-page 68).

பெர்பெரா (Berbera) என்ற துறைமுகம் இன்று சோமாலி லாந்து (Somaliland) நாட்டின் கடற்கரையில் உள்ளது. இருப்பிடம் 10° வ X 45° கி. இது, அரேபியாவில் உள்ள ஏடென் (Aden) துறை முகத்துக்கு நேர் எதிராக, ஆப்பிரிக்கக் கடற்கரையில் காணப்படு கிறது. ஆப்பிரிக்கா நாட்டில் உள்ள மொராக்கோ (Morocco)

பகுதியில் வசிக்கும் ஒரு வகுப்பினர் இன்றும் பெராப்ரா (Berabra) என்ற பெயராலேயே வழங்கப்பட்டுவருகின்றனர். பெர்பெர் என்ற இடம் நைல்நதிக் கரையிலும் காணப்படுகிறது. சூடான் துறைமுகத்துக்குத் தென் மேற்கே உள்ளது.

இருப்பிடம். 18°·1' வ × 34°·4' கி.

**3. மீன் தின்னும் வலைஞர்கள்** (Icthyophoghis)

முதன் முதல் அவ் வலைஞர்கள் இக்தியோபோகி என்ற பெயராலேயே வழங்கப்பட்டனர். பிளினி (கிபி. 23-79) என்ற வரலாற்றாசிரியரும் அவர்களை அப் பெயராலேயே வழங்குகின்றார். அவர்களின் மறுபெயர் டிரோக்லோடைடே (Troglodytae). அரேபிய வளைகுடாவிற்கு மேற்குப் பகுதியில் உள்ள ஈதியோபியர்களின்—குகை வாழ் மக்களின்(cave dwellers)-பெயரே டிரோக்லோடைட் என்பதாகும்.

—(**பிளினி:** அதிகாரம் 5, குறிப்பு-66, பக்கம் 105).

**4. கன்றுக்குட்டிகளைத் தின்பவர்கள்** (Calf eaters)

பசு, யானை ஆகியவற்றின் கன்றுகளைத் தின்பவர் இப் பெயரால் வழங்கப்படுகின்றனர். Beef eaters என்பதை Calf eaters என்று தவறாக மொழிபெயர்த்து விட்டதன்விளைவே இம் மயக்கம். பன்றி இறைச்சியை (Beef) மக்கள் அன்றும் உண்டனர்; இன்றும் விரும்பி உண்கின்றனர். ஆகவே, கன்றுக்குட்டிகள் என்பது பன்றிக் குட்டிகள் அல்லது பன்றிகள் என்று இருத்தல்வேண்டும்.

**5. மெரோ** (Meroe)

மெரோ என்பது நூபியா (Nubia) அரசாங்கத்தின் தலைநகராகும். கி.மு. 560-ல் மெரோ அரசாங்கத்தலைநகராயிற்று. அதன் பிறகு சூடான் (Sudan) பிரதேசத்திலுள்ள நீகிரோவர்களாலும், பாலைவனத்தில் வசித்து வந்த பழங்குடி மக்களாலும் படையெடுக்கப்பட்டு, அந் நகரம் சிதைவுண்டது. அந் நகரம், இப் பொழுது பிகாராவியே (Bigara Wiyeh) நகர் இருக்கும் இடத்தில் இருந்ததாக நம்பப்படுகிறது. சூடான், உகண்டா (Uganda) இரு நாடுகளிலிருந்து வரும் வாசனைப் பண்டங்கள் யாவும் நைல்நதி (River Nile) வழியாக எலிபெண்டைன் (Elephantine) வரையிலும் நீகிரோவர்களால் கொணரப்பட்டன. அதற்குமேல் நீகிரோவர் செல்ல அனுமதிக்கப்படவில்லை. இவ்விடத்தில்தான் எகிப்திய நாட்டுப் பண்டமாற்று முழுவதும் நடைபெற்றது. அசுவான் (Aswan) என்ற நவீன இடமே "சந்தை கூடும் இடம்" என்ற

பொருள் தந்து நிற்கிறது. சூடான் நாட்டிலிருந்து பொன், தந்தம், கருங்காலி மரம், மலைப்பாம்புத் தோல், தீக்கோழிகளின் இறகுகள் முதலியன வந்தன. செங்கடல் (Red Sea) பிரதேசத்தில் சாம்பிராணி, அகில், சந்தனக்கட்டை, குங்கிலியம் முதலிய பல்வேறு வாசனைப் பண்டங்கள் வந்தன. இவை யாவற்றையும் எகிப்து அரசாங்கம் தேவைக்கென வரவழைத்துக் கொண்டே இருந்தது. எகிப்தியரின் கோயில்களுக்கு இவை பெருமளவில் தேவைப்பட்டன. இவ்வாசனைப் பண்டங்களின் ஏற்றுமதி, இறக்கு மதிபற்றிய சட்டதிட்டங்கள் யாவும் எகிப்திய அரசாங்க அதிகாரி களிடமே இருந்தன.

எகிப்திய நாடு (Egypt) பாரசீக நாட்டிற்குக் (Persia) கப்பம் கட்டிவந்தது. எகிப்து அடிபணிந்த ஆண்டு கி.மு. 525 ஆகும். பேரரசர் அலெக்சாந்தர் (கி.மு. 356-323) எகிப்து நாட்டைக் கி.மு. 332-ல் வென்றார். அடுத்தபடியாக வந்த பிளாடினஸ் (Platinus) என்பவரும் அந் நாட்டின் வணிக நிலையைப் பெருக்க மடையச் செய்தார். கி.மு. 300-ல் அந் நாடு ரோமப் பேரரசுக்கு உட்பட்டுநின்றது.

இதன் காரணமாக நூபிய நாட்டு மக்கள் தனித்தே தம் பகைவர்களுடன் போராட வேண்டியதாயிற்று.

மெரோவைப்பற்றிப் **பிளினி** (கி.பி. 23-79) எழுதுகிறார்: "மெரோ இப்பொழுது பல குடிசைகள் உள்ள இடமாகவே விளங்குகிறது. அவ்வளவு மோசமான வகையில் எதிரிகள் அந் நகரைப் பாழ்படுத்தி விட்டனர். இச் செய்தி நீரோ அரசர் (King Nero) அனுப்பிய தூதுக்குழுவினரால் தெரிய வந்தது."

வரலாற்றின் ஆதித்தந்தையாகக் கருதப்படும் **ஹிரோடோடஸ்** (Herodotus) (கி.மு. 484-425) வாசனைப் பண்டங்கள் உற்பத்தி செய்யப்படும் மலையைப்பற்றிக் குறிப்பிடுகிறார்: "அம் மலை வடக்கி லிருந்து தெற்காக நைல்நதிப் பக்கமாகச் செல்கிறது; கிழக்கு மேற்காக எரித்திரியன் கடல் (Erythrean Sea) வரையிலும் பரவி யுள்ளது; எரித்திரிய மலைத் தொடரைக் கடந்து செல்லக் குறைந் தது இரண்டு மாத காலமாவது ஆகும்; கிழக்குப்பகுதி மலைத் தொடரில்தான் வாசனைப் பண்டங்கள் உற்பத்தி செய்யப் படுகின்றன."

—(Histories By Herodotus, Book II, Page 105)

---

# 3. தாலமி மரபினர் ஆளும் நாடு

கன்று தின்னி[1] நாட்டினர் வசிக்கும் இடத்திற்குக் கீழே கடற்கரையில் சந்தை கூடும் வணிகர் நகர் ஒன்று இருக்கிறது. இதையடைய பெரெனிஸிலிருந்து[2] புறப் பட்டு 4000 ஸ்டேடியா[3] தொலைவு கடற்கரையோரமாகச் செல்லவேண்டும். சென்றால், தாலமி மரபினர் ஆளும்[4] நாடு வரும். அவ்விடமிருந்துதான் தாலமி அரசரின் சந்ததியார்கள் வேட்டையாடும் தொழிலில் ஈடுபட்டு, அவர் வழித்தோன்றலாக அந் நாட்டின் உட்பகுதிக்குச் சென்றனர். தாலமிஸ்[5] என்னும் இவ் வாணிப நகரில் சிறிய எண்ணிக்கையில் ஆமைகள்[6] உள்ளன. அவை உருவில் சிறியனவாயும் அவற்றின் முதுகு ஓடுகள் வெண்மையாகவும் காணப்படுகின்றன. அடுலிஸ்[7] நகரத்தில் காணப்படுவதேபோல் இங்குத் தந்தமும் சிறிதளவில் காணப்படுகின்றது. ஆனால், இந்த இடத்தில் துறைமுகம் என்று எதுவும் கிடையாது. சிறிய படகுகளின் உதவிகொண்டு இவ்விடத்தை அடைகிறார்கள்.

## விளக்கவுரை

**1. கன்றுதின்னி** (Calf eaters)

கன்றுகளைத் தின்பவர் என்றும், பன்றிகளைத் தின்பவர் என்றும் பொருள்படும் சொல்லாகும். மற்றும் அதிகாரம் 2, குறிப்பு-4 பார்க்கவும்.

**2. பெரெனிஸ்** (Berenice)

கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் விளங்கிய முக்கிய வாணிகச் சந்தை நகரம். மற்றும் அதிகாரம் 1, குறிப்பு–6 பார்க்கவும்.

**3. ஸ்டேடியா** (Stadia)

ஒரு ஸ்டேடியா என்பது ஒரு பர்லாங்குத் தொலைவைக் குறிப் பிடும் அளவாகும். இங்குக் கூறப்பட்ட தொலைவின் அளவு 500 மைல்கள் (800 கிமீ.) ஆகும். மற்றும் அதிகாரம் 1, குறிப்பு-5 பார்க்கவும்,

## 4. தாலமி மரபினர்

தாலமி பிலடெல்பஸ் (Ptolemy Philadelphus) கி.மு. 285 முதல் கி.மு. 247 வரை அரசாட்சி செய்தார். அவருடைய சந்ததியார் கள் ஆண்டுவந்த நாடே தாலமியஸ் (Ptolemias) என்று வழங்கப் படும். எகிப்தைத் தாலமியின் முன்பிருந்தாரும், பின்னர் இருந்த வரும் ஆண்டகாலம் கி.மு. 323 முதல் கி.மு. 30 வரை ஆகும். கிளியோபாத்ராவின் இறப்பினுல் (கி.மு. 30) தாலமி அரசர்களின் பரம்பரை முடிவுபெற்றது. அதற்குப் பிறகு எகிப்து, ரோமப் பேரரசுடன் இணைக்கப்பட்டுவிட்டது.

## 5. தாலமிஸ் (Ptolemis)

இது நவீன எர்-ரிக் (Er–rich) தீவினைக்குறிப்பிடுவதாகக் கருதப்படுகிறது. இருப்பிடம் : 18°·9'வ X 38·27'கி. இது டோகர் கழிமுகத்தில் (Toker Delta) உள்ளது. இந் நகரம் தாலமி பிலடெல் பஸ் (கி.மு. 285-247) என்பவரால் கோட்டைகள் கொண்டு நிர் மாணிக்கப்பட்டதாகும். இவ்விடம் உள்ள நாட்டுப் பகுதியே யானைகள் வாணிகம் நடைபெறும் இடமாக விளங்கியது. எகிப்தி யர்கள் முதன்முதல் யானைகளை ஆசியாவிலிருந்து (Asia) இறக்குமதி செய்தனர். யானைகளைக்கொணர்ந்து, தீனி போட்டுக் காப்பாற்றி, விலைக்கு விற்பதென்பது, மிக்க செல்வம் படைத்த வணிகப் பெரு மக்களால்தான் முடியும். அவ்வளவு விலை கொடுத்து, ஆசியா விலிருந்து வரவழைக்கப்பட்ட யானைகளை வாங்கும் செல்வந்தர் கள் இல்லாத காரணத்தால், யானை வாணிகம் மந்தநிலை அடைந்து விட்டது; ஆசிய நாட்டு யானைகள் சிறந்த வலிமை யுடையனவாகவும், உறுதியான தந்தங்களைக் கொண்டுள்ளன வாகவும் விளங்கின. ஆசியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டால் எப்பொழுது வந்து சேரும் என்று அறுதியிட்டுக் கூறுவதற்கில்லை. அதன் காரணமாக, தாலமி பிலடெல்பஸ் தம் வேட்டையாடு பவர்களை நூபியா (Nubia) நாட்டிற்கு அனுப்பி யானைகளை வேட்டையாடிக் கொணருமாறு கட்டளையிட்டார். ஆனால், அம் மக்கள் யானைகளை வேட்டையாட அதிகம் விரும்பவில்லை; இருப் பினும் அரசர் கட்டளைக்கு மதிப்புக் கொடுக்க, நூபியாவுக்குச் சென்று மூன்று அல்லது நான்கு யானைகளைமட்டும் கொண்டுவருவர். நாளடைவில் நூபியாவிலிருந்தே யானைகள் எகிப்துக்குக் கொண்டு வரப்பட்டன. ஆனால், ஆப்பிரிக்க யானைகள் இந்திய யானைகளைப் போல் அவ்வளவு கம்பீரம் பொருந்தியன அல்ல. இந்திய யானைகளைப்பற்றிப் பிளினி குறிப்பிட்டுள்ளார்—(பிளினி, பகுதி II, அதிகாரம் 28, பக்கம் 238).

**6. ஆமைகள்** (Tortoises)

ஆமைகளும், அவற்றின் ஒடுகளும் வாணிகப் பொருள்களாகக் கருதப்பட்டன. இந்தியாவிலிருந்து ஆமை ஓடுகள் அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. அவை மிக்க கடினம் வாய்ந்தவை ஆகும்.

**7. அடுலிஸ்** (Adulis)

இத் துறைமுகத்தின் நவீன பெயர் மஸாவா (Massawa). இருப்பிடம் 15°·36'வ X 39°·28' கி. இது அடுலிஸ் வளைகுடாப் பகுதியில் உள்ளதாகும். இத் துறைமுகம் தாலமி பிலடெல்பஸ் அரசருக்குச் சொந்தமாயிருந்தது. வாணிகச் சந்தை நகரங்களுள் இதுவும் ஒன்றாகும். அபிசீனியா, சூடான் ஆகிய இரு நாடுகளுக்கும் இத் துறைமுகம் இயற்கையாய் அமைந்துவிட்ட காரணத்தால், இங்கு எப்பொழுதும் வாணிகம் நடைபெற்றுக் கொண்டிருக்கும். இந் நகரில் தாலமி யுரிகிடஸ் (Ptolemy Eurygetes) என்பாரின் வெற்றிச் சின்னங்கள் பல கற்களில் பொறித்து வைக்கப்பட்டுள்ளன. தாலமி பிலடெல்பஸ் இறந்தவுடன் (கி.மு. 247), அவர் பீடத்தில் அமர்ந்தவர் தாலமி யுரிகிடஸ் ஆவார். அவரும் யானைத் தந்தங்களைப் பெருவாரியான அளவில் விலைக்கு வாங்கினார்.

---

# 4. அடுலிஸ்

வேட்டையாடும் தொழிலையுடைய தாலமி மரபினர் நாட்டின்[1] கீழ்ப்பகுதியில் 3000 ஸ்டேடியா[2] தொலைவில் அடுலிஸ்[3] நகரம் இருக்கிறது. இத் துறைமுகம் சட்டதிட்டங்களுக்கு உட்பட்ட துறைமுகமே. இது தெற்கு முகமாகப் பரவி நிற்கும் வளைகுடா ஒன்றின் உட்பகுதியின் முனையில் உள்ளது. இதன் அருகில், மலைகள் கொண்ட தீவு ஒன்று உள்ளது. வளைகுடாவின் நீளம் 200 ஸ்டேடியா ஆகும். நாட்டின் கடற்கரை அம் மலை இருமருங்கும் பரவியுள்ளது. கடல் கடந்து வரும் கப்பல்கள் இங்கு நங்கூரம் பாய்ச்சிப் பண்டமாற்று வாணிகம் செய்து கொள்கின்றன. முன்னர்க் கப்பல்கள் யாவும் வளைகுடாவின் தொடக்கத்திலேயே நின்று சென்றுவிடும். அவை அருகில் உள்ள டையோடோரஸ்[4] என்ற தீவினில் தங்கிவிடும். காட்டுமிராண்டி

கள், வாசனைப்பண்டங்கள் ஏற்றிவரும் அக் கப்பல்களைத் தாக்கி வந்தனர். கடற்கரையிலிருந்து 20 ஸ்டிடேடியா தொலைவில் அடுலிஸ் எனும் பெரிய கிராமம் உள்ளது. அங்கிருந்து கோலோ[5] என்ற நாட்டையடைய மூன்று நாள்கள் பயணம் ஏற்றுற்போதுமானதே. கோலோ, தீவில் உள்ள நகரமாகும். அத் தீவிலேதான் தந்தம் விற்பனை பெருமளவில் நடைபெறுகிறது. அங்கிருந்து ஆக்ஸமைட்ஸ்[6] எனும் மக்கள் வாழும் நகரத்துக்கு ஐந்து நாள்கள் பயணம் செய்தால் அதை அடைந்து விடலாம். அவ்விடங்களில், யானைகளும் காண்டாமிருகங்களும் வேட்டையாடப்பட்டு, அவை சைனியம்[7] எனும் பகுதி வழியாகக் கோலோ கிராமத்துக்குக் கொண்டுவரப்படுகின்றன. உயிருடன் வந்த யானைகளும், காண்டாமிருகங்களும் கொல்லப்படுகின்றன. யானைத் தந்தமும்[8] காண்டமிருகக் கொம்பும்[9] உயர்ந்த விலையுள்ள வாணிகப் பொருள்களாகும்.

இத் துறைமுகத்துக்கெதிராக, கடலின் வலப்பக்கத்தில், மணல் திட்டுகள் கொண்ட பல தீவுகள் காணப்படுகின்றன. அத் தீவுகள் யாவும் அலாலெய்[10] என்ற பெயரால் வழங்கப்படுகின்றன. அத் தீவுகளில் ஆமைகளும் ஆமை ஓடுகளும்[11] காணப்படுகின்றன. அவற்றை அங்குள்ள மீன் தின்னிகள்[12], அடுலிஸ் வணிக நகர்த் துறை முகத்துக்கு எடுத்து வந்து சேர்க்கின்றனர்.

## விளக்கவுரை

**1. தாலமி மரபினர் நாடு**

தாலமி அரசர்களால் ஆளப்பட்ட நாடு. தாலமி அரசர்கள் ஆண்ட காலம் கி.மு. 323 முதல் கி.மு. 30 வரை ஆகும். மற்றும் அதிகாரம் 3, குறிப்பு–4 பார்க்கவும்.

**2. ஸ்டேடியா** (Stadia)

ஒரு ஸ்டேடியா ஒரு பர்லாங்கு அளவைக் குறிப்பிடும். இங்குக் குறிப்பிடப்பட்ட அளவு 275 மைல்கள் (440 கிமீ.) ஆகும். மற்றும் அதிகாரம் 1, குறிப்பு-5 பார்க்கவும்.

### 3. அடுலிஸ் (Adulis)

இத் துறைமுகம் இப்பொழுது மஸாவா (Massawa) என்று வழங்கப்படுகிறது. இருப்பிடம் 15°·36'வ×39·28' கி. தாலமி பிலடெல்பஸ் என்பவராலும், தாலமி யுரிகிடஸ் என்பவராலும் இத் துறைமுகம் பெரும் புகழ்பெற்றது. வாணிகம் தழைத்தோங்கியது. மற்றும், அதிகாரம் 3, குறிப்பு-7 பார்க்கவும்.

### 4. டையோடோரஸ் (Diadorus)

இத்தீவு அடுலிஸ் துறைமுகத்துக் கெதிரில் 3 மைல்கள் (5 கிமீ) தொலைவில் உள்ளது. இது மணற்பாங்கானதும், நடுவில் ஒரு மலையைக் கொண்டுள்ளதுமான தீவு. இயற்கைத் துறைமுகம் இங்கு ஏற்பட்டிருந்த காரணத்தால், கப்பல்கள் இங்கு வந்து இளைப்பாற வசதியாயிருந்தது. இத் தீவிலிருந்து, கப்பலில் கொண்டுவரப்பட்ட சரக்குகள் யாவும் சிறுசிறு படகுகள் மூலமாக அடுலிஸ் துறைமுகத்துக்கு எடுத்துச் செல்லப் பட்டன. அத் தீவு தனியாக அமைந்திருந்ததாலும், அங்கே அயல்நாடு, இந்தியா முதலான தொலை நாடுகளிலிருந்து கப்பலில் வாசனைப் பண்டங்கள் ஏற்றி வந்து அத் தீவில் சற்று இளைப்பாறினதாலும், நாளடைவில் கடற்கொள்ளைக்காரர்கள் அத் தீவை முற்றுகையிடத் தொடங்கினர். நல்ல உயர்ந்த பண்டங்கள் கொள்ளையடிக்கப் படுவதைக் கண்ட கப்பற் சொந்தக்காரர்கள், அதற்கு மாற்றாக வேறொரு துறைமுகத்தை ஏற்படுத்திக்கொள்ள முயன்றனர். ஆயினும், அடுலிஸ் (Adulis) துறைமுகம் மிக அருகில் பாதுகாப்பாய் இருந்ததால், நாளடைவில் கப்பல்கள் யாவும் நேராக அடுலிஸ் துறைமுகத்தையே வந்தடைந்தன. அடுலிஸ் துறைமுகம் தாய் நாட்டின் கடற்கரையிலேயே அமைந்திருந்ததால், கடற்கொள்ளைக்காரர்கள் அங்கு வர அஞ்சினர். வாசனைப் பண்ட வாணிகம் அடுலிஸ் துறைமுகத்தில் பேரளவில் செழித்தது. அந் நாட்டை ஆண்ட தாலமி பரம்பரை அரசர்கள் அத் துறைமுகத்துக்குச் சிறந்த பாதுகாப்பளித்தனர். அதன் காரணமாக, அரசாங்கத்துக்குப் பெருமளவில் வருவாய் கிடைத்தது.

### 5. கோலோ (Coloe)

இது மலைச்சரிவுகள் உள்ள பீடபூமியாகும். இங்குப் பற்பல எகிப்தியக் கோயில்களும், பாழடைந்த பழம்பெரும் சின்னங்களும் உள்ளன. அடுலிஸ் நகர நாகரிகமே இங்கும் காணப்பட்டது. இதுவும் தாலமி அரச பரம்பரையினரால் ஆளப்பட்டு வந்தது. அடுலிஸ் துறைமுகத்துக்குத் தெற்கே 30 மைல்கள் (48 கிமீ.) தொலைவில் கோலா இருந்ததாகக்கருதப்படுகிறது.

## 6. ஆக்ஸமைட்ஸ் (Auxumites)

ஆக்ஸம் (Auxum) என்ற நாட்டின் மக்கள் ஆக்ஸமைட்ஸ் (Auxumites) என்று வழங்கப்பட்டனர். ஆக்ஸம் முன்னர் ஆக்ஸுமி (Auxumie) என்று வழங்கப்பட்டது. மெரோ (Meroe) என்ற நகரத்திற்குத் தென்கிழக்கே வாழும் மக்களை அசாகே (Asachae) என்று பிளினி (கி.பி. 23-79) வழங்கினர். அவர்களை யானை வேட்டையாடுவோர் என்று கூறினர். ஆக்ஸம், ஆக்ஸுமி என்ற பெயரே பின்னர் அபிசீனியா என்று ஆயிற்று. மற்றும், அராபிய மொழியில் ஹபாஷ் (Habash) என்று கூறப்பட்ட இடமே பின்னர் அபிசீனியாவாக மருவிற்று என்றும் கூறப்படுகிறது. ஹபாஷ் என்பது கலவை என்று பொருள்படும் சொல்லாகும். அவ்விடத்தில் வாழ்ந்த மக்கள் வாசனைப் பண்டங்களை ஒன்று திரட்டிக் கூட்டிக் கலவை செய்து, அரிய பொருளாக விற்று வந்தனர். அதன் காரணமாக அவர்கள் ஹபாஷைட் (Habashite) அதாவது ஹபாஷ் நாட்டினர்-வாசனைப் பண்டங்களைப் பொறுக்கி ஒன்று கூட்டுவதில் சமர்த்தர்—என்று வழங்கப்பட்டனர். ஆக ஹபாஷ் என்ற சொல்லின் அடிப்படையில் பிறந்ததே அபிசீனியா என்று கருதுவது பொருத்தமே. வாசனைப் பண்டங்கள் மிகுதியாக விளைந்த நாடு ஆப்பிரிக்காவின் வடகிழக்குப் பகுதியாகும். அப் பகுதியே வாசனைப் பண்டநாடு (Incense Land) என்றும் வழங்கப்பட்டது.

அபிசீனியா (Abyssinia) என்ற பெயர் 1923 ஆம் ஆண்டு வரை வழங்கப்பட்டு வந்தது. பின்னர் அவ்விடமே ஈதியோபியா (Ethiopia) என்று வழங்கப்பட்டது. இது நூபியா (Nubiya), கார்டபான்(Kordofan),சென்னர் (Sennar). அபிசீனியா(Abyssinia) ஆகிய பகுதிகளைக் கொண்டது. எகிப்துக்குத் தெற்கே உள்ளது. அந் நாட்டினர் காக்கேசிய இனத்தவர் போன்று காணப்படுகின்றனர். அராபிய மொழி போன்ற ஒன்றைப் பேசுகின்றனர். அதற்கு மெரோ (Meroe) தலைநகரமாயிருந்தது. எகிப்து பல ஆண்டுகள் ஈதியோபிய அரசர்களால் ஆளப்பட்டு வந்தது. ஈதியோபியா என்பது பழைய பெயரே. கி. மு. 22-ல் ரோமப் பேரரசர், ஈதியோபியாவை வென்றார். இருப்பினும் அந் நாடு ரோமப் பேரரசுடன் இணைக்கப்படவில்லை.

அபிசீனியாவின் நவீன தலைநகரம் அடிஸ் அபாபா (Addis Ababa) ஆகும். இதன் இருப்பிடம்: 9°· 2' வ × 38°· 44' கி.

**7. சைனியம்** (Cyneum)

இது கிழக்குச் சூடான் பிரதேசத்தில் உள்ள நவீன சென்னூர் (Sennar Dam) ஆகும்.

இதன் இருப்பிடம்: 13°· 36' வ × 33°· 50' கி.

**8. யானைத் தந்தம்** (Ivory)

யானைத் தந்தம் எகிப்திய நாட்டில் கி.மு. 2600-லேயே மிக உயர்ந்த பண்டமாற்றுப் பொருளாகக் கருதப்பட்டது. தந்தத்தின் விலை மிக மிக அதிகமாயிருந்தது; இன்றும் அதன் விலை உயர்ந்தே காணப்படுகிறது. தந்தம், ஹார்கப் (Harkuf) என்ற அரசர் பொறித்த சாசனங்களில் குறிக்கப் பட்டுள்ளது. இவர் அஸ்வான் நாட்டின் அரசர்.

தந்தம் விவிலிய நூலில் (Bible) குறிப்பிடப் பட்டுள்ளது. சாலமோனின் அரியாசனம் தந்தத்தால் செய்யப் பட்டதாகும். சாலமோன் கட்டிய கோயிலுக்குப் பொன், வெள்ளி, தந்தம் முதலிய பொருள்கள் பயன்படுத்தப்பட்டன.

"His hands are as gold rings set with the beryl; his belly is as bright ivory overlaid with sapphires"

—Solomon's Song 5-14

"Moreover the king made a great throne of ivory and overlaid it with the best gold."

—I. Kings. 10-18.

**9. காண்டாமிருகக் கொம்பு** (Horn of rhinoceros)

காண்டாமிருகத்தின் (Rhinoceros) கொம்பு மிக உயர்ந்த பண்டமாற்றுப் பொருளாகக் கருதப்பட்டது. அக் கொம்பு மிகவும் கடினம் வாய்ந்தது. தன் மூக்கின் மேலுள்ள கொம்பினால் யானைகளையும் விரட்டிவிடும் தன்மையது.

**10. அலாலெய் தீவுகள்** (Alalei Islands)

அவை மிகமிகச் சிறிய சிதறுண்டு கிடக்கும் தீவுகள். அனெஸ்லி விரிகுடாவின் (Annesley Bay) தொடக்கத்தில் காணப்படுவனவாகும்.

**11. ஆமை ஓடுகள்** (Tortoise shells)

ஆமை ஆங்கிலத்தில் டார்டாய்ஸ் (Tortoise) என்று வழங்கப் படுகிறது. இலத்தீன் மொழியில் (Latin) டார்டஸ் (Tortus) என்றால்

உடலைச் சுருக்கி முறுக்கி இழுத்துக்கொள்வது என்று பொருள். ஆகவே, இச் செயலைக் கொண்ட ஆமை டார்டாய்ஸ் (Tortoise) என்று ஆங்கிலத்தில் வழங்கப்பட்டது.

ஆமையோடு (Tortoise shell) பழங்காலத்திலிருந்தே நாகரிகப் பொருளாகக் கருதப்பட்டது. ரோம் நகரில் இவ் ஆமை ஓடுகளுக்குப் பெருத்த செலாவணி உண்டு. இந்தியாவில் விளங்கிய 'அழுங் காமை' என்ற ஆமை ஓடு மிகவும் புகழ்பெற்றதாகும். இவ் ஓடுகள் இந்தியாவிலிருந்து, அரேபியாவுக்கு எடுத்துச் செல்லப்பட்டு அங்கிருந்து ஈதியோபியாவுக்கும், ரோம்நகருக்கும் விற்கப்பட்டன. ஆமைஓடுகளால் செய்யப்பட்ட பொருள்கள்: சிமிழ், கத்திப்பிடிகள், உறுதிவாய்ந்த சிறு பெட்டகங்கள், பெண்கள் அணியும் மணிகள், மூடிகள், கேடயங்களின் மேல் உறைகள், நாற்காலிகளுக்கு அழகு சாதனமாகப் போடுதல், மரச்சாமான்கள் மேல் பதியவைத்தல் முதலியன. இதன் காரணமாக ஆமையோடு மிகவும் விரும்பப் படுவதாயிற்று.

தந்தம், ஆமையோடு இவை இரண்டும் சைனியம் (Cyneum) என்ற ஊரில் மிகுதியாகக் காணப்பட்டன. இவை பிறகு ஈதியோபியா (Ethiopia) விலும் செல்வாக்குப் பெற்று விளங்கிற்று. இந்திய ஆமையோடே மற்ற யாவற்றையும் விட உறுதி வாய்ந்ததாகக் கருதப்பட்டு வந்தது. ஒவ்வோர் ஆமையும் 3 முதல் 6 அடிகள் (90 செமீ.—180 செமீ.) வரை வளர்ந்து வந்ததாக வரலாறுகள் விளக்கம் அளிக்கின்றன. ஆமையோட்டைப் பிளினி (கி.பி. 23-79) டெஸ்டுடினஸ் புடாமன் (Testudinus putaman) என்று வழங்கினர்.

தமிழ்ப் பெரு நூலாகிய **திருக்குறளில்** ஆமை குறிக்கப் பட்டுள்ளது:

> "ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்க லாற்றின்
> எழுமையும் ஏமாப்பு உடைத்து."
>
> —**திருக்குறள் 126.**

"ஆமையானது இன்னல் எதிர்ப்பட்ட விடத்து, தனது நான்கு கால்கள், தலை ஆகிய ஐந்து உறுப்புகளையும் தன் முதுகு ஓட்டினுள்ளே குறுக்கி இழுத்து அடக்கிவிடுகிறது. அதேபோல், நாமும் நமது ஐந்து இந்திரியங்களையும் இப் பிறவியிலேயே அடக்கி ஆள வேண்டும். அவ்வாறு செய்தால், அச் செயல் இனி வரப்போகும் ஏழு பிறவிகளுக்கும் ஒரு சிறந்த பாதுகாப்பாய் இருக்கும்."

இதனுல் ஆமையோடு எத்தகைய பகைவர்களாலும் ஒன்றும் செய்யமுடியாதது; உடைக்கமுடியாதது என்பது இக் குறள் மூலமாகத் தெரிகிறதன்றோ?

**12. மீன் தின்னிகள்** (Icthyophogi)

இது ஈதியோப்பியாவின் (Ethiopia) குகைவாழ் மக்களைக் குறிப்பிடுகிறது. மற்றும் அதிகாரம் 2, குறிப்பு-3 பார்க்கவும். இவர்கள் பிளினி (கி. பி. 23-79)யாலும் குறிப்பிடப் பட்டுள்ளனர்.

—(**பிளினி**: புத்தகம் VI, அதிகாரம் 25, குறிப்பு-66, பக்கம் 105).

---

# 5. ஓப்சியன் விரிகுடா

இங்கிருந்து 800 ஸ்டேடியா[1] தொலைவிற்கு அப்பால், மற்றொரு மிக்க ஆழம் வாய்ந்த விரிகுடா, ஓப்சியன் விரிகுடா[2] என்ற பெயர்கொண்டு காணப்படுகிறது. அதன் நுழைவாயிலின் வலப் புறத்தில் பெரியமலை போன்ற மணல் மேடு ஒன்று தென்படுகிறது. அம் மணல் மேட்டின் அடிப்பகுதியில் ஒப்சியன்[3] கற்கள் அகழ்ந்து எடுக்கப்படுகின்றன. இந்த இடத்தில் மட்டும் ஒப்சியன் கற்கள் உற்பத்தியாகின்றன. கன்றுதின்னிகள் நாடு[4] முதல் பெர்பெர் நாடு[5] வரை உள்ள பகுதிகள் யாவும் ஜொஸ்கேலஸ்[6] என்ற அரசனால் ஆளப்பட்டு வருகிறது. ஆனால், அவன் மிகுந்த கருமியானவன். எப்பொழுதும் 'அதிகம் தேவை' என்ற பல்லவியையே பாடிக் கொண்டிருப்பான். இக் குணம் ஒன்றைத் தவிர, அவ்வரசன் நேர்மையாக நடந்து கொண்டவனும், கிரேக்கமொழி இலக்கியங்களில் மிகுந்த பயிற்சி உடையவனும் ஆவான்.

### விளக்கவுரை

**1. ஸ்டேடியா** (Stadia)

ஒரு ஸ்டேடியம் (Stadium) என்பது ஒரு பர்லாங்குத் தொலைவினைக் குறிப்பிடும். இங்குக் குறிக்கப்பட்டுள்ள தொலைவு 100 மைல்கள் (160 கிமீ.) ஆகும். மற்றும் அதிகாரம் 1, குறிப்பு-5 பார்க்கவும்.

**2. ஒப்சியன் விரிகுடா** (Opsian Bay)

இது ராஸ்-ஹான்-பிலா (Ras-han-fila)வுக்கு வடக்கேயுள்ள ஹக்கில் விரிகுடா (Hakkil Bay) என்பதைக் குறிப்பிடுகிறது. ஹான்பிலாவின் பழைய பெயர் அம்பிலா (Amphila). கி. மு. 100

அளவில் எபீசசில் வாழ்ந்து வந்த ஆர்டிமிடோரஸ் (Artimidorus) எனும் பெயர் கொண்ட புவிஇயல் ஆசிரியர், ஹான்பிலாவை, அம்பிலி போர்ட் (Amphili Portus) என்றே வழங்கினுர். ஹக்கிள் விரிகுடாவின் இருப்பிடம் : 14°·44'வ × 40°·49' கி.

**3. ஒப்சியன் கற்கள்** (Opsian Stones)

இவை ஒளி ஊடுருவிப்பாயும் தன்மைவாய்ந்த கற்கள். பிளினி (கி.பி. 23-79) பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்: "இக் கற்கள் இந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்படுகின்றன. இவற்றின் நிறம் கருமை; ஆயினும், ஒளி ஊடுருவிப்பாயும் தன்மையவை. பார்வைக்கு மங்கின நிறம் போன்று காணப்படும். அக் கற்கள் ஒரு நபரின் நிழற்படத்தைத் தெரிவிக்கும்; பிரதிபிம்பத்தைத் தெரிவிப்பதில்லை இவை ஆபரணம் செய்யவும், கற்சிலைகள் செய்யவும், தெய்வங்களுக்கு அளிக்கப்படும் காணிக்கைகளாகவும் பயன்படுத்தப்பட்டன.''

—(**பிளினி**: புத்தகம் 37, அதிகாரம் 67)

**4. கன்று தின்னிகள்** (Calf-eaters)

கன்றுக்குட்டிகளையும், மற்ற விலங்கின் குட்டிகளையும் தின்பவர். மற்றும் அதிகாரம் 2, குறிப்பு-4 பார்க்கவும்

**5. பெர்பெர் நாடு** (Berber country)

இந் நாடு நைல் நதிக்கரையில் உள்ளது. சூடான் துறைமுகத்துத் தென் மேற்கே உள்ளது இருப்பிடம் : 18° 1' வ × 34°·4'கி. இங்கு வசித்தவர் மலைக்குகை வாசிகளும், அநாகரிக மக்களும் ஆவர். பார்பாரியன் (Barbarian) என்ற சொல், பெர்பெர் என்ற சொல்லின் அடிப்படையாகப் பிறந்ததே.

**6. ஜொஸ்கேலஸ்** (Zoscales)

ஜொஸ்கேலஸ் எனப்படும் அரசன், அபிசீனிய வரலாற்றில் ஜ-அகாலே (Ja-Akale) என்று குறிபிடப்பட்டுள்ளான். இவ்வரசன் ஆட்சி செய்த காலம் கி.பி. 76 முதல் 89 வரை அதாவது 13 ஆண்டுகள் ஆகும். பெரிப்ளுஸ் குறிப்புகள் எழுதப்பட்ட ஆண்டில் இவ்வரசன் அரசாட்சி செய்துகொண்டிருந்ததாகக் கூறப்படுகிறது.

# 6. பெர்பெர் நாட்டின் இறக்குமதிப் பொருள்கள்

பெர்பெர்[1] நாட்டு மக்களுக்காகச் சணலால் நெய்யப் பட்ட முரட்டுத் துணிகள் எகிப்து நாட்டில்[2] நெய்யப்பட்டு இறக்குமதி செய்யப் படுகின்றன. ஆர்சிஞே[3] விலிருந்து மேலாடைகள் தருவிக்கப் படுகின்றன. மற்றும், மிகவும் மலிவான விலையில் சாயம் தோய்த்த ஆடைகள்; நார்ப் பட்டினுல்[4] இரு பக்கங்களிலும் கோடுகளிட்ட போர்வைகள்; கண்ணுடி போன்ற கூழாங் கற்களினுலான[5] பல வகைப் பாண்டங்கள்; டையோஸ்பாலிஸ்[6] என்ற இடத்தில் செய்யப்பட்ட குருவிந்தக் கல்லினுல்[7] வண்ணமிடப்பட்ட பானைபோன்ற மிடாக்கள் ஆகிய இவை இறக்குமதி செய்யப் படுகின்றன. ஆபரணங் களுக்குப் பயன்படுத்தப்படும் பித்தளைத் தகடுகள்,[8] முத்திரையிட்ட நாணய வடிவமாக இல்லாமல், மெல்லிய தகடுகளாக வெட்டப்பட்டு இறக்குமதி செய்யப் படு கின்றன. மற்றும், கடினம் இல்லாத, மிருதுத் தன்மை வாய்ந்த பித்தளைத் தகடுகள்[9] பலவும், சமையல் பாத்தி ரங்கள் செய்ய உதவும் அளவினதாக வரவழைக்கப் படுகின்றன. அம் மென்மை வாய்ந்த பித்தளைத் தகடு கள், பெண்களுக்குக் காப்பாகவும், காற் சதங்கையாக வும் செய்யப் பயன்படுத்தப் படுகின்றன. இரும்பு[10], ஈட்டி செய்யப் பயன்படுகிறது. அவ் ஈட்டியினுல்[c] யானைகள் வீழ்த்தப் படுகின்றன. இவற்றைத் தவிர சிறு கோடரிகள், கத்திகள், கேடயங்கள் முதலியனவும் இறக்குமதி செய்யப் படுகின்றன. செம்பினுல்[11] ஆன நீர்ப் பருகும் பாத்திரங்கள் — குவளைகள், கோப்பைகள், உருண்டை வடிவ முள்ளவைகளும், அகன்ற வாய் உள்ளவைகளுமான பாத்திரங்கள் — கொணரப் படுகின் றன. சிறிய வகை நாணயங்களும் விற்பனைக்கு வரு

கின்றன. இலாவொடீசியா[12]விலும், இத்தாலியிலும்[13] தயாரிக்கப் பட்ட மதுபான வகைகளில் சிலவும் வர வழைக்கப் படுகின்றன. ஒலிவ எண்ணெய் சிறிதளவு இறக்குமதி செய்யப் படுகின்றது. அரசர்க்காக— அரச குடும்பத்திற்காக—தனிப்பட்ட வகையில் செய்யப் பட்ட பொன், வெள்ளித் தட்டுகள், அந் நாட்டு மரபுக்கும், கலாச்சாரத்துக்கும் உகந்தவாறு செய்யப் பட்ட உண் கலங்கள், அரசர்க்குரிய உயர்ந்த ஆடை வகைகள் போர் வீரர்களுக்குரிய உடைகள், மென்மை வாய்ந்த தோலினுல் ஆன, தடித்த உறுதியான பித்தான்கள் கொண்ட மேற்சட்டைகள், விலை அதிகமாக இல்லாத துணி வகைகள் ஆக பலவும் இறக்குமதி செய்யப் படு கின்றன. இதே போன்று அரியாகா[14] விலிருந்து இந்திய இரும்பும், எஃகும், இந்தியப் பருத்தி ஆடைகளும்[15] இறக்குமதி செய்யப் படுகின்றன. அவ்வாடைகளுள் மிக்க அகலம் கொண்ட ஆடைகளின் பெயர் மொனுசி[16] என்பதாகும். மற்றும், செக்மடோகின்[17] என்ற ஆடை வகைகள், ஒட்டியாண வகைகள்; அரை நாண்கள்; தோலாடைகள், சிறிது சாயம் ஏற்றப் பட்ட துணிகள்; மஸ்லின்கள், சாயம் ஏற்றப் பட்ட குங்கிலியம், அரக்கு[18] ஆகிய பொருள்கள் தேவைக் கேற்றவாறு இறக்குமதி செய்யப் படுகின்றன.

பெர்பெர் நாட்டிலிருந்து ஏற்றுமதியாகும் பொருள் களும் உள. அவை: யானைத் தந்தம்,[19] ஆமையோடு,[20] காண்டாமிருகக் கொம்பு[21] முதலியன. எகிப்திலிருந்து வரும் பண்டங்களுள் பெரும்பான்மையானவை ஜனவரி மாதம் முதல் செப்டெம்பர் மாதம் இறுதி வரையில் இந்த வாணிகச் சந்தை கூடும் இடங்களுக்குக் கொண்டு வரப்படுகின்றன—அதாவது திபி[22]முதல்[23]தோத் வரை. ஆனுல், ஒவ்வொரு பருவத்திலும், செப்டெம்பர் இறுதிக் குள், அவர்கள் வாணிகத்தை முன்னிட்டுக் கப்பல் ஊர்ந்து அயல் நாடு சென்றுவிடுவார்கள்.[24]

## விளக்கவுரை

**1. பெர்பெர் நாடு** (Berber)

*நாகரிகம் குறைந்த மக்கள் வாழும் நாடு. இருப்பிடம் :* 18°·1'வ× 34·°4' கி. *மற்றும் அதிகாரம் 2, குறிப்பு-2 பார்க்கவும்.*

**2. எகிப்து நாடு** (Egypt)

*உலகநாகரிகம் தோன்றிய இடங்களுள்இது முக்கியமான ஒன்றுகும். வானவியலுக்கும், பிரமிடுகளுக்கும், கணக்குக்கும் எகிப்து ஒரு காலத்தில் பெரும் புகழ் பெற்றிருந்தது. வற்றாத நைல்நதி* (Nile) *காரணமாக, எகிப்திய நாகரிகம் உலகில் சிறந்து விளங்கிற்று. மற்றும், அதிகாரம் 1, குறிப்பு—7 பார்க்கவும். நைல் நதிக்கரையில் விளைந்த சணல், ஆடைகளாக நெய்யப்பட்டு, பெர்பெர் நாட்டில் இறக்குமதி செய்யப்பட்டன.*

**3. ஆர்சினோ** (Arsinoe)

*தாலமி பிலடெல்பஸ்* (Ptolemy Philadelphus) *என்ற அரசரின் மனைவி பெயரால் நிர்மாணிக்கப்பட்ட நகரம். அவ்வரசரின் ஆட்சிக்காலம் கி.மு.* 285—247. *ஆர்சினோ, லிசிமேக்கஸ்* (Lysimachus) *என்பவரின் மகள்; தாலமி பிலடெல்பஸ்ஸின் மனைவி. இவர்களுக்குத் திருமணம் ஆன ஆண்டு கி.மு.* 285.

**4. நார்ப்பட்டு** (Linen)

*பளபளப்பான செயற்கைப்பட்டு. ஆங்கிலத்தில் லினன்* (Linen) *என்று வழங்குவர். இப் பட்டு இந்தியாவிலிருந்து பெருவாரியான அளவில் ஏற்றுமதி செய்யப்பட்டது.*

**5. கண்ணாடி போன்ற கூழாங்கற்கள்** (Glass or Flint stones)

*கண்ணாடி செய்வதைப்பற்றிப் பிளினி* (கி.பி.23-79) *பின்வருமாறு கூறுகிறார்: "கண்ணாடி செய்யும் தொழில் பீனிசியா* (Phoenicia) *என்ற இடத்தில் தொடங்கிற்று. பேலூர் என்ற ஆற்று மணல் மட்டுமே இக் கண்ணாடி செய்யப்பயன்படுகிறது. பீனிசியக் கடற்கரையில், பேலூர் ஆற்றுக்கழிமுகத்தில் வெடியுப்பு* (Nitre) *கொணர்ந்த ஒரு கப்பல் சேதமுற்று, கடற்கரைக்கு ஒதுக்கப்பட்டது. அக் கப்பலில் இருந்த வெடியுப்பு பேலூர் ஆற்று மணலுடன் கலந்து விட்டது. அங்கே குளிர் காயவும், உணவு செய்யவும் தீமூட்டிய பொழுது, மணலுடன் கலந்த வெடியுப்பு சூடாகி, ஒரு கலவைப் பொருளாகி, அதுவே இறுதியில் கண்ணாடியாகிவிட்டது."*

—(**பிளினி:** *புத்தகம்* 36, *அதிகாரம்* 60-70)

பீனிசியா என்பது சிரியா (Syria) நாட்டின் கடற்கரையில் ஒரு பகுதியாகும். அதன் முக்கிய நகரங்கள் தீரே (Tyre), சீதோன் (Sidon) என்பன. பீனிசிய மக்கள் கடல் கடந்து, இன்னல்களை எதிர்த்து நின்று, வாணிகத்துறையில் வெற்றி கண்டவர் ஆவர். அயல் நாடுகளிலும் பல புதிய குடியேற்றங்களை ஏற்படுத்தியுள்ளனர். அவற்றுள் கார்தேஜ் (Carthage), ஹிப்போ (Hippo) இவ்விரண்டும் சிறந்தனவாகும்.

இக் கற்களைச் சிக்கிமுக்கிக்கற்கள் (Flint stones) என்றும் மொழி பெயர்த்துள்ளனர். நெருப்பு உண்டாக்க, சிக்கிமுக்கிக்கற்கள் பயன் படுத்தப் பட்டன. இரு கற்களை ஒன்றுடன் மற்றொன்றை வேகமாகத் தட்டினால் தீப்பொறி காணப்படும். இத்தகைய கற்களும் இந்தியாவிலிருந்தே ஏற்றுமதி செய்யப்பட்டன.

### 6. டையோஸ்பாலிஸ் (Diospolis)

டையோஸ்பாலிஸ் என்றால் கடவுளின் நகரம் என்பது பொருள். இது தீபே(Thebes) என்ற நகரத்தையும் குறிப்பிடக்கூடும். நவீன கார்னக் (Karnack) என்னும் இடத்தைக் குறிப்பிடுகிறது. கார்னக்கின் இருப்பிடம்: 25°·40′வ × 32°·43′கி.

நைல் நதிக் கரைமீது மற்றொரு டையோஸ்பாலிஸ் இருந்தது "அதற்கு வாயில்கள் 100; ஒவ்வொரு வாயிலின் வழியாகவும் 200 பெயர்கள் தத்தம் இரதங்களிலும் குதிரைமீது இவர்ந்தும் சென்று கொண்டிருப்பார்கள்,' என்று வரலாற்றாசிரியர் ஸ்டிராபோ (Strabo) கூறுகிறார். ஸ்டிராபோவின் (Strabo) காலம் கி.மு.64—கி.பி. 24 ஆகும்.

### 7. குருவிந்தக் கல் (Murrhine Stone)

குருவிந்தக் கல் என்பது ஆங்கிலத்தில் முர்ரைன் (Murrhine என்று வழங்கப்படுகிறது. இது காவிக்கல். அக் காலத்தில் இக் கற்கள் காம்பே (Cambay) வளைகுடாவில் பெருவாரியாகக் கிடைத்தன. இக் கற்களின் பொடி, மண் பாண்டங்களை அழகு செய்ய உதவிற்று. இப் பொடி ஃப்ளோரல் ஸ்பார் (Floural spar) என்று வழங்கப்படுகிறது. இந்திய மக்கள் இக் கற்களைப் பொடி செய்து, குழம்பாக்கி, நற்காரியங்களுக்குக் கோலங்கள் போடவும் அலங்கரிக்கவும் பயன்படுத்திவந்தனர். இவை கோயில் சுவர்களுக்குப் பட்டை தீட்டவும் பயன் படுத்தப் பட்டன.

**8. பித்தளைத் தகடுகள்** (Brass plates)

பாத்திரங்கள், அணிகலன்கள், சிலைகள் செய்யப் பித்தளைத் தகடுகள் இறக்குமதி செய்யப்பட்டன. இவை கடினம் வாய்ந்த, உறுதியான பித்தளைத் தகடுகளாகும்.

**9. மெல்லிய பித்தளைத் தகடுகள் (**Soft brass plates)

இவ்வகையான பித்தளை தேன் பித்தளை என்றும் வழங்கப் படுகிறது. இதில் 5 முதல் 10 சத வீதம் வரை ஈயம் கலக்கப் படுகிறது. இது தேனடை போன்று கைகளால் வளைக்கும் தன்மை வாய்ந்த காரணத்தால், தேன் பித்தளை என்று வழங்கப் படுகிறது போலும். ஆபரணங்களும், தெய்வப் படிமங்களும் செய்ய இது பயன்படுத்தப்பட்டது.

**10. இரும்பு** (Iron)

கிறித்து பிறப்பதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் இருந்தே, இந்தியர்களுக்கு இரும்பின் பயன் நன்கு தெரிந்ததே யாகும். பிளினி (கி.பி. 23–79) கூறுகிறார்: "இது மிகவும் பயன் படக்கூடிய ஒரு பொருளாகும். ஆனால், மனிதன் கைகளில் சிக்கிக் கொண்டுள்ள, மிகவும் பயங்கரம் விளைவிக்கும் ஆயுதமாகும்."

(**பிளினி**: புத்தகம் 34, அதிகாரங்கள் 39, 40)

**11. செம்பினால் ஆன பாத்திரங்கள்** (Copper vessels)

செப்புக் குடங்கள் (தாமிரக் குடங்கள்) பழங்காலம் முதற் கொண்டு இந்தியர்களால் பயன்படுத்தப் பட்டன. தாமிரம், குஷ்டம் போன்ற நோய்களுக்கு நல்ல மருந்துப் பொருளாகும். தாமிரத்தில் செய்த குவளைகளில் நீர்ப் பருகுதலினால், சரும நோய் கள் தவிர்க்கப்பட்டன. அதன் காரணமாக, அயல் நாடுகளுக் குச் செப்புத் தகடுகளும், செப்புக் குடங்களும் ஏற்றுமதி செய்யப் பட்டன.

**12. இலாவொடீசியா** (Laodicea)

செல்யூகஸ் நிகேடர் என்பவர் சிரியா நாட்டு மன்னர் அவர் அரசாண்ட காலம் கி.மு. 312–280. அவர் தந்தையின் பெயர் ஆண்டியாக்கஸ்; தாயாரின் பெயர் இலாவொடீசியா. தம் தாயாரின் பெயரால் பல நகரங்களைச் செல்யூகஸ் நிகேடர் நிர்மா ணித்தார். மாவீரர் அலெக்சாந்தரின் படையெடுப்பில் அவர் கலந்து கொண்டார். இலாவொடீசியா மதுபானம் தயாரிப் பதற்குப் புகழ்பெற்ற இடமாயிருந்தது. இதன் நவீன பெயர் லடாகியா (Latakia). இருப்பிடம்: 35°·35'வ × 35°·48'கி

**13. இத்தாலி** (Italy)

இத்தாலியில், ரோம் நகரிலும் நேபிள்ஸ் நகரிலும், மது பான வகைகள் தயாரிக்கப்பட்டு அயல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. வெனிஸ் மதுபானம் (Venetian wine) அன்று உலகப் புகழ்பெற்றிருந்தது.

**14. அரியாகா** (Ariaca)

அரியாகா என்பது அரியா—நாடு என்னும் பொருள்தரும் சொல்லாகும். டிமிரி—கா தமிழ் நாடு என்றும், ஆப்ரி—கா ஆப்ரிக்க நாடு என்றும் பொருள்படுவது போல. அரியா என்பது நவீன ஹீரட்(Herat) இருக்கும் பிரதேசத்தைக் குறிப்பிட்டது. ஹீரட் ஆப்கானிஸ்தானத்தில், ஹரி-ருத் (Hari-rud) ஆற்றங் கரையில் உள்ளது.

ஹீரட்டின் இருப்பிடம். 34°·22'வ × 62°·8'கி.

**15. பருத்தி ஆடைகள்** (Cotton fabrics)

பருத்தி இந்தியாவில்தான் முதன் முதல் விளைந்ததாகும். பருத்தி வடமொழியில் கார்ப்பாசம் (Karpasam) என்று வழங்கப் பட்டது. இச் சொல்லே, ஹீப்ரு மொழியில் (Hebrew Language) அதாவது எபிரேய மொழியில் கார்ப்பாஸ் Carpas) என்றும், இலத்தீன் மொழியில் (Latin) கார்ப்பாஸஸ் (Garbasus) என்றும், அதன் முன்னர் விளங்கிய கிரேக்க மொழியில் (Greek), கார்ப்பஸாஸ் (Karpasos) என்றும் வழங்கப்பட்டது. இலத்தீனில் விளங்கிய கார்ப்பாஸஸ் (Garbasus) என்ற சொல்லே, பிற்காலத்தில் ஆடையைக் குறிக்கும் சொல்லாகிய கார்ப் (Garb) என மருவிற்று. ஆகையால் இன்று விளங்கும் கார்ப் (Garb)எனும் சொல், பண்டைய இந்தியச் சொல்லின் உருவமேயாகும்.

உலகில் மற்ற நாடுகள் நாகரிகம் அடையும் முன்னரே, இந்தியர் பருத்தி விளைவித்து, நூல்நூற்று, ஆடை நெய்யக் கற்றுக் கொண்டனர். ஹிராடடஸ் (Herodotus) (கி.மு. 484 - 425) எனும் வரலாற்றாசிரியர் இந்தியப் பருத்தியைப் பற்றிக் கூறுகிறார்: "இது ஆட்டு ரோமத்தைவிட மென்மையானது; மரத்தில் காய்க்கிறது; இந்தியாவில் மிகுதியாக விளைகிறது. இந்தியர்கள் தங்கள் ஆடைகள் நெய்யப் பயன்படுத்துகின்றனர்."

"And there are trees growing wild which produce a kind of wool better than sheep's wool in beauty and quality, which the Indians use for making their clothes."

—(Herodotus: Book III, Page 219)

**16. மொஞசி** (Monache)

இது மிகவும் மெல்லியதான ஆடை வகை. மேல் அங்கவத்திர மாகப் பயன்படும் வகையைச் சார்ந்தது. இது அகலம் மிகுந் திருந்தது. மௌனியர்-மௌனமாயிருந்த புத்த பிக்ஷுக்கள்— பயன்படுத்திய ஆடைகளின் பெயர் போலும்.

**17. செக்மடோகின்** (Segmetogene)

செக்மடோகின் என்பது சேகம்-டோகின் என்று பிரிந்து, சேகம் என்ருல் போர்வீரர் என்றும், டோகின் என்ருல் மேலாடை என்றும் பொருள் தருகிறது. டோகின் என்பது டோகா என்பதன் மரூஉ. டோகா என்பது தோகா என்பதன் சிதைவே. தோகா என்பது பௌத்த பிக்ஷுக்கள் அணிந்த ஆடை வகையாகும். அவ் வாடை தோள்பட்டைமீது போட்டுக் கீழே தொங்கவிடப்பட் டிருக்கும். ஆக, செக்மடோகின் என்பது போர் வீரருக்குடைய ஆடை என்றும், அது எகிப்து நாட்டிற்கு ஏற்றுமதி செய்யப் பட்டது என்றும், சங்கம்-டோகின் எனக் கொண்டு புத்த பிக்ஷுக்கள் அணியும் மேல் ஆடை வகை என்றும் பொருள் கொள்ளலாம். பருத்தியாலான மேலாடை ஏற்றுமதி செய்யப் பட்டது என்பதே நாம் இங்கு மேற்கொள்ளும் பொருளாகும். இதி-சிங் (I-tsing) (கி.பி. 673-687) எனும் சீனப்பயணி புத்த பிக்ஷுக்களின் ஆடைகளைப் பற்றி விரிவாக எழுதியுள்ளார்.

**18. குங்கிலியம், அரக்கு** (Resin and lac)

குங்கிலியம் என்று கூறப்படும் சொல் கோந்து வகையைச் சார்ந்தது; அதனைக் கோந்துகளும் பிசின்களும், சாந்துகளும் செய்யப் பயன்படுத்துகின்றனர். ஆங்கிலத்தில் இது ரெசின் (resin) எனப்படும் குங்கிலியம் என்பது ஒருவகை மரம்; மருந்துச் சரக்கு.

அரக்கு (lac) என்ற சொல் வடமொழியில் 'லக்ஷா' என்று வழங்கப்படுகிறது. லக்ஷா என்பது நாளடைவில் லாக் (lac) என்று திரிந்து வழங்கப்படுவதாயிற்று. இவ் அரக்கு துணிகளைச் சாயந்தோய்க்கப் பயன்படுத்தப் பட்டது.

அரக்குடன், பெண்களுக்கு அழகு செய்யும் சாதனமான மருதோன்றி இலையும் (பிசின் போன்று செய்யப்பட்டு) மேலை நாடு களுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டது. இவ் வாசனைச் சாயமிடும் இலைக் குழம்பே பொதுப்படையாக ரெசின் (பிசின்) என்று மொழி பெயர்க்கப்பட்டுவிட்டது போலும்.

குங்குலிய மரத்தாலாய கலயத்தை உடைய நாயனர் குங்கிலியக் கலய நாயனர் அல்லவா? அவர் 63 நாயன்மார்களுள் ஒருவர் ஆவார்.

**19. யானைத் தந்தம்** (Ivory)

இந்திய யானைகள் உறுதி வாய்ந்தவை. அவற்றின் தந்தங்கள் நீண்டும், உறுதியாயும் வளர்ந்தன. அவை நல்ல விலைக்கு விற்கப் பட்டன. மற்றும் அதிகாரம் 4, குறிப்பு-8 பார்க்கவும்.

'இபம்' எனும் வடமொழிச் சொல் யானையைக் குறிக்கும் இபம் என்ற இச் சொல்லே இலத்தீன் மொழியில் ''இபர்'' (Ibor என்று வழங்கப்பட்டு, அதுவே நாளடைவில் ஆங்கிலத்தில் புகுந்து ஐபரி (Ibory) என்றாகி, இப்பொழுது ஐவரி (Ivory) என்று வழங்கப்படுகிறது. ஐவரி யானையைக் குறிப்பிடாமல், அதன் தந்தத்தையே குறிப்பிடுகிறது.

இந்திய யானைகளும் தந்தங்களும் அயல்நாடுகளுக்குப் பேரளவில் ஏற்றுமதி செய்யப்பட்டன.

**20. ஆமையோடு** (Tortoise shell)

ரோமப்பேரரசில் மிகவும் சிறப்பு வாய்ந்த வாணிகப் பொருள் இந்திய ஆமை ஓடுகளேயாகும். இவ் ஓடுகள் மிகவும் கடினமாயிருத்தலால், சிறு பெட்டிகள் செய்வதற்கும், பாத்திரங்கள் பிடிகள் செய்வதற்கும், மரச்சாமான்களுக்கு அழகு படுத்தவும் பயன்படுத்தப்பட்டன.

**பிளினி** (கி. பி. 23-79) ஆமை ஓட்டினைப் பற்றி எழுதுகிறார்: "குறிப்பாக ஆமைகளைப் பிடிப்பதில் அக்கறையும் துடிப்பும் காட்டுகின்றனர். ஒரு பெரிய அளவுள்ள ஆமை ஓட்டின்கீழ்ப் பல சிறிய ஆமைகள் பதுங்கி ஒதுங்கி நிற்கின்றன."
- (**பிளினி**: புத்தகம்VI, அதிகாரம் 24, குறிப்புகள் 57-58, பக்கம் 87)

**21. காண்டாமிருகக் கொம்பு** (Rhinoceros's horn)

இக் கொம்பு மிகவும் கடினமானது. வாணிகத்தில், உயர்ந்த பண்டமாற்றுப் பொருளாகக் கருதப்பட்டது. மற்றும் அதிகாரம் 4, குறிப்பு-9 பார்க்கவும். மற்றும், காண்டாமிருகத்தின் தோல், பற்கள் முதலியனவும் ஏற்றுமதி செய்யப்பட்டன. இம் மிருகங்கள் அபிசீனியா பிரதேசத்தில், எதியோபியா எனப்படும் ஆப்பிரிக்கா வின் வடகிழக்குப் பகுதியில் பெருவாரியான அளவில் வேட்டை யாடப்பட்டன. அவை எகிப்திலிருந்து ரோம் நகருக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன.

**22. திபி** (Tibi)

'தை' (ஜனவரி) மாதம் என்பதே இலத்தீன் மொழியில் திபி என்று வழங்கப்பட்டது.

**23. தோத்** (Thoth)

''ஆவணி'' மாதம் (September) இலத்தீன் மொழியில் தோத் என்று வழங்கப்பட்டது. இங்குக் கூறப்பட்டதன் பொருள்: ''தை மாதம் முதல் ஆவணி மாதம்வரை சந்தை கூடுமிடங் களுக்குப் பொருள்கள் ஏற்றுமதி செய்யப்பட்டன.''

**24. செப்டெம்பர் இறுதிக்குள்** (Before the end of September)

மேலை நாடுகளுக்கு முற்காலத்தில் மார்ச் (March) மாதம் தான் ஆண்டுத் தொடக்கமாயிருந்தது ஆகஸ்டு என்பது ஆறும் மாதம் (Sextilis) (சஷ்டி-ஆறுவது) என்ற பெயரால் வழங்கப் பட்டது. செப்டெம்பர் (September) செப்டெனியல் (Septennial) (சப்த-ஏழாவது) அதாவது ஏழாவது மாதம் என்று குறிப்பிடப் பட்டது. மற்றும் அக்டோபர் (October) (அஷ்ட-எட்டு) அதாவது எட்டாம் மாதம் என்றும், நவம்பர் (November) (நவம்-ஒன்பது) அதாவது ஒன்பதாவது மாதம் என்றும், டிசம்பர் (December) (தசம்-பத்து) அதாவது பத்தாவது மாதம் என்றும் வழங்கப் பட்டது.

ஆக, வணிகர்கள் ஜனவரி மாதம் முதல் ஆகஸ்டுவரை எட்டு மாதங்கள் தங்கள் சொந்த நாட்டிலிருந்து, பொருள்களை ஏற்றுமதி செய்துவிட்டு, செப்டெம்பர் மாதம் அயல் நாடுகளுக்குப் பொருள் கொணரும் நோக்கத்துடன் சென்று விடுவார்கள். அயல்நாடுகளில் நான்கு மாத காலம் தங்கி, அங்கிருந்து வாணிகப் பொருள்களைத் தம் தாய்நாட்டிற்குக் கொணர்ந்து, மற்ற எட்டு மாதங்களில் அப் பொருள்களை ரோம் முதலிய மேலைநாடுகளுக்கு ஏற்றுமதி செய்வர் என்பது இவ்விறுதிச் சொற்களால் தெரிய வருகின்றது.

---

# 7. அவலைடிஸ் வளைகுடா

இந்த இடத்திலிருந்து அராபியன் கடல் கிழக்கு நோக்கிப் பரந்து காணப் படுகிறது. ஆனால், அவலைடிஸ் வளைகுடா[1] முன்பாக அக் கடல் மிகவும் குறுகிக் காணப் படுகிறது. இந்தக் கடற்கரை வழியாக 450 ஸ்டேடியா[2] கிழக்கு முகமாகக் கடந்து சென்றால், பெர்பெர்[3] வாணிகச் சந்தையும், பிறவும் காணப்படும். அவை 'நீள்தொலைத்

துறை முகங்கள்' என்ற பெயரால் விளங்குகின்றன. அவை நன்முக அமையாமல், அடுத்து அடுத்து அமைந்துள்ளன. அவற்றிற்குப் பாதையோர விடுதிகள் உள்ளன. அங்கே அக் கப்பல்கள் யாவும் நங்கூரம் பாய்ச்சி, நல்ல காற்ரேட்டத்தில் தங்கி இருக்கக் கூடும். அவற்றுள் முதலாவது துறைமுகம் அவலைடிஸ்[4] என்ற பெயர் கொண்டு விளங்குகிறது. அரேபியாவிலிருந்து நீள் தொலைக் கடற் பிரதேசங்களுக்கு மேற்கொள்ளும் பயணங்களில் இதுவே குறை தொலைப் பயணமாகும். இங்கே சிறிய வணிக நகர்ச் சந்தை ஒன்று கூடுவது உண்டு. இதன்பெயர் அவலைடிஸ். இவ்விடத்தைப் படகுகளிலும் ஓடங்களிலும் கடந்து சென்றடையவேண்டும்.

இவ்விடத்தில் வண்ணக் கண்ணுடிகள், இறுகிய கண்ணுடித் தகடுகள் பலதிறப்பட்ட அளவுகளில் இறக்குமதி செய்யப் படுகின்றன. புளிப்புத் திராட்சையின்[5] இரசமும் டையோஸ்பாலிஸ்[6] எனும் இடத்திலிருந்து இறக்குமதி செய்யப் படுகிறது. மற்றும் மடிப்புப் பொருந்திய தைக்கப் பட்ட ஆடைகளும் பெர்பெர்மக்களுக்காக இறக்குமதி செய்யப் படுகின்றன. மற்றும், கோதுமை,[7] மதுபான வகைகள், தகரம்[8] ஆகியவையும் இறக்குமதி செய்யப் படுகின்றன.

இங்கிருந்து ஏற்றுமதி செய்யப்படும் பொருள்கள்: வாசனைப் பண்டங்கள், சிறிய அளவில் தந்தம், ஆமையோடு, சாம்பிராணி, அகில். இச் சாம்பிராணியும்அகிலும் மற்ற பகுதிகளின் பொருள்களைக் காட்டிலும் மிகுந்த வாசனை பொருந்தி உள்ளன. இப் பொருள்கள் யாவும் படகுகளின் மீதேற்றப் பட்டு, அப் படகுகளின் உதவி கொண்டே பெர்பெர் மக்கள் எதிர்க் கரையிலுள்ள ஓசெலிஸ்,[9] மூஸா[10] எனப்படும் துறைமுகங்களுக்குக் கடல் கடந்து அப் பண்டங்களை எடுத்துச் செல்வர். மற்றும், இங்கு வாழும் பெர்பெர்நாட்டு மக்கள்

எவ்வகைக் கட்டுப்பாடுகளுமின்றி, முரட்டுத்தனம் வாய்ந்தவர்களாய்க் காணப்படுகின்றனர்.

## விளக்கவுரை

**1. அவலைடிஸ் வளைகுடா** (Gulf of Avalites)

இது நவீன ஜெய்லா (Zeila) என்ற இடத்தைக் குறிப்பிடுகிறது. பாபல்-மான்-டெப் கடற்காலுக்கு (Babel-Man-Deb) 80 மைல்கள் (கிமீ, 128) தொலைவில் உள்ளது. பிரிட்டிஷ் சோமாலிலாந்தின் கடற்கரையில் உள்ளது. இருப்பிடம் 11°·21'வ × 43·29'கி.

**2. ஸ்டேடியா** (Stadia)

ஒரு ஸ்டேடியம் ஒரு பர்லாங்குத் தொலைவைக் குறிப்பிடும். ஆக, இங்குக் குறிக்கப்பட்டுள்ள தொலைவு 56 மைகள் (90 கிமீ.) ஆகும். மற்றும் அதிகாரம் 1, குறிப்பு-5 பார்க்கவும்.

**3. பெர்பெர் வாணிகச் சந்தை** (Berber Commercial Market)

பெர்பெர் பண்டைய வாணிகச் சந்தை நகரங்களுள் ஒன்று. இங்கு நாகரிகமடையாத மக்கள் வசித்ததாகக் கருதப்பட்டது. மற்றும் அதிகாரம் 2, குறிப்பு–2 பார்க்கவும்.

**4. அவலைடிஸ்** (Avalites)

இது நவீன ஜெய்லா (Zeila) என்ற இடத்தைக் குறிப்பிடுகிறது. இதற்கருகில் கிராமம் ஒன்று உள்ளது. அதன் பெயர் அபலைட் (Abalite). சோமாலி நாட்டு மக்கள் இதை ஒளசால் (Ausal) என்று வழங்கி வருகின்றனர். ஜெய்லாவின் இருப்பிடம்: 11'•21°வ × 43°•29'கி.

இபின் படூடா (Ibn Batuta) (கி.பி. 1304—1378) என்ற பயணி பின்வருமாறு வர்ணித்துள்ளார்:

"ஏடென் நகரத்திலிருந்து (Aden) புறப்பட்டு, கடல் வழியாகச் சென்று, நான்கு நாள்களுக்குப் பிறகு ஜெய்லா (Zeila) நகரை அடைந்தேன். இது பெர்பெர் நாட்டு மக்கள் தங்குவதற்காக ஏற்படுத்திக் கொண்ட விடுதியாகும். பெர்பெர் மக்கள் என்பவர் சூடான் நாட்டைச் சார்ந்தவர்கள். இந் நாட்டின் முதல் பகுதி ஜெய்லா (Zeila) என்ற பெயராலும், இறுதிப்பகுதி மாக்-டா-ஷு (Mak-da-shu) என்ற பெயராலும் வழங்கப்படுகிறது. இங்குள்ள மக்களின் உணவு பெரும்பாலும் ஒட்டகத்தின் ஊன்

(Camel's flesh) ஆகும்; மற்றும் மீன் இறைச்சியும் கூட. இவர்கள் உடலினின்று ஒருவகை துர்நாற்றம் வீசுவதைக் காணலாம். ஒட்டகங்கள் உணவிற்காக நடுத்தெருவிலேயே கொல்லப்படு கின்றன.''

**5. புளிப்புத் திராட்சை** (Wine)

இத் திராட்சை இரசம் வாசனைப் பண்டங்களுடன் கலக்கப் பட்டு, சிறிது உப்புச் சேர்த்துப் பருகப்படுகிறது. இது போதை தரும் பொருளாகும். புளிப்பேறின திராட்சை இரசம் ஒயின் (Wine) எனப்படும்.

**6. டையோஸ் பாலிஸ்** (Diospolis)

இது கடவுளின் நகரம் எனப் பொருள்படும் சொல்லாகும். இது வரலாற்றாசிரியர் ஸ்டிராபோவினால் (Strabo)காலம் (கி.மு.64-கி.பி.24) குறிப்பிடப்பட்டுள்ளது. மற்றும் அதிகாரம் 6, குறிப்பு-6 பார்க்கவும்.

**7. கோதுமை** (Wheat)

கோதுமை எந் நாட்டில், எத் தேசத்தில் முதன் முதல் விளைந்தது என்பது கூறமுடியாததாகும். முதலில் இதைச் சீன மக்கள் கி.மு. 2700 அளவில் விளைவித்து வந்தனர் எனச் சீன நூல்கள் கூறுகின்றன. எகிப்தியப் பிரமிடுகளில் (Pyramids)கடவு ளின் நிவேதனத்துக்காகவும், இறந்தோரின் ஆவி உண்பதற்காக வும் கோதுமை மணிகள் படைக்கப்பட்டன என்றும், அவை சுமார் கி.மு. 3350 கால அளவில் எகிப்திய நாட்டில் பரவியிருந்த தென்றும் வரலாறுகள் கூறுகின்றன.

**8. தகரம்** (Tin)

இவ் உலோகம் எபிரேய மொழியில் (Hebrew) பெடில் (Bedil) என்றும், கிரேக்க மொழியில் (Greek) காஸிடெராஸ் (Kassiteros) என்றும், வடமொழியில் காஸ்திரம் (Kasthira) என்றும், இலத்தீன் மொழியில் (Latin) ஸ்டானம் (Stannum) என்றும் வழங்கப்பட்டு வந்தது. இது மிகவும் பிற்காலத்தில் புகுத்தப்பட்ட உலோக மாகும். இதற்கு முன் புழக்கத்தில் இருந்தவை: பொன், வெள்ளி, பித்தளை, செம்பு, இரும்பு, ஈயம், பாதரசம் முதலியனவாகும்.

**9. ஒசேலிஸ்** (Ocealis)

இது அராபிய நாட்டுத் தென் கிழக்கு முனையில் (Arabia felix) பாபெல் மான்டெப்பிற்கு (Babel-man-def) எதிரில் இருந்த துறை

முகமாகும். இது மோசாவிற்கு (Mocha) அருகில், தென் கிழக்காக 50 மைல் (80 கி.மீ) தொலேவில் இருந்தது. இத் துறைமுகம் பிளினியாலும் (கி.பி. 23-79) குறிப்பிடப்பட்டுள்ளது.

—(**பிளினி:** புத்தகம் VI அதிகாரம் 26, குறிப்பு—72 பக்கம் 127)

இருப்பிடம்: 13.°10'வ × 43.°12'கி.

**10. மூஸா** (Muza)

இது செங்கடலில், அரேபியாவுக்குத் தென்கிழக்குப் பகுதி யில் உள்ளது. இதன் நவீன பெயர் மோசா (Mocha) இதுவும் பிளினியால் குறிப்பிடப்பட்டுள்ளது.

—(**பிளினி** புத்தகம் VI, அதிகாரம் 26, குறிப்பு—75, பக்கம் 128.)

இருப்பிடம்: 13°.20'வ × 43°.12'கி. இது ஒரு துறைமுகம்.

---

# 8. மாலோ

அவலேடிஸ்[1] நகரத்துக்கு அப்பால், வாணிகச் சந்தை கூடும் மற்ருெரு நகரம் உள்ளது. இந் நகரம் அவலேடிஸ் நகரத்தைவிடச் சிறப்பு வாய்ந்ததாகும். இதன் பெயர் மாலோ.[2] இதை அடைய 800 ஸ்டேடியா[3] கடல் கடந்து செல்லவேண்டும். நங்கூரம் பாய்ச்சப் பட்டுக் கப்பல் நிறுத்தப்படும் இடம் சாதாரண கடற்கரை யோரமாகவே உள்ளது. அப் பாதை ஓரம் மரநிழல்அடர்ந்ததாகும். முன்னர்க் கூறப் பட்ட பொருள்கள் யாவும் இங்கு இறக்குமதி செய்யப் படுகின்றன. ஆர்சிஞேவிலிருந்து[4] தைக்கப்பட்ட பல வகை ஆடைகளும், சாய மேற்றப்பட்ட உடைகளும் இறக்குமதி செய்யப் படுகின்றன. நீர்ப்பருகும் கோப்பை கள், மென்மை வாய்ந்த பித்தளே, இரும்பு, மற்றும் தங்கம், வெள்ளி ஆகியவற்ருல் ஆன நாணயங்கள் முதலியவை இறக்குமதி செய்யப் படுகின்றன.

இவ்விடத்திலிருந்து ஏற்றுமதி செய்யப்படும் பொருள்கள்: சாம்பிராணி, அகில், இறுகிய குங் கிலியம், டூகா[5] எனும் பெயர்கொண்ட வாசனேப்

பண்டம், இந்திய கோபால் வர்ணங்கள்,[6] மேசிர்[7] ஆகிய யாவும் அரேபியாவில் இறக்குமதி செய்யப் பட்டவையாகும்.

சில பொழுது கூலிகளும், அடிமைகளும் இங் கிருந்து ஏற்றுமதி செய்யப் படுகின்றனர். ஆனால் இந் நிகழ்ச்சி எப்போதேனும் நடை பெறுவதேயன்றி, அடிக்கடி நிகழக் கூடியதன்று.

## விளக்கவுரை

**1. அவலைடிஸ்** (Avalites)

இது நவீன ஜெய்லா (Zeila) வைக் குறிப்பிடுகிறது. மற்றும் அதிகாரம் 7, குறிப்பு-4 பார்க்கவும்.

**2. மாலோ** (Malo)

இது நவீன பெர்பெரா (Berbera) என்னும் இடத்தைக் குறிப்பிடுவதாக நம்பப்படுகிறது. நவீன பிரிட்டிஷ் சோமாலி லாந்தின் முக்கியத் துறைமுகமாகும். ஒட்டக வாணிகத்தின் தலைசிறந்த இடமாகும். இதன் இருப்பிடம்: 10°·27'வ × 45°·1'கி

**3. ஸ்டேடியா** (Stadia)

ஒரு ஸ்டேடியம் என்பது ஒரு பர்லாங்குத் தொலைவைக் குறிப் பிடும் அளவாகும். இங்குக் குறிப்பிட்ட தொலைவு 100 மைல்கள் (160 கி. மீ.) ஆகும்.

**4. ஆர்சினோ** (Arsinoe)

தாலமி பிலடெல்பஸ் (கி.மு. 285-247) என்ற அரசரின் மனைவி பெயரால் நிர்மாணிக்கப்பட்ட நகரம். மற்றும் அதிகாரம் 6, குறிப்பு-3 பார்க்கவும்.

**5. டுகா** (Duka )

சாம்பிராணி, அகில் போன்ற வாசனைப் பண்டங்களுள் ஒன்று. இது தூபம் போட-புகைபோட- மிகவும் உகந்த பொரு ளாகும். தூபா (Dupa) என்பதே 'டுகா' என்று வழங்கப்பட்டது.

**6. இந்திய கோபால் வர்ணங்கள்** (Indian Copal varnishes)

இது கோந்து போன்ற ஒருவகை வண்ணப்பூச்சு ஆகும். டர்பென்டைன் (Turpentine) திரவத்தில் கலக்கப்பட்டு மரச்

சாமான்களுக்கு மேல்பூச்சாகப் பூச உதவுகிறது. இதை வார்னிஷ் (Varnish) என்று வழங்குவர். கோபால் (Copal) மரத்தின் பட்டைகள் மிகவும் கசப்பு வாய்ந்தனவாக இருக்கும். இதை நன்முக உலரவைத்து, இடித்துப் பொடியாக்கி உரமாகப் பயன் படுத்துவதுண்டு. இந்தப் பூச்சு இன்றும் கோபால் வார்னிஷ் (Copal Varnish) என்றே வழங்கப்பட்டுவருகின்றது. தேக்கு, கருங்காலி, மாமரம், வேப்பமரம் ஆகியவற்ருல் செய்த பொருள் களுக்கு மேல்பூச்சுக் கொடுக்கப் பயன்படுத்தப்படுகிறது. இது பூசப்பட்டால், செல்பிடித்தல் தவிர்க்கப்படும். இது இந்தியாவி லிருந்து எடுத்துச்செல்லப்பட்டு அரேபியாவில் இறக்குமதி செய்யப் பட்டது.

7. **மேசிர்** (Macir)

இது வாசனை பொருந்திய மரத்தின் பட்டை. பிளினி பின் வருமாறு கூறுகிருர்: ''இப் பட்டை இந்தியாவிலிருந்து கொண்டு வரப்பட்டது. நிறம் சிவப்பு; பெரிய அளவுள்ள வேர்களில் உண்டாகிறது. அவ்வேரும் அம் மரத்தின் பெயரையே கொண்டுள்ளது.''

—(**பிளினி:** புத்தகம் VII, அதிகாரம் 8-17)

இம் மரத்தின் பட்டையில் சிறிது எடுத்து, தூள் செய்து, சிறிது தேனில் கலந்து உட்கொண்டால் வயிற்று வலி உடன் நின்றுவிடும் என்று நம்பப்பட்டது. இப் பட்டை போர்ச்சுகீசியர் களால் (Portuguese) ஹெர்பா மலபாரிகா (Herba Malabarica) என்று வழங்கப்பட்டு வந்தது. இதன் பொருள் 'மலையாள நாட்டு மூலிகை' என்பதே. இம் மரத்தின் விதை ஒரு வகைக் கலவை எண்ணெயைக் கொடுக்கிறது; அதன் பொடி வர்ணப் பூச்சுக்குப் பயன்படுகிறது.

குங்குமப்பூ (Saffron flowers) வயிற்று வலிக்கு மிகவும் சிறந்த மருந்தாகும். அதன் வேர் சிவப்பாக இருக்கும். குங்குமப் பூவும், சந்தனமும் காஷ்மீரம் மலையாளம் ஆகிய இரு நாடு களிலும் முறையே விளைந்தன. இதைப் பிளினி கன்கமான் (Kankaman)—அதாவது குங்குமம் என்பதன் திரிபு - என்றே வழங்கினுர். பச்சைக்கர்ப்பூரம், குங்குமப்பூ, சுக்கு, மிளகு ஆகிய இவை ஆயுர்வேத மருத்துவத்தில் பயன் படுத்தப்படும் மருந்துப் பொருளாகும். மலையாள நாட்டில் மூலிகை மருந்துகள் இயற்கையிலேயே பெருவாரியான அளவில் உற்பத்தியாகின்றன. மேசிர் (Macir) எனப்பட்டதே, ஹெர்பா மலபாரிகா (Herba Malabarica) என்பதாகும்.

———

# 9. முண்டுஸ்

மாலோவிலிருந்து[1] இரண்டு அல்லது மூன்று நாள்கள் கப்பற்பயணம் செய்தால், முண்டுஸ்[2] எனப் படும் வாணிகச் சந்தை கூடும் நகர் தென்படும். அங்குக் கடலோரத்தில் வெளிநீட்டி நிற்கும் ஒரு தீவின் உதவியால் கப்பல்கள் நங்கூரம் பாய்ச்சி மிகவும் பாதுகாப்புடன் இருக்கின்றன. இங்கேயும் முன்னர்க் கூறப்பட்ட பொருள்கள் யாவும் இறக்குமதி செய்யப் படுகின்றன. அதே போன்று, முன்னர்க் கூறப்பட்ட பொருள்களும் ஏற்றுமதி செய்யப் படுகின்றன. மற்றும், இங்கிருந்து மொக்ரோடு[3] எனும் பெயருள்ள சாம்பிராணியும் ஏற்றுமதி செய்யப்படுகின்றது. இங்கு வாழ்கின்ற வணிகப் பெரு மக்கள் யாவரும் போர் புரிவதில் வல்லவர்.

## விளக்கவுரை

**1. மாலோ** (Malo)

இது நவீன பெர்பெரா என்பதைக் குறிப்பிடுகிறது. நவீன பிரிட்டிஷ் சோமாலிலாந்தின் கடற்கரையில் உள்ளது. இருப்பிடம்: 10°·27'வ × 45°·1' கி. மற்றும் அதிகாரம் 9, குறிப்பு-2 பார்க்கவும்.

**2. முண்டுஸ்** (Mundus)

இது நவீன பண்டா ஹேஸ (Banda Hais) எனும் இடத்தைக் குறிப்பிடுகிறது. அவ்விடத்தின் துறைமுகம் பண்டார் அலூலா (Bandar Alula). இது பிரிட்டிஷ் சோமாலிலாந்தின் வட கிழக்கு முனையாகும். அதன் அருகில் சகோத்ரா (Socotra) முதலிய பழம் பெருந்தீவுகள் காணப்படுகின்றன. இத் துறைமுகம் உள்ள முனை குர்டாபி முனை (Cape Guardafi) என்று வழங்கப்படும். இதன் இருப்பிடம்: 12°·0'வ × 51°·0'கி.

**3. மொக்ரோடு** (Mocrotu)

இது வாசனைப் பண்டங்களாகிய சாம்பிராணி, அகில் முதலிய வகைகளைச் சார்ந்தது; அவற்றுள் மிக உயர்ந்த விலையுள்ளதாகக் கருதப்பட்டது. அராபிய மொழியில் (Arabic) இப் பண்டம் மொகராட்(Mogharot)என்றுவழங்கப்பட்டது. இதன் நவீன பெயர்

மஹார் (Mahar). அராபிய நாட்டுடன் வாணிகம் நடத்தப்பட்ட காரணத்தால், அராபியச் சொல்லான மொகராட் என்பதே மொக்ரோடு என்று அந் நாட்டில் வழங்கப்படுவதாயிற்று. சோமாலிலாந்து, அபிசீனியா ஆகிய இரு பகுதிகளும் வாசனைப் பண்டங்கள் உற்பத்தி செய்வதில் புகழ் பெற்றிருந்தன.

### 4. போர் புரிவதில் வல்லவர்

முண்டுஸ் என்பது குர்டாபி முனை (Cape Guardafi) அருகில் இருப்பதால், அங்குக் கடற்கொள்ளைக்காரர்கள் வரநேரிடும். அவர்களை விரட்ட அங்குள்ள வணிகப் பெருமக்கள் போர்த் தொழில் பழகிக்கொள்ள வேண்டியிருந்தது. அதன் காரணமாக அங்குள்ள மக்களின் சந்ததியாரும், பின்தோன்றல்களும் போர்த் தொழில் கற்றுக் கடற் கொள்ளைக்காரர்களை விரட்டிவந்தனர் ஆவர். இதனால் போர் செய்யும் ஆற்றல் அம் மக்கள் இரத்தத்திலேயே கலந்து ஊறிவிட்டது போலும்.

---

# 10. மோசைலம்

முண்டுஸ்[1] துறைமுகத்துக்கு அடுத்தாற்போல் உள்ள துறைமுகம் மோசைலம்.[2] இவ்விடத்தை இரண்டு அல்லது மூன்று நாள்கள் பயண அளவில் அடையலாம். இது கடற்கரையோரத்தில் பாழடைந்த துறைமுகமாகக் காட்சி அளிக்கிறது. இங்கேயும் முன்னர்க் கூறப்பட்ட பொருள்களே இறக்குமதி செய்யப் பட்டன. மற்றும், வெள்ளித் தட்டுகள், சிறிய அளவில் இரும்பு, கண்ணாடிப்பொருள்கள் முதலியனவும் இறக்குமதி செய்யப் பட்டன. இங்கிருந்து அயல் நாடுகளுக்குப் பேரளவில் இலவங்கம்[3] ஏற்றுமதி செய்யப் பட்டது. அதன் வாணிகம் பெருக்கமடைந்து காணப்படுவதால், பெரிய கப்பல்களும், நல்ல துறைமுகமும் தேவைப்படுகின்றன, மற்றும் வாசனைப் பண்டங்களாகிய சாம்பிராணி, அகில் முதலியனவும், ஆமையோடு, மொக்ரோடு[4] முதலியனவும் ஏற்றுமதி செய்யப் படுகின்றன. மொக்ரோடு.

முண்டுஸ் துறைமுகத்தில் ஏற்றுமதி செய்யப்படும் அளவைவிட மிகக் குறைந்ததாகும். தொலைவில் சேகரிக் கப்படும் யானைத் தந்தமும்,[5] வெள்ளைப் போளமும்[6] சிறிதளவில் இங்குக் கொணரப்பட்டு, அவை மீண்டும் அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப் படுகின்றன. தந்தமும், வெள்ளைப் போளமும் இந்திய நாட்டுப் பண்டங்களாகும். ரோமப் பேரரசு[7] அவற்றை விரும்பி பெருவிலைக்குப் பெறுகின்றன.

## விளக்கவுரை

**1. முண்டுஸ்** (Mundus)

இது பண்டார் அலுலா (Bandar Alula) என்று வழங்கப் படும். இருப்பிடம்: 12°·0' × 51°·0' கி. மற்றும் அதிகாரம் 9, குறிப்பு-2 பார்க்கவும்.

**2. மோசைலம்** (Mossylum)

இது ராஸ்ஹாபன் (Ras-Hafun) என்ற இடத்தைக் குறிப் பிடுவதாகும். குர்டா. முனைக்கு அருகில், தெற்குப் பக்கமாக உள்ளது. இதன் இருப்பிடம்: 10°·27'வ × 41°·0'கி.

இதை நவீன ராஸெட்டா (Rosetta) என்று சிலர் கூறுவது பொருந்தாது. காரணம் ராஸெட்டா நைல்நதிக் கழிமுகத்தில் (Nile Delta) அலெக்சாந்திரியா (Alexandria) அருகில் இருந்தது. பயணத்திசையே இதனால் மாறிவிடுவது காணப்படும். கிழக்கில் உள்ள துறைமுகங்களைக் குறிப்பிட்டு வரும்போது, திடீரென வடக்கில் உள்ள துறைமுகத்தைக் குறிப்பிடமாட்டார் அல்லவா?

**3. இலவங்கம்** (Cinnamon)

இலவங்கம் என்பது காசியா (Cassia) வகையைச் சார்ந்த தாகும். இதன் பூ இலவங்கம் என்றும், இதன் மரப்பட்டை இலவங்கப்பட்டை என்றும் வழங்கப்படுகின்றன. இப் பண்டம் இந்தியாவின் மேற்கு மலைத்தொடரிலும், அதாவது மலையாள நாட்டிலும், திபெத்து நாட்டிலும், பர்மாவிலும், சீனநாட்டிலும் விளைந்து, ஏற்றுமதி செய்யப்பட்ட பொருளாகும். எபிரேயக் குருமார்கள் (Hebrew Prophets) பயன்படுத்தும் தைலவகைகளுள், இலவங்கத்தைலம் (Cinnamon oil) மிகவும் சிறப்புப்பொருந்திய

தோன்றும். இப் பண்டம் பிளினியால் (கி.பி.23-79) குறிப் பிடப்பட்டுள்ளது(**பிளினி**:புத்தகம் XVI,அதிகாரம் 37). மற்றும், மருத்துவத்துக்கு ஆதித்தந்தையாகக் கருதப்படும் ஹிப்பாக்ரடீஸ் (Hippocrates)(காலம் கி. மு. 460-357) என்பவராலும் இந்திய இலவங்கம் குறிப்பிடப்பட்டுள்ளது.

இலவங்கத்தைக் காஸியா சின்னமன் (Cassia cinnamon) என்று தாவரவியலார் வழங்கினர். தமிழில் கருவாப்பட்டை என்றும் கூறப்படுவதுண்டு. இலவங்கம் வாசனைப் பண்டமாகவும், அதன் தைலம் மருந்தாகவும், அதன் இலைகள் (பத்திரி) பலவகை மருந்துகள் தயாரிக்கவும் பயன்பட்டு வந்தன. இலவங்கப் பட்டைத் தூள் இனிப்புப் பண்டங்களுடன் சேர்த்துப் பயன் படுத்தப்பட்டது. இப்பொழுது இலவங்கம் பாக்குத்தூளில் கலந்து உட்கொள்ளப்படுகிறது; இலவங்கத் தைலம் பல்வலிக்கு உகந்த மருந்தாகப் பயன்படுத்தப்பட்டு வருகிறது. இலவங்கம் மிகவும் விலை உயர்ந்த பொருளாகும்.

மார்க்கோபோலோ (கி. பி. 1254—1324) தம் பயண வரலாற்றில் இலவங்கத்தைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்: ''இப் பண்டம் மலையாளத்திலும், இலங்கையிலும், திபெத்திலும் விளை கிறது. இம் மரங்கள் பருத்து வளர்கின்றன. இவை கடல் மட்டத் திலிருந்து 6000 அடி உயர அளவில் செழித்து வளர்கின்றன. இது ஜனவரி மாதத்தில் பூ விடுகிறது. ஏப்பிரல் மாதத்தில் பழம் பழுக்கிறது. மே, ஜூன் மாதங்களில் அதன் பட்டைகள் இரசம் நிரம்பிக் காணப்படுகிறது. அப்பொழுது அப் பட்டைகள் செதுக் கப்பட்டு, அவற்றிலிருந்து சிறந்த தைலம் எடுக்கப்படுகிறது. இதுவே முதல் தரமான தைலமாகும். இதற்கப்புறம் எடுக்கப் படும் பட்டைகளில் அவ்வளவாக எண்ணெய்ச் சத்துக் காணப் படுகிறதில்லை. அதனுல் அம் மாதங்களில் செதுக்கப்படும் பட்டை களுக்கு முன்னதைப் போன்ற வாணிக வரவேற்பு இராது. அதன் காரணமாக அவற்றின் விலையும் குறைவாகவே உள்ளது.

—(**மார்க்கோ போலோவின் பயணங்கள்**)

''சரிகைவேலைப்பாடுகளும், பட்டும், பொன்னும் வெள்ளியும் மலையாள நாட்டில் கிடைத்தற்கு அரிய மூலிகைகளும் மருந்தும் கொண்டு வரப்படுகின்றன. இவற்றை இந் நாட்டில் இறக்கி, இப் பண்டங்களை விற்று, இவற்றுக்குப்பதிலாக வேறு பண்டங் களையோ பொருள்களையோ வாங்கிச் செல்கின்றனர். இந் நாட்டில் விளையும் பண்டங்களை ஏடன் முதலிய நகரங்களுக்கு ஏற்றுமதி செய்யத் தகுந்த வியாபாரிகள் இந் நாட்டின் துறைமுகங்களில் எப்

பொழுதும் காத்திருப்பர். ஏடெனிலிருந்து இப் பொருள்கள் அலெக்சாந்திரியா என்னும் நகரத்துக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன.''

—(**மார்க்கோ போலோ: பக்கம் 80**)

**4. மொக்ரோடு** (Mocrotu)

*இது அராபிய மொழியில் மொகராட் (Mogharot) என்று வழங்கப்பட்டது. இஃது ஒரு வாசனைப் பண்டம். மற்றும், அதிகாரம் 9, குறிப்பு–3 பார்க்கவும்.*

**5. யானைத் தந்தம்** (Ivory)

*'இபம்' என்ற சொல்லின்திரிபே ஐவரி ஆகும். மற்றும் அதிகாரம்6, குறிப்பு-19 பார்க்கவும்.*

**6. வெள்ளைப் போளம்** (Balsamodendron Myrrh)

*இது வாசனைப் பண்டங்களுள் ஒன்று; இது மரவகையைச் சார்ந்தது. இது பால்சமோதேந்திரான் மர்* (Balsamodendron Myrrh)*என்று வழங்கப்படுகிறது; நிலக்கடம்பு எனவும் கூறப்படும் இது மலைநாட்டு மருந்துச் சரக்குகளில் ஒன்று.*

*இப் பண்டம் விவிலிய நூலில்* (Bible) *குறிப்பிடப்பட்டுள்ளது:*

"And when they were come into the house... and when they had opened their treasure,they presented into him gifts—Gold, frankincense and myrrh."

—(St. Matthew 2-11)

**7. ரோமப் பேரரசு** (Roman Empire)

*இந்திய நாட்டு வாசனைப் பண்டங்களை ரோமப் பேரரசு விரும்பிப் பெருவிலைக்கு வாங்கின. ரோம நாட்டுத் தெய்வங்களுக்கு அவை படைக்கப்பட்டன என்று வரலாறுகள் கூறுகின்றன.*

---

# 11. அகானே

மோசைலம்[1] துறை முகத்திலிருந்து புறப்பட்டுக் கடற்கரையோரமாகவே இரண்டு நாள்கள் பயணம் செய்தால், சிறிய நைல் நதி[2] எனும் ஆற்றைச் சென்று அடையலாம். அது தூய நீர் கொண்டதும், வாகை

மரங்கள்[3] சூழப் பட்டுள்ள இடமாகவும் காட்சி அளிக்கிறது. அங்கிருந்து எலிபெண்ட் முனையை[4] அடைய லாம். அதன் பிறகு கடல் வளைகுடாவின் உருவம் தாங்கிப் பின்னடைந்து வளைந்து நிற்கிறது. அதில் எலிபெண்ட் நதி[5] என்ற ஆறும், வாகை மரங்கள் சூழ்ந்ததும், அழகிய பூங்கா உள்ள இடமுமான அகானே[6] காணப்படும். இந்த இடத்தில்தான், தொலை நாட்டுச் சாம்பிராணி[7] மிகப் பேரளவில் விளைவிக்கப்படுகின்றன. அவ் வாசனைப் பண்டம் உயர்ந்த ரகமாயும் உள்ளது.

## விளக்கவுரை

**1. மோசைலம்** (Mossylum)

இது குர்டாபி முனைக்கு அருகில் இருக்கும் ராஸ் ஹாபன் (Ras-hafun) என்ற இடத்தைக் குறிப்பிடும். இருப்பிடம்: 10°·27'வ × 51°·0' கி. மற்றும் அதிகாரம் 10, குறிப்பு-2 பார்க்கவும்.

**2. சிறிய நைல்நதி** (Little Nile River)

இந் நதி நைலோ போடோமியான்(Nilo Potomion) என்று வழங் கப்படுகிறது. டோக்விஞ (Tokwina) எனும் நதி ஓடும் இடத்துக் கருகில் இருந்தது. மற்றும், இது ஜெபல் ஹைமா (Jebel Haima) என்ற மலையின் அடிவாரத்தின் வழியாகக் கடலில் கலக்கிறது.

**3. வாகை மரங்கள்** (Laurel trees)

வெற்றி விழாக் கொண்டாடும்போது இவ் வாகை இலைகள் (Laurel leaves) பயன்படுத்தப்படுகின்றன. நம் நாட்டில் மாவிலை பயன்படுத்தப்படுவதே போன்று, அந் நாட்டில் வாகையிலை பயன் படுத்தப்பட்டன.

**4. எலிபெண்ட் முனை** (Elephant cape)

இது நவீன ராஸ் ஹாபன் (Ras-hafun) முனையைக் குறிப்பிடு கிறது. இது குர்டாபி முனைக்கு (Cape Guardafi) 40 மைல்கள் (64 கி.மீ.) தெற்கே உள்ளது. இது முன்னர் ராஸ்எல்பில்(Ras–elfil) என்று வழங்கப்பட்டது எல்பில் என்பது எலிபெண்ட் (Elephant) என்பதன் சிதைவே. ஆகவே, எலிபெண்ட் முனை ராஸ்ஹாபனையே குறிப்பிடுகிறது. இருப்பிடம்: 10°·27'வ × 51°·0' கி. மற்றும் அதிகாரம் 10, குறிப்பு—2 பார்க்கவும்.

**5, எலிபெண்ட் நதி** (Elephant River)

இது முன்னர் எலிபெண்ட் முனைக்கருகில் ஓடிக்கொண்டிருந்த நதியாக இருக்கக்கூடும் சிலர் இதை டாகான் (Daggan) என்றும் கூறுகின்றனர் டாகான் என்பதே நவீன டாக்வினு (Tokwina) ஆகும்.

**6. அகானே** (Acannae)

இவ்விடம் நவீன பண்டார் அலுலா (Bandar-alula) இடத்துக் கருகில் இருந்ததாகக் கருதப்படுகிறது. இங்கே பலவகை வாசனைப் பண்டங்களும், நறுமணப் புகை வத்திகளும் குவிக்கப்படுகின்றன. அவை சாம்பிராணி வகையைச் சார்ந்தனவாகும். இந்திய நாட்டுக் கடற்கரை காம்பே (Cambay)யிலிருந்து வரும் அவ் வாசனைப் பண்டங்களைப் பெற, நவீன பண்டார் அலுலாவில் முன்னர்ப் பெருவணிகர் கூடியிருப்பர். அவ்வணிகப் பெருமக்கள், வாசனைப் பண்டங்களைப்பெற்று, அங்கிருந்து மோசா (Mocha) முதலிய நாடுகளுக்குச் சென்றுவிடுவர்.

**7. தொலைநாட்டுச் சாம்பிராணி** (Farside frankincense)

தொலை நாடு என்பது இந்திய நாட்டைக் குறிப்பிடுகிறது. இந்திய சாம்பிராணி புகை மிக எழுப்பி, நறு மணத்துடன் திகழ்ந்து, மனத்துக்கு ஒருவித கிளர்ச்சியைக் கொடுத்தது.

**ஸ்டிராபோ** (Strabo) (கி.மு. 64–கி.பி. 24) பின்வருமாறு கூறுகிறார்:

"இங்கேதான் சாம்பிராணியும் மற்ற வாசனைப் பண்டங் களும் மிகுந்த அளவில் விளைகின்றன. இங்கு வாகை மரம் சூழ்ந்த தோப்பு ஒன்றும் காணப்படுகிறது. சற்று உள்ளே சென்றால், இஸிஸ் (Isis) என்ற நதியின் கரைகளும், நைலஸ் (Nilus) நதியின் கரைகளும் காணப்படும். அக் கரையோரங்களில் வாசனைப் பண்டங்கள் பெருமளவில் விளைகின்றன. வெள்ளைப் போளமும் (Myrrh), சாம்பிராணியும் (Frankincense) மிகுதியாக விளைகின் றன. இந்த ஆறுகள் இலவங்கம் (Cinnamon) உற்பத்தியாகும் நாடுகள்வரை சென்று பாய்கின்றன.

இதற்கடுத்து நிற்கும் மலை எலிபாஸ் (Elepphos) ஆகும். இம் மலையின் ஒரு பகுதி கடலில் துருத்தி நிற்கிறது. அம் முனையே யானை முனை (Elephant Cape) என்று வழங்கப்பட்டது.''

—(**ஸ்டிராபோ** எழுதிய வரலாறு)

**8. உயர்ந்தரக வாசனைப் பண்டங்கள்** ( Costly Incense Commodities )

*விலையுயர்ந்த பண்டங்களும், வாசனைப் பண்டங்களும் ஆனை முனையில் (Elephant Cape) இறக்குமதி செய்யப்பட்டன. ஆனை முனையே இப்பொழுது ராஸ் ஹாபன் (Ras-hafun) என்று வழங்கப் படுகிறது.*

---

# 12. தாபே

இந்த இடத்துக்கு அப்பால், நிலம் தெற்குமுகமாகத் திரும்புகிறது அங்கே வாணிகச் சந்தை கூடும் நகரமும், வாசனைப்பண்டங்கள் விற்கப்படும் முனையும்[1] இருக்கின்றன. அம் முனை மிகவும் ஒழுங்காக அமையப் பெற்றது. பெர்பெர் கடற்கரையில் விளங்கும் இம் முனை பெர்பெர் துறைமுகத்துக்குக் கிழக்கில் உள்ளது. அங்கு நங்கூரம் பாய்ச்சுவது சில பொழுது பேராபத்தில் முடிவடைந்த துண்டு காரணம் கடல் சிலபொழுது வற்றி, நிலம் தோற்றமளிக்கும். இக் கடல் அருகில் புயல்காற்று வருவதாயிருப்பின், அஃது உடன் தெரிந்துவிடும். அக் கடலின் ஆழமான நீர் சலங்கியும், சுழன்றும் காணப்படும். இவ்வாறான அறிகுறிகள் தோன்றின், புயற்காற்று உடன் வீசும் என்று தெரிந்துவிடும். அப்பொழுது அங்குள்ள மக்கள் தாபே[2] என்ற பெயர் உள்ள முனைக்குச் சென்று விடுவர். அம் முனை யாவருக்கும் பாதுகாப்பாய் விளங்கும். இச் சந்தை கூடும் வாணிக நகரில், முன்னர்க் கூறப்பட்ட பொருள்கள் யாவும்[3] இறக்குமதி செய்யப்படுகின்றன. மற்றும் இவ்விடத்தில் இலவங்கமும்[4], அதனுடன் தொடர்பு கொண்ட மற்ற இனங்களான கிஜிர்[5], அசிபா[6], அரெபோ,[7] மாக்ளா[8], மோடா[9] ஆகியவையும் விளைவிக்கப் படுகின்றன. சாம்பிராணியும்[10] பேரளவில் உற்பத்தி செய்யப்படுகின்றன.

## விளக்கவுரை

**1. பண்டங்கள் விற்கப்படும் முனை** (Cape of the Spice Market)

*இந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட வாசனைப் பண்டங்கள் இம் முனையில் இறக்குமதி செய்யப்பட்டன. இம் முனையின் பெயர் குர்டாபி முனை* (Cape Guardafi). *இதன் இருப்பிடம்:* 10°· 27' *வ* × 51°· 0' *கி. இம் முனை ராஸ்அசிர்* (Ras-asir) *என்றும் வழங்கப்பட்டது.*

**2. தாபே** (Tabe)

*இது பெர்பெர் நாட்டுக் கடற்கரையில் முன்னர் விளங்கிய துறைமுகம். இது இப்பொழுது சுவாகின்* (Suakin) *என்ற பெயரால் வழங்கப்பட்டு வருகிறது. இங்கே முன்னர் ஒரு செயற்கைத் துறைமுகம் இருந்தது. அது மக்களுக்குப் பாதுகாப்பளித்து நின்றது. இன்று இது சூடான் பகுதியைச் சார்ந்துள்ளது. இதன் இருப்பிடம்:* 19°· 8' *வ* × 37°· 17' *கி.*

**3. முன்னர்க் கூறப்பட்ட பொருள்கள் யாவும்** (All the things mentioned earlier)

*இவ்வாறுன கூற்று அதிகாரம்* 8, 9, 10, 11 *ஆகியவற்றிலும் காணலாம். ஆனால் ஏற்றுமதி செய்யப்பட்ட பொருள்களின் பெயர்களும், இறக்குமதி செய்யப்படும் பொருள்களின் பெயர்களும் அதிகாரம்* 6, 7*-ல் கொடுக்கப்பட்டுள்ளன.*

### இறக்குமதி செய்யப்பட்ட பொருள்கள்

*பித்தளை, செப்புப் பாத்திரங்கள், மொக்கோடு, வண்ணக் கண்ணாடிகள், இறுகிய கண்ணாடித் தகடுகள், புளிப்புத் திராட்சை இரசம், மடிப்புப் பொருந்திய தைத்த ஆடைகள், கோதுமை, மதுபான வகைகள், தகரம், அரக்கு, குங்கிலியம், மொளுசி ஆடை வகை முதலியன.*

### ஏற்றுமதி செய்யப்பட்ட பொருள்கள்

*வாசனைப்பண்டங்கள், தந்தம், ஆமையோடு, சாம்பிராணி, அகில், இலவங்கம், காண்டாமிருகக் கொம்பு, வெள்ளைப் போளம்.*

**4. இலவங்கம்** (Cinnamon)

*இது இறக்குமதி செய்யப்பட்ட இந்திய வாசனைப் பண்டங்களுள் முதன்மைத் தானம் பெற்றது. இலவங்கம் பலவகை உண*

விற்கும் பயன்படுத்தப்பட்டது. தைலம் மருந்தாகப் பயன்பட்டது. மற்றும் அதிகாரம் 10, குறிப்பு-3 பார்க்கவும்.

**5 கிஜிர்** (Gizir)

இது இஞ்சி எனப்படும் ஜிஞ்சர் (Ginger) என்ற சொல்லின் சிதைவே. இஞ்சி உலர்த்தப்பட்டால், சுக்கு ஆகும். சுக்கு ஒரு மருந்துச் சரக்கு. அது பல வயிற்று நோய்களுக்கு மருந்தாகப்பயன் பட்டு வருகிறது.

**6. அசிபா** (Asipha)

இஃது ஒரு மருந்துச் சரக்கின் பெயர் போலும். சிலர் இதைப் பெருங்காயம் (Asafoedita) என்பதன் திரிபே என்றும் கூறுவர்.

**7. அரேபோ** (Arebo)

இது அரேபியா நாட்டினின்று இறக்குமதி செய்யப்படும் ஒருவகைப் பொருளாகும். இது வாசனைப் பண்டங்களுள் ஒன்றாகும். இலவங்கத்தில் ஒருவகை அரேபோ (Arebo) எனப்பட்டது.

**8. மாக்ளா** (Magla)

இது மிளகு என்பதன் சிதைந்த உருவமாகும். ஆங்கிலத்தில் பெப்பர் (Pepper) என்று வழங்கப்படும். இது ரோம் நாட்டிற்குப் பெருவாரியான அளவில் ஏற்றுமதி செய்யப்பட்டது.

**9. மோடோ** (Moto)

இது மொக்ரோடு அல்லது மொகராட் (Mogharot) என்று வழங்கப்பட்டது. இது அரேபியாவில் தயாரிக்கப்படும் வாசனைப் பண்டமாகும். இஃது இலவங்கத்தில் ஒருவகையாகும்.

**10. சாம்பிராணி** (Frankincense)

புகை மிக எழுப்பி, அதிக நறுமணத்துடன் விளங்கும் ஒரு வகை வாசனைப் பண்டம். மற்றும் அதிகாரம் 11, குறிப்பு-7 பார்க்கவும்.

---

# 13. ஓபோனி

தாபே[1]யிலிருந்து 400ஸ்டேடியா[2] சென்றால், பாஞே[3] எனப்படும் கிராமம் வரும். அதற்கு அப்பால் 400 ஸ்டேடியா பயணம் சென்றால், ஓபோனி[4] எனும் பெயர் தாங்கிய சந்தைகூடும் வணிக நகர் காணப்படும். அம் முனை

யின்நீரின் சுழற்சி வேகம் மிகவும் அதிகமாகும். அந் நீரில் நிற்பவர்களைச் சுழற்றி அடித்துக்கொண்டு போய்விடும். இங்குப் பெரும் அளவில் இலவங்கம்[5] உற்பத்தி செய்யப் படுகின்றது. இலவங்கத்தில் அரேபோ[6], மோடோ[7]என்ற வகைகள் உற்பத்தி செய்யப்படுகின்றன. மற்றும் உடற் கட்டுடன்கூடிய அடிமைகள்[8] எகிப்திலிருந்து[9] பேரள வில் இங்குக் கொண்டுவரப்படுகின்றனர். மற்ற இடங் களில் அகப்படுவதைக் காட்டிலும் உயர்ந்த ரக ஆமை யோடுகள்[10]இங்குக்கிடைக்கின்றன. இந்திய ஆமை ஓடுகள் இங்கு இறக்குமதி செய்யப்படுகின்றன. உள்நாட்டு ஆமையோடுகள் அயல் நாடுகளுக்கு அனுப்பப்படு கின்றன.

## விளக்கவுரை

**1. தாபே** (Tabe)

இது நவீன சுவாகினைக் (Suakin)குறிப்பிடக்கூடும். இருப்பிடம்: 19°·8'வ × 37°·17'கி. மற்றும் அதிகாரம் 12, குறிப்பு–2 பார்க்கவும்.

**2. ஸ்டேடியா** (Stadia)

ஒரு ஸ்டேடியம் என்பது ஒரு பர்லாங்கைக் குறிப்பிடும். ஆக, இங்குக் குறிப்பிடப்பட்ட 400 ஸ்டேடியா என்பது 50 மைல்கள் கள் (80 கி.மீ.) தொலைவைக் குறிப்பிடும். மற்றும் அதிகாரம் 1, குறிப்பு-5 பார்க்கவும்.

**3. பானோ** (Pano)

இது ராஸ் பின்ன (Ras Binna) என்று வழங்கப்படும் நவீன துறைமுகமாகும். இருப்பிடம்: 11°·12'வ × 51°·7'கி.

**4. ஒபோனி** (Opone)

இது ராஸ் ஹாபன் (Ras Hafun) எனும் இடத்தைக் குறிப்பிடு கிறது. இது குர்டாபி முனைக்குத் தெற்கில் 90 மைல்கள்(144 கி.மீ.) உள்ள ஒரு துறைமுகமாகும். குர்டாபி முனைக்கருகில் சகோத்ரா (Socotra) என்றொரு தீவு உள்ளது. அது பன்ட் என்பவரின் பூமி (Land of Punts) அதாவது போயன்-அட் (Poen at) என்றும் குறிக் கப்பட்டுள்ளது.

ஹோமர் (Homer) (கி.மு. 900-850) எழுதிய வர்ஜில் (Virgil) என்ற நூலில் குறிக்கப்படும் பாஞ்சையாவும் (Panchia) இதுவே யாகும்.

**5. இலவங்கம் உற்பத்தி செய்யப்படுகிறது** (Cinnamon grown)

ஆப்பிரிக்காவின் கொம்பு(Horn of Africa)எனப்படும் சோமாலி லாந்தில்தான் மிகச் சிறந்த வாசனைப் பண்டங்கள் விளைவிக்கப் பட்டன. இது ரிஜியோஆரோமேடிக் ஃபெர்ரா (Regio Aromatie Ferra) என்று வழங்கப்பட்டது. அதாவது வாசனைப் பண்டங்கள் விளையும் பூமி என்பதே அதன் பொருளாகும். மற்றும் அதி காரம் 10, குறிப்பு-3 பார்க்கவும்.

**6. அரேபோ** (Arabo)

இது இலவங்கத்துள் ஒரு ரகமாகக் கருதப்பட்டது. இது அரேபியாவிலிருந்து கொண்டுவரப்பட்டு விளைவிக்கப்பட்டது. மற்றும் அதிகாரம் 12, குறிப்பு-7 பார்க்கவும்.

**7. மோடோ** (Moto)

இது இலவங்கத்துள் ஒரு வகையைச் சார்ந்தது என்று கருதப் பட்டது. மற்றும் அதிகாரம் 12, குறிப்பு-9 பார்க்கவும்.

**8. அடிமைகள்** (Slaves)

இங்கு அடிமைகள் எனப்பட்டவர், நீகிரோ அடிமைகள் ஆவர். அடிமை வாணிகம் முன்னொரு காலத்தில் செழித்திருந்தது எகிப் திய நாட்டில் பிரமிடுகள்(Pyramids) கட்ட ஏராளமான நீகிரோக் கள் பயன்படுத்தப்பட்டனர். மிகவும் உறுதியான உடலைக் கொண்டவர்கள் நீகிரோவர் ஆவர்.

**9. எகிப்திலிருந்து** (From Egypt)

அடிமை வாணிபம் எகிப்தில் சிறந்து விளங்கிற்று. எகிப்தி லிருந்து நீக்ரோவர் அடிமைகள் ஆங்காங்கு அழைத்துச்செல்லப் பட்டு, விற்கப்பட்டனர். கைகளும், கால்களும் அவர்களுக்கு மரக்கிளைகள்போல் அவ்வளவு உறுதிபெற்றுக் காணப்படும்.

**10. உயர்ந்த ரக ஆமையோடுகள்** (High class tortoise shells)

இந்திய ஆமை ஓடுகள் மிகவும் உறுதி வாய்ந்தவை. அவை இந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டு, ரோம் முதலிய அயல் நாடுகளுக்கு அனுப்பப்பட்டன. அது உயர்ந்த விலை பெறும் சிறந்த வாணிகப் பொருளாகக் கருதப்பட்டது. மற்றும் அதிகாரம் 4, குறிப்பு-11 பார்க்கவும்.

# 14. நெடுந்தொலைவுத் துறைமுகங்கள்

நெடுந்தொலைவில் உள்ள சந்தைகூடும் நகர்க்கு மேற்கொள்ளப்படும் பயணம் எகிப்து நாட்டிலிருந்து எபிபி[1] மாதத்தில் தொடங்கப்பெறுகிறது. மற்றும், அரியாகா[2], பாரிகாஸா[3] ஆகிய துறைமுகங்களிலிருந்து நெடுந்தொலைவு ஊன்றிவரக் கப்பல்கள் இக் கடல் வழி களில் சரிவர இணைக்கப்படுகின்றன. அக் கப்பல்கள் அவ் விடங்களிலிருந்து நெடுந்தொலைவிலுள்ள இவாணிகச் சந்தை கூடும் நகர்களுக்குத் தங்கள் நாடுகளில் விளையும் சுதேசிப் பொருள்களையும்[4] பண்டங்களையும் ஏற்றிக் கொண்டு வருகின்றன. அவற்றுள், கோதுமை[5], அரிசி[6], உருக்கிய நெய், தூய்மை செய்யப்பட்ட இறுகிய வெண்ணெய்க்கட்டி[7] நல்ல எண்ணெய், மோஞ்சி[8], பஞ்சுத் துணிகள், செக்மடோகின்[9] ஆகியவையும், ஒட்டியாணங் கள், தோற்கச்சைகள், சக்கரி[10] எனும் நாணல் வகையில் தயார் செய்யப்பட்ட தேன் ஆகியவையும் முக்கியமான வையாகும். சிலர் தங்கள் பண்டங்களை ஏற்றி நேராக இவ்வாணிகச்சந்தை கூடும் நகர்க்கே வந்துவிடுகின்றனர்.[11] மற்றுஞ் சிலர், தாம் கொணரும் பண்டங்களைக்கடற்கரை ஓரமாக வரும்பொழுது ஆங்காங்குஉள்ள மற்றப்பொருள் களுக்குத் தங்கள் பண்டங்களைப் பண்டமாற்றுச் செய்து கொண்டும் வருகின்றனர்[12]. இந்த நாடு எந்தக் குறிப் பிட்ட அரசனாலும் ஆளப்படவில்லை. வணிக நகர் சந்தைகள்கூட, அவற்றிற்காகத் தனியே ஏற்பட்ட தலைவர்களாலேயே நிர்வகிக்கப்பட்டு வருகின்றன. அரசர் என்று எவரையும் குறிப்பிட்டுச் சொல்ல முடியாது.

## விளக்கவுரை

**1. எபிபி (Epipi)**

இது கிரேக்கச் சொல்லாகும். இதற்கு இணையான மாதம் ஜூலை என்று வழங்கப்படும் மாதம் ஆகும். கிரேக்கர்கள் மார்ச் மாதத்தை ஆண்டுத்தொடக்கமாகக் கொண்டார்கள். அவ்வாறு

கருதும்பொழுது, எபிபி (ஜுலை மாதம்) ஐந்தாவது மாதம் ஆகிறது. ஆகஸ்டு மாதம் செக்ஸ்டிலிஸ் (Sexta-சஷ்டி—ஆறுவது) என்றும், செப்டெம்பர் செப்டெனியல் (செப்டா-சப்த-ஏழாவது) என்றும், அக்டோபர், அக்டெனியல் (அஷ்டம்-எட்டு) என்றும், நவம்பர் நவம்பரீஸ் (நவம்-ஒன்பது) என்றும், டிசம்பர், டிசம்பிரிஸ் (தசம்-பத்து)என்னும் பொருளில் கொள்ளப்பட்டனவாகும். மற்றும் அதிகாரம் 6, குறிப்பு-24 பார்க்கவும்.

**2. அரியாகா** (Ariaca)

அரியாகா என்பது அரியா நாடு என்பதைக் குறிப்பிடுகிறது. இது நவீன ஹீரட் (Herat) இருக்கும் பகுதியைக் குறிப்பிடும். ஹீரட் ஆப்கானிஸ்தானத்தில், ஹரி-ரூத் (Harirud) ஆற்றங்கரை மீது உள்ளது. இருப்பிடம்; 34°· 22′ வ × 62°· 8′ கி. மற்றும், அதிகாரம் 6, குறிப்பு-14 பார்க்கவும்.

**3. பாரிகாஸா** (Barygaza)

இது நர்மதை ஆற்றங்கரையின் கழிமுகத்தில் விளங்கிவந்தது. இன்று அத் துறைமுகம் புரோச் (Broach) என்ற பெயரால் விளங்குகிறது. பிருகு-கச்சா என்பதே பாரிகாஸா ஆகி, அச் சொல்லே இன்று புரோச் என்று வழங்கப்படுகிறது. பிருகு மகரிஷியால் ஏற்படுத்தப்பட்ட தாழ்ந்த நிலப்பகுதி (பிருகு–கச்சா)என்பதேஅதன் பொருள். வடமதுரா, உஜ்ஜயினி (Ujjain), பாரிகாஸா ஆகிய இவை ஒன்றுடன் ஒன்று பாதைகளால் இணைக்கப்பட்டிருந்தன. இம் மூன்று நகரங்கள் வழியாக வாணிகப் பொருள்கள் பேரளவில் துறைமுகங்களுக்குக் கொண்டு சேர்க்கப்பட்டன. பாரிகாஸா அக் காலத்திலே மிக மிகச் சிறந்த துறைமுகமாக விளங்கிற்று. ஓய்வில்லாமல் பண்டங்கள் அயல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன: நாணயங்கள், சிற்பங்கள், வாசனைப் பண்டங்கள் இறக்குமதி செய்யப்பட்டன.

பாரிகாஸாவின் இருப்பிடம்: 21°,43′ வ × 73°.1′ கி.

**4. சுதேசிப் பொருள்கள்** (Country goods)

பூமியில் பயிராகும் முக்கியமான பொருள்களும், மற்றும் கடல் துறைகளில் இயற்கையாகக் கண்டெடுக்கப்படும் ஆமையோடு, கிளிஞ்சல், மணிவகைகள், மயில் தோகைகள் (பீலிகள்) முற்காலத்தில் காம்பே (Cambay) என்ற விரிகுடாவிலிருந்து துறைமுகம் வழியாகவும் பாரிகாஸா (Barygaza) வழியாகவும், இந்தியக் கப்பல்களில் ஏற்றுமதி செய்யப்பட்டன. இக் கப்பல்கள் ஆப்பிரிக்காவில் குர்டாபி முனை (Cape Guardafi) எனும்

இடத்தில் உள்ள துறைமுகத்தில் தங்கி, அங்கிருந்து பெர்பெரா முதலிய துறைமுகங்களுக்குச் சென்று தங்கள் பண்டங்களைப் பண்ட மாற்றுச்செய்து கொண்டன. அக் கப்பல்கள் கடற்கரை ஓரமாகவே தங்கள் பயணங்களை மேற்கொண்டன. சில கப்பல்கள் மட்டும் தெற்குநோக்கி திண்டிஸ் (தொண்டி), முசிறிஸ் (முசிறி) ஆகிய வற்றை அடைந்து, அங்கிருந்து அயல் நாடுகளுக்குச் சென்றன. பாரிகாஸாவுக்குத் தெற்கில் முசிறி, தொண்டி ஆகிய துறைமுகங் கள் வரை கடற்கொள்ளைக்காரர்கள் கூட்டம் கூட்டமாக - கப்பல் களைக் கொள்ளை அடித்ததால், தெற்கு நோக்கிச் -சில கப்பல்களே பயணப்பட்டன. இவையும் வெற்றுக் கப்பல்களாகத் தானிருக்கும். அவ்வெற்றுக் கப்பல்களில், முசிறி தொண்டி ஆகிய துறைமுகங் களிலிருந்து கிடைக்கும் மிளகு, இஞ்சி, சந்தனம், அகில், இலவங் கம் முதலிய பொருள்களை ஏற்றிக்கொண்டு, முத்து, பவளம், கிளிஞ்சல் ஆகியவற்றைக் கொற்கைத் துறைமுகத்தில் சேகரித்து அவற்றையும் அயல்நாடுகளுக்கு எடுத்துச் சென்றனர்.

மற்றும் இச் சுதேசிப் பொருள்களுள் இலவங்கப் பட்டை (Malabothrum) மிக முக்கியமான பொருளாகும். ரோமானியர் இந்தியப் பொருளான இலங்கப்பட்டையை அறிந்திருந்தனர். இந்தியாவிலிருந்து ஏற்றிச் செல்லப்பட்ட இலவங்கமும், இலவங் கப்பட்டையும், சோமாலிலாந்தில் (Somaliland) தூய்மை செய் யப்பெற்று, அங்கிருந்து ரோம் நகருக்கு (Rome) ஏற்றுமதி செய்யப்பட்டது. இலவங்கமும், அப் பட்டையும் சோமாலிலாந்தி லேயே உற்பத்தி செய்யப்பட்டு, அவர்களுக்குக் கிடைத்ததாக எண்ணினர்.

இலவங்கப் பத்திரி என்பது இலவங்க இலை என்று பொருள் படும் (பத்திரி-இலை-பத்ரம்). இலவங்கம் மலை நாட்டுப் பொருள் என்று தெரிந்த காரணத்தால், அதன் பட்டையை மாலபோத்ரம் (Mala Bothrum) என்று கிரேக்கர் வழங்கினர். இலவங்கத்தின் பூ- அதாவது இலவங்கம்—சின்னமன் (Cinnamon) என்ற பெயரால் வழங்கப்பட்டது. மாலபோத்ரம் என்பதற்கு இலத்தீன் அகராதி பின் வருமாறு பொருள் கூறுகிறது:

"An Indian or Syrian Plant from which a costly ointment was prepared."

—(Latin-English Dictionary, Page 331.)

"Meton-the oil of the Plant" ( ,, ,, ,, )

இங்கு இலவங்கத் தைலமும், இலவங்கப் பட்டையும் குறிக் கப்பட்டுள்ளன. ஜாதிக் காயின் இலைகளாகிய ஜாதி பத்திரியையும்

'பத்திரி' என்பது குறிக்கக்கூடும். பத்ரம் என்பது பாத்ரோஸ் (Patros) என்று வழங்கப்பட்டது.

இங்குக் குறிப்பிடப்பட்ட இலவங்கப் பட்டை பெரிப்ளூஸில் அடிக்கடி குறிப்பிடப்படுகிறது. (பெரிப்ளூஸ்: அதிகாரம் 56, குறிப்பு-2.)

**5. கோதுமை** (Wheat)

எகிப்தியப் பிரமிடுகளில் (Pyramids) வைக்க, சிறந்த ரக கோதுமை இந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டது. கி.மு. 3350-லேயே பிரமிடுகளில் இந்தியக் கோதுமை வைக்கப் பட்டது. மற்றும் அதிகாரம் 7, குறிப்பு-7 பார்க்கவும்.

**6. அரிசி** (Rice)

அரிசி என்னும் சொல் ஓரிஜா (Oryza) என்று இலத்தீன் மொழியில் விளங்கி, அதுவே ரைஸ் (Rice) என்று ஆங்கிலத்தில் விளங்குவதாயிற்று. இந்தியாவில்தான் முதன்முதல் நெல்லும், சீனாவில் கோதுமையும் உற்பத்தியாயின என்று வரலாறுகள் கூறு கின்றன. அரசர் விருந்திற்காக முதல் தரமான அரிசி இந்தியா விலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டது.

**7. இறுகிய வெண்ணெய்க்கட்டி** (Clarified Butter)

வெண்ணெய் சேகரிக்கப்பட்டு இறுக்கப்பட்டது. சாதாரண வெண்ணெய் சிறு சூட்டினாலும் உருகிவிடும். இறுகிய பக்குவப் படுத்தப்பட்ட வெண்ணெய் நன்றாகக் காய்ச்சினால்தான் உருகும். ஆகவே, இறுகிய வெண்ணெய்க் கட்டிகள் ஏற்றுமதி செய்யப்பட்டன. வெண்ணெயை இறுக்க இந்தியர்கள் கற்று வைத்திருந்தனர். வெண்ணெயின் பலனை முதன்முதல் உணர்ந்த வர்கள் இந்தியர்கள்தாம். அதன் காரணமாக மாடு என்ற சொல்லுக்குச் செல்வம் என்ற பொருள் உண்டு. அக் காலத்தில், மாடுகளின் எண்ணிக்கையைக் கொண்டுதான் ஒருவரின் செல்வ நிலை அறியப் பட்டுள்ளது.

> **''கேடில் விழுச்செல்வக் கல்வி ஒருவற்கு**
> **மாடல்ல மற்றை யவை.''** (திருக்குறள்: **400**)

> **''திருவுடைப்பிள்ளைதான் தீயவாறு**
> **தேக்கமொன்றுமிலேன் தேசுடையன்;**
> **உருகவைத்த குடத்தொடு வெண்ணெய்**
> **உறிஞ்சியுடைத்திட்டுப் போந்து நின்றான்.''**
>
> —(பெரியாழ்வார் திருமொழி: 2 9-3)

இங்கு 'உருகவைத்த வெண்ணெய்' என்று கூறுவதால், இறுக வைத்த வெண்ணெய் அதன் உருவம் என்றும், அவ்விறுகிய வெண்ணெயை உருக வைத்தனர் என்றும் பொருள்படுகிறதல்லவா?

வெண்ணெய் பிளினியால் (கி.பி.23-79) புடிரம் (Butyrum) என்று வழங்கப்பட்டது. இலத்தீன் மொழியில் வழங்கிய புடிரம் என்ற சொல்லே, ஆங்கிலத்தில் பட்டர் (Butter) என்று மருவிற்று. பட்டர் (Butter) வெண்ணெயைக் குறிப்பிடும்.—(Vide Latin-English Dictionary: Page 654).

**8. மொஞசி** (Monache)

இது மெல்லியதான ஆடை வகை. அகலம் மிகுந்திருந்த மேலாடையாகும். மற்றும், அதிகாரம் 6, குறிப்பு—16 பார்க்கவும்.

**9. செக்மடோகின்** (Segmatogene)

இது போர்வீரர் அணியும் உடை என்றும், புத்த பிட்சுக்கள் அணியும் மேலாடை போன்ற ஒரு வகை என்றும் பொருள் கொள்ளப்படுகிறது. பருத்தியாலான மேலாடை என்பதே இதைப் பொருள்படுத்தவேண்டும். மற்றும் அதிகாரம் 6, குறிப்பு—17 பார்க்கவும்.

**10. சக்கரி என்னும் நாணல் வகை** (Saccharum)

இச் சொல் இனிப்புப் பண்டமாகிய சர்க்கரையைக் குறிப்பிடும். கரும்பிலிருந்து வெல்லமும், சர்க்கரையும் செய்யப்படுகின்றன. சர்க்கரை இலத்தீன் மொழியில் சக்கரம் (Saccharum) என்று வழங்கப்படுகிறது. இந்தியாவில் கரும்பு உற்பத்திக்குப் பெயர் பெற்றது. ஜாவா (Java) முதலிய இடங்களிலிருந்து, சர்க்கரை ஏற்றுமதி செய்யப்பட்டன. சக்கரத்தில் கரும்பை வைத்துப் பிழிந்து, அதன் சாற்றைக் கொண்டு இனிப்புத் தயாரிப்பதால்—வெல்லம் முதலியவை செய்வதால்-அதற்குச் சக்கரை என்று பெயர் உண்டாயிற்று. இச் சொல்லே அரபு, உருது மொழிகளில் புகுந்து, பின்னர் வணிகப் பெருமக்களால் ரோம் நகருக்கும் எட்டவிடப்பட்டது. சக்கரை என்ற சொல்லே இலத்தீனில் சக்கரம் (Saccharum)என்று வழங்கப்பட்டது.—(Vide Latin-English Dictionary:-Page 876) இச் சொல்—சக்கரி என்பது-வெல்லத்தையே குறித்தது. போர்ச்சுகீசியர், சுகர் (Sugar) என்பதை அசுகர் (Asugar) என்று வழங்கினர். அதுவே நாளடைவில் அஸ்கா என்று மருவி, தற்போதுள்ள வெள்ளைச் சர்க்கரையைக் குறிப்பிடுகிறது. சக்கரம் என்ற இலத்தீன் சொல்லிலிருந்தே சாக்கரின்

(Saccharine) என்ற சொல் வந்தது. சாக்கரின் மருந்தாகப் பயன் படும் இனிப்புப் பொருளாகும். இனிப்பு என்ற பொருளின் அடிப்படையிலேயே சாக்கரின் என்ற சொல்லும் உண்டாயிற்று.

பிளினி (கி.பி. 23-79) தம் வரலாற்றில் சர்க்கரையைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்:

"சர்க்கரை மருந்து வகைகளுக்குப் பயன்படுகிறது."

(Pliny—Book XXVI—Chapter 51)

நெய்யும் சர்க்கரையும் வயிற்றுவலிக்கு இன்றும் மருந்தாகக் குழைத்துக் கொடுக்கப்படுகிறது.

பத்துப் பாட்டுள் ஒன்றான மலைபடுகடாம் என்ற நூலில் கரும்பு குறிப்பிடப்பட்டுள்ளது.

"....அறையுற்று
"ஆலைக்கு அலமரும் தீங்கழைக் கரும்பு"

(மலைபடுகடாம்-118-119)

இதற்கு "ஆலைகளில் கரும்பினின்று சாறுகொள்ளும் ஒலியையும்" என்று டாக்டர் உ வே. சாமிநாதையர் எழுதியுள்ளார். ஆகை யால் கரும்புச்சாற்றிலிருந்து வெல்லம் செய்தல் பழங்காலத்தி லிருந்து வழி வழிவந்த தொழிலாகும்.

சர்க்கரைக் கரும்பு, 'சக்கரி நாணல்' என்று குறிப்பிடப்படு கிறது. கரும்பின் தார்கள் நாணல்போன்றிருப்பதன் காரணமாக அவை 'சக்கரி நாணல்' எனப்பட்டது போலும். மற்றும் அக் கருப்பஞ்சாற்றைத் 'தேன்' என்று கூறுவது அது தரும் இனிய சுவை காரணமாக என்றே கொள்ளவேண்டும்.

**11. இவ்வாணிக நகர்ச் சந்தைக்கே வந்துவிடுகின்றனர்**(Directly to the commercial market towns)

சில கப்பல்கள் தாங்கள் வாங்கவேண்டிய பண்டங்களைவாங்கிக் கொண்டு, நேரே குர்டாபி முனைக்குச் சென்றுவிடுகின்றன. இவ் வணிகர்கள் ஒருசில குறிப்பிட்ட பண்டங்களையே நிறைய ஏற்றிச் செல்பவர் ஆவர்.

**12. பண்டங்களைப் பண்டமாற்றுச் செய்துகொண்டும் வரு கின்றனர்** (Exchange the goods and sail)

சிலர் சிறு சிறுபண்டங்களை ஆங்காங்குச் சேகரித்து, அவற்றுக்கு வேறு பண்டங்களை வாங்கித் தேவைப்படும் பண்டங்களுடன் அயல் நாடு செல்வர். மற்றும், மேலே குறிப்பு-4 பார்க்கவும்.

# 15. பைரலே, மெனுதியஸ் தீவுகள்

ஓபோனி[1] எனும் இடத்துக்கு அப்பால் கடற்கரை தெற்குப் பக்கமாய்த் திருப்பம் எய்துகிறது. முதன்முதல் காணப்படுவது, சிறியதும் பெரியதும் ஆகவுள்ள சில நில நீட்சிகள் (துருத்தி நிற்கும் பாறைகள்) அஜானியாவைச்[2] சார்ந்தனவேயாகும். இந்தக் கடற்கரையில் துறைமுகம் ஒன்றேனும் கிடையாது. ஆனால், ஆங்காங்குக் கப்பல்கள் நங்கூரம் பாய்ச்சி நிற்பதற்கு ஏற்ற வசதிகளோடு கூடிய இடங்கள் சில காணப்படுகின்றன. அப்படியும் கடற்கரை வளைவின்றி நேராய்க் காணப்படுகிறது. இவ்வாறு கப்பல் செல்லவேண்டிய தொலைவு ஆறுநாள் பயண அளவு ஆகும். அவ்வாறு செல்ல வேண்டிய திசை தென்மேற்கு. இதற்குமப்பால் சிறியதும், பெரியதுமான கடற்கரைகள் வருகின்றன. இவற்றை ஆறு நாள்கள் கடந்து செல்லவேண்டும். அவற்றிற்கும் அப்பால் அஜானியா என்ற பாலைவனப் பிரதேசத்தைக்[3] கடந்து செல்லவேண்டும். அவ்வாறு சென்றால், செரபியான்[4] எனும் இடம் காணப்படும். அதற்கடுத்தது நிகான்[5] என்பதாகும். அதற்கும் அடுத்துப் பல நதிகள் ஓடுவதைக் காணலாம். மற்றும், ஒன்றன்பின் ஒன்றாகக் கப்பல் தங்குவதற்குரிய ஆழமான நீர்நிலைகள் காணப்படும். அவை ஒரு நாள் பயணம் ஏற்பதற்கும், ஒரு நாள் தங்கி இளைப்பாறுவதற்கும் ஏற்றனவாக அமைந்துள்ளன. இவ்வாறான வசதியுள்ள இடங்கள் ஏழு உள்ளன. இவற்றைக் கடந்து சென்றால் பைரலே தீவுகள் காணப்படுகின்றன.

மற்றும் நீர்கால் ஒன்றும் காணப்படுகிறது. இவற்றிற்கும் அப்பால், தென்மேற்கிற்கும் சிறிது அப்பால் ஒளசானிடிக் கடற்கரை[7]யோரமாக ஓர் இரவும் பகலும் கப்பலில் கடந்து சென்றால், மெனுதியஸ்[8] என்ற தீவு காணப்படும். இத் தீவு தாய் நாட்டிலிருந்து 300 ஸ்டேடியா தொலைவு உள்ளது. இத் தீவு

காடு அடர்ந்த தீவாகும். இங்கு நிறைய ஆறு களும், பலவித நிறங்கள் வாய்ந்த பறவைகளும், மலை நாட்டு ஆமைகளும் காணப்படுகின்றன. ஆனால், அவை மனிதர்களைத் துரத்தித் துன்புறுத்துவன அல்ல. இவ் விடத்தில், கயிற்றால் பின்னி இணைக்கப்பட்ட படகு களும், பண்டமேற்றிச் செல்லும் கப்பல்களும், மீன் பிடிக்கும் சிற்றோடங்களும்[9] ஆகிய இவையாவும் ஒரே மரத்தண்டின் பகுதியினால் ஆக்கப்பட்டுள்ளன. இவை யாவும் மீன் பிடிப்பதற்கும், ஆமைகளைப் பிடிப்பதற் கும் பயன்படுகின்றன. இத் தீவில் அவற்றை ஒரு தனி யான முறையில் பிடிக்கிறார்கள். வலைக்கூடைகளை[10] நீர் நிலைகளிலும், ஆறுகளிலும் நீர் ஓடும் திசையில் வைத்து, அவ்வலைக் கூடைகளின் வாய்கள் திறப்பதால் மீன்களும் ஆமைகளும் தாமாகவே வந்து அக் கூடை களில் சிக்கிக் கொள்கின்றன. இவ் வலைக்கூடைகள் அத்தகைய சூழ்ச்சிகளோடு கயிறுகளால் பிணைக்கப்பட் டுள்ளன. அக் கயிறுகளை இறுக்கியோ, முறுக்கியோ, அவ்வலைக் கூடைகளின் வாய்கள் திறக்கப்படுகின்றன.

## விளக்கவுரை

### 1. ஓபோனி (Opone)

ஓபோனி என்னும் இடம் குர்டாபிமுனைக்கு (Cape Gaurdafi) அருகில் இருந்திருக்கவேண்டும். குர்டாபி முனையே அன்று ஓபோனி என்று வழங்கப்பட்டிருக்கலாம். காரணம், அதற்குப் பிறகு உள்ள கடற்கரை தெற்குப் பக்கமாகத் திருப்பமடைகிறது என்று உடன் கூறப்படுவதே.

ஓபோனியின் இருப்பிடம்: 11°·50'வ × 56°·16'கி.

ஆனால், மற்றொரு சாரார் இது ராஸ்ஹாபன் (Ras-hafun) எனும் இடத்தைக் குறிப்பிடுகிறது என்று கூறுகின்றனர். இது குர்டாபி முனைக்குத் தெற்கில் 90 மைல்கள் (144 கி.மீ) தொலைவில் இருந்தாகக் கூறப்படுகிறது. இருப்பிடம்: 10°·27'வ × 51°·0'கி. மற்றும் அதிகாரம் 13, குறிப்பு-4 பார்க்கவும்.

**2. அஜானியா** (Azania)

*அஜானியாவின் முதல் பெயர் அஜ்ஜான் (Ajjan) என்ப தாகும்; அதுவே நாளடைவில் அஜானியா என்று திரிந்து வழங் கப்படலாயிற்று. இங்குச் சில நீட்சிகள் அதாவது கடற்கரைப் பகுதிகள் நீண்டும் குறுகியும், ஒவ்வொன்றும் ஒரு முனையில் முடி வடைவதே போன்று காணப்படும். இது நவீன எல்ஹாசின் (El-hazin) என்ற இடத்தில் தொடங்கி, ராஸ்–எல்கில் (Ras-elkyl) என்ற இடத்தில் முடிவடைகிறதாகக் கருதப்படுகிறது. இந் நீட்சிகளின் 'இருப்பிடம்: 44°·7'வ×49°·40'கி மோம்பாஸா (Mombaza), ஜான்ஜிபார் (Zanzibar) இடையேயுள்ள கடல் அஜானியாக் கடல் (Azanian sea) என்று வழங்கப்படும்.*

**3. அஜானியா பாலைவனப் பிரதேசம்** (Azania Desert)

*இது பூமத்தியரேகைக்கு அருகில் உள்ள கடற்கரை நிலப் பரப்பு இக் கடற்கரைஇரு பகுதிகளாய்ப் பிரிக்கப்படுகிறது. அவற் றுள் ஒன்றின் பெயர் பார் அஜ்ஜான் (Barr Ajjan). இரண்டாவதின் பெயர் பெனடிர் (Benadir). பெனடிர் கடற்கரை (Benadir Coast) என்பது மொகடுஷுக்கும் (Mogdushu) கிஸ்மயூ (Kismayu) வுக்கும் இடையில் உள்ள பகுதியாகும். இருப்பிடம்: 2°·1'வ×45°·24 கி.*

**4. செரபியான்** (Serapion)

*இது நவீன மொகடுஷு(Mogdushu) என்னும் துறைமுகத்தைக் குறிப்பிடும். இது அஜானியா பாலைவனப்பகுதியின் தெற்குக் கடற்கரையில் உள்ளது. மார்க்கோ போலோ (கி.பி.1255-1324) இதைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். அவர் ஜான்ஜிபார் கடற் கரை முழுவதையும் அஜானியா என்று வழங்கினர். அச் சொல் அஜ்ஜான்-ஜிபார் என்று பிரிந்து, அதுவே பின்னர் ஜான்ஜிபார் ஆயிற்று என்று கூறுவர்.*

*போர்ச்சுக்கீசியர் ஜான்ஜிபார் தீவைத் தம் ஆதிக்கத்தில் வைத்திருந்தபோது, அவர்கள் இட்டபெயரே அத் தீவின் பெயராக நிலைத்துவிட்டது. ஜாங்க் (Zang) என்றால் கறுப்பு நிறம் என்றும், ஜிபார் (Jibar) என்றால் கடற்கரைப் பகுதி என்றும் பொருள்பட்டு, ஜான்ஜிபார் என்பது கறுப்பு மனிதர் வாழும் கடற்கரைப்பகுதி(Land of the Blacks) என்றும் விளங்குவதாயிற்று.*

*மொகடுஷுவின் இருப்பிடம்: 2°·2'வ×45°·24'கி.*

**5. நிகான்** (Nicon)

*இஃது ஒரு பாலைவனப் பகுதி. அஜானியாவின் தென் பகுதி யைக் குறிப்பிடுகிறது.*

**6. பைரலே தீவுகள்** (Pyralae Islands)

இத் தீவுகள் பட்டா (Patta), மண்டா (Manda), லாமு (Lamu) என்ற பெயர்களால் வழங்கப்படுகின்றன. இத் தீவுகளின் பின் புறம் கப்பல் செல்ல வசதிபெற்றுள்ளது. வளைந்து செல்லாமல் நேர்பாதையிலேயே செல்லலாம். இங்கே சில சிற்றாறுகள் கடலில் கலந்து கழிமுகத்தை ஏற்படுத்துகின்றன. லாமுவின் (Lamu) இருப்பிடம்: 3°·33' தெ × 40°·49' கி. இது கென்யா பகுதியைச் சார்ந்தது; நிலநடுக்கோட்டுக்குத் தெற்கே உள்ளது.

**7. ஔசானிடிக் கடற்கரை** (Ausanitic Shore)

இது ஜான்ஜிபார் தீவுக்கும் (Zanzibar) ஆப்பிரிக்கக் கடற் கரைக்கும் இடையே உள்ள இடத்தைக் குறிப்பிடுவதாகக் கருதப் படுகிறது. ஆப்பிரிக்காவின் கடற்கரையே—ஜான்ஜிபார் தீவுக் கெதிரில்—ஔசானிடிக் கடற்கரை என்று வழங்கப்பட்டதாகத் தெரிகிறது. ஔசானிடிக் அல்லது ஓஷானிடிக் என்றால் பெருங் கடல் பகுதியிலிருந்து சற்று ஒதுங்கிய இடம் என்றே பொருள் படும். இக் கடற்கரையின் இருப்பிடம்: 5°·0' தெ × 38°·30' கி. இது நிலநடுக்கோட்டுப் பகுதிக்குத் (Equatorial Region) தெற்கே உள்ளது. மற்றும், மேலே குறிப்பு—4 பார்க்கவும்.

**8. மெனூதியஸ் தீவு** (Menuthius Island)

இது ஜான்ஜிபார் தீவைக் குறிப்பிடக்கூடும். அங்குதான் ஆமையோடுகளும், பறவையினங்களும் வாழ்ந்துவந்தன. ஜான்ஜி பாரின் (Zanzibar) இருப்பிடம்: 5°·0' தெ × 38°·30' கி.

**9. மீன் பிடிக்க உதவும் சிற்றோடங்கள்**

இச் சிற்றோடங்கள் ஒரு மரத்தில்—அடி மரத்தில்—செதுக்கப் பட்ட மீன் பிடிக்கும் சாதனங்களாகும். அதன் காரணமாக, அவ் வோடங்களில் துளை ஏற்படுவது கிடையாது. நீரில் மூழ்காது. கட்டுமரங்கள் என்றும் வழங்கப்படுகின்றன. நம் தமிழ் நாட்டுக் கடற்கரைகளிலும், மலையாள நாட்டுக் கடற்கரையிலும் இக் கட்டு மரங்கள் அதிகமான அளவில் பயன்படுத்தப்பட்டுவருகின்றன.

**10. வலைக்கூடைகள்** (Net Baskets)

இக் கூடைகள் பெட்டி போன்று திறந்திருக்கும் வாய்கள் கொண்டனவாகும். அவற்றுள் புழு, பூச்சிகளை வரும் மீன் தின் பதற்காக வைத்திருப்பார்கள். மீன்கள் பெட்டிக்குள் சென்றதும், அக் கூடை கனப்பதால், உடன் அதுமேலே இழுத்துவிடப்படும். இத் தகைய சாதனங்கள் அக் காலத்திலேயே பயன்படுத்தப்பட்டு

வந்தன. இவை 'வலைப் பொறிகள்' என்று வழங்கப்படும். சிறு மீன்கள், பெரியமீன்கள்ஆகியவற்றைப்பிடிக்க அவ் வலைப்பொறிகள் பயன்படுத்தப்படுகின்றன. அவற்றில் கயிறுகள் பொருத்தப்பட்டு, கனத்தவுடன் இறுக்கப்பட்டு மேலே இழுக்கப்படுகின்றன.

# 16. ராப்தா

இதற்குமப்பால் இரண்டு நாள்கள் கப்பலூர்ந்து சென்றால், அஜானியாக் கண்டத்தின்[1] இறுதி வாணிகச் சந்தை நகரம் காணப்படும். இவ்விடம் ராப்தா[2] என்ற பெயரால் வழங்கப்படுகிறது. அங்குள்ள படகுகள் தைக்கப்பட்டும், கயிற்றால் பிணைக்கப்பட்டும் காணப்படுவதால், இப் பெயர் அவ்விடத்துக்கு இடப்பட்டதாகும். அவ்விடத்தில் பெருமளவில் தந்தமும் ஆமையோடுகளும் கிடைக்கின்றன. அக் கடற்கரை ஓரமாக வாழ்பவர்கள் எப்போதும் சுறுசுறுப்பான தன்மை வாய்ந்தவர்களும், உயரத்திலும் வலிமையிலும் சிறந்து விளங்குபவர்களும் ஆகக் காணப்படுகிறனர். ஒவ்வோர் இடத்திற்கும் தனியான அரசன் உண்டு. மபாரிடிக் நாட்டின்[3] தலைவன் இவ்விடத்தை ஆள்கின்றான். அவ்வாறு ஆள்வது, இந் நாடு இதன் தாய் அரசாங்கமாகிய பெரிய அரசாங்கத்துக்குக் கீழ்ப் படிந்து நடக்கவேண்டும் என்பதற்காகவேதான். இவ்வாறு ஆளப்பட்டு வருவது அரேபியாவிலேயே முதன்மையானது ஆகும். இப்பொழுது மூஸா[4] என்ற நாட்டின் மக்கள்அவருடைய அதிகாரத்தின் பேரில், அந் நாட்டைப் பிடித்து வைத்துக்கொண்டு ஆள்கிறார்கள். அங்குப்பெரிய கப்பல்கள் அனுப்பப்படுகின்றன. அவர்கள் அராபியரின் கப்பல் தலைவர்களைப் பயன்படுத்திக் கொள்கின்றனர். அதற்குக் காரணம், அவ் அராபியர்களுக்கு அந் நாட்டின் மொழி தெரிந்திருந்தது. அவர்களுடன் நெருங்கிப் பழகும் வாய்ப்புப் பெற்றிருந்தனர். அவர்களுக்கு அந்த நாட்டின் கடற்கரைப்பகுதி முழுவதும் மிகவும் நன்றாகத் தெரிந்திருந்தது. அவர்களுடைய மொழியைப் புரிந்துகொண்டு

அந்த மொழியிலேயே அளவளாவினர். நாளடைவில் அவர்களிடையில் கலப்புத் திருமணம் ஏற்பட்டு, ஒன்று பட்டு வாழலாயினர்.[5]

இத்தகைய சிறப்புகள் வாய்க்கபெற்ற அராபியர்களையே தங்கள் கப்பல்களுக்கு மாலுமிகளாகவும், கப்பல் தலைவர்களாகவும் அமைத்துக்கொண்டனர்.

## விளக்கவுரை

**1. அஜானியாக் கண்டம்** (Continent of Azania)

இது அஜானியா நாட்டையும், அதன் தென்புறத்தில் உள்ள அஜானியா பாலைவனத்தையும் குறிப்பிடுகிறது. அஜ்ஜான் என்று வழங்கப்படுகிறது. அஜானியாக் கடல், மோம்பாஸா (Mombasa) வுக்கும், ஜான்ஜிபாருக்கும் (Zanzibar) இடையே உள்ளது.

இருப்பிடம்: 7°·44'வ × 49°·40' கி. மற்றும் அதிகாரம் 15, குறிப்பு-2 பார்க்கவும்.

**2. ராப்தா** (Raptha)

ராப்தா என்றால் அராபிய மொழியில் "பிணைக்கப்பட்ட அல்லது இணைக்கப்பட்ட" என்பது பொருளாகும். இவ்விடத்தில் கயிற்றால் இணைக்கப்பட்ட ஓடங்கள் காணப்பட்டனவாகும். அல்லது மூங்கில்கள் கொண்டு இணைக்கப்பட்ட கட்டுமரங்களையும் குறிப்பிடலாம். இவ்வாறான படகுகள் ஜான்ஜிபார் அருகில் காணப்படும். ராப்தா என்பது ஜான்ஜிபார் தீவைக் குறிப்பிடவும் கூடும். அங்கு வாசனைப் பண்டங்கள் விளைந்தன. அவற்றை ஏற்றிச்செல்ல பிணைக்கப்பட்ட கப்பல்கள் பயன்படுத்தப்பட்டிருக்கலாம். 'ராப்டாஸ்' என்றால் கிரேக்க மொழியில் கொள்ளையடித்தல் என்பது பொருள். ஜான்ஜிபார் அருகில் ஒரு காலத்தில் பெருங்கொள்ளைக்கூட்டத்தினர் இருந்தனர். ஜான்ஜிபாரின் இருப்பிடம்: 5°·0' தெ × 38°·30 கி. இது நிலநடுக்கோட்டிற்குத் தெற்கே உள்ள பகுதியாகும்.

**3. மபாரிடிக் நாடு** (Land of Mapharitic)

அராபியர்கள் தமிழ்நாட்டில் மாமல்லபுரத் துறைமுகம் இருந்த கடலை 'மாபர் கடல்' என்றும், தமிழ்நாட்டை 'மாபர் நாடு' (Maphar's Country) என்றும் வழங்கினர் என்று மார்க்கோ போலோ (கி.பி. 1254—1324) தம் பயணக் குறிப்புகளில்

குறித்துள்ளார்: அங்குக் காவிரிப் பூம்பட்டினம் முதல் துறைமுகமாகவும், மாமல்லபுரம் (முன்பெயர் மலங்கே) இரண்டாம் துறைமுகமாகவும் விளங்கிவந்தது. முத்தும் மணியும் விற்கப்பட்ட இடம் மாபர்நாடு என்ற பொருளிலேயே வழங்கப்பட்டதாகும். —(**மார்க்கோ போலோ**—பக்கம் 13, 15). இவ்வாறு முத்தும் பொன்னும் விற்கப்பட்ட இடம் ஜான்ஜிபார் தீவு ஆகும். மற்ற வாசனைப் பண்டங்களும், முத்தும், மணியும்,பொன்னும் விற்கப்பட்டன. இத் தீவு அராபிய அரசர்க் கீழ் இருந்தது. அராபிய நாட்டுச் சட்டதிட்டங்களே இங்கும் காணப்பட்டன. அராபிய அரசர் காலிப் (Kalif) என்ற பெயரால் வழங்கப்பட்டார். மற்றும் அதிகாரம் 22, மபாரிடிஸ் என்ற தலைப்புக் கொண்டதைப் பார்க்கவும்.

**4. மூஸா** (Muza)

இவ்விடம் அரேபியாவின் தென் மேற்குப் பகுதியில் செங்கடல் (Red Sea) பக்கமாக இருக்கும் மோசா (Mocha) என்னும் துறைமுகத்தைக் குறிப்பிடுகிறது. மோசா நாட்டின் அரசர், அராபிய நாட்டின் அரசர் ஆவார். அவர் காலிப் (Khalif) என்ற பெயரால் வழங்கப்பட்டவர் ஆவார்.

மூஸாவின் இருப்பிடம்: 13°·0' வ × 43°·0' கி.

**5. கலப்பு மணம்** (Intercaste Marriage)

அராபியர், ஆங்காங்குக் குதிரை வாணிப விஷயமாகவும், வாசனைப் பண்ட விஷயமாகவும் சென்று, தங்கி, அந் நாட்டு மக்களின் மொழியைக் கற்று, அம் மக்களோடு பழகி, திருமணம் செய்துகொண்டு வாழ்ந்துவரலாயினர். வாணிக முன்னேற்றத்தைக் கருதி அத்தகைய அராபியர்களையே தலைவர்களாக நியமிக்கப்பட்டது அந் நாட்டினரின் முன்யோசனையையும், சமாதானத்துடன் அமைதியாக வாழ விரும்பும் கூர்த்த மதியையும் காட்டுகிறது.

# 17. ராப்தாவின் இறக்குமதிப் பொருள்கள்

வாணிகச் சந்தைகூடும் நகர்களில் மூஸா[1] என்ற நகரத்தில், தனியாகத் தயாரிக்கப்பட்ட ஈட்டியும், கடப்பாரையும், கோடரியும்[2] இறக்குமதி செய்யப்

படுகின்றன. மற்றும், தோல் தைக்கும் ஊசிகளும், பற்பல் நிறமுள்ள கண்ணாடிச் சாமான்களும்[3] இறக்குமதி செய்யப் படுகின்றன. மற்றும் சில இடங்களில் சிறிது மதுபானமும் கோதுமையும், வாணிகத்திற்காக அல்லாமல், அவ்விடங்களிலுள்ள நாகரிகமற்ற மக்களின் நல்லெண்ணத்தைப் பெறும் நோக்கத்துடன் இறக்குமதி செய்யப்படுகின்றன. இவ்விடங்களிலிருந்து பேரளவில் தந்தமும் காண்டாமிருகக் கொம்புகளும், ஆமையோடுகளும், சிறிய அளவில் தேங்காய் எண்ணெயும் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. இங்குக் காணப்படும் தந்தம் அடுலிஸ் நகரத்தின்[4] தந்தத்தைவிடத் தரத்தில் குறைந்தே மதிப்பிடப்படுகிறது. இங்குச் சேகரிக்கப்படும் தேங்காய் எண்ணெய், இந்தியாவிலிருந்து இங்கு இறக்குமதி செய்யப்படும் தேங்காய் எண்ணெய்க்கு அடுத்தபடியாகத்தான் மக்களால் விரும்பப்படுகிறது. இந்தியத் தேங்காய் எண்ணெய்க்கே[5] முதலிடம் கொடுத்து, அதை விரும்பி வாங்கிக் கொள்கின்றனர்.

## விளக்கவுரை

**1. மூஸா** (Muza)

இது நவீன மோசா (Mocha) எனப்படும் துறைமுகத்தைக் குறிப்பிடும். இத் துறைமுகம் பிளினியால் (கி.பி. 23-79) குறிப்பிடப்பட்டுள்ளது. (**பிளினி:** பகுதி I, அதிகாரம் 6, குறிப்பு-75, பக்கம் 128). மற்றும் அதிகாரம் 7, குறிப்பு- 0; அதிகாரம் 16, குறிப்பு-4 பார்க்கவும்.

**2. ஈட்டி, கடப்பாரை, கோடரி** (Spear, crowbar, axe)

இரும்புத் தளவாடங்கள் பலவும், கடப்பாரை, ஈட்டி, கோடரி, சூலம், வேல் முதலிய ஆயுதங்களும், கப்பல் ஓட்டும் மக்களுக்குப் பயன்படும் பல போர்க் கருவிகளும் உற்பத்தி செய்யப்பட்டுவந்தன. தோல் தைக்கும் ஊசிகளும், ஒட்டகத் தோல் தைக்க உதவும் ஊசிகளும் தயார்செய்யப்பட்டன.

**3. கண்ணாடிப் பொருள்கள்** (Glass Articles)

பற்பல நிறமுள்ள கண்ணாடிகளும் வளையல்களும், மற்றும் கண்ணாடிக் குப்பிகளும் செய்யப்பட்டு, விலைக்கு விற்கப்பட்டன.

இக் கண்ணுடி செய்யும்வகை பீனிசிய மக்களால் உலகிற்குத் தெரியப்படுத்தப்பட்டது என்று பிளினி கூறுகிருர். (Pliny Book XXXVI–Chapter 60-70). பீனிசியர்கள் கப்பல் கட்டுவதிலும், அதைச் செலுத்துவதிலும் வல்லவர்களாயிருந்தனர். பீனிசியா என்பது சிரியாக் (Syria) கடற்கரைப் பகுதியாகும். அதன் முக்கியத்துறைமுகங்கள் தீரே (Tyre), சீதோன் (Sidon), அவர்களின் அயல்நாட்டுக் குடியேற்றங்கள் கார்தேஜ் (Carthage)• ஹிப்போ (Hippo) என்பனவாகும்.

பீனிசியா அரசு, டைடோ (Dido) தெய்வத்தின் தங்கையான அன்ணு (Anna) என்பவளை, தன் நாட்டை விட்டு வெளியே துரத்திவிட்டது என்று ஓவிடு (Ovid) என்ற நூல் கூறுகிறது. அந்நூலின் ஆசிரியர் ஓவிடியோ நேஸோ (Ovidio Nasso). அவர் காலம் கி. மு. 43 முதல் கி. பி. 18 வரை ஆகும். அவர் ரோமானியக் கவிஞர்.

மற்றும் கண்ணுடியைப் பற்றி அறிய, அதிகாரம் 6, குறிப்பு-5 பார்க்கவும்.

### 4. அடுலிஸ் (Adulis)

இது செங்கடலில் ஆப்பிரிக்கக் கடற்கரையில் விளங்கிய ஒரு துறைமுகம். இதன் நவீன பெயர் மஸாவா (Massawa). இதன் இருப்பிடம்: 15°·35'வ × 39°·28'கி. இது கடற்கரை வாணிகத்தில் மிகவும் புகழ்பெற்ற துறைமுகமாகும். மற்றும் அதிகாரம் 3, குறிப்பு-7; அதிகாரம் 4, குறிப்பு - 3 பார்க்கவும்.

### 5. தேங்காய் எண்ணெய் (Palm oil)

பாம் (Palm) என்பது கமுகு, பனை, தென்னை ஆகிய இனங்களைக் குறிப்பிடும் சொல்லாகும். தேங்காய் வடமொழியில் நாரிகேரா என்று வழங்கப்பட்டது. ஆகையால் தேங்காய் விளையும் பூமி நாரிகேளம்(Narikelam) என்று ஏற்பட்டு,அச் சொல் மலையாள நாட்டைக் குறிப்பிடுவதாயிற்று. அச் சொல் ஜான்ஜிபார் தீவில் நார்கில் (Narkil) என்று வழங்கப்பட்டு, தென்னையைக் குறித்தது. தென்னை மரம் இந்தியாவிலிருந்து ஆப்பிரிக்காவுக்குச் சென்றது; முதன்முதல் ஜான்ஜிபார் (Zanzibar) தீவுக்குக் கடல் வழியாக அடித்துச்செல்லப்பட்டு, அங்கு விளையத்தொடங்கிற்று. தென்னை மரத்திலிருந்து எடுக்கப்படும் பொருள்கள் யாவும் பயன்படுகின்றன. தேங்காயின் பருப்பு உணவிற்கும், கொப்பரை எண்ணெய் எடுக்கவும், அதன் அடிமரம் வீடுகள் கட்டத் தூலங்களாகவும்,

ஓலைகள் பாய்முடையவும், துடைப்பம் செய்யவும், அதன் பாளைகள் அடுப்பெரிக்கவும், வெயிற்காலத்துக்கு இளநீர்ப் பருகவும், நாறு கயிறுகள் பின்னவும் ஆகப் பலவிதங்களில் தென்னையும் அதன் தேங்காயும் பயன்படுகின்றன.

மலையாள நாடு நித்ரியாஸ் (Nitreas) என்று வழங்கப்பட்டது. மலையாள நாட்டில் விளையும் கமுகைப் பற்றி மார்க்கோ போலோ விவரித்துள்ளார். (**மார்க்கோ போலோ**; பக்கம் 80). கமுகை அவர் இந்தியப் பாக்கு (Indian Arecanut) என்று வழங்குகிறார்.

தேங்காய் வாணிகம் மட்டும் செய்து வரும் ஒரு தீவைச் சிந்துபாது எனும் நூல் குறிப்பிடுகிறது. (**சிந்துபாது**:பக்கம் 64-68).

மலையாள நாட்டைப் பிளினி குறிப்பிட்டுள்ளார். (**பிளினி**: பகுதி-I. அதிகாரம் 4, குறிப்பு-45, பக்கம் 85)

தமிழ் இலக்கியங்களில் தேங்காய், பனை, கமுகு முதலியன குறிப்பிடப்பட்டுள்ளன. இவை அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி யாயின என்று வரலாறுகள் கூறுகின்றன.

''பனையென்அளவும் காவென் நிறையும்
நினையுங்காலை இன்னொடு சிவணும்.''
—(**தொல்காப்பியம்**: எழுத்தியல், தொகைமரபு 27)

''கடையார் நட்பில் கமுகனையரேனை
இடை யாயார் தெங்கினனையர் — தலையாயா
ரெண்ணரும் பெண்ணை போன்று''
—(**நாலடியார்** 216)

''உத்தமர் தாம் ஈயுமிடத் தோங்குபனை போல்வரே,
மத்திமர் தாம் தெங்குதனை மானுவரே — முத்தலரும்
ஆங்கமுகு போல்வர் அதமர் அவர்களே
தேங்கதலியும் போல்வார் தேர்ந்து.''
—(**நீதிவெண்பா** 91)

''வண்டோட்டுத் தெங்கின் வாடுமடல் வேய்ந்த''
—(**பெரும்பாணாற்றுப்படை** 353)

''தளரா வளர்தெங்கு தாள்உண்ட நீரைத்
தலையாலே தான் தருதலால்.''
—(**ஔவையார்: வாக்குண்டாம்** 1)

"மிளகும், இஞ்சியும், பாக்கும், உலகத்திலே எங்கும் கிடைத்தற்கரிய அவ்வளவு விலையுயர்ந்த துணிகளும் இவ்விடத்தில் பெருவாரியான அளவில் உற்பத்திசெய்யப் படுகின்றன."

—(மார்க்கோ போலோ: பக்கம் 80)

# 18. அஜானியா

ஆப்பிரிக்காக் கண்டத்தில், பெரெனிஸ்[1] முதல் காணப்படும் வாணிகச் சந்தை நகரங்களுள்இறுதியானது அஜானியா[2]வின்வாணிகச் சந்தை நகரமாகும். இவ்விடங்களுக்கு அப்பால் கடந்து செல்வதற்கரிய கடல்—இது வரை அறியப்படாத பகுதிகள்—மேற்குப்பக்கமாக வளைந்து செல்கிறது. மற்றும் அவ் வளைந்த பகுதி, ஈதியோப்பியாவுக்குத்[3] தெற்கேயுள்ள நாடுகளின் கரையோரமாகவும், லிபியா[4], ஆப்பிரிக்காவின் தென் பகுதிக் கடலோரமாகவும் பரவி, மேற்குக் கடலுள் ஒன்றுபட்டு இணைந்து விடுகிறது[5].

## விளக்கவுரை

**1. பெரெனிஸ்** (Berenice)

ஆப்பிரிக்காவின் வாணிகச் சந்தைகளுள் முதலாவதும் முக்கியமானதுமாகப் பெரெனிஸ் விளங்கிற்று. அயல் நாட்டுப் பண்டங்கள் இங்கே இறக்குமதி செய்யப்பட்டன; மற்றும் இந் நாட்டுப் பொருள்கள் ரோம் முதலிய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. இத் துறைமுகம் தாலமி பிலடெல்பஸ் என்பாரின் தாயார் பெயரால் நிர்மாணிக்கப் பட்டது. இருப்பிடம்: 23°·55' வ ×35°·34' கி. மற்றும், அதிகாரம் 1, குறிப்பு-6 பார்க்கவும்.

**2. அஜானியா வாணிகச் சந்தை நகரம்** (Commercial Market town of Azania)

வாணிகச் சந்தை நகரங்களுள் பெரெனிஸ் முதலாவதாகவும், அஜானியா இறுதியானதாகவும் விளங்கிற்று என்று கூறுகிறார். அஜானியா என்பது முன்னர் அஜ்ஜான் (Ajjan) என்று வழங்கப்பட்டது. மோம்பாஸா, ஜான்ஜிபார் இடையேயுள்ள கடலின்

பெயர் அஜானியாக் கடல் (Azanian Sea) என்பதாகும். மற்றும் அதிகாரம்15,குறிப்பு-2 பார்க்கவும்.இருப்பிடம்:7°·44'வ × 49°·40'கி.

### 3. ஈதியோபியா (Ethiopia)

இப் பெயர் ஆப்பிரிக்காவின் வடகிழக்குப் பகுதியைக் குறிப்பதாகும். அபிசீனியா என்ற பெயரால் 1923 ஆம் ஆண்டுவரை குறிப்பிடப்பட்டது. அதன்பின்னர், ஈதியோபியா என்றே வழங்கப்பட்டது. இது நூபியா (Nubia), கார்டபான்(Kordofan), சென்னர் (Sennar), அபிசீனியா (Abyssinia) ஆகிய பகுதிகளைக்கொண்டது. மற்றும், அதிகாரம் 4, குறிப்பு-6ஐப் பார்க்கவும்.

### 4. லிபியா (Libya)

ஆப்பிரிக்காவின் வட பகுதி லிபியா (Libya) எனப்படுகிறது. அதன் பெரும்பகுதி பாலைவனமாகும். லிபியாவின் தலைநகரம் டிரிபோலி (Tripoli). இதன் இருப்பிடம்: 32°·45' வ × 13°·15'கி.

### 5. அறியப்படாத கடல் பகுதிகள்; மேற்குக் கடலுள் ஒன்றுபடுதல் (Unknown places, merged with places on the West Coast)

ஆப்பிரிக்காக்கண்டம் கடலால்சூழப்பட்டிருந்தது என்ற கருத்து பழங்காலத்திலிருந்தே நிலவிவந்தது. ஆனால் இந்தியப் பெருங்கடலையும் (Indian Ocean), அராபியன் கடலையும் (Arabian Sea) தாண்டிச் செல்ல அக் கால மக்களுக்குத் தெரியவில்லை. ஆகையால், இந்து மகா சமுத்திரம் எல்லையற்றது என்றும், அதேபோல் ஆப்பிரிக்காவில் மேற்குப் பகுதியில் உள்ள அட்லாண்டிக் பெருங்கடலும் (Atlantic Ocean) எல்லையற்றது என்றும், அக் கால மக்கள் கருதி வந்தனர். அக் கடல்களில் கப்பல்களைச் செலுத்திச்செல்லச் சிறிது அஞ்சினர். போகப்போக, நாளடைவில் பயம் நீங்கி, எல்லாக் கடல்களிலும் கப்பல்களைவிடத் துணிந்துவிட்டனர்.

ஆங்காங்கே கொள்ளைக்கூட்டத்தினர் இருந்தனர். கொள்ளைக் கூட்டத்தினரைப் பற்றி மார்க்கோ போலோ (கி.பி. 1254—1324) தம் பயண வரலாற்றில் குறிப்பிட்டுள்ளார்

—(மார்க்கோ போலோ: பக்கம் 78-79),

# 19. பேத்ரா

முஸெல்துறைமுகத்துக்குக்[1] கிழக்கே, இரண்டு மூன்று நாள்கள் கப்பலில் சென்றால், பெரெனிஸை[2] அடுத்து மற்றொரு துறைமுகம் காணப்படும். அதற்கருகில் பாது காக்கப்பட்ட ஓர் இடம் காணப்படுகிறது. அவ்விடம் வெள்ளைக் கிராமம்[3] என்று வழங்கப்படுகிறது. அதிலிருந்து பேத்ராவுக்கு[4] நேரான வழி ஒன்று உண்டு. அந் நகரம் நபோடியர்களின்[5] அரசரான மலிஷாஸ்[6] என்பவரின் ஆளு கைக்கும் ஆட்சிக்கும் உட்பட்டிருந்ததாகும். அந் நகரம் சந்தை கூடும் சிறிய வணிக நகரமாகத் தோற்றம் அளிக் கிறது. அரேபியாவிலிருந்து அனுப்பப்படும் சிறிய கப்பல்கள்[7], தாங்கள் ஏற்றிவந்த வாசனைப் பண்டங்கள் யாவற்றையும் வணிக விற்பனைப் பொருட்டு இறக்குமதி செய்கின்றன. அதன் காரணமாக, அங்குச் செஞ்சூரியன்[8] ஒருவர் வரிவசூல் செய்வதற்காக நியமிக்கப்பட்டுள்ளார். அவர் அங்குத் தம்மிருப்பிடத்தை ஏற்படுத்திக் கொண்டு இறக்குமதி செய்யப்படும் பண்டங்களில் நாலில் ஒரு பங்கைச் சுங்க வரியாக எடுத்துக்கொள்ள அதிகாரம் பெற்றுள்ளார். அதற்கு உதவியாக, ஆயுதம் தாங்கிய படையொன்று எப்பொழுதும் அங்கு நிறுத்தி வைக்கப் பட்டுள்ளது[9].

## விளக்கவுரை

**1. முஸெல் துறைமுகம்** (Mussel Harbour)

இத் துறைமுகம் இப்பொழுது ராஸ்அபு முகமத் (RasAbu Mohmed) என்று வழங்கப்படுகிறது. இதன் பழைய பெயர் மையோஸ் ஆர்மஸ் (Myos Hormus). இத் துறைமுகம் தாலமி பிலடெல்பஸ் என்பவரால், கி. மு. 274-ல் நிர்மாணிக்கப்பட்டது. இருப்பிடம், 29°·0'வ × 34°·50'கி. மற்றும் அதிகாரம் 1, குறிப்பு-3 பார்க்கவும்.

**2. பெரெனிஸ்** (Berenice)

வாணிகப் பண்டங்கள் இறக்குமதி செய்யப்படும் முதலாவதும் முக்கியமானதுமான துறைமுகம். இது தாலமி பிலடெல்பஸ்

தாயாரின் பெயரால் நிர்மாணிக்கப்பட்டது. இருப்பிடம், 23°·55'வ×35°·34'கி. மற்றும் அதிகாரம் 1, குறிப்பு-5; அதிகாரம் 18: குறிப்பு-1 பார்க்கவும்.

### 3. வெள்ளைக் கிராமம் (White Village)

இதன்பெயர் லூகி கோமே (Lueki Kome) என்று வழங்கப்படு வதாகும். இது எல் ஹாராக் (El–Harak) இருக்கும் இடத்தில் இருந்ததாக வரலாற்றாசிரியர்கள் கூறுகின்றனர். ஹராக் என்ற சொல்லுக்கு அரேபிய மொழியில் வெண்மை என்ற பொருள் உண்டு. இதையே தாலமி (Ptolemy) எனப்படும் யவனாசிரியர் (கி.பி. 119-116) அவுரா (Aura) என்று குறிப்பிட்டுள்ளார். இது பாலைவனக் கப்பலாகிய ஒட்டகம் போகும் வழியில்—ஏடென் (Aden) தொடங்கி மத்திய தரைக் கடல் வரை (Mediterranean Sea) போகும் வழியில்—அமைந்துள்ளது. இது செங்கடலில் (Red Sea) ஹசானித் தீவினால்(Hasani Island)பாதுகாக்கப்படும் இடத்தில் உள்ளது. எல் ஹாராக்கின் இருப்பிடம்: 25°· 7'வ× 37°· 13'கி.

### 4. பேத்ரா (Petra)

இது வாடிமூஸா (Wady Musa) என்னும் பள்ளத் தாக்கில் உள்ளது. இது வாடி-எல்·அராபா (Wadi-El-Araba) என்றும் வழங் பட்டது. அகாபா(Akaba) என்னும்இடம்அதேபெயருள்ள வளைகுடா வைச்சேர்ந்துள்ள பள்ளத்தாக்கில் உள்ளது. இதற்கடுத்த இடம் வாடிமூஸா என்று வழங்கப்படுகிறது. இவ்விடம் வாணிகச் சந்தை கூடும் நகரமாகும். இங்கே ஒட்டகங்கள் போகும் பாலை வன வழிகள் சந்திக்கின்றன. இது வாணிகத்தில் முக்கியத்துவம் பெற்றுள்ளது.

இதன் மாவட்டத்தின் பெயரும் பேத்ரா என்று கூறப்படு கிறது. இதன் உள்ளே சென்றால், அங்கு ரெகெம் (Rekem) எனும் இடம் காணப்படும். ரெகெம் என்பது பாறைகள் (Rocks) நிறைந்த இடமாகும். பைபிளில் (Bible) இவ்விடம் சிலா (Sila) என்று வழங்கப்படுகிறது. சிலா என்ற வடமொழிச் சொல்லுக்குப் பாறை என்று பொருள். சிலா சாசனம் என்ப தற்குக் கல்வெட்டு என்பதே பொருள். இதை அராபியர்கள் சால் (Sal) என்று வழங்கினர்.

பேத்ரா (Petra) என்பது ஜோர்டானுக்குத் தெற்கிலும், அகாபாவுக்கு வடக்கிலும் அதாவது இரண்டு இடங்களுக்கும் நடு வில் உள்ளது. இது அராபிய நாட்டைச் சார்ந்ததாகும்; நெபாதே (Nebathae) மக்களின் தலைநகரமும் ஆகும்.

இருப்பிடம்: 30°·20'வ×35°·18'கி.

**5. நபோடியர்கள்** (Neboteans)

இதன் சரியான உச்சரிப்பு நபாதி (Nabataei) அல்லது நபாதே (Nebathae) என்பதாகும். இவர்கள் அராபிய நாட்டு மக்கள். இவர்களுக்குச் சொந்தமானது இதூமியன் மலைகள் (Idumaeon Mountains). இவர்கள் நாடு அரேபியா பேத்ரா (Arabia Petrea) எனப்பட்டது. இந் நாட்டின் தலைநகரம் பேத்ரா (Petra). மேலே குறிப்பு-4 பார்க்கவும். நபாதியஸ் (Nabathaeus) என்பது கிழக்கு அல்லது கீழை நாட்டைச் சார்ந்த என்று பொருள்படும் சொல்லாகும்.

**6. மலிஷாஸ்** (Malichas)

நபோடியர்கள் அரசர் மெலிஷாஸ் (Malichas) என்று இங்குக் கூறப்படுகிறது. மால்ஷஸ் (Malchus) எனும் பெயருள்ள அராபிய அரசர், ஆயிரம் குதிரைப்படைகளையும், ஐயாயிரம் காலாட் படைகளையும், ஜெருசலேம் (Jerusalem) நகர்மீது படையெடுக்க டைடஸ் (Titus) என்ற அரசருக்கு உதவியாக அனுப்பிவைத்தார். இவ்வாறு படைகள் அனுப்பப்பட்ட ஆண்டு கி.பி.70 என்று வரலாற்றாசிரியர்கள் கூறுகின்றனர். ஆகையால், மால்ஷஸ் (Malchus) என்ற பெயருள்ள அரசரே மலிஷாஸ் (Melichas) என்று பெரிப்ளூஸ் ஆசிரியரால் கூறப்படுகிறது. இதன் காரணமாக, பெரிப்ளூஸ் எழுதப்பட்ட ஆண்டு கி.பி.70-க்கு முன்னர் ஆகும். இதை கி.பி.50-80 என்று பலர் கொள்கின்றனர்—பயணத்திற்கு மேற்கொண்ட கால அளவைக் கணக்கில் எடுத்துக் கொண்டு. ஆகையால் மெலிஷாஸ் அரசர் வரலாற்றால், பெரிப்ளூஸ் எழுதப்பட்ட காலம் உறுதிப் பாடடைகின்றது அல்லவா?

**7. சிறிய கப்பல்கள்** (Little boats)

சிறிய கப்பல்கள் எனப்படுவது படகு போன்ற அமைப்பு உள்ளவையாகும். மூஸாவிற்கும் (Muza), நபோடியர்களின் தலைநகரமான பேத்ராவுக்கும் (Petra) இடையே இப் படகுகள் பண்டமாற்றுப் பொருள்களை ஏற்றிச் சென்றன. போகும் வழி முழுவதும் சிறு சிறு தீவுகள் சிதறிக் கிடப்பதால், பெரிய கப்பல்கள் போக வசதி இல்லை பெரிய கப்பல்கள் மோசைலம் (Mosylum) முதல் எகிப்து (Egypt) வரை—அலெக்சாந்திரியா வழியாகப்—பண்டங்களை ஏற்றிச் சென்றன. இப் பெரிய கப்பல்கள் பெருங்கடல் வழியே சென்றன.

**8. செஞ்சூரியன்** (Centurion)

செஞ்சூரியன் என்ற சொல் நூறு போர் வீரர்களுக்கு ஏற்பட்ட ரோமப் போர்த்தலைவன் என்று பொருள்படும். சுங்கவரி வசூலிக்க, இராணுவம் அமைந்த படைப்பலம் அமர்த்தப்பட்டிருந்ததால், அங்கு அடிக்கடி சண்டை சச்சரவுகள் ஏற்பட்டன என்றும், கலகங்கள் உண்டாயின என்றும் யூகிக்க இடமுண்டு. அந்த ரோமநாட்டுப் போர் வீரத்தலைவனே சுங்கவரி வசூலிக்கும் அதிகாரத்தைப் பெற்றிருந்தான். அத்தகைய சுங்கவரி பண்டங்களின் விலைப் பெறுமானத்தில் நான்கில் ஒரு பகுதி என்று வேறோர் இடத்தில் கூறப்பட்டுள்ளது.

**9. ஆயுதம் தாங்கிய படை** (Armed Men)

இக் காலத்திலும் சுங்கவரி வசூலிக்கும் இடங்களில் காவல்காரர்கள் (Police) இருக்கின்றனர்.

# 20. அரேபியா

மேலே கூறப்பட்ட இடத்துக்கு நேர்கீழாகப் பரந்திருக்கும் அரேபியா நாடு,[1] தன் நீளப்பகுதியில் எரித்திரியன் கடல்[2] நெடுந் தொலைவு வரைப் பரவியுள்ளது. பல வகைக் குடிமக்கள் இந் நாட்டில் வசித்துவருகின்றனர். அவர்கள் பேசும் பேச்சு ஒன்றுக்கு மற்றொன்று மாறியும், தொடர்பற்றும் காணப்படுகிறது.[3] இங்கும் அங்கும் குகைகள் காணப்படுகின்றன. அக் குகைகளில் மீன்தின்னிகள்[4] வசித்துவருகின்றனர். ஆனால், நாட்டின் உள் பகுதியில் கொலை செய்வதற்குச் சிறிதும் அஞ்சாத கொடுமை வாய்ந்த மக்கள்[5] வாழ்ந்துவருகின்றனர். அம் மக்கள் இருவித மொழிகளைப் பேசிவருகின்றனர். அம் மக்கள் கிராமங்களிலும், நாடோடிக் கூட்டங்களாகவும் வாழ்ந்துவருகின்றனர். எதிர்க்கரையில் கப்பல் உடைபட்டுத் தத்தளிக்கும் மக்களை அடிமைகளாக்கி அங்கிருந்து கடத்திச் சென்றுவிடுகின்றனர். இதன் காரணமாக இவர்களை அரசாங்கம் விட்டு விடுவதில்லை. சமயம் வாய்த்தபோது அராபிய மன்னர்களாலும்,

நாட்டுத் தலைவர்களாலும் அவர்கள் சிறைபிடிக்கப்படு கின்றனர். அவ்வாறு சிறைபிடிக்கப்படுபவர்கள் காரனைட்டுகள்[6] என வழங்கப்படுகின்றனர். இந் நாட்டின் கடற்கரையோரம் கப்பல்செலுத்துவது மிகவும் இன்னல் வாய்ந்ததே. கப்பல் தங்குவதற்கேற்ற துறைமுகம் வெகு தொலைவுக்கு ஒன்றாக இருக்கின்றது. ஏதாகிலும் ஒதுக் கிடங்கள் இருப்பின், உள் நுழைய முடியாதவாறு செங்குத்தான பாறைகள் தடுத்து நிற்கும். ஒவ்வொரு பாறையும் பயங்கரமான தோற்றமளிக்கும். இதன் காரணமாக, நாங்கள் வளைகுடாவின் நடுப்பகுதியிலேயே வழியை அமைத்துக்கொண்டு, கப்பலைச் செலுத்திக் கொண்டு சென்றோம். மற்றும், அவ் வளைகுடாவை எத்துணை வேகத்துடன் கடக்கவேண்டுமோ, அத்துணை வேகத்துடன் சென்று, பர்ன்ட் தீவு[7] என்று வழங்கப் படும் தீவினை அடைந்தோம். இத் தீவுவரை வழி முழு வதும் பயங்கரமாகத்தான் இருக்கும். ஆனால் இதற் கடுத்துள்ள நாடுகளும், நகரங்களும், நற்குணம் வாய்ந்த அரசர்களால் ஆளப்பட்டுவருகின்றன.[8] அந் நாடுகளின் தொடக்கத்தில் ஆடு மேய்ப்பவர்களும், ஒட்டகம் வளர்ப் போர்களும் வாழ்ந்துவருகின்றனர்.

## விளக்கவுரை

### 1. அரேபியா நாடு (Arabia)

இங்கு அரேபியா நாடு முழுவதுமே குறிக்கப்படுகிறது. மற்ற இடங்களில், யெமென் (Yemen), ஹோமரைட் (Homerite), சாபேயம் (Sabirite)முதலான அந் நாட்டின் அரசாங்கங்கள் தனித் தனியாகக் குறிப்பிடப்படுகின்றன.

### 2. எரித்திரியன் கடல் (Erythrean Sea)

எரித்திரிய மன்னனால் ஆளப்பட்டதன் காரணமாக எரித்திரி யன் கடல் என்று முன்னர் வழங்கப்பட்டது. எரித்திரியா என்ற சொல்லுக்குச் சிவப்பு என்று பொருள் உண்டு. ஆக, எரித்திரி யன் கடல் பின்னர் செங்கடல் (Red Sea) என்று வழங்கப்படுவ தாயிற்று. பிளினி (கி.பி.23-79) இக் கடலை எரித்திரியன் கடல் என்றே குறிப்பிட்டுள்ளார். (பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 24)

பக்கங்கள்69,79). எரித்திரியன் மேர்(Erythrean Mare) என்பது எரித்திரியன் கடல் என்று வழக்கத்தில் வந்து விட்டது. மேர் (Mare) என்றால் கடல் என்று அக் காலத்தில் கொண்டபொருள் ஆகும். மற்றும் அதிகாரம் 1, குறிப்பு 1 பார்க்கவும்.

**3. பேச்சுத் தொடர்பற்றுக் காணப்படுகிறது**(Languages unconnected with each other)

அரேபியாவின் (Arabia) வடக்கில் உள்ள நாடோடிகள் அராமிக் (Aramic) என்ற மொழியைப் பேசிவந்தனர். கடற் கரையோரமாக வாழ்ந்து வந்த காரனேட்டுகள் (Coranites) என் போர் பலவகை திசைச்சொற்கள் கலந்த கலப்பு மொழியாகிய இஷ்மலேட் (Ishmalite) என்ற மொழியைப் பேசி வந்தனர். இவ் விரு பழைய மொழிகளான அராமிக்கும், இஷ்மலேட்டும் கலந்து உருவான புதிய மொழியே அரபு மொழியாகும் (Arabic) என்று வரலாற்றாசிரியர்கள் கூறுகின்றனர். மற்றும், வாணிகம் நடை பெறும் கடற்கரைத் துறைமுகங்களில் மினியர் (Mineans) எனப் படும் மக்கள் கலப்பற்ற தூய மொழியைப் பேசிவந்தனர். இம் மொழி ஹாட்ராமிடிக் (Hadramitic) என வழங்கப்பட்டது. இம் மொழி ஹைட்ரமௌத் (Hydramaut) எனப்படும் பகுதியில் மிகுதியாகப் பேசப்பட்டு வந்தது. மற்றும், யெமென் (Yemen) பகுதியை அடைந்தால் அங்குப் பேசப்பட்ட மொழி ஹிம்யாரிடிக் (Himyaritic) என்று வழங்கப்பட்டது. அம் மொழி பேசும் மக்கள் ஹோமரைட்டுகள் (Homerites) என்று வழங்கப்பட்டனர்.

ஆக, இவ்வளவு மொழிகள் பேசும் மக்களும் வாணிகச் சந்தை கூடுமிடங்களில் சேர்ந்தால், அது கலப்பு மொழியாகத்தான் தோற்றமளிக்கும். அதன் காரணமாகத்தான், ஒன்றுக்கு மற் றொன்று தொடர்பற்றுக் காணப்படுகிறது என்று கூறுகிறார் பெரிப்ளூஸ் ஆசிரியர்.

**4. மீன் தின்னிகள்** (Icthyophogis)

இவர்கள் முதன் முதல் இக்தியோபோகி (Icthyophogi) என்ற பெயரால் வழங்கப்பட்டனர். இவர்களின் மறுபெயர் டிரோக் லோடைடே(Troglodytae),அரேபிய வளைகுடா(Arabian Gulf)வுக்கு மேற்குப்பகுதியில் வாழும் ஈதியோப்பியர்களின்—குகைவாழ் மக் களின்-பெயரே டிரோக்லோடைடே ஆகும். பிளினியும் இப் பெய ராலேயே குறிப்பிட்டுள்ளார்.(**பிளினி:** புத்தகம் VI, அதிகாரம் 25 குறிப்பு-66, பக்கம் 105)

மற்றும் அதிகாரம் 2, குறிப்பு 3, பார்க்கவும்.

5. **கொடுமை வாய்ந்த மக்கள்** (Cruel people)

வடமேற்கு அரேபியாவில் வசித்து வந்த கொள்ளைக்காரர்கள் பெடுயின் கொள்ளைக்காரர்கள் (Beduin robbers) என்று வழங்கப் பட்டனர் அவ்விடத்தில் ஆண்டுமுழுவதும் பஞ்சமும் பட்னிடியும் தாண்டவமாடியதால், அங்குள்ள மக்கள் கொள்ளைக்காரர்களாக மாறிவிட்டனர். கத்தி, ஈட்டி முதலியவை கொண்டு மிரட்டியும், பணியாத பொழுது கொலைசெய்தும், அங்குக் கடற்கரை யோர மாகப் போகும் கப்பல் பயணிகளைத் துன்புறுத்தியும், கப்பலில் உள்ள பொருள்களைக் களவாடியும் தங்கள் வாழ்க்கையை அமைத்துக் கொண்டனர்.

இவ்வாறு வாள் முனைகாட்டிக் கொள்ளையடித்தல் பைபிளில் (Bible) குறிப்பிடப்பட்டுள்ளது.

''ஓர் ஆள் அவனிடத்தில் வந்து, எருதுகள் உழுகிறபோது கழுதைகள் அவற்றின் பக்கத்தில் மேய்ந்து கொண்டிருக்கையில், சபேயர் அவர்கள் மீது விழுந்து, அவற்றைச் சாய்த்துக்கொண்டு போனார்கள்; வேலையாட்களையும் பட்டயக்கருவியினால் வெட்டிப் போட்டார்கள். நான் ஒருவன் மட்டும் தப்பி, அதை உமக்கு அறி விக்கும்படி வந்தேன்.''

—(Job) யோபு-I–[14-15]

மற்றும் ஓரிடத்தில் கூறப்பட்டுள்ளது:

''பின்னும் கர்த்தருடைய தூதனானவர் அவளை நோக்கி, ''நீ கர்ப்பவதியாயிருக்கிறாய்; ஒருகுமாரனைப் பெறுவாய்;கர்த்தர் உன் அங்கலாய்ப்பைக் கேட்டபடியால், அவனுக்கு இஸ்மவேல் என்று பெயரிடுவாயாக!

அவன் துஷ்ட மகனாயிருப்பான்; அவனுடைய கை எல்லோ ருக்கும் விரோதமாகவும், எல்லோருடைய கைகளும் அவனுக்கு விரோதமாகவும் இருக்கும். தன் சகோதரர் எல்லோருக்கும் எதி ராக நடந்துகொள்வான்.''

—[**ஆதியாகமம்:** (Genesis)- 16 (11-12)]

6. **காரனைட்டுகள்** (Coranites)

அரேபியாவின் மேற்குக் கடற்கரையோரமாக வாழ்ந்து வந்த வர் காரனைட்டுகள் (Coranites) எனப்பட்டனர். கார்னு என்பது மினியன்ஸ் (Mineans) எனப்படும் பண்டை அரசாங்கத்தின் வடக்குப் பகுதியாகும். இவ் வடக்குப் பகுதியின் அரசர்க்கு, அதன் அருகில் இருந்த பெடுயின் (Beduin) குடிமக்கள் கீழ்ப் படிந்து நடந்து கொண்டனர். பிளினியும் (கி.பி. 23-79), தாலமீ

யும் (Ptolemy) (கி.பி. 119-161)இக் கார்ணுவையும், இதன் மக்களே யும் மிகவும் பழமைவாய்ந்த மக்கள் என்று போற்றுகின்றனர். மற்றும், அவர்கள் வாணிபத்துறையில் புகழ் பெற்றிருந்தனர் என்றும் வரைந்துள்ளனர்.

(பிளினி—புத்தகம் VI-அதிகாரம்-32)

ஸ்டிராபோ (Strabo) (கி.மு. 64—கி.பி. 24) எனும் வரலாற் ருசிரியர் கூறுகிருர்: "மினியே (Mineai) என்ற நாடு செங்கடல் (Red Sea) பக்கமாக உள்ள நாட்டின் ஒரு பகுதி. அதன் பெரிய நகரம் கார்ணு (Carna). அவர்களையடுத்து, சாபேயர்கள் (Sabaeans) வாழ்ந்து வருகின்றனர். அவர்களுடைய தலைநகரம் மேரியாபா (Mariaba) ஆகும். ஆனல், மினியன் நகரம் தன் பொலிவை என்றே இழந்துவிட்டது; இன்று அது உருமாறி நிற் கிறது. இதைச் சாபேயர்கள் (Sabaeans) வென்று, தம்நாட்டுடன் சேர்த்துக் கொண்டுவிட்டனர்."

**7. பர்ண்ட் தீவு** (Burnt Island)

இது நவீன ஜெபல்ஜெட் (Jebelzet) என்பதைக் குறிப்பிடுவ தாகக் கூறுகின்றனர். சினயிலிருந்து (Senai) பெரெனிஸ்(Berenice) வரைக்கும் உள்ள வழியில் காணப்படும் எரிமலைத் தீவாகும். இவ் வெரிமலை என்றே அணைந்து விட்டது. எரிமலைத் தீவினைப் பர்ண்ட் ஐலண்டு (Burnt Island) என்று வழங்கிஞர்போலும். பர்ண்ட் (Burnt) என்பதற்குச் சுடப்பட்ட, கொளுத்தப்பட்ட என்ற பொருள் உண்டு. ஜெபல் ஜெட்டின்இருப்பிடம்: 34°·0'வ × 29°·0'கி. இது சிரியாவின் பாலைவனத்துக்குத் (Syrian Desert) தெற்கே உள்ளது.

**8. நற்குணம் வாய்ந்த அரசர்களால் ஆளப்பட்டு வருகின்றன** (Ruled by good and noble kings)

அரேபியா நாட்டின் வடபகுதியினர் மாபாரிடிக் (Mapharitic) என்றும்,தென்கிழக்குப் பகுதியினர் ஹோமரைட்டுகள்(Homarites) என்றும் வழங்கப்பட்டனர். இந் நாட்டு மக்களின் அரசர்கள் தங்கள் நாடுகளில் விளையும் பொருள்களுக்குத் தாங்களே வரி செலுத்தி வாழ்கின்றனர். நியாயமாகவும், மக்களைத் துன்புறுத் தாமலும், அரசாட்சி செய்து வந்தனர். அதன் காரணமாகத் தான் 'நற்குணம் வாய்ந்த அரசர்கள்' என்று பெரிப்ளூஸ் ஆசிரியர் விதந்தோதுகின்ருர். யெமன் பகுதியில் (Yemen) வாழ்ந்த மக்கள் பெயர் ஹோமரைட்; அவர்கள் பேசிய மொழி ஹிம்யாரிடிக். மேலே குறிப்பு—3 பார்க்கவும்.

# 21. மூஸா

இவ்விடங்களுக்கும் அப்பால், இங்குள்ள வளை குடாவிற்கு இடது பக்கத்துக்குக் கீழ்ப் பகுதியில் ஒரு விரிகுடா[1] உள்ளது. அதில் கடற்கரைக்கு அருகில் மூஸா[2] என்ெறாரு வாணிகச் சந்தைகூடும் நகரம் உள்ளது அச் சந்தை கூடும் நகரம் அராபியர்களின் அதிகாரத்திற்கு உட்பட்டுள்ளது. மற்றும் அது, பெரெனிஸ்[3] துறை முகத்திலிருந்து தெற்கு நோக்கிச்செல்வோருக்கு 12,000 ஸ்டேடியா[4] தொலைவு உள்ளதாகக் காணப்படுகிறது. அந்த இடம் முழுவதும் அராபியக் கப்பல் சொந்தக் காரர்கள் நிரம்பியுள்ளனர். அவ்வராபியர்கள் கடலில் கப்பல் செலுத்துவதில் வல்லுநராயும், வாணிக விஷயங்களில் மிகவும் துடிதுடிப்பாகவும், சுறுசுறுப்பாகவும், கண்ணுங் கருத்துமாயும் உள்ளனர். இதற்குக் காரணம், அவர்கள் வெகு தொலைவில் உள்ள துறைமுகங்களோடும் பாரிகாஸா[5] என்ற துறைமுகத்தோடும் தங்கள் வாணிகத்தைச் செவ்வனே நடத்திவருகின்றனர். அவ்விடங்களுக்குத் தத்தம் சொந்தக்கப்பல்களையே செலுத்தி வாணிகம் நடத்துகின்றனர்.[6]

## விளக்கவுரை

**1. விரிகுடா** (Bay)

இது இப்பொழுது பேபல் மான்டெப் (Babel mandef) என்று வழங்கப்படுகிறது. மற்றும் ஏடென் வளைகுடா (Gulf of Aden) என்றும் வழங்கப்படுகிறது இதன் கடற்கரையில்தான் அடுத்துக் கூறப்படும் மோசா (Mocha) துறைமுகம் உள்ளது.

**2. மூஸா** (Muza)

இது நவீன மோசா (Mocha) துறைமுகத்தைக் குறிப்பிடுகிறது. இந்த பெரிப்ளூஸால் குறிப்பிடப்பட்ட இந்த இடத்தைப் பிளினியும் (கி. பி. 23-79), தாலமியும் (கி.பி. 119-161), கடற்கரைத் துறைமுகமாக வர்ணிக்காமல், சிறிது உள்ளடங்கிய வாணிகச் சந்தை கூடும் நகரமாகவே வருணித்துள்ளனர். இப்பொழுது அங்கு மௌஸா (Mausa) என்ற ஒரு கிராமம் உள்ளது. அதையே

அவர்கள் குறிப்பிட்டனர் போலும். கடற்கரைத்துறைமுகம் மோசா ஏற்பட்டபிறகு, அக் கிராமத்தின் மதிப்புக் குறைந்து விட்டது போலும் (**பிளினி**: புத்தகம் VI, அதிகாரம் 26, குறிப்பு-75, பக்கங்கள் 114, 128)

மோசாவின் இருப்பிடம்: 13°·20'வ×43°·12'கி.

**3. பெரெனிஸ்** (Berenice)

இத் துறைமுகம் தாலமி பிலடெல்பஸ் என்பவர் தாயாரின் பெயரால் நிர்மாணிக்கப்பட்டது. பெரெனிஸின் இருப்பிடம்: 23°·55'வ×35°·34'கி. இதுராஸ்-பினஸ்(Ras-benas)துறைமுகத்துக்கு அருகில் இருந்தது. இன்றைக்கு அங்கே பழைய அழிபாடுகள் காணப்படுகின்றன. மற்றும் அதிகாரம் 1, குறிப்பு - 6பார்க்கவும், இன்றைக்கு உள்ள பெரெனிஸே பழைய இடமாகக் கருதப்படுகிறது.

பிளினி கூறுகிறார்: "இவ்விடம் புதிய ஹைட்ருமாவிலிருந்து 7மைல் தொலைவில் (11கிமீ.) உள்ளது.அவ்விடத்தை விட்டகன்றால் நாம் பெரெனிஸ்எனப்படும் இடத்துக்குவருவோம்.அவ்விடம் எரித்திரியன கடற்கரையிலுள்ள ஒரு துறைமுகத்துக்கருகே உள்ள இடமாகும். மற்றும், அது கோப்டாஸிலிருந்து (Coptos) 257 மைல்கள் (411கிமீ)தொலைவு உள்ளதாகும்.இத்தொலைவின் பெரும்பகுதி இரவில் பயணம் செய்தே கடக்கப்படுகிறது.அதற்குக் காரணம் அங்குக் காணப்படும் கடுமையான வெயிலே ஆகும். பகல்பொழுது முழுவதும் நகரங்களிலும் விடுதிகளிலும் கழிக்கப்பட்டுவிடுகின்றன. இவ்விடையூறு காரணமாக, கோப்டாவிலிருந்து, பெரெனிஸுக்குப் பயணம் செய்துமுடிக்கக் குறைந்தது 12நாள்களாவதுஆகும்." —(**பிளினி**: புத்தகம் VI, அதிகாரம் 26, பக்கம்114,25 குறிப்புக்கள் 62, 69; பக்கம் 125)

**4. 12 000 ஸ்டேடியா** (12000 Stadia)

ஒரு ஸ்டேடியம் (Stadium) என்பது ஒரு பர்லாங் அளவைக் குறிப்பிடும். இங்குக் குறிப்பிடும் தொலைவு 1500 மைல்கள் (2400 கி.மீ.) ஆகும். இத் தொலைவு பெரெனிஸ் துறைமுகத்திலிருந்து பாரிகாஸாவிற்குக் (Barygaza) கூறப்பட்டதொலைவாகும். பாரிகாஸா இந்தியாவின் அராபியன் கடற்கரையில், இன்று வழங்கப்படும் (Broach) என்னும் இடத்தில் இருந்தது. பாரிகாஸா (பிருகு-கச்சா) என்பதே புரோச் என்னும் பெயராக மாறிவிட்டது, மற்றும் அதிகாரம் 1, குறிப்பு–5 பார்க்கவும்.

**5. பாரிகாஸா** (Barygaza)

இது முன்னர் பிருகு-கச்சா என்று வழங்கப்பட்டது அதாவது பிருகு மகரிஷியால் உண்டாக்கப்பட்ட தாழ்நிலம்அல்லது வடிநிலம் என்பது அதற்குப் பொருள். பிருகு-கச்சாவே, பாரிகாஸா ஆகி, அப் பாரிகாஸாவே இன்று புரோச் (Broch) என்று வழங்கப்படுகிறது. புரோச்சின் இருப்பிடம் 27°·43'வ × 73°·2கி.

**6. சொந்தக் கப்பல்களையே செலுத்தி வாணிகம்** (Marketing articles in their own ships)

அராபியர்கள் (Arabians) கடல் வாணிபத்தை அன்று நடத்தி வந்தனர். கிரேக்க நாட்டுக்கும் ஆப்ரிக்க நாட்டுக்கும், இந்தியாவுக்கும் அவர்களே கப்பலோட்டிச் சென்றனர். அவர்கள் நாட்டின் கடற்கரையிலிருந்த மூஸா (Musa), ஓசெலிஸ் (Ocelis) முதலிய துறை முகங்களில் வாசனைப் பண்டங்கள் பெரும் அளவில் இறக்குமதி செய்யப்பட்டு, அங்கிருந்து ரோம், எகிப்து முதலிய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. ஆப்பிரிக்காவிலும், ரோமிலும் அராபிய வணிகப் பெருமக்களே நிறைந்திருந்தனர். மற்ற நாட்டினர் அங்குப் போவதாயிருந்தால், அந்தந்த நாட்டுக்குப் போகின்றவர், நிறைய வெகுமதிகளை அந்தந்த நாட்டின் அரசர்களுக்குக் கொடுக்கவேண்டும். அப்பொழுதுதான் அவர்கள் வரவேற்கப் படுவார்கள். அதன் காரணமாக, அராபியர்கள் தம் சொந்தக் கப்பலில் பெரும் அளவில் வாணிகம் நடத்தினர்.

---

# 22. மபாரிடே

இத் துறைமுகத்தினின்று, உட் பகுதியில் மூன்று நாள்கள் பயண அளவுத் தொலைவில், ஸௌவா[1] எனப் பெயருள்ள ஒரு நகரம் உள்ளது. அது மபாரிடே[2]என்ற நாட்டினர் வாழும் பகுதியின் நடுவில் உள்ளது. அங்குக் கோலேபஸ்[3] எனும் பெயர் கொண்ட நாட்டாண்மைக்காரன் வாழ்ந்துவருகின்றான். அவன் அந் நகரில் தனக்கு ஓர் இருப்பிடம் அமைத்துக்கொண்டு வாழ்கின்றான்.

விளக்கவுரை

**1. ஸௌவா** (Sauva)

இது கடற்கரையை விட்டு உள்ளடங்கி இருந்தது. இது நவீன ஸா-ஆப் (Sa-Ab) என்று அழிபாடுகள் துணைகொண்டு கண்டு

பிடிக்கப்பட்டுள்ளது. இதன் இருப்பிடம்: 13°·0'வ×44°·0'கி. மற்றும் இது ஸாவா (Sawa) நகரத்தைக் குறிப்பிடக்கூடும் என்றும் கூறப்படுகிறது. ஸௌவாவின் இருப்பிடம்: 15°·36'வ×48°·27'கி.

2. மபாரிடே (Mapharitis)

மபாரிடே (Mapharitis), மாபர் (Maffar) ஆகிய இரு இனத்தவர்களும் ஹிம்யாரிடிக் (Himyaritic) வகுப்பினைச் சார்ந்தவர்கள். முன்னர் அவர்கள் ஹோமரைட்டுகள் (Homorites)என்ற பெயரால் வழங்கப்பட்டனர். ஸௌவா எனும் நகரத்தின் தலைவன்-நாட்டாண்மைக்காரன்-தன்நாட்டு அரசனாகிய கேரிபல் (Charibal) என்பவனின் அதிகாரங்களைவிட அதிக சலுகைகள் பெற்றிருக்க வேண்டும். யெமன் (Yemen) பகுதியைச் சார்ந்த மக்கள் ஹிம்யாரிடிக் எனப்பட்டனர். யெமன் என்பது அரேபியாவின் தென்மேற்குப் பகுதியாகும். இந்தப் பகுதியில்தான் மோசா (Mocha) துறைமுகம் உள்ளது. யெமனின் இருப்பிடம்: 16°·02'வ×45°·0'கி. மற்றும் இவர்களைப் பற்றிய குறிப்புகளை அறிய, அதிகாரம் 20, குறிப்பு-3 பார்க்கவும்.

3. கோலேபஸ் (Cholaebus)

இது அராபியச்சொல்லான குவலாப்(Kualab) என்றதன் திரிபே. அராபியர்களின் சொற்கள் கிரேக்க,ரோமநாட்டு மக்களின் நாவில் புகுந்து, அவை வெளிவரும் பொழுது புதிய உருவங்கள் தாங்கி நிற்கும் என்பதற்கு இது ஓர் எடுத்துக்காட்டு. இச் சொல்லே இப்பொழுது காலிப் (Kaliff) என்று வழங்கப்படுகிறது. காலிபா (Kaliffa) என்ற சொல்லுக்குப் பின்தொடர்ந்து ஆட்சி நடத்துபவர்கள் என்ற பொருள் உண்டு. காலிப் (Kliff) என்ற சொல் மதுமது நபிக்குப் பின்னர் (கி.பி. 633) மக்களை நடத்திச் சென்றோரைக் குறிப்பிடும் சொல்லாகப் பயன்பட்டுவந்தது. இக் காலிப் என்ற சொல் ஆதிச்சொல்லான குவலாப் என்ற சொல்லின் மரூஉவே.

கோலேபஸ் என்ற பெயர் பூண்ட நாட்டாண்மைக்காரன் அந் நகரில் தன் இருப்பிடத்தைக்கொண்டுள்ளான் என்று கூறுவதால், அவனுடைய இடம் முக்கியத்துறைமுகமான மோசா(Mocha)வுக்கு அருகிலேயே இருந்திருக்கவேண்டும்.

மோசாவுக்கு அருகில் ஷுஅப் (Shu-ab)என்ற இடம் இன்னும் காணப்படுகிறது. இதுவே ஸௌவா (Sauva) வாக இருக்கக்கூடும் என நம்பப்படுகிறது. காரணம், துறைமுகம் அரசன் இருப்பிடத்

துக்கு வெகு தொலைவில் இருந்தால், பண்டங்கள் களவாடப்படும்; சுங்க வரிகள் சரிவர வாராமல் போய்விடும்.

## 23. சாபார்

இதன்பிறகு ஒன்பது நாள்கள் கப்பலில் பயணம் செய்தால் சாபார்[1] என்ற நகரமும், தலைநகரமும் காணப்படும். அத் தலை நகரில் கரிபெல்[2] என்ற பெயர் கொண்ட அரசன் ஒருவன் ஆண்டுவந்தான். ஹோமரைட்டுகள்[3] இனத்தவருக்கும், அவர்களுக்கு அடுத்தாற் போன்று வசிக்கும் சேபையிட்டுகள்[4] இனத்தவருக்கும் அவ்வரசன் அதிகாரப் பூர்வமாகத் தெரிந்தெடுக்கப் பட்டவன் ஆவான். மற்றும், தொடர்ந்து அனுப்பப்படும் அயல் நாட்டுத் தூதுவர்கள்மூலமாக பலவகைப் பரிசில்கள் கொணர்ந்து தரப்படுவதன் காரணமாக, அவ் அரசன் பேரரசர்களின்[5] நன்மதிப்பைப் பெற்ற நண்பனாகவும் விளங்கிவந்தான்.

### விளக்கவுரை

**1. சாபார்** (Saphar)

இது இப்பொழுது ஜே. சாபார் (J. Sabor) என்று வழங்கப் படுகிறது. மோசா (Mocha) துறைமுகத்திலிருந்து வட கிழக்காக 100 மைல் தொலைவில் (160 கி.மீ.) உள்ளது. இதன் தென்கிழக்குக் கோடியில் வட்டவடிவமான குன்று ஒன்று உள்ளது. அங்கே சாபாரின் அழிபாடுகள் காணப்படுகின்றன. சாபார் எனும் நகரம் ஹோமரைட்டுகளின் (Homorites) தலை நகரமாயிருந்தது. அவர்கள் மாரிப் (Marib) என்பவநுக்குப் பின்வந்த சந்ததியார்கள் ஆவர். மாரிப் என்பவர்கள் சாபியன் திம்ணு (Sabian Timna) என்று வழங்கப்படும் ஜெபர்னைட்டுகளின் நாட்டைச் சேர்ந்தவரும், மினியன் (Minean) நாட்டின் வட பகுதியான கார்ணு (Carna) நாட்டைச்சேர்ந்தவரும் ஆவர்.

சாபாரின் இருப்பிடம்: 14°·10'வ × 44°·12'கி.

**2. கரிபெல்** (Charibeal)

இது அராபியச் சொல்லான காரிபெல் (Karibail) என்பதன் உச்சரிப்பேபாகும். இதன் பொருள்: ''கடவுள் அவரை இரட்சித்

தார்; ஆசீர்வதித்தார்,'' என்பதே. கரிபெல் என்றபெயர்கொண்ட அரசர் ஒருவர் கி.பி. 40 முதல் 70 வரை ஆண்டுவந்ததாக வரலாறு கூறுகிறது,

**3. ஹோமரைட்டுகள்** (Homorites)

இவர்கள் தென் கிழக்கு அரேபிய நாட்டைச் சார்ந்தவர்கள். யெமன்(Yeman) பகுதியைச் சார்ந்தவர்கள்.யெமனின் இருப்பிடம்: 16°·0'வ×45°·0'கி. மற்றும், அதிகாரம் 2-குறிப்பு-3; அதிகாரம் 22, குறிப்பு-2 பார்க்கவும்.

**4. சாபேயிட்டுகள்** (Sabaeites)

இவர்கள் அரேபியாவில் இருந்த சாபா (Saba) பகுதியைச் சார்ந்தவர்கள். யெமன் (Yeman)நாட்டினர். முதலில் சாபேயிட்டுகளாக இருந்தவர்களே, பின்னர் ஹோமரைட்டுகளாக மாறிவிட்டனர். அதாவது சாபேயிட்டுகளின் சந்ததிகளே ஹோமரைட்டுகள் ஆவர் என்று கூறப்படுகிறது. மற்றும் அதிகாரம் 20, குறிப்பு-6 பார்க்கவும்.

**5. பேரரசர்களின் நண்பர்கள்** (Emperor's Friends)

பெரிப்ளூஸ் ஆசிரியர் காலத்தில் (கி.பி. 50-80) ரோமப் பேரரசை ஆண்டு வந்த மன்னர்கள்: கிளாடியஸ் (Claudius) (கி.பி. 41-54), நீரோ (Nero) (கி.பி. 54-68). கால்பா (Galba) (கி.பி. 68-69), வெஸ்பாசியன் (Vespasian) (கி.பி. 69-79),டைடஸ் (Titus) (கி.பி.79-81). ஆகையால் பேரரசர்கள் என்பது இவர்கள் இருவரையோ,மூவரையோ குறிப்பிடவேண்டும். அப் பேரரசர்கள் இந்தப் பொருள்களை விரும்பி விலைக்குப் பெற்றனர்.

சாபார் நாட்டுத் தலைவனுகக் கரிபெல் (Charibeaï) ரோமப்பேரரசுக்குத் தூதுவர்களையும், மிகச் சிறந்த இந்திய வாசனைப் பண்டங்களையும், முத்து பவளம் பொன் போன்றபொருள்களையும் பரிசாக அனுப்பி,அப் பேரரசர்களின் நன்மதிப்பைப் பெற்முன். அந் நாட்டுத் தலைவன் கரிபெல்மூலமாகவே, ரோமப் பேரரசர்கள் இந்தியப் பண்டங்களை விலைக்குப் பெற்றனர் என்று தெரிகிறது. ரோமப் பேரரசு சில காலம் வரை இந்தியாவுடன் நேரிடையான தொடர்பு வைத்துக்கொள்ளவில்லை எனவும் தெரியவருகிறது.

பிளினி (கி.பி. 23-79) கூறுகிமுர்:

"இவ் வரசர்ரோமாபுரிப் பேரரசருடன் தொடர்புகொள்ளவும் ரோம நாட்டு மக்களுடன் பழக விரும்பவும் தம் ஆவலைத் தெரிவித்தார். அதன் காரணமாக, நால்வர் அடங்கிய ஒரு தூதுக் குழுவை

அவர் ரோம் நகருக்கு அனுப்பிவைத்தார். அத் தூதுக் குழுவின் தலைவன் ராசியஸ் ஆவான்.''

—(பிளினி; புத்தகம் VI அதிகாரம் 24, குறிப்பு-28, பக்கம் 80)

இதனால் இத் தூதுக்குழுவினர் சென்று அறிமுகமான பிறகே—ஓர் அரை நூற்றாண்டுக்கும் பிறகே - ரோமப் பேரரசு இந்தியாவுடன் நேரடியான வாணிகத் தொடர்பு வைத்துக்கொள்ள முனைந்தது என்று அறியப்படுகிறது. அதுவரை அராபிய மக்கள் தலைவன் மூலமாகவே இந்தியப் பண்டங்கள் ரோம் நாட்டுக்கு விற்பனை செய்யப்பட்டன.

---

## 24. மூஸாவின் இறக்குமதிப் பொருள்கள்

மூஸா[1] எனப்படும் வாணிகச் சந்தை கூடும் நகரம், தனக்கான துறைமுகம் ஏதும் இல்லாமலே விளங்குகிறது. ஆனால், அவ்விடத்துக்குக் கால் நடையாகப் போகும் பாதை உள்ளது. மற்றும் நங்கூரம் பாய்ச்சத் தகுந்த கடற்பகுதிகளும் உள்ளன. ஏனெனில், மணற்பாங்கான அவ்விடங்கள், நங்கூரத்தை இறுகப் பற்றிக் கொள்ளும் தன்மை வாய்ந்தனவாயுள்ளன. மூஸாவில் இறக்குமதி செய்யப்படும் பொருள்களாவன: ஊதா நிறங் கொண்ட துணிகள்[2], அவற்றுள் மெல்லிய இழைகளாலாகிய உயர்ந்த ரகமும் சொர சொரப்பான மட்ட ரகமும்; கைகள் வரை நீண்டு தொங்கும் அராபிய மக்களின் நாகரிகத்தின்படி தைக்கப்பட்ட சட்டைகளும் ஆடைகளும்[3] (அவற்றுள் எவ்விதச் சித்திர வேலைப்பாடும் இல்லாத சாதாரண ஆடைகளும், சிறுவகையில் பூவினால் அழகு செய்யப்பட்டதும்[4], கரைகள் வேயப்பட்டதுமான ஆடைகளும், சில வகைகளில் பொன் சரிகைகளினால் வேலைப்பாடுகள் செய்யப்பட்டு, அழகுடன் மிளிரும் ஆடைகளும்); குங்குமப் பூவும்[5]; இனிப்பு வாய்ந்த கொப்பரை வகைகளும்[6], மஸ்லின் துணி

போன்ற மெல்லிய சல்லாத் துணிகள், மேலங்கிகள், போர்வைகள் (மிகக் குறைந்த அளவிலேயே சில அலங்காரம் ஏதுமின்றிச் சாதாரண வகையாகவும், மற்றும் சில உள்நாட்டு நாகரிகத்தையும் பண்பாட்டையும் ஒட்டி நெய்யப்பட்ட உயர்ந்தவகையாகவும்) முதலிய துணி வகைகளும்; பல்வகை நிறங்களில் தோய்த்தெடுக்கப்பட்ட மேகலைகள்; மிதமான அளவில் வாசனையூட்டிய கலவைகளும், பூச்சுகளும்[7]; மதுபானம், கோதுமை (இவை சிறிய அளவிலேயே) ஆகியவைகளும் இறக்குமதி செய்யப்பட்டன. ஏனெனில், இந் நாடு தானியங்களை; மிதமான அளவில் தானே உற்பத்தி செய்து கொள்கிறது. மதுபானம் பெரிய அளவிலேயே இவ்விடம் தயார் செய்யப்படுகிறது. மற்றும் குதிரைகளும், ஒட்டகங்களும், கோவேரிக் கழுதைகளும், பொன்னால் செய்யப்பட்ட பாத்திரங்களும்[8], பண்டங்களும், வெண்மை நிறம் பொருந்திய, தூய்மை செய்யப்பட்ட வெள்ளிப் பாத்திரங்களும், மிக்க அழகு பொருந்தியும், நெருக்கமாக நெய்யப்பட்டஉயர்ந்தவகைத் துணிகளும், பித்தளைப் பாத்திரங்களும், இந் நாட்டு அரசர்களுக்கும், அரசாங்கத் தலைவர்களுக்கும்-வெகுமதிகளாக-அன்பளிப்பாகக்—கொடுக்கப்பட்டுவந்தன. இவை யாவும்—அப்பண்டங்களும் பொருள்களும்—எந்தெந்த இடங்களில் உற்பததியாகின்றனவோ, அந்தந்த நாட்டிலிருந்தே ஏற்றுமதி செய்யப்பட்டு வந்தனவாகும்.[9] பொறுக்கியெடுக்கப்பட்ட மிக உயர்ந்த வெள்ளைப் போளமும்,[10] கெபனைட்டு-மினியன் நாட்டில்[11] உற்பத்தி செய்யப்படும் பொருள்களும்; பிசினும் சந்திரகாந்தக் கற்களும்,[12] மற்றும், முன்னர்க் கூறப்பட்ட பல்வகைப்பொருள்களும் அவலைட்டுக் கடற்கரைப் பட்டினங்களிலிருந்தும்,[13] அதற்கும் அப்பால் உள்ள கடற்கரைத் துறைமுகப் பட்டினங்களிலிருந்தும் இறக்குமதி செய்யப்படுகின்றன. செப்டெம்பர் அல்லது அதையொட்டிய கால அளவில் இத் துறைமுகத்துக்கு மேற்கொள்ளப்படும்

மூத்திரப்பை, கல்லீரல், ஈரல்கள் ஆகியவற்றில் உண்டாகும் இரணங்களுக்கும் இக் குங்குமப் பூ சிறந்த மருந்தாகப் பயன் படுகிறது''

—(**பிளினி:** புத்தகம் XXI—அதிகாரம் 81)

**6. கொப்பரை** (Sweet rush and dried cocoanut kernels)

இதைக் கோபிரோ (Copyros) என்று இலத்தீனில் வழங்கினர். கோபிரோ என்பது கிரேக்க மொழியில் வழங்கப்பட்ட சொல்; அது கொப்பரை என்பதன் திரிபே. அதுவே இலத்தீனிலும் புகுத்தப்பட்டது. கொப்பரை எனுஞ்சொல் கோப்ரா என்று அராபி மொழியிலும், உருது மொழியிலும் வழங்கப்பட்டது. வணிகப்பெருமக்கள் கோப்ரா என்பதைக் கிரேக்க, ரோம நாட்டுமக்களுக்கு வழங்கும்பொழுது, அச் சொல் கோபிரோ என்று எடுத்தாளப்பட்டது. கொப்பரை என்பது உலர்ந்த தேங்காய்க் கருக்கலைக் குறிப்பிடும்—அதாவது ஒரு வற்றிய தேங்காய் (Dried cocoanut kernel).

பிளினி கொப்பரையைப் பற்றிப் பின்வருமாறு கூறுகிறார்:

''கோபிராஸ் எகிப்து நாட்டிலிருக்கும் ஜூபிடர் அம்மான் (Jupiter Ammon) கோயிலின் அருகில் கிடைக்கபெறுகிறது. இதற்கு அடுத்த ரகமான கோபிராஸ் ரோட்ஸ் (Rhodes) பிரதேசத்திலிருந்து கிடைக்கிறது. இப் பொருள் தொண்டைப் புண்களுக்கும், வெளிப்புண்களுக்குப் பூச்சு மருந்தாகவும் பயன் படுகிறது. வயிற்றுப்புண்களுக்கும், இரணங்களுக்கும் பாலில் சேர்த்துக் கொடுக்கப்படுகிறது. இம் மரத்தின் அடிப்பாகம் பட்டைகளாகும். அவை கப்பல்கள் கட்டவும், மட்டைக் கயிறுகள் கப்பல்களை இணைக்கவும் பயன்படுகின்றன. இம் மரத்தின் அடிவேர் சமையல் செய்ய எரிகட்டைகளாகவும், இரும்பு, பித்தளை முதலிய உலோகங்களை உருக்கவும் பயன்படுகின்றது.''

(—**பிளினி:** புத்தகம் XII—அதிகாரம் 48, XXI—அதிகாரம் 72)

பிளினி தென்னை மரத்தின் பயன்முழுவதையும் கொடுத்துள்ளார். பெரிப்ளூஸ் அதன் காய்ந்த கொப்பரையின் பயனை மட்டும் கொடுத்துள்ளார். காரணம், பிளினி வரலாற்றாசிரியர்; அவர் வரலாற்றில் விளக்கம் சேர்க்க வேண்டி முழுப்பயனையும் கொடுத்தார். பெரிப்ளூஸ், வணிகப் பயணி. எது வாணிகத்துக்குப் பயன்படுகிறதோ, எது அயல்நாட்டுக்கு ஏற்றுமதி செய்யப் படுகிறதோ அதை மட்டும் வர்ணித்து, அதன் பயனைமட்டும் தந்துள்ளார்.

7. **கலவைகளும் வாசனைப் பூச்சுகளும்** (Mixtures and fragrant ointments)

வாசனையுள்ள எண்ணெய்ப் பசைகள் மேல்பூச்சாகப் பூசப் பட்டன-உடலின்மீதும், தலைமயிர்(கேசம்)க்கும். வாசனைப் பொருள்கள் அயல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன.

பிளினியும் (கி. பி. 23–79) இவ்வாறான வாசனை பொருந்திய எண்ணெய்ப் பசைகளைப் பற்றிக் கூறுகிறார்.

(**பிளினி:** புத்தகம் XIII—அதிகாரம் 2)

இவ்வகை மேல் பூச்சுகள் இக் காலத்தில் செண்டுகள் (scents) என்று வழங்கப்படுகின்றன.

8. **பொன்னால்செய்யப்பட்ட பாத்திரங்கள்** (Vessels made of Gold)

அக் காலத்திலிருந்தே இந்தியா பொன்கொழிக்கும் நாடாகக் கருதப்பட்டது. இந்தியாவில் கிடைத்த பொன் உயர்ந்த ரகமாகக் கருதப்பட்டது. இந்தியப் பொன்னை, ரோமப் பேரரசர்களும், மற்றும் கிரேக்க மக்களும் விரும்பிப் பெற்றனர். வெள்ளியும் அவ்வாறே விரும்பிப் பெறப்பட்டது. பொன் விளையும் பூமி என்ற காரணத்தால், தென்னிந்தியாவில் ஓடும் காவிரி ஆறு 'பொன்னி' எனப் பெயர்பெற்றது. பொன்னி நாடு என்பது சோழநாடு. பொன்விளைந்த களத்தூர், பொன் முகலி ஆறு, பொன்மலை (இமயமலையில் உள்ள மஹாமேரு), பொன்னகர் (அமராவதி நகர்) ஆகியவை பொன் தொடர்பு கொண்டு விளங்குகின்றன. பொன் மிக உயர்ந்த பொருளாக மதிக்கப்பட்டு ஏற்றுமதி செய்யப்பட்டது. பொன் கட்டிகளை ரோமப் பேரரசர்கள் பெற்று, அவற்றை நாணயங்களாக அடித்து அனுப்பினர்.

பிளினியும் பொன் விளைவை பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

—(**பிளினி:** புத்தகம் VI—அதிகாரம் 22, பக்கம் 3.)

9. **அந்தந்த நாட்டிலிருந்தே ஏற்றுமதி செய்யப்பட்டன** (Exported from their respective countries of origin)

அரசர்களுக்கும், பேரரசர்களுக்கும் கொடுக்கப்படும் அன்பளிப்புகள் மிகவும் உயர்ந்த வகையாக இருத்தல் வேண்டும் எனும் நோக்கத்துடன், ஒவ்வொரு பண்டமும் எந்தெந்த நாட்டில் உற்பத்தி செய்யப்பட்டதோ, அந்தந்த நாட்டிலிருந்தே பரிசோதித்தபிறகு ஏற்றுமதி செய்யப்பட்டன. இவற்றை

வைத்துக் கொண்டுதான் பேரரசுகள் விற்பனைக்குப் பொருள்களை வரவழைக்கும். அவ்வாறுவரவேற்கப்பட்ட இந்தியப்பொருள்கள்: முத்து, பொன், பருத்தி ஆடைகள், வாசனைப் பண்டங்கள், வெள்ளைப் போளம், இலவங்கம், மிளகு, மயில் இறகு முதலியன.

**10. வெள்ளைப் போளம்** (Bal samodendron myrrh)

இஃது ஒரு சிறிய மரத்தின் பட்டையிலிருந்து வடித்து எடுக்கப்பட்ட கோந்து போன்ற பிசின் வகையாகும். இது தெற்கு அரேபியாவிலும், ஓமன் நாட்டிலும் (Oman), ஆப்பிரிக்காவின் சோமாலிநாட்டுக் (Somali land) கடற்கரைப் பகுதிகளிலும், இந்தியாவின் மேற்குப் பகுதியாகிய மலையாள நாட்டிலும், இமய மலைப் பகுதியிலும் உற்பத்தி செய்யப்படுகிறது. பிளினி (கி.பி. 23-79) இவ் வெள்ளைப் போளத்தின் தயாரிப்பையும் அதன் வகைகளைப்பற்றியும் தம் குறிப்புகளில் கொடுத்துள்ளார்.

(பிளினி: புத்தகம் XII—அதிகாரம் 35)

இவ் வெள்ளைப் போளத்தில் பலவகைகள் உள்ளன:

முதல்வகை: டிரோக்லோடைடிக் (Troglodytic) எனப்படும்.

இரண்டாம் வகை: மினியன் நாட்டு (Minean) வகை.

மூன்றும் வகை: டையாரிடிக் (Diaritic) வகை.

நான்காம் வகை: கொலேஷியா (Collatia) வகை. இது கலப்பு இனத்தைச் சார்ந்தது.

ஐந்தாம் வகை: சாம்பிராசினியன் (Sambracenian) வகை. இது சாபேயம் (Sabaei) என்ற நாட்டிலிருந்து கொண்டுவரப்பட்டது. இது சாபா (Saba) என்றும் வழங்கப்பட்டது. அரேபியாவில் யெமன் (Yemen) பகுதியைச் சார்ந்தது.

ஆறுவது வகை: ஔசானிடிக் (Ausanitic) வகை. ஔசானிடிக் நாட்டிலிருந்து வந்தது. இந் நாடும் அரேபியா கடற்கரையோரமாகவே இருந்தது. இப்பொழுது அஜானியா (Azania) என்று வழங்கப்படுகிறது. மற்றும் அதிகாரம் 15, குறிப்பு—7 பார்க்கவும்.

மர் (Myrrh) என்ற சொல்லுக்கு அகராதியில் பின்வருமாறு பொருள் கொடுக்கப்பட்டுள்ளது:

"A bitter aromatic, transparent gum, exuded from the bark of commiphora or balsamodendron."

—(Chambers Twentieth Century Dictionary—page 600)

இது கிரேக்க மொழியிலும், இலத்தீனிலும் மர்ரா (Myrrha) என்று வழங்கப்பட்டது. இம் மொழிகளில் மர்ரா என்பதற்குக் கசப்பு (கைப்பு—Bitter) என்பதுபொருள்.

இந்தியாவில் இது போளம் (Bolam) என்று வட மொழிச் சொல்லாக வழங்கப்படுகிறது. இதுவே எகிப்திய மக்களிடம் புகுந்து போஹா(Bogha) என்ருகி, அதுவே கிரேக்க மொழியிலும், பாரசீக மொழியிலும் புகுந்து போளா (Bola) என்று வழங்கப் பட்டது. இப் போளம் என்ற சொல் எபிரேய மொழியில் (Hebrew) மர் (Myrrh) என்று வழங்கப்பட்டது.

இங்குக் குறிப்பிட்ட மர் (Myrrh) பைபிளில் (Bible) பல இடங் களில் குறிக்கப்படுகின்றது.

"And when they had opened their treasures, they presented unto him gifts; gold and frankincense and myrrh."

—(St. Matthew: 2—11)

இப் பொருள் போளம் என்றும், வெள்ளைப்போளம் என்றும் இந்தியாவில் வழங்கப்பட்டது. தென்னிந்தியாவில், மலையாளக் கடற்கரையில் இது பால்போளம் என்று வழங்கப்பட்டது—அதன் வெண்மைநிறம் காரணமாக. இதன் இயற்கை நிறம் மஞ்சள் (பசுமை). வெண்மை நிறத்துடன் கூடியது உயர்ந்த ரகமாகக் கருதப்பட்டது. இதில் கரிய நிறப் போளமும் (Aloes) உண்டு (அதிகாரம் 28, குறிப்பு-6 பார்க்கவும்). இப் பால்போளம் என்ற சொல்லே இலத்தீன் மொழியில் பால்சமோதேந்திரன் (Balsamodendron) என்று வழங்கப்பட்டது. 'பால்போளம்' என்ற சொல் பால்சம் என்றும், ஓடேந்திரம் (Odendron) என்பது வாசனை (Odour)யைக் குறிப்பிடுகிறது என்றும் பொருள் கொள்ளப்பட்டு, வாசனைபொருந்திய பால்போளம் என்பதே பால்சமோதேந்திரன் என்று வழங்கப்பட்டது என்று தெரியவருகிறது. இது மலையில் விளையும் ஒரு மரவகையும், அம் மரத்தின் பட்டையிலிருந்து வடித்தெடுக்கப்படும் பிசினும் ஆகும். இவ் வாசனைப் போளம், இறந்து போன அரசர்களின் உடலைப் பாதுகாக்க ஒரு மருந்துச் சரக்காக எகிப்தியர்களால் பயன்படுத்தப்பட்டது. இப் பிசினைப் பக்குவப்படுத்தி இறந்த அச்சடலத்தின் மீது பூசி, உடல் அழுகாத

வாறு பல நூற்றுண்டுகளுக்கு காப்பாற்றி வந்தனர். இவ்வாறு பதப்படுத்தப்பட்ட சடலம் மம்மி (Mummy)எனப் பெயர்பெறும். ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னரிருந்தே எகிப்தியரால் பயன்படுத்தப்பட்டு வந்தது. 'பால்சம்' என்ற சொல்லிலிருந்தும், போளம் என்பதிலிருந்துந்தான் ஆங்கிலச் சொல்லான எம்பாம் (Embalm) உருவாயிற்று. எம்பாம் (Embalm) என்பதற்கு, "வாசனைப் பண்டங்கள் கொண்டு இறந்த உடல்மீது பூசி உடலைப் பாதுகாத்தல்" என்று பொருள்.

இறந்த உடல்களை எகிப்தியர் எவ்வாறு கெடாமல் பாதுகாத்தனர் என்பது அதிகாரம் 49, குறிப்பு 24-ல் கொடுக்கப்பட்டுள்ளது.

ஆகையால், இத்தகைய பயனுள்ள பொருள்—இந்தியாவில் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்—அயல் நாடுகளுக்கும் எகிப்திய நாட்டுக்கும் ஏற்றுமதி செய்யப்பட்டது வியப்பல்லவே!

**11. கெபனைட்-மினியன் நாடு** (Gabannite Minean State)

கெபனைட்டு-மினியன் நாடு என்பது செங்கடலை ஒட்டிய பகுதியில் இருந்தது. அதன் தலைநகரம் கார்ண (Karna) ஆகும். இன்று அந் நகரம் அழிந்துவிட்டது. அதைப்பற்றி ஸ்டிராபோ (Strabo) (கி.மு. 64—கி.பி. 24) குறிப்பிட்டுள்ளார். மற்றும் இங்கு விளைந்த போளம் மிகவும் உயர்ந்த ரகமாகக் கருதப்பட்டது. மற்றும் அதிகாரம் 20, குறிப்பு-6 பார்க்கவும்.

**12. சந்திரகாந்தக் கற்கள்** (Alabaster stones)

இது ஆங்கிலத்தில் மூன் ஸ்டோன் (Moon stone) என்று வழங்கப்படுகிறது. சந்திரன் ஒளி படப்பட, இக் கல் நீரைப் பொழியும்—கசியும்—தன்மையுடையது. இக் கற்களால் செய்த பாண்டங்களில் வைத்த பண்டங்கள் எளிதில் கெடுவதில்லை என்று அக் கால மக்கள் கருத்துக்கொண்டிருந்தனர். உயர்ந்த விலையுள்ள பண்டங்களே அக் கல்லினுல் செய்த பெட்டிகளில் வைக்கப்பட்டன.

கிறித்தவ வேத நூலாகிய பைபிளில் (Bible) இக் கல் குறிப்பிட்டுள்ளது:

"There came unto him a woman having an alabaster box of very precious ointment, and poured it on his head, as he sat at meat."

—(St. Matthew: 26—27)

**13 அவலேட்டுக் கடற்கரைப் பட்டினங்கள்** (Towns on the shore of the Avalites)

இது நவீன ஜெய்லா (Zeila) வைக் குறிப்பிடுகிறது. பிரிட்டிஷ் சோமாலிலாந்தின் (British Somaliland) கடற்கரையில் உள்ளது. இருப்பிடம்: 11°·21'வ×43°·29'கி. மற்றும் அதிகாரம் 7, குறிப்பு-4 பார்க்கவும்.

**14. ரோமப் பஞ்சாங்கம்** (Roman Annals)

ரோமநாட்டின் நிகழ்ச்சிகள் யாவும்—நடந்தது—நடக்கப் போவது—யாவும் அரசர்முன் குறிப்புகளாக வைக்கப்பட்டன. இதுவே ரோமன் பஞ்சாங்கம் ஆகும். நம் நாட்டுப் பஞ்சாங்கம் போன்று அதில் ஆண்டு, மாதம், நாள், மழை, புயல், நோய் முதலிய யாவும் குறிப்பிடப்பட்டிருக்கும்.

**15. தோத்** (Thoth)

இது செப்டெம்பர் மாதத்தைக் குறிப்பிடும் இலத்தீன் மொழிச் சொல்லாகும். மற்றும் அதிகாரம் 6, குறிப்பு-23 பார்க்கவும்.

---

# 25. டையோடோரஸ் தீவு

இந்த இடத்திலிருந்து கப்பலூர்ந்து 300 ஸ்டேடியா[1] தொலைவு சென்றால், அரேபியா நாட்டின் கடற்கரையும்[2], அவலேட்டிஸ் வளைகுடா[3] உள்ள பெர் பெர் நாட்டின்[4] கடற்கரையும் காணப்படும். மேற் கூறப்பட்ட நாடுகளையொட்டி வந்தபொழுது, மிகப் பெரியதாக இல்லாத சிறு கடற்பகுதி ஒன்று குறுக்கிடும். அது பெருங்கடலை அப்பாற் படுத்தி நிறுத்தி வைப்பது போல் தோன்றும். மற்றும் இக் குறுகிய பகுதி ஒரு கடற்கால் போல மாறிவிடுகிறது. அக் கடற்காலின் நீளம் 60 ஸ்டேடியா ஆகும். அதை டையோடோரஸ் என்ற தீவு[5] பிரித்து வைக்கிறது. அதன் காரணமாக, அந்தக் கடற்காலின்[6] வழி முழுவதும் வேகமாகச் சுழன்று மோதும் அலை வீச்சுகள் காணப்படுகின்றன. மற்றும்,

அப் பகுதியில் காற்றும் சூறுவளி போன்று கடுமையாக வீசுகிறது. அக் காற்று அடுத்து நிற்கும் மலைகளிலிருந்து மோதியடிக்கப்பட்டு இங்கு வீசுகின்றது. இந்தக் கடற் காலின் முடிவில், கடற்கரைப் பகுதியில், அராபியர் களுக்குச் சொந்தமான கிராமம் ஒன்று உள்ளது. இக் கிராமத்தின் பெயர் ஒசெலிஸ்[7]. இந்த இடம் கப்பல் நங்கூரம் பாய்ச்ச மட்டும் பயன்படுத்தப்படுகி றது. ஓசெலிஸ் எனப்படும் இவ்விடம் வாணிகச் சந்தை கூடும் நகரமாக விளங்கவில்லை. ஆனால், இவ்விடம் கப்பல்களுக்குக் குடிநீர் வழங்குமிடமாகவும், அக் கடற் கால் வழியாக வரும் கப்பல்களுக்கு முதன்முதல் தங்கும் இடமாகவும் பயன்படுகிறது.[8]

**1. 300 ஸ்டேடியா** (300 Stadia)

ஒரு ஸ்டேடியம் (Stadium) என்பது ஒரு பர்லாங்குத் தொலைவு ஆகும். இங்குக் கூறப்பட்ட 300 ஸ்டேடியா என்பது 37·5 மைல்கள் (60 கி.மீ.) தொலைவைக் குறிப்பிடும்.

**2. அரேபியா நாட்டின் கடற்கரைப் பகுதி** (Arabian Seashore)

அரேபியாவின் கடற்கரையின் மேற்குப் பகுதியைக் குறிப் பிடுகிறது. இக் கடற்கரை எரித்திரியன் கடல் பகுதியைச் சார்ந்ததாகும். எரித்திரியன் கடல் (Erythrean Sea) இன்று செங்கடல் (Red Sea) என்று வழங்கப்படுகிறது.

**3. அவலைடிஸ் வளைகுடா** (Avalitis Gulf)

அவலைட்டிஸ் வளைகுடா (Gulf of Avalitis) என்பது, நவீன ஜெய்லா (Zeila) இருக்கும் இடத்தைக் குறிப்பிடுகிறது. பாபல் மான்டெப் கடற்காலுக்கு (Strait of Babel Mandef) மேற்கே 80 மைல்கள் (128 கிமீ) தொலைவில் உள்ளது.

ஜெய்லாவின் இருப்பிடம்: 11°·21'வ × 43°·29'கி. மற்றும் அதிகாரம் 7, குறிப்பு—1, 4 பார்க்கவும்.

**4. பெர்பெர் நாடு** (Berber Country)

பெர்பெர் என்பது இங்கு பெர்பெரா (Berbera) என்ற இடத்தைக் குறிப்பிடும். இதன் இருப்பிடம்: 10°.0'வ × 45°.0'கி.

இது சோமாலிலாந்துக் கடற்கரையில் உள்ளது. மற்றும் அதிகாரம் 2, குறிப்பு–2 பார்க்கவும்.

**5. டையோடோரஸ்** (Island of Diodorus)

அத்தீவு பாபல் மான்டெப் கடற்காலில் (Strait of Babel mandef) உள்ள பெரிம் தீவைக் (Perim Island) குறிப்பிடுவதாகக் கொள்ளப்படுகிறது. இங்கு சூறுவளியும், அலைவீச்சும் எப்பொழுதுமே அதிகம். இது அராபியன் கடற்கரையைச் சார்ந்தது. இக் கடற்கரையின் வடபகுதியில் ஓசெலிஸ் (Ocealis) என்ற இடம் இருந்தது.

பெரிம் தீவின் இருப்பிடம்: 12°·38'வ × 43°·20'கி.

ஆனால் டையோடோரஸ் தீவு, அடுலிஸ் துறைமுகத்துக்கு எதிரில் 3 மைல்கள் (6 கிமீ) தொலைவில் இருந்ததாக முன்னர் அதிகாரம் 4, குறிப்பு–4-ல் கொடுக்கப்பட்டுள்ளது. விவரத்துக்கு அதைப் பார்க்கவும்.

அடுலிஸ் இப்பொழுது மெஸாவா (Messawa) என்று வழங்கப்படுகிறது. இதன் அருகில் டையோடோரஸ் தீவு இருந்ததாகக் கூறப்படுகிறது.

டையோடோரஸ் தீவின் இருப்பிடம்: 15°·36'வ × 39°·2ะ'

**6. கடற்காலின் வழி முழுதும் மோதும் அலைவீச்சுகள்** (Rushing water thoughout the Strait)

இங்குக் கடற்கால் (Strait) என்று கூறுவதால், இது பாபல் மான்டெப் (Babelmandef) என்பதைக் குறிப்பிடுவதாகவே கொள்ளலாம்.

**7. ஓசெலிஸ்** (Ocealis)

இது அராபிய நாட்டுத் தென்கிழக்கு முனையில் (Arabia Felix) பாபல்மான்டெப் கடற்காலுக்கு எதிரில் இருந்தது. இது மோசா (Mocha) விற்குத் தென்கிழக்காக 50 மைல்கள் (80 கிமீ) தொலைவில் இருந்தது. இது பிளினி (கி.பி. 23-79) யாலும் குறிப்பிடப்பட்டுள்ளது. மற்றும் அதிகாரம் 7, குறிப்பு-9 பார்க்கவும்.

(**பிளினி:** பகுதி I, அதிகாரம் 6, குறிப்பு–82, பக்கம் 127)

ஓசெலிஸ் இருப்பிடம்: 13°·10' வ × 43°·11'கி. ஸ்டிராபோ இதை ஆசிலா (Acila) என்று வழங்கினர்.

8. குடிநீர் வழங்குமிடம் (Watering Station)

ஒசெலிஸ் இடத்தில் கப்பல்களுக்கு வேண்டிய குடிநீரும், உணவு வசதிகளும் ஏற்பாடு செய்யப்பட்டன. பாபல்மான்டெப் கடற்கால் வழியாக வரும் கப்பலுக்கு இதுவே தங்கி இளைப் பாறும் முதல் இடமாகும். இது துறைமுகம் அன்று; ஆனல் நங்கூரம் பாய்ச்சக் கப்பல்களை நிறுத்தலாம்.

---

# 26. இயூடிமான் அரேபியா

ஒசெலிஸ்[1] துறைமுகத்துக்கப்பால் கடல் கிழக்கு நோக்கி விரிவடைந்தும், அகன்ற பெருங்கடல்[2] காட்சி யளித்தும் நிற்கிறது. இங்கிருந்து 1200 ஸ்டேடியா[3] கடலூர்ந்து சென்ருல், இயூடிமான் அரேபியா,[4] எனப் பெயர் உள்ள கிராமம் ஒன்று கடற்கரை அருகில் காணப்படுகிறது. மற்றும், கரிபெல்[5] என்பாரின் அரசாங்கமும் காணப்படும். அவ்வரசாங்கக் கடற்கரையில் கப்பல் நங்கூரம் பாய்ச்சுவதற்கு ஏற்ற ஒதுக்கிடங் களும், அவற்றிற்குத் தண்ணீர் அளிக்கும் இடங்களும் காணப்படுகின்றன. இங்குக் கிடைக்கும் நீர் ஒசெலிஸ் இடத்தில் கிடைப்பதைக் காட்டிலும் மிகவும் தூய்மை யாகவும், சிறிது இனிப்பாகவும் இருக்கிறது. இக் கிராமம் வளைகுடாவின்[6] புகுவாயிலில் அமைந்துள்ளது. இங்கிருந்து நிலம் பின்னடைந்து காணப்படுகிறது. இவ்விடம் இயூடிமான் என்று வழங்கப்படுகிறது. இந்தியாவிலிருந்து எகிப்திற்குப்[7] பயணம் மேற்கொள் ளப்படாதிருந்த காலத்திலும், எகிப்திலிருந்து கடல் வழியாகக் கப்பலூர்ந்து மற்ற நாடுகளின் துறை முகங்களுக்கு மனத்துணிவுடன் கடற்பயணத்தை மேற்கொள்ளாதிருந்த காலத்திலும், இவ்விடம் புகழ் பெற்றும், பயனுள்ளதாகவும் விளங்கிற்று. ஆயினும், மிகவும் தெரிந்த அயல் நாட்டினர் மட்டும் இங்கு வந்து இக் கிராமத்து மக்களுடன் பழகினர்.

இப்பொழுது அலெக்சாந்திரியா[8] என்ற பெயருள்ள துறைமுகம் வெளிநாடுகளிலிருந்து — கடலுக்கு வெகு தொலைவில் உள்ள அயல் நாடுகளிலிருந்து—கொணரப் படும் பண்டங்களையும், அரேபியா நாட்டிலிருந்து[9] வரும் பண்டங்களையும் பெற்றுக்கொள்வது போல, இயூடிமான் துறைமுகமும் கிராமமும் அவ்விரு நாடு களிலிருந்தும் வரும் பண்டங்களை இறக்குமதி செய்து கொள்முதல் செய்தது. இது வெகுகாலத்திற்கு முன் இருந்த சூழ்நிலையாகும். அதன்பின்னர் அலெக் சாந்திரியா முதலிய துறைமுகங்கள் ஏற்பட்டபிறகு, இதன் முக்கியத்துவம் குறைந்துவிட்டது. ஆயினும், நம் காலத்துக்கு வெகு அண்மையிலேயே[10] இத் துறை முகமும் கிராமமும் கரிபியல் அரசரால் அழிக்கப் பட்டுவிட்டன.

## விளக்கவுரை

**1. ஓசெலிஸ்** (Ocealis)

இது அரேபிய நாட்டுத் தென்கிழக்கில் விளங்கிய துறைமுகம். மோசா (Mocha) விற்குத் தெற்கில் இருந்தது. இது பிளினி, ஸ்டிராபோ முதலான வரலாற்றாசிரியர்களால் குறிப்பிடப்பட் டுள்ளது. மற்றும் அதிகாரம் 7, குறிப்பு 9; அதிகாரம் 25, குறிப்பு-7 பார்க்கவும்.

ஓசெலிஸ் இருப்பிடம்: 13°·10' வ × 43°·12'கி.

**2. அகன்ற பெருங்கடல்** (Broad Ocean)

இப் பெருங்கடல் எரித்திரியன் (Erythrean Sea) ஆகும். இக் கடலே பின்னர்ச் செங்கடல் (Red Sea) என்று வழங்கப்பட்டது. எரித்திரியா எனும் சொல்லுக்குச் சிவப்பு என்று பொருள். மற்றும், அதிகாரம் 1, குறிப்பு-1 பார்க்கவும்.

**3. 1200 ஸ்டேடியா** (1200 Stadia)

ஒரு ஸ்டேடியம் ஒரு பர்லாங்கு அளவைக் குறிப்பதாகும். ஆக, இங்குக் குறிப்பிடப்பட்ட 1200 ஸ்டேடியா, 150 மைல்கள் (240 கி.மீ.) அளவினைக் குறிப்பிடுகிறது. மற்றும், அதிகாரம் 1, குறிப்பு-5 பார்க்கவும்.

**4. இயூடிமான் அரேபியா** (Eudemon Arabia)

இயூடிமான் எனும் இச் சொல் இன்று வழங்கப்படும் ஏடென் (Aden) துறைமுகத்தைக் குறிப்பிடுகிறது. இயூடிமான் என்ற சொல்லே கால அளவில் ஏடென் என்றுயிற்று. இந்த இயூடிமான் அரேபியா எனப்படும் துறைமுகம், அயல் நாடுகள் பெருமளவில் இந்தியாவுடன் வாணிகத்தொடர்பு கொள்ளாதிருக்கும்பொழுது, பெரும் புகழ் பெற்றிருந்தது. இயூடிமான் அரேபியா எனப் பட்டதன் காரணம், இயூடிமான் என்ற பெயருள்ள அரசர் ஒருவர் ரோம் நகரில் இருந்தார். வட அரேபியாவில் அவருக்குச் செல்வாக்கு இருந்தது. அதனுல் வடக்கு அரேபியாவின் ஒரு பகுதி இடுமியா (Idumiya) என்றும், அப் பகுதியின் மக்கள் இடுமியர்கள் (Idumiyans) என்றும் வழங்கப்பட்டனர். இவ்விரு சொற்களும்—இயூடிமான், இடுமியா-ஒன்று போலிருத்தலால், கலக்கம் ஏற்படாவண்ணம் அரேபியாவின் தென்பகுதி இயூடிமான் அரேபியா என்று வழங்கப்பட்டது என்று விளக்கம் கொடுக்கப் படுகிறது.

இயூடிமான் அரேபியாவில் இந்தியாவிலிருந்தும், மற்றும் கீழ்க் கோடியிலிருந்தும் கப்பலூர்ந்துவரும் பண்டங்கள் இறக்குமதி செய்யப்பட்டு, அவை மீண்டும் மத்திய தரைக் கடல் நாடு களுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. இத் துறைமுகமும் கிராமமும் கரிபெல் (Charibeal) என்ற பெயர் உள்ள அரசரால் கி.மு. 50 ஆம் ஆண்டில் அழிக்கப்பட்டுவிட்டது என்று வரலாற்றுப் பேராசிரியர்கள் கூறுகின்றனர்.

இயூடிமான் இருப்பிடம்: 12°·45′ வ × 45° 4⁰′கி.

**5. கரிபெல்** (Charibeal)

'கரிபெல்' என்ற சொல் அராபியச் சொல்லான காரிபியல் (Karibial) என்பதன் திரிபே. இதன் பொருள். "கடவுள்அவரை இரட்சித்தார்: ஆசீர்வதித்தார்" என்பதே. இவ்வரசர் அரேபியா வின் தென்கிழக்குப் பகுதியை—இயூடிமான் அரேபியா பகுதியை—கி.பி. 40 முதல் 70 வரை ஆண்டுவந்ததாக வரலாறு கூறுகிறது. பழைய துறைமுகமாகிய இயூடிமான் பகுதியைக் கரிபெல் கி.பி. 50 ஆம் ஆண்டு அழித்துவிட்டார். வாணிகப் பண்டங்களுக்குச் சுங்க வரி வசூலித்தலில் ஏற்பட்ட தகராறே இவ் வழிவுக்குக் காரணம் ஆகும். மற்றும் அதிகாரம் 23, குறிப்பு-2 பார்க்கவும்.

இப்பொழுது அதே இடம் ஏடென் (Aden) என்று வழங்கப்படு கிறது. ஏடென் இன்று மிகப்பெரியதும், முக்கியமான துறைமுக மாகவும், விமான நிலையமாகவும் விளங்குகிறது.

ஏடெனின் இருப்பிடம்: 12°·45'வ×45°·4'கி.

**6. வளைகுடா புகுவாயிலில்** (At the place of entrance of the Gulf).

இந்த வளைகுடாவின் பெயர் இன்று ஏடென் வளைகுடா (Gulf of Aden) என்று வழங்கப்படுகிறது. இதன் முற்பெயர் பாபல் மான்டப் (Babelmandef) ஆகும்.

**7. எகிப்து** (Egypt)

இந்தியாவிலிருந்து வாசனைப் பண்டங்கள் எகிப்திற்கும், பெர்பெர் (Berber), பெரெனிஸ் (Berenice) முதலிய துறைமுகங்களுக்கும் ஏற்றுமதி செய்யப்பட்டன. எகிப்திலிருந்து இந்தியாவுக்கும் பண்டங்கள் இறக்குமதி செய்யப்பட்டன. எகிப்து நாட்டின் இன்றைய முக்கியத் துறைமுகம் அலெக்சாந்திரியா (Alexandria) ஆகும். இது பேரரசர், மாவீரர் அலெக்சாந்தரால் கி. மு. 332 ஆம் ஆண்டு நிர்மாணிக்கப்பட்டதாகும்.

— (A Smaller Classical Dictionary, Page 34)

**8. அலெக்சாந்திரியா** (Alexendria)

இப் பெயருள்ள துறைமுகங்களும், இடங்களும் பல உள்ளன. சில மாவீரர் அலெக்சாந்தராலும், பல அவர் பெயராலும் நிர்மாணிக்கப்பட்டவை ஆகும். ஆப்பிரிக்காவின் வடபகுதியில் உள்ள அலெக்சாந்திரியா துறைமுகம், எகிப்தின் தலை நகரமாயிருந்தது. இது மெரியாடிஸ் ஏரிக்கும், மத்திய தரைக்கடலுக்கும் இடையே (Between Lake Mareotis and Mediterranean Sea and connecting them) நைல் நதிக் கழி முகத்தில் நிர்மாணிக்கப்பட்டு, அவை இரண்டையும் ஒன்று சேர்த்து வாணிகம் பெருக வழி செய்து வைக்கப்பட்டது. இக் கடற்கரையில் தாலமி பிலடெல்பஸ் எனும் அரசரால் கலங்கரை விளக்கம் ஒன்று கி.மு. 23-ல் கட்டப் பட்டது. அலெக்சாந்திரியா நிர்மாணிக்கப்பட்ட ஆண்டு கி.மு. 332

அலெக்சாந்திரியாவின் இருப்பிடம்: 31°·12'வ×29°·5' கி.

**9. அரேபியா** (Arabia)

அரேபியா (Arabia) வாசனைப் பண்டங்களுக்குப் புகழ் பெற்றிருந்தது. அங்கிருந்து பல பண்டங்கள் மேலை நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. அரபுகள் (Arabs)—அரபு மக்கள்—விளங்கிய நாடு என்றதன் காரணமாக இந் நாடு அரேபியா என்று வழங்கப்பட்டது. அந் நாட்டு மக்கள் அராபியர்கள் (Arabs)

என்று வழங்கப்பட்டனர். அந் நாடு இந்தியாவை ஒட்டி மேற்குப் பகுதியில் உள்ளது. அந் நாட்டில் இன்று வசிக்கும் பெரும்பாலோர் முஸ்லிம்கள் ஆவர்.

**10. வெகு அண்மையிலே** (In very recent times)

இக் கூற்று பெரிப்ளூஸ் ஆசிரியரின் கூற்ருகும். இவர் காலத்தில் கரிபெல் அரசர் ஆண்டு வந்தாரென்றும், அவ்வரசர் இயூடிமான் துறைமுகத்தை அழித்துவிட்டதாகவும் கூறுகிருர். கரிபெல் அரசர் இயூடிமானே அழித்தது கி.பி. 50 ஆகும் என வரலாற்றுப் பேராசிரியர்கள் கருதுவதால், பெரிப்ளூஸ் ஆசிரியரின் காலமும் கி.பி.50 முதல் 80 வரை என இந் நிகழ்ச்சியின் காரணமாக உறுதிப் பாடடைகின்றதல்லவா? (பெரிப்ளூஸ் முன்னுரை பார்க்கவும்). கரிபெல் ஆண்ட காலம் கி.பி. 40 முதல் 70 வரை ஆகும்.

கரிபெல் அரசரின் ஆட்சியையும், அவர் இயூடிமான் துறை முகத்தை அழித்தார் என்பதையும் பெரிப்ளூஸ் ஆசிரியர் குறித்து வைத்தது, அவ்வாசிரியருடைய காலத்தை நுணுக்கமாக அறிய எவ்வளவு பேருதவியாயுள்ளது என்பது போற்றி, மகிழ்தற் குரியதாகும்.

இம்மாதிரி இந்திய நாட்டு வரலாறுகளில் காணக் கிடைக்காதது நமக்கு எத்துணைப் பேரிழப்பாகும்!

---

# 27. கானே, சாபாதா

இயூடிமான் அரேபியாவுக்கு[1] அப்பால். தொடர்ந்துள்ள நீண்ட கடற்கரையும், ஒரு வளைகுடாவும்[2] இருக்கின்றன. இக் கடற்கரை 2000 ஸ்டேடியா[3] தொலைவுக்கும் அதிகமாக நீண்டு செல்கின்றது. அக் கடற்கரை ஓரமாக நாடோடிகளும், மீன்தின்னிகளும் கிராமங்களில் வசித்து வருகின்றனர். இங்குக் காணப்படும் வளைகுடாவில் நீண்டமுனைக்குச் சற்றுத் தொலைவில், கடற்கரை அருகில் மற்ருெரு வாணிகச் சந்தை கூடும் நகரம் காணப்படும். அதன்பெயர் கானே[4] எனவும், அது எலீசஸ்[5] அரசாங்கத்துக்குச் சொந்தமாய் உள்ள

தாகவும் கருதப்படுகிறது. அதன் எதிர்ப்பக்கத்தில் இரண்டு பாலைவனத் தீவுகள் காணப்படுகின்றன. அவற்றுள் ஒன்று பட்சித் தீவு[6]; மற்றொன்றின் பெயர் வில் மண்டபத் தீவு[7]. இவை கானேவுக்கு 120 ஸ்டேடியா தொலைவில் உள்ளன. இவ்விடங்களையும் தாண்டி உட்புகுந்து சென்றால், சபாதா[8] எனப்பெயர் கொண்ட பெருநகரம் காணப்படுகிறது. இப் பெரு நகரில்தான் அந் நாட்டு அரசர் வசிக்கின்றார். இந் நாட்டில் விளையும் வாசனைப் பண்டங்கள் யாவும் ஒட்டகத்தின்மீதேற்றப்பட்டு, இப் பெருநகர்க்குக் கொண்டுவரப்படுகின்றன. மற்றும், அவற்றுள் சில கானேவுக்குப் படகுகள் யாவும் காற்று நிரப்பப்பட்டு தோல்பைகளின்மீது அந் நாட்டு வழக்கப்படி மிதக்கப் பட்டுச் செலுத்தப்படுகின்றன. இவ்விடம் தொலைவில் உள்ள வாணிகப்பெருந் துறைமுகங்களுடன் வாணிகம் நடத்துகிறது. மற்றும், பாரிகாஸா,[9] ஓமனு,[10] சித்தியா,[11] ஆகிய துறைமுகங்களுடனும், பாரசீகக் கடற்கரைப் பட்டினங்களுடனும் வாணிகம் நடத்து கின்றது.

## விளக்கவுரை

**1. இயூடிமான் அரேபியா** (Eudemon Arabia)

இது நவீன ஏடென் (Aden) துறைமுகத்தைக் குறிப்பிடுகிறது. இவ்விடம் கரிபெல் (Charibeal) என்ற அரசரால் கி.பி.50-ல் அழிக்கப்பட்டுவிட்டது. மற்றும், அதிகாரம் 26, குறிப்பு-4 பார்க்கவும்.

**2. நீண்ட கடற்கரையும் ஒரு வளைகுடாவும்** (A long Coast and a Gulf)

இயூடிமானை யொட்டிய கடற்கரை அரேபியாவின் தென் கிழக்குப் பகுதியாக ஹாட்ரமௌத் (Hadramaut) வழியாகச் செல்கிறது. இவ் வளைகுடா அந் நாளில் பாபல்மான்டப் (Babel mandef) என்று வழங்கப்பட்டது. இன்று ஏடன் வளைகுடா (Gulf of Aden) என்று வழங்கப்படுகிறது.

**3. 2000 ஸ்டேடியா** (2000 Stadia)

ஒரு ஸ்டேடியம் என்பது ஒரு பர்லாங்கைக் குறிப்பிடும். ஆகு இங்குக் குறிப்பிடப்பட்ட 2000 ஸ்டேடியா என்பது 250மைல்கள் (400 கிமீ) தொலைவு ஆகும்.

**4. கானே** (Canae)

இது நவீன ஹிஸன் கோரப் (Hisn Ghorab) என்ற இடம் என்று நம்பப்படுகிறது. இதையடுத்துள்ள பெருநகரம் பிர் அலி (Birali) என்பது.

பைபிள் (Bible) எனும் புத்தகத்தில் குறிப்பிடப்படும் கானே வேறு; இக் கானே வேறு. அக் கானே (Cannaei) இதாலியின் ஆதன்ஸ் (Athens) நகருக்குப் பக்கத்தில் இருந்த நகரமாகும். இது அரேபியாவில் ஹைட்ரமௌத் (Hydramaut) பகுதியில் உள்ளதாகும்.

பிர் அலியின் இருப்பிடம்: 13°·20'வ × 48°·0'கி.

இவ்விடம் முற்காலத்தில் வாணிகச் சந்தை கூடும் நகரமாக விளங்கிற்று. இது ஓர் அரசரால் ஆளப்பட்டு வந்தது.

**5. எலீசஸ்** (Eleazus)

இவர் வாசனைப் பண்டங்கள் விளையும் நாட்டின் அரசர் எனக் குறிப்பிடப்படுகிறார். இச் சொல் அரபுமொழியில் இலி அஜு (Ili Azzu) என்பதாகும். அதன் பொருள்: "என் கடவுள் மிகுந்த வீரமுள்ளவர்," என்பதே. இவர் ஹைட்ரமௌத் (Hydramaut) நாட்டை ஆண்டு வந்தார். கானே எனப்படும் வாணிகச் சந்தையைக் கட்டுப்படுத்தி, அதற்குச் சுங்க வரி விதித்தவர் இவ்வரசரே ஆவார்.

**6. பட்சித் தீவு** (Bird's Island)

இது கூரியா மூரியாவிலுள்ள தீவுகளில் (Kuria Muria Island) ஒன்றைக் குறிப்பிடுவதாகக் கருதப்படுகிறது.

**7. வில் மண்டபத் தீவு** (Dome Island)

இதுவும் கூரியா மூரியாவிலுள்ள (Kuriya Muriya) தீவாகக் கருதப்படுகிறது.

**8. சபாதா** (Sabatha)

இது வாடிராக்கியா (Wadirakia) என்ற சமவெளிப் பகுதியில் உள்ளது. இது இப்பொழுது சாவா (Sawa) என்று வழங்கப் படுகிறது.

சாவாவின் இருப்பிடம்: 15°·36'வ×48°·27'கி. மற்றும் அதிகாரம் 22, குறிப்பு-1 பார்க்கவும்.

**9. பாரிகாஸா** (Barygaza)

இது நவீன புரோச் (Broach) என்பதைக் குறிப்பிடுகிறது. பிருகு-கச்சா என்பதன் திரிபே பாரிகாஸா. பாரிகாஸாவே, புரோச் ஆயிற்று.

பாரிகாஸாவின் இருப்பிடம்: 21°·41வ' × 74°·1'கி மற்றும் அதிகாரம் 14, குறிப்பு–3 பார்க்கவும். இங்கிருந்து அயல்நாடுகளுக்குப் பல பொருள்கள் ஏற்றுமதி செய்யப்பட்டன.

**10. ஓமனு** (Omana)

இது பாரசீக வளைகுடாவின் (Persian Gulf) நுழைவாயிலில் உள்ளது. இங்கிருந்து இந்தியாவிலிருந்து வந்த பண்டங்கள் அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. ஓமன் (Oman) என்று வழங்கப்பட்டது:

ஓமன் இருப்பிடம்: 23°·30'வ × 57°·0'கி,

**11. சித்தியா** (Scythia)

சித்தியா நாடு என்பது ஏரல் கடலுக்குக் (Sea of Aral) கிழக்கேயும், ஆக்ஸஸ் நதி (River Oxus)க்கு வடக்கேயும், காஷ்மீரத்துக்கு வடமேற்கேயும் உள்ள நாடு.

ஆனல், இங்குச் சித்தியா என்பது ஒரு துறைமுகமாகக் குறிக்கப்படுகிறது. ஆதலால், இது சிந்துநதிக் கழிமுகத்தில் இருந்த துறைமுகத்தைக் குறிப்பிடவேண்டும். சிந்தஸ் என்பதற்குப் பதில் சித்தியா என்று தவறுதலாக மொழி பெயர்க்கப்பட்டு விட்டது போலும்.

சிந்து நதியின் கழிமுகத்தில் அன்று பாதலம் (Patalae) என்று துறைமுகம் இருந்தது.

பாதலம் இருப்பிடம்: 28°·25'வ×68°·38'கி.

—(Early History of India-By Vnicent Smith M,A. Page 101) இது பிளினியாலும் குறிப்பிடப் பட்டுள்ளது.

—(**பிளினி:** அதிகாரம் 3, குறிப்பு-11, பக்கம் 44).

---

# 28. சபாதாவின் இறக்குமதிகள்

இந்த இடத்தில் எகிப்திலிருந்து[1] சிறிய அளவில் கோதுமையும் மதுபானமும் மூஸாவைப்[2] போன்றே இறக்குமதி செய்யப்படுகின்றன. அராபிய நாகரிகத்தைச் சார்ந்த சில துணிவகைகள்; சாதாரணமாயும், வெண்மையாயும் பெரும்பாலும் சொரசொரப்பான ஆடைகள்; பித்தளை, தகரம், பவழம்[3], ஓர்க்கோலை;[4] அரசர்க்குரிய வழக்கமான அடித்து வார்க்கப்பட்ட பொன்; வெள்ளித்தட்டுகள் குதிரைகள்[5]; படிமங்கள், மெல்லிய இழைகளாலாகிய விலையுயர்ந்த துணிகள் ஆகிய இவை இறக்குமதி செய்யப்படுகின்றன. உள்நாட்டில் விளையும் பண்டங்கள், வாசனைப் பொருள்கள், கரியபோளம்,[6] வேறு துறைமுகங்களுடன் வாணிகத்தில் ஈடுபடும் மற்ற பண்டங்கள் ஆகிய இவை ஏற்றுமதி செய்யப்படுகின்றன. இவ்விடத்திற்குப் பயணம் மேற்கொள்ளும் காலம், மூசாவிற்குப் பயணம் மேற்கொள்ளப்படும் காலம்ஆகும். அதற்குச் சற்று முன்னர்கூடப் புறப்படலாம்.

## விளக்கவுரை

**1. எகிப்து** (Egypt)

எகிப்து பண்டைய நாகரிகம் பிறந்த இடமாகும். இங்குத் தயாரிக்கப்பட்ட மதுபானம், கோதுமை ஆகியவை ஏற்றுமதி செய்யப்பட்டன. சபாதா இவற்றை இறக்குமதி செய்தன. சபாதா எனும் இடம் இப்பொழுது சாவா (Sawa) என்று வழங்கப்படுகிறது. மற்றும் அதிகாரம் 6, குறிப்பு-2 பார்க்கவும்.

**2. மூஸா** (Muza)

இது இப்பொழுது மோசா (Mocha) என்று வழங்கப்படுகிறது. பிளினியாலும் இது குறிப்பிடப்பட்டுள்ளது.

**பிளினி:** அதிகாரம் 6, குறிப்பு 75, பக்கம் 128).

மோசாவின் இருப்பிடம்: 13°·20'வ × 43°·42'கி.

### 3. பவழம் (Corraleum)

இது இலத்தீனில் கொராலியம் (Corraleum) என்று வழங்கப் பட்டது. இந்தியப் பெருங்கடலில் விளைந்த பவழமே உயர்ந்த பவழமாகக் கருதப்பட்டது. கொராலியம் என்ற சொல்லே குறுகிக் கோரல் (Coral) என்ருகி, அது பவழத்தைக் குறிப்பதா யிற்று. மத்தியதரைக்கடலில் விளைந்த பவழம் ரோமப் பேரரசின் துறைமுகம் மூலமாக ஏற்றுமதி செய்யப்பட்டது. இந்தியப் பவ ழங்கள் முசிறி, தொண்டி, பாரிகாஸா, கொற்கை முதலிய துறை முகங்கள் மூலமாக ஏற்றுமதி செய்யப்பட்டன. பொதுவாக முத்தும், பொன்னும் ஒன்ருகவே ஏற்றுமதி செய்யப்பட்டன. பவழம் என்பது தமிழ்ச்சொல். அது வடமொழியில் ப்ரவளம் என்ருயிற்று.

### 4. ஓர்க்கோலை (Storax)

ஓர்க்கோலையில் (Storax) இருவகைகள் உண்டு.

(1) இறுகிக்கட்டியாக உள்ளது. சாம்பிராணியுடன் கலந்து வாசனைத் தூபமாகப் பயன் படுத்தப்படுவது.

(2) திரவ உருவமாக உள்ளது. இஃது அம்பர் (Amber) என்பதில் உள்ள திரவமாகும். இத் திரவம் மார்ச்சளி, சளிப்பு, இலேசான தலைவலி முதலியவற்றிற்குப் பூச்சு மருந்தாகப் பயன் படுவது. இது ஒரு மருந்துச் சரக்காகும்.

### 5. குதிரைகள் (Horses)

அரபு நாட்டுக் குதிரைகள் பார்வைக்கு அழகாகவும், முடுக் காகவும் விளங்கும். ஆகவே, அராபியக் குதிரைகள் உலகில் பல பகுதிகளிலும் விரும்பி வாங்கப்பட்டன.

அரபு நாட்டுக் குதிரை வாணிபத்தைப் பற்றி விரிவாக மார்க்கோ போலோ (கி.பி. 1254-1354) தம் பயணக் குறிப்புகளில் குறித்துள்ளார். (**மார்க்கோ போலோ,** பக்கம் 22)

### 6. கரியபோளம் (Aloes)

இது கைப்புச்சுவையுள்ள கற்ருழைப்பூடு வகையைச் சார்ந் தது. கற்ருழை இரசத்தைக் காயவைத்து, இறுகச் செய்து ஏற்று மதி செய்யப்பட்டது. இப் பொருள் ஒரு சிறந்த வாணிகப்பொரு ளாகக் கருதப்பட்டது. இம் மருந்துச் சரக்குப் பெரும்பாலும் சொகோத்ரா (Socotra) தீவினின்று ஏற்றுமதி செய்யப்பட்டது. அதன் காரணமாக, இச் சரக்கு சக்கோத்ரைன் ஆலோ (Succotrine

Aloes) என்று வழங்கப்பட்டது என்று விளக்கம் கொடுக்கப்படுகிறது. ஆனுல் சக்கோட்ரைன் என்பதற்குக் குழம்புப்பாகு என்ருெரு பொருளும் உண்டு. ஆகையால் இக் கரியபோளம் குழம்புப்பாகு போன்று உள்ளது ஒருவகை என்றும், மற்ருெருவகை இறுகிய வகை என்றும் கொள்ளப்படுகிறது.

மற்றும் இப் போளத்தில் (Myrrh) வெள்ளைப்போளம் (Balsa modendrom) என்றும், இரத்தபோளம் (Hepatic Aloes) என்றும் இருவகைகள் இருந்தன.

மற்றும் அதிகாரம் 24, குறிப்பு–10 பார்க்கவும்.

# 29. சாகலேட்டு

கானேவுக்கு[1] அப்பால் நிலம் குறைந்து கொண்டே வந்து, மிகுந்த ஆழம் பொருந்திய வளேகுடாவில் குறுகலடைந்து, அதன் பின்னர் பரந்து நின்று சாகலேட்[2] என்ற பெயரால் வழங்கபட்டு வருகிறது. மற்றும், வாசனைப் பொருள்கள் விளையும் நாட்டில் மலைகள் மிகவும் நெருங்கிக் காணப்படுகின்றன. அம் மலைகள்போகும் வழியை அடைத்தும், தம் உச்சி மீது பனிப்படலங்கள் கொண்டும் காணப்படுகின்றன. அம் மலைகள் மீதுள்ள மரங்கள் மிகுதியான வாசனையுள்ள வாசனைப் பண்டங்களைத் தருகின்றன. இருப்பினும் இம் மரங்கள் ஓங்கி வளர்ந்த மரங்கள் அல்ல; அடிமரங்கள் பெருத்தவையும் அல்ல. அவ்வடி மரப்பட்டைகளில் பிசின் போன்ற அவ் வாசனைப் பொருள் சிறு கட்டிகளாக இறுகி ஒட்டிக் கொண்டிருக்கின்றன. எங்கள் எகிப்திய நாட்டில்[3] மரங்கள் தங்கள் பிசினைச் சுரக்கின்றன. இவ்வாசனை மரங்களின் பிசினை அரசரின் அடிமைகளும், பணியாளர்களும் சேகரிப்பார்கள். அவர்கள் யாவரும் அரசரால் தண்டிக்கப் பெற்று, அத் தண்டனையை அனுபவிக்க இங்கு அனுப்பப் பட்டவர் ஆவர்.[4] இவ்விடம் முழுவதும் உடல் நலக் குறைவை ஏற்படுத்தியும், சுகாதாரமற்றும் காணப்படு

கின்றது. இந் நாட்டின் கடற்கரையோரமாகப் பயணம் செய்வோரையும் வியாதி பீடித்துவிடும். இவ்விடங்களில் பணிபுரிவோர்க்கு இதுவே இறுதியான பணியாகும்; இதுவே உயிர்கவ்வும் இடமும் ஆகும்; மற்றும், சரியான உணவு கிடைக்காமல் பலர் செத்து மடிந்தும் விடுகின்றனர்.

## விளக்கவுரை

1. **கானே** (Canae)

இது ஹிஸன் கோப் என்னும் இடம் என்று நம்பப்படுகிறது. இதை அடுத்துள்ள பெரிய நகரம் பிர் அலி (Birali). இது முற் காலத்தில் வணிகச் சந்தை கூடிய இடம் ஆகும்.

பிர் அலியின் இருப்பிடம்: 13°·20' வ × 48°·0' கி. மற்றும் அதிகாரம் 27, குறிப்பு 4 பார்க்கவும்.

2. **சாகலேட்** (Sachalites)

இது சாகலேட் விரிகுடா (Bay of Sachalites) என்று வழங்கப் பட்டது. அராபிய மொழியில் ஸவாஹிட் (Sawahit) என்ற சொல்லுக்குக் கடற்கரை என்பது பொருள். 'ஸவாகிட்' என்பது வடசொல் 'ஸாகரா' என்பதன் திரிபு. ஸாகரா என்பது கடல் எனப்பொருள்படும் சொல் ஆகும். கடற்கரையில் உள்ள மக்கள் 'ஸ்வாஹிலி' என்றுவழங்கப்பட்டனர். ஸ்வாஹிலி என்ற சொல்லே சாக்கலேட் என மருவி வழங்கப்பட்டது. இது ஐதாத் அல்ஹர்சிஸ் (Jatat Alharsis) என்பதன் திரிபே.

இதன் இருப்பிடம்: 18°·0' வ × 57°·0' கி.

3. **எங்கள் எதிப்திய நாட்டில்** (In my Egyptian Land)

இங்கு எகிப்தைப் (Egypt) பெரிப்ளூஸ் ஆசிரியர் 'எங்கள் நாடு' என்று உரிமையுடன்வழங்குவதால், இந் நூலின் ஆசிரியர் எகிப்திய நாட்டைச் சார்ந்தவராகவோ, அங்குக் குடியேறினவராகவோ இருக்கவேண்டும் என்பது இதனல் தெரிகிறது. எகிப்தில் உள்ள வர்களுக்குத்தான், எகிப்திரியன் கடலிலும், அராபியன்கடலிலும் கப்பல்கள் எப்பொழுது சௌகர்யமாகப் போய் வரக்கூடும் என்பது தெரியும். ஆகையால், பெரிப்ளூஸ் நூலாசிரியர் எகிப்து நாட்டைச் சார்ந்தவராகவோ அல்லது எகிப்தியராகவோ இருக்க வேண்டும் என்று அவர் கூற்றுலேயே தெளிவாகிறது.

டாக்டர் முகர்ஜி அவர்கள், பெரிப்ளூஸின் ஆசிரியரை "எகிப்தில் தங்கி வாழ்ந்து வந்த கிரேக்க நாட்டு மாலுமி" என்றே குறிப்பிடுகிறார்.

"எகிப்தில் தங்கி வாழ்ந்துவந்த கிரேக்க நாட்டு மாலுமி இந்தியாவுக்குச் செங்கடல் வழியாகவும், அராபியன் கடல் வழியாகவும் ஒரு பயணத்தை மேற்கொண்டார். அவர் பயணக் குறிப்புகள் "The Periplus of the Erythrean Sea" என்ற நூலில் பொறிக்கப்பட்டு அவரால் வெளியிடப்பட்டது."

—(Dr. R. K. Mookerjee M. A, –An Advanced History of India-Page 211.)

### 4. தண்டனை அனுபவிக்க அனுப்பப் பெற்றவர் (Sent to undergo punishment)

அடிமைகளும், மற்ற குற்றங்களுக்குத் தண்டனையளிக்கப்பட்ட மக்களும், அத் தண்டனையை அனுபவிக்க மலைநாட்டிலுள்ள காடுகளுக்கு வாசனைப் பண்டங்களைப் பொறுக்குவதற்காக அனுப்பப்பட்டனர். அவ்வாறு அனுப்பப்பட்டவர் எவரும் உயிருடன் திரும்பியதில்லை. ஆகையால், அவர்கள் உயிர் அவ் வாசனைப் பண்டங்கள் பொறுக்குவதிலேயே பிரிந்துவிடும். வேலையும் கடினம்; உணவும் சரியாகக் கிடைக்காது; மற்ற விலங்கினங்களிடமிருந்தும், கொடிய நச்சுப்பாம்பு முதலிய ஊர்வனவிடமிருந்தும் இன்னல்கள் எப்பொழுதும் ஏற்படக்கூடும். ஆகையால், அங்குத் தண்டனை அனுபவிக்க அனுப்பப்பட்டவர் எவரும் உயிருடன் திரும்பியது கிடையாது.

### 5. இதுவே இறுதியான பணியாகும் (The final and last work turned out by them)

வாசனைப் பொருள்களைப் பொறுக்குவதில் பற்பல கதைகளும் வழங்கப்பட்டு வருகின்றன. அவ் வாசனைப் பண்டங்கள் உள்ள மரங்களைக் கொடிய நச்சுப் பாம்புகள் எப்பொழுதும் சுற்றிக் கொண்டேயிருக்குமென்றும், அப் பண்டங்களைச் சேகரிக்கப் போகிறவர்களை அப் பாம்புகள் கடித்துவிடுகின்றன என்றும், கடிபடாதவாறு பாம்பைத் துரத்தினால்தான் அவ் வாசனைப் பண்டங்களைச் சேகரிக்க முடியும் என்றும் நம்பப்பட்டது.

இக் கருத்தை வலியுறுத்தி வரலாற்றின் ஆதித் தந்தையாகக் கருதப்படும் ஹீராடடஸ் (Herodotus) என்பவர் (கி.மு. 484—425) பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்:

"இறக்கையுள்ள பாம்புகள் அம் மரங்களைச் சுற்றிப் பாது காத்துவருகின்றன. அவற்றை அம்பர் கொண்டு கொளுத்திப் புகை எழுப்பி, அவற்றின் கண்களை மங்கவைத்து, அப்புறப் படுத்தி, அவ் வாசனைப் பண்டங்களைப் பெறுகின்றனர்: அப் பொருள்களைப் பெற அஃதொன்றே வழியாகும்."

—(ஹீராடடஸ், புத்தகம் III-பக்கம் 219

மற்றுமோரிடத்தில் அவர் குறிப்பிடுகிறார்:

"அவ்வாறு புகையெழுப்ப உதவும் அம்பர் (Storax) வகை சிரியா நாட்டில் உள்ள பீனிசியக் குடிமக்களால் பிசின் வடிவமாகக் கொண்டுவரப்படுகிறது."

—(ஹீராடடஸ், புத்தகம் III –பக்கம் 219)

ஆகையால், அக் காலத்தில் வாசனைப் பண்டங்களைப் பாம்பு சுற்றிக் கொண்டிருந்தன என்பது தெரியவருகிறது. இன்றும், இந்தியாவில் தாழம்பூச் செடிகளின் அடியில் பாம்புகள் காணப்படுகின்றன.

---

# 30. சைகரஸ். டிஸ்கார்டியா

இவ் வளைகுடாவில் மிகப்பெரிய அளவில் முனை ஒன்று காணப்படுகிறது. அம் முனை கிழக்கு நோக்கியும், சைகரஸ்[1] எனும் பெயர் தாங்கியும் நிற்கிறது. இவ் விடத்தில் பாதுகாப்புக்காகக் கோட்டை ஒன்று நிர் மாணிக்கப் பட்டுள்ளது. மற்றும் துறைமுகம் ஒன்றும், சேகரித்த வாசனைப் பண்டங்களைப் பாதுகாத்து வைக்கக் களஞ்சியம் ஒன்றும் இருக்கின்றன. இம் முனைக்கு நேர் எதிராக, கடலுக்கு அப்பாற்பட்டும் தீவு ஒன்று காணப் படுகிறது. இம் முனை, வாசனைப் பொருள் முனைக்கும், முதல் கூறப்பட்ட சைகரஸ் அருகிலே உள்ளது. அத் தீவு டிஸ்கார்டியா [2]எனும் பெயரால் வழங்கப்படுகிறது. அது பெரிய அளவுள்ள ஒரு பாலைவனப் பகுதியாகவும், சிறுசிறு இடங்களில் சேறு அதிகமாகவும், சிறுசிறு நதிகள் ஓடிக் கொண்டும் உள்ளது. அந் நதிகளில் முதலைகளும், பல்

வகைப் பாம்புகளும், பேருருவம் படைத்த இராட்சதப் பல்லிகளும்[3] காணப்படுகின்றன. அவற்றின் ஊனை அந் நாட்டினர் விரும்பி உண்கின்றனர். மற்றும் அவற்றின் கொழுப்பை உருக்கி ஒலிவ எண்ணெய்க்கு மாற்றாக அதைப்பயன்படுத்துகின்றனர். அத் தீவில் எவ்விதப் பழமும் விளைவது இல்லை. மற்றும், அங்குத் திராட்சையோ, தானிய வகைகளோ பயிராக்கப்படுவதில்லை. அத் தீவின் மக்கள் நெருக்கம் மிகக் குறைந்ததேயாகும். அம் மக்கள் கடற்கரையோரமாகவே வட பகுதியில் வசித்து வருகின்றனர். அப் பகுதி, கண்டப் பகுதியை எதிர்நோக்கியுள்ளது. அங்குள்ள மக்கள் யாவரும் அயல்நாட்டினர் ஆவர். பெரும்பாலும் அவர்கள் அராபியர், இந்தியர், கிரேக்கர் ஆகியவர்களின் கலப்பினங்களாகவே காணப்படுகின்றனர். அவர்கள் வாணிகம் நிமித்தமாக அங்குக் கடற்கரைப் பகுதியில் குடியேறியவர் ஆவர். அந்தத் தீவு கடல் ஆமையின்[4] உண்மை இனத்தை உற்பத்தி செய்கிறது. மற்றும், சில நில ஆமை வகையும்[5], வெள்ளை ஆமை வகையும்[6] பெரும் அளவில் உற்பத்தியாகின்றன. அவை யாவும், அவற்றின் அகன்ற, பரந்த முதுகு ஓட்டினைக் கருதிப் பெரிதும் விரும்பப்படுகின்றன. மற்றும் மலை ஆமை[7], ஆமைகளுள் மிகப்பெரிய உருவம் கொண்டதாய் உள்ளது. மற்றும் அம் மலை ஆமையின் முதுகு ஓடு மிகுந்த தடிமன் வாய்ந்ததாய் உள்ளது; அந்தத் தடித்ததும், கடினமானதுமான பகுதியிலிருந்து, அதன் அடியில் ஒட்டிக் கொண்டிருக்கும் வேண்டாத பகுதியைப் பிரித்தெடுக்க முடியாது. காரணம் அவ்வடிப் பகுதியும் மிகுந்த அளவில் தடித்தே காணப்படுகிறது. முக்கியமான மேல் ஓடுகள் மட்டும் துண்டித்து எடுக்கப்பட்டு, அப்படியே அவை கூடைகளாகவோ, தட்டுகளாகவோ ஆக்கப் படுகின்றன. அவை சிற்றுண்டி வழங்கத் தக்க சிறு கிண்ணங்களாகவும், மற்றும் பயன்படத்தக்க பாத்திர வகைகளாகவும் ஆக்கப்படுகின்றன. இத் தீவில் இந்திய நாட்டினைச் சார்ந்த சிவப்பு நிறம் வாய்ந்த சாதி

லிங்கம்[8] தயாரிக்கப்படுகின்றது. இச் சரக்கு இரசக்கந்தகை மரத்திலிருந்து[9] சுரக்கும் ஒருவகை திரவத்திலிருந்து சேகரிக்கப்படுவதாகும்.

## விளக்கவுரை

**1. சைகரஸ்** (Sygarus)

இவ்விடம் சையாகரஸ் (Syagarus) என்று வழங்கப்படுகிறது. இது நவீன ராஸ்பார்டாக் (Ras-fartak) என்பதைக் குறிப்பிடும். இது மலைச்சிகரம் ஒன்றின் முட்டு ஆகும். ராஸ்எல்பாத் (Ros-elbad) என்றும் வழங்கப்படுகிறது. அம் மலைச் சிகரத்தின் உயரம் 2500 அடி (750 மீ) ஆகும் சையாகரஸ் என்ற அரபுச் சொல்லுக்குக் 'காட்டுப் பன்றி என்பது பொருள். இது செளகார் (Saugor) என்பதன் திரிபாகக் கருதப்படுகிறது. செளகார் எனும் இனத்தினர் வாசனைப்பண்டம் சேகரிப்பதில் வல்லுநர். அவர்கள் உடலிலும் உள்ளத்திலும் தூய்மையாகக் காணப் பட்டனர். இக் குணமே அவர்கள் வாசனைப் பண்டங்களை எவ்வித இன்னலுமில்லாமல் சேரிக்க உதவிற்று என்று கூறப் படுகிறது.

பிளினி (கி.பி. 23-79) இவர்களைப் ''புனிதமான'' என்ற அடை மொழி கொடுத்து விளிக்கிறார். (Pliny: Book VI-Chapter 26)

பிளினி சைகிரஸ் என்பதை இந்தியத் துறைமுகமாக விவரித்துள்ளார் பிளினி குறிப்பிடும் துறைமுகம் நர்மதை ஆற்றின் கழிமுகத்தில் (Narmada River) இருந்திருக்கக் கூடும் என்று கருதப்படுகிறது.

(**பிளினி:** புத்தகம் VI அதிகாரம்-26, குறிப்பு-53 பக்கம் 124)

மற்றும், சையாகரஸ் என்பது சைராஸ்-எல்–ஹாட் (Cye-Ras-El-Haad) என்று வழங்கப்படுகிறது. அரேபியா நாட்டின் கிழக்குப் பகுதியில் உள்ள ஒரு துறைமுகம்.

(**பிளினி:** புத்தகம் VI அதிகாரம் 26, குறிப்பு-50, பக்கம் 124)

சைகரஸ் இருப்பிடம்: 15°·26' × 52°·12' கி.

சைராஸ் எல்பாட் இருப்பிடம்: 22°·5' × 60°·0' கி.

**2. டிஸ்கார்டியா** (Discordia)

இத் தீவு நவீன சொகோத்ரா (Socotra) பகுதியில் உள்ளது. இதன் பொருள் 'சுவர்க்கத் தீவு' என்பதாம். (Island of tue Bliss). இத் தீவு வடமொழியில் த்வீப சுகாதார (Dvipa Sukadara) என்று வழங்கப்பட்டது. இத் தீவு இந்தியாவுக்கும் அரேபியா வுக்கும் போகும் வழியில் இருப்பதாக அகதார்சைடிஸ் (Agatharcides) என்பார் எழுதியுள்ளார். பிளினி இத் தீவை டிஸ்காரிடு (Discaridu) என்று வழங்கியுள்ளார்.

(**பிளினி**: புத்தகம் VI, அதிகாரம் 32)

டிஸ்கார்டியாவின் இருப்பிடம்: 12°.30'வ × 50°·0'கி

**3. இராட்சதப் பல்லிகள்** (Giant Lizards)

இப் பல்லி வரானஸ் நிலாடிகஸ் (Varanus Niloticus) என்ற இனத்தைச் சார்ந்தது. வரானிடே (Varanidae) வகுப்பைச் சார்ந்தது. இவ்வினம் ஆப்பிரிக்கா முழுவதும் பரவியிருந்தது. அரபு (Arabic) மொழியில் இது 'அவரானஸ்' (Avaranus) என்று வழங்கப்பட்டது. ஆகையால் நீண்ட பல்லிகள் ஆப்பிரிக்காவில் இருந்தன என்பதும், அதன் ஊனை மக்கள் விரும்பிப் புசித்தனர் என்பதும் இதனுல் தெரியவருகிறது.

**4. கடல் ஆமைகள்** (Turtles)

நில ஆமைகள் (Tortoises) வேறு; கடல் ஆமைகள் வேறு. இங்குக் குறிப்பிடப்படுவது கடல் ஆமைகளே (Turtles). இங்குக் கடல் ஆமை முதன் முதல் உற்பத்தி ஆனதாகக் கருதப்படு கிறது. அந்த இனம் கெடாமல் பாதுகாக்கப்பட்டு வருவதால் 'உண்மை இனத்தை உற்பத்தி செய்கிறது' என்று கூறப்படுகிறது.

**5. நில ஆமை** (Tortoises)

இந் நில ஆமைகளின் ஓடுகளே விரும்பி விலைக்கு வாங்கப் பட்டன. மிகவும் உறுதிவாய்ந்தவை. டார்டஸ் (Tortus) என்றுல் உடலைச் சுருக்குதல் என்ற பொருளில், ஆங்கிலச் சொல் டார்டாய்ஸ் (Tortoise) உருவாயிற்று—ஆமை தன்தலை, கால்கள் யாவற்றையும் தன் முதுகு ஓட்டிற்குள் இறுக்கிச் சுருக்கிவிடுவ தால். இவை சிறுபெட்டிகள், மூடிகள், சிமிழ்கள் முதலியன செய்யப் பயன்பட்டன. மற்றும் அதிகாரம் 4, குறிப்பு-11 பார்க்கவும்.

**6. வெள்ளை ஆமைகள்** (White Tortoises)

ஆமைகளில் வெள்ளை ஆமைகளும் இருந்தன. ஆனால் அவை மிக அருகிலேயே காணப்பட்டன. அவற்றின் ஓடுகள் மிக வெண்மையாகச் சலவைக்கல் போன்றிருக்கும். இதன் விலை அதிகம்.

**7 மலை ஆமைகள்** (Mountain Tortoises)

நில ஆமைபோன்று மலை ஆமைகளும் இருந்தன. அவற்றின் ஓடுகள் மிகக் கடினம் வாய்ந்தது. இவை ரோம் நாட்டிற்கு ஏற்று மதி செய்யப்பட்டன.

**8. சாதிலிங்கம்** (Cinnabar)

இது சின்னபார் என்று இலத்தீன் மொழியில் வழங்கப் பட்டது. இது பாஷாணவகை (Red Sulphurate of Mercury) யைச் சார்ந்தது. நிறம் சிவப்பு. ஆர்செனிக் (Arsenic) வகை யைச் சார்ந்தது,

பிளினி (கி. பி·23-79 இதைப் பற்றிப் பின்வருமாறு குறிப் பிடுகிறார்:

''பெரிய பறவைநாகம் ஒன்றுக்கும் உலகத்தைத் தாங்கும் திசையானை (திக்கஜம்) ஒன்றுக்கும் நடந்த ஓயாத போராட்டத்தில், அப் பறவைநாகம் யானையின் இரத்தத்தை உறிஞ்சிக் குடித்தது. நீண்ட பாம்புபோலிருந்த அவ்வுருவம் யானையின் உடலைச் சுற்றிக்கொண்டு, தான் குடித்த இரத்தம் போக மீதியைக் கீழே பெருக விட்டது. அதன் வயிறு புடைத்து விட்டது. யானை தன் இரத்த இழப்பால், மயங்கி, சோர்ந்து, உயிரிழந்து கீழே விழுந்தது. அப்பெரிய உடல் அப்பறவை நாகத்தின்மீது விழுந்ததால், பாம்பு துடி துடித்துச் செத்தது. எங்காகிலும் சிவந்த மண் காணப்பட்டால், அது யானைக்கும் பறவை நாகத்துச்கும் நடந்த போராட்டத்தின் விளைவாக ஏற் பட்ட சிவந்தமண் என்று அதற்கு விளக்கம் கொடுக்கப்பட்டது. அச் சிவந்த மண்ணே—விஷம் கலந்த அம் மண்ணே—சின்னபார் (Cinnabar) என்று வழங்கப்பட்டது.''

—(Pliny: Book XXXIII-Chapter 38 and Book XIII Chapter 2)

தமிழ் இலக்கியத்தில் சாதிலிங்கம் குறிப்பிடப்படுகிறது:

''சாதிலிங்கஞ் சொரியும் வரையையொக்கும்''.

(புறப்பொருள் வெண்பாமாலை 2-5 உரை

"சாதிங்குலிகமொடு சமரமொழுகிய"

(**பெருங்கதை**: இலாவண: 5-22)

சாதிலிங்கம், சாதிங்குலிகம் என்றும் வழங்கப்பட்டது.

இரண்டும் ஒரே பொருளைக் குறிக்கின்றன.

இது இரும்புச் சத்தின் பெராக்ஸைடு ஆகும் (Peroxide of Iron). சகோத்ரா தீவில் கிடைக்கும் இப் பொருள் டிரேகனு சின்னபாரி (Dracana cinnabari) என்ற பெயரால் வழங்கப்படுகிறது. 'டிரேகனு' என்பது டிரேகன் (Dragon) அதாவது 'பறவை நாகம் என்பதைக் குறிப்பிடுகிறது—அதாவது இறக்கையுள்ள பாம்பினம். மற்றும் இது டிரேகன்ஸ் பிளட் (Dragons Blood) என்றே வழங்கப்படுகிறது. இது வெர்மிலியன் (Vermillion) என்றும் வழங்கப்படுகிறது.

**9. இரசகந்தக மரத்திலிருந்து சுரக்கும் திரவம்**
(Resin of Cinnabar Tree)

இது செயற்கைக் கலவையே தவிர, இயற்கையாக உண்டாவதல்ல. யாரோ பயணிகள் சொல்லக் கேட்டு இவற்றைப் பெரிப்ளுஸ் ஆசிரியர் எழுதிவிட்டிருக்கவேண்டும். சொன்னவர்கள் சரியாகச் சொல்லி, இவர் தவருக எழுதியும் இருக்கக்கூடும் இவர் கூறும் மரவகை கிடையாது. சின்னபார் என்பதி உள்ள பார் (Bar) என்பதற்குப் பட்டை (Bark) எனப் பொருள் கொண்டு அவ்வாறு எழுதியிருக்கக் கூடும் என்று யூகிக்கப்படுகிறது.

# 31. டிஸ்கார்டியாவின் வாணிகம்

அஜானியா[1] எனப்படும் நாடு எவ்வாறு கரிபெல்[2] அரசருக்கும், மபாரிட்டிஸ் தலைவருக்கும்[3] கீழ்ப்படிந்து உள்ளதோ, அவ்வாறே டிஸ்கார்டியா தீவும்[4] வாசனைப் பண்டம் தரும் நாட்டு அரசனுக்குக்[5] கீழ்ப்படிந்து நடக்கிறது. அங்கு வாணிகம் மூஸாவிலிருந்து[6] வந்த வணிக மக்களால் நடத்தப்படுகிறது. அவர்கள் அரிசி, கோதுமை, இந்தியத் துணிகள், மற்றும் பெண் அடிமைகள்[7] ஆகிய

வற்றைக் கொண்டு வருகின்றனர். அவற்றுக்குப் பதிலாக ஆமையோடுகளைப் பேரளவில் மாற்றிக்கொண்டு செல்கின்றனர். இப்பொழுது அந்தத் தீவு அரசர் பெயரால் உழுது பயிரிடப்படுகிறது. மற்றும் அரசாங்கச் சேனை ஒன்றும் அங்கு வைக்கப்பட்டுள்ளது[8]

## விளக்கவுரை

**1. அஜானியா** (Azania)

இந் நாடு முதலில் அஜ்ஜான் (Ajjan) என்று வழங்கப்பட்டது. இன்று இது மோம்பாஸா (Mombaza) ஜான்ஸிபார் (Zanzibar) இடையேயுள்ள கடல் அஜானியன் கடல் (Azanian Sea) என்று வழங்கப்படுகிறது. அதைச் சார்ந்த பகுதி அஜானியா ஆகும், ராஸ் எல்கில் (Ras-El-kil) என்பதில் முடிவடைகிறது.

அஜானியா இருப்பிடம்: 7°·44'வ × 49°·40'கி.

மற்றும் அதிகாரம் 15, குறிப்புகள் 2,3 பார்க்கவும்.

அஜானியா அரசர் கரிபெலுக்கும் (Caribeal) (கி.பி. 40–70) மபாரிட்டே (வட அரேபியா நாட்டு அரசர்) அரசருக்கும் கீழ்ப் படிந்து வந்தது.

**2. கரிபெல்** (Charibeal)

இப் பெயர் கொண்ட அரசர் (கி.பி. 40-70) அரேபியாவிலிருந்து கொண்டு ஆண்டு வந்தார். இயூடிமான் எனும் துறைமுகம் இவரால் அழிக்கப்பட்டது (கி.பி. 50). யூடிமான் என்ற சொல் இன்றுள்ள ஏடென் (Aden) உள்ள பகுதியைக் குறிப்பிடும். அஜானியா நாடு கரிபெல் அரசருக்குக் கீழ்படிந்து நடந்து வந்தது.

மற்றும் அதிகாரம் 23, குறிப்பு-2; அதிகாரம் 26, குறிப்பு-45 பார்க்கவும்.

**3, மபாரிட்டுத் தலைவர்** ((Mapharites Chieftain)

மபாரிட்டே நாடு தென் அரேபியாவைக் குறித்தது. இது யெமன் பகுதியிலிருந்த மக்களைக் குறிப்பிட்டது. இவர்கள் ஹிம்யாரிடிக் (Himyaritic) வகுப்பினை சார்ந்தவர்கள். இந் நாட்டுத் தலைவன் ஸாவா (Sawa) என்ற இடத்திலிருந்து அஜானியாவை ஆட்சி செய்தான்.

ஸாவாவின் இருப்பிடம் : 15°·36'வ×48°·27'கி. மற்றும் அதிகாரம் 22, குறிப்பு-2 பார்க்கவும்.

**4. டிஸ்கார்டியா தீவு** (Discordia Island)

இது நவீன சொகோத்ரா (Socotra) பகுதியில் உள்ளது. இது 'சுவர்க்கத் தீவு' என்பதன் திரிபே. இது வடமொழியில் 'த்வீப சுகாதார' என்று வழங்கப்பட்டது. இத் தீவு பிளினியால் குறிப்பிடப்பட்டுள்ளது.

—(**பிளினி**: புத்தகம் VI, அதிகாரம் 32)

டிஸ்கார்டியா தீவின் இருப்பிடம்: 12°·30'வ×50°·0' கி. மற்றும் அதிகாரம் 30, குறிப்பு-2 பார்க்கவும்.

**5. வாசனைப் பண்டம் தரும் நாட்டின் அரசன்** (The King of the Land of spices)

வாசனைப் பண்டம் தரும் நாடு என்பது இங்கு அரேபியாவைக் (Arabia) குறிப்பிடுகிறது. சொகோத்ரா தீவு அதாவது டிஸ்கார்டியா தீவு உள்ள பகுதி தென் அரேபியாவில் (Hadramaut) உள்ள முகல்லா (Mukalla) பகுதியின் அரசரால் ஆளப்பட்டது. அவ்வரசர் ஆட்சிக்குக் கீழ்ப்படிந்திருந்தது. இத் தொடர்பு நீண்ட காலமாக இருந்து வருவதாக வரலாற்றுப் பேராசிரியர்கள் கருதுகின்றனர்.

முகல்லாவின் இருப்பிடம் : 13°·20'வ×48°·27'கி.

**6. மூஸா** (Muza)

இவ்விடம் இன்று மோசா (Mocha) என்று வழங்கப்படுகிறது. இதனருகில் விளங்கும் மௌஜா (Mauza) எனும் கிராமமே அன்று மூஸாவாக இருந்தது. இது மிகச் சிறந்த வாணிகச் சந்தை கூடும் துறைமுகமாக விளங்கிற்று.

மூஸாவின் இருப்பிடம்: 13°·20'வ×43°·12'கி.

மற்றும் அதிகாரம் 21, குறிப்பு-2 பார்க்கவும். இது பிளினி (கி.பி. 23-79) யாலும் குறிப்பிடப்பட்டுள்ளது.

—(**பிளினி**: புத்தகம்VI அதிகாரம் 26, குறிப்பு—75, பக்கம் 128)

**7. பெண் அடிமைகள்** (Women Slaves)

ஆப்பிரிக்காவிலிருந்து ஆண் அடிமைகளும், இந்தியாவிலிருந்து பெண் அடிமைகளும் வாசனைப் பண்டங்கள் பொறுக்க இறக்குமதி

செய்யப்பட்டனர். இவர்களுடன் அரிசி, கோதுமை, இந்தியத் துணிகள் ஆகியனவும் மூசா (Muza) துறைமுகத்தில் இறக்குமதி செய்யப்பட்டன என்று பெரிப்ளூஸின் ஆசிரியர் கூறுகிறார்.

**8. அரசாங்கச் சேனை** (King's Army)

வாணிகர்ச் சந்தை கூடும் நகரில்–துறைமுகத்தில்—சுங்க வரி வசூல் செய்யும் பொழுது கலகம் நேரக்கூடுமாதலால், அதைத் தவிர்க்க அங்கு அரசரின் சேனை வைக்கப்பட்டிருந்தது. அக் காவல் துறையினர் கலகத்தை அடக்கி, சுங்கவரி வசூலைப் பாதுகாத்த தோடு, உள்நாட்டு அமைதியையும் ஒரே நிலையில் இருக்குமாறு செய்தனர்.

---

# 32. ஓமனு வளைகுடா

சையாகரஸ்[1] துறைமுகத்துக்கு அடுத்தாற்போல ஓமனு[2] என்ற வளைகுடா, கடற்கரையில் மிகவும் ஆழமான பகுதியை ஏற்படுத்தியுள்ளது. அதன் அகலம் 600 ஸ்டேடியா[3] ஆகும். இப் பகுதிக்கு 500 ஸ்டேடியா அடுத்தாற்போலுள்ள பிரதேசத்தில் மிக உயர்ந்ததும், செங்குத்தானதும், பெரும் பாறைகளாலானதுமான மலைகள் தொடர்ந்து காணப்படுகின்றன. அவை குகை வாழ் மக்களால் வாழ்விடங்களாகப் பயன்படுத்தப்படுகின்றன. இதற்கும் அப்பால் துறைமுகம் ஒன்று நிர்மாணிக்கப்பட்டுள்ளது. அத் துறைமுகம் மூஸா என்று பெயர் பெறும். கானேயிலிருந்து[4] அவ்வப்போது கப்பல்கள் அங்கு வந்து செல்லும் வண்ணமாக உள்ளன. மற்றும், டிமிரிகா,[5] பாரிகாஸா[6] முதலான இடங்களிலிருந்து திரும்பும் கப்பல்கள் குளிர்காலம் வந்ததன் காரணமாகச் சிலபொழுது அத் துறைமுகத்தில் தங்கி இளைப்பாறுவதுண்டு. அவை அரசாங்க அலுவலர்களுடன் வாணிகம் நடத்தித் தாங்கள் கொண்டுவந்த துணி, கோதுமை, எண்ணெய் ஆகியவற்றிற்கு வாசனைப் பொருள்களைப் பண்டமாற்றிக் கொள்கின்றன. இவ்

வாசனைப் பண்டங்கள் பெருங் குவியலாகச் சாக்கலேட்டு நாடு[7] முழுவதும் குவிக்கப்பட்டுக் கிடக்கின்றன. அவை வெட்டவெளியிடங்களில் பாதுகாப்பின்றிக் கொட்டி வைக்கப்படுகின்றன. அவ்விடங்கள் தெய்வங்களின் பாது காப்பில் இருப்பதுபோல் தோன்றுகின்றன. அவற்றைத் திருட்டுத்தனமாகவோ அல்லது கேட்காமலோ அரசரின் எவ்வித அனுமதியும் இன்றி எடுத்துச் செல்லமுடியாது. இவ்வாறு அனுமதியின்றிக் கப்பலில் ஒரு தானிய மணி யேனும்—அவ்வளவு சிறிய அளவேனும்—ஏற்றப்பட்டது தெரிந்துவிட்டால், அக் கப்பல் அந்தத் துறைமுகத்தி லிருந்து சிறிதேனும் வெளியே நகரமுடியாது[8].

## விளக்கவுரை

**1. சையாகரஸ்** (Syagarus)

இதுவே சைகரஸ் என்று அதிகாரம் 30-ல் கூறப்பட்டது. இது நவீன ராஸ் பார்டாக் (Ras-fartak) என்பதைக் குறிப்பிடும். சௌகார்(Saugar) எனப்படுபவர் வாசனைப் பண்டங்களைச் சேகரிப்பதில் வல்லுநர். எனவே அவர் வாழ்ந்த நாடு சையாகரஸ் (Syagrus) என்று வழங்கப்பட்டது. சௌகாரஸ் (Saugaros) என்பது சையாகரஸ் என்று திரிந்தது

பிளினியும் இதைக் குறிப்பிட்டுள்ளார்.

(**பிளினி:** புத்தகம் VI அதிகர்ரம் 26, குறிப்பு-53, பக்கம் 124)

சையாகரஸ் இருப்பிடம்: 15°·36' வ × 52°·12' கி. மற்றும் அதிகாரம் 30, குறிப்பு-1 பார்க்கவும்.

**2. ஓமனு வளைகுடா** (Gulf of Omana)

ஓமனு வளைகுடா (Gulf of omana) பாரசீக வளைகுடாவை (Persian Gulf) ஒட்டி உள்ளது. ஓமனுவைத் தாண்டித்தான் பாரசீக வளைகுடாவுக்குச் செல்லவேண்டும்.

ஓமன் இருப்பிடம்: 23°·30' வ × 57°·0' கி. மற்றும் அதிகாரம் 27, குறிப்பு–10 பார்க்கவும்.

**3. 600 ஸ்டேடியா** (600 Stadia)

ஒரு ஸ்டேடியம் என்பது ஒரு பர்லாங் அளவைக் குறிப்பிடும். இங்குக் குறிப்பிட்ட அளவு 75 மைல்கள் (120 கி.மீ.) ஆகும்.

மற்றும் அதிகாரம் 1, குறிப்பு–5 பார்க்கவும்.

**4. கானேயிலிருந்து கப்பல்கள் வருகின்றன** (Frequent movement of ships from Canae)

இது பிர்அலி (Birali) அருகில் உள்ள ஹிஸன் கோரப் (Hisn–Gorab) என்று கருதப்படுகிறது.

பிர் அலியின் இருப்பிடம்: 13°·20'வ×48°·0'கி. இது அரேபியாவில் தென் பகுதியில், ஹைட்ரமௌத் (Hydramaut) எனப்படும் இடத்தில் உள்ளது. இது வாணிகச் சந்தை கூடும் நகரமாகும்.

மற்றும் அதிகாரம் 27, குறிப்பு–4 பார்க்கவும்.

இந்தக் கானேயிலிருந்து கப்பல்கள் மூஸா (Muza)விற்கு வந்து போகும். மூஸா என்பதுதான் நவீன மோசா (Mocha).

மோசாவின் இருப்பிடம்: 13°·20' வ×43°·42' கி.

**5. டிமிரிகா** (Dimirica)

தமிழகம் என்பதன் இலத்தீன் உச்சரிப்பே 'டிமிரிகா' ஆகும். தாலமி (கி.பி. 119-161) தமிழகத்தை லிமிரிகே (Limirike) என்று வழங்கினர். இவ் வேறுபாட்டிற்குப் பின்வருமாறு காரணம் கூறப்படுகிறது:

இலத்தீன் மொழியில் லி, டி ஆகிய எழுத்துகள் ஒரே மாதிரியான வடிவம் கொண்டவை. (லி Λ; டி Δ) ஆகவே, டிமிரிகாவில் உள்ள டி (Δ)யின் அடிக்கோடு, அழிந்து மறைந்து விட்டதன் காரணமாக, அச் சொல்லே தாலமியால் லிமிரிகே என்று வழங்கப்பட்டது. ஆகையால் டிமிரிகா (Dimirica) என்பதே தமிழகம் என்பதன் மரூஉ. அக் காலத்தில் தென்னாடு, 'தமிழகம்' என்ற பெயரால் விளங்கிற்று என்று பெரிப்ளூஸ் வரலாற்றால் தெரிய வருகிறது.

'டிமிரிகாவில் உள்ள 'கா' என்பது நாட்டைக் குறிப்பிடும் கிரேக்கச் சொல்லாகும். இண்டிகா என்பது இந்திய நாடு எனவும், ஆப்பிரிகா என்பது ஆப்பிரிக்க நாடு என்றும் வழங்கப்பட்டது போல.

'லிமிரிகா' என்று தவருக எழுதியதுமல்லாமல், அதை 'லெமூரியா கண்டம்' என்று மொழி பெயர்த்தும் விட்டனர். 'திராவிட நாடு என்பதை, யுவான் சுவாங் எனும் சீனப் பயணி (கி.பி. 629-645) தி-லோ-பி-டோ என்று வழங்கினுர். திராவிட நாடு என்பது தமிழகம் ஆகும்.

—(**யுவான் சுவாங்:** பக்கம் 162)

**6. பாரிகாஸா** (Barygaza)

இது நவீன புரோச் (Broach) என்னும் துறைமுகத்தைக் குறிப்பிடுகின்றது. பிருகு-கச்சா என்பதே பாரிகாஸா ஆகி, அதுவே புரோச் ஆக மாறிவிட்டது.

பாரிகாஸாவின் இருப்பிடம்: 21°·43'வ × 73°·1' கி. மற்றும் அதிகாரம் 14, குறிப்பு-3 பார்க்கவும்.

**7. சாக்கலேட்டு நாடு** (Sachalites)

இது சாகலேட் விரிகுடா (Bay of Sachalites) என்று வழங்கப்படுகிறது. 'ஸ்வாஹிலி' என்ற சொல்லே சாக்கலேட் எனத் திரிந்து வழங்கப்படுகிறது. இது ஸௌகிரா விரிகுடா (Sauquira Bay)வின் உள்ளடங்கிய பகுதி. ஜதாத் அல்ஹரசிஸ் (Jaddat al harasis) என்பதே முன்னர் சாக்கலேட் என்று வழங்கப்பட்டதாகக் கருதப்படுகிறது. இங்கு விரிகுடா மிகவும் வளைந்து உள்ளடங்கி உள்ளது.

ஜதாத் அல்ஹரசிஸ் இருப்பிடம்: 18°·0'வ × 57°·0' கி. மற்றும் அதிகாரம் 29, குறிப்பு–2 பார்க்கவும்.

**8. ஒரு சிறு தானிய மணியேனும் எடுத்துச் செல்ல முடியாது.** (Impossible to steal even a grain)

அரசரின் இராணுவம் அத்தகைய விழிப்புடன் தன் கடமையைச் செய்ததால், அங்கிருந்து ஒரு சிறிய தானிய மணியேனும் எடுத்துச் செல்ல முடியாது என்று கருதப்படுகிறது. வணிக மக்களும் மிகவும் எச்சரிக்கையுடன் நடந்து கொண்டனர். எவரையும் ஏமாற்ற முடியாது.

———

# 33. அசிக், ஜெஞ்ஞேபியன் தீவுகள்

மூஸா[1] எனும் துறைமுகத்துக்கப்பால் 1500 ஸ்டேடியா[2] கடந்து சென்றால் அசிக்[3] எனும் நாடு வருகிறது. அந் நாடு வரையில் கடற்கரை ஓரமாகவே மலைத் தொடர் ஒன்று படர்ந்து செல்வது காணப்படும். இதன் முடிவில், அடுக்கடுக்காக ஜெஞ்ஞேபியன்[4] என்ற பெயரால் வழங்கப்படும் ஏழு தீவுகள்[5] காணப்படும். இம் மலைத் தொடருக்கு அப்பால் நாகரிகமற்ற மக்கள் கொண்ட நாடு ஒன்று உண்டு. அந் நாடு,பழைய அராபிய நாட்டிற்குச் சேர்ந்ததாயில்லாமல், இப்பொழுது பாரசீக நாட்டிற்குச்[6] சேர்ந்ததாயுள்ளது. இக் கடற்கரைவழியாகவே, ஜெஞ்ஞேபியன் தீவுகளிலிருந்து கப்பலூர்ந்து 2000 ஸ்டேடியா வரை சென்றால், அருகே செராபிஸ்[7] என்ற பெயரால் வழங்கப்படும் தனியான தீவு ஒன்று காணப்படுகிறது. அத் தீவு தாய் நாட்டுக் கடற்கரையினின்று 120 ஸ்டேடியா தொலைவில் உள்ளது. அத் தீவின் அகலம் 200 ஸ்டேடியா; நீளம் 600 ஸ்டேடியா.இத் தீவு மீன் தின்னிகளால்[8] குடியாட்சியாக நடத்தப்படுகிறது. அவர்கள் கொடுந்தன்மை வாய்ந்தவர்கள் ஆவர்; அராபிய மொழியைப்[9] பயன்படுத்துகின்றனர். மற்றும், தென்னை ஓலைகளால் ஆன ஆடைகளை அணிந்து கொள்கின்றனர்.[10] இங்கே உயர்ந்த ரக ஆமை ஓடுகள்[11] பெருவாரியான அளவில் சேகரிக்கப்படுகின்றன. பாய்மரம் விரிக்கப்பெற்ற சிறுபடகுகளும், வாசனைப் பண்டங்கள் ஏற்றிச் செல்லும் கப்பல்களும் கானேயிலிருந்து[12] அவ்விடத்துக்குக் குறித்தகாலத்தில் இடைவிடாது அனுப்பப்பட்டு வருகின்றன.

### விளக்கவுரை

**1. மூஸா** (Muza)

இது நவீன மோசா (Mocha) துறைமுகத்தைக் குறிப்பிடுகிறது. மற்றும்,பண்டை வாணிகச் சந்தை கூடுமிடமும் ஆகும். இது அரேபியாவின் தென்மேற்குப் பகுதியில் உள்ளது.

இதன் இருப்பிடம்: 13°·20'வ×43°·12' கி. மற்றும் அதிகாரம் 21, குறிப்பு-2 பார்க்கவும்.

**2. 1500 ஸ்டேடியா** (1500 Stadia)

ஒரு ஸ்டேடியம் என்பது ஒரு பர்லாங் அளவைக் குறிப்பிடும். இங்கு 1500 ஸ்டேடியா என்பது 187½ மைல்கள் (300 கிமீ) ஆகும். மற்றும் அதிகாரம் 1, குறிப்பு-5 பார்க்கவும்.

**3. அசிக்** (Asich)

இது இப்பொழுது சுபாட் ஹஷிஷ் (Chubaat Hashiz) என்று வழங்கப்படுகிறது. இதன் அருகில் ஏழு தீவுகள் காணப்படுகின்றன. இவை மசீரா தீவுக்குத் (Masira Island) தெற்கே 90 மைல்கள் (144 கிமீ.) தொலைவில் உள்ளன. மசீரா வளைகுடாவில் (Gulf of Masira) உள்ளன.

ஹஷிஷ் இருப்பிடம்: 20°·0'வ×58°·36'கி.

**4. ஜெஞேபியன்** (Zenobean)

ஏழு தீவுகள் உள்ள இடம் சுபாட் ஹஷிஷ் (Chubaat Hashiz) எனப்படுகிறது. இவ்விடத்தின் பெயர் ஜெஞேபியன் (Zenobean) என்பதாகும். இவை மசிரா வளைகுடாவில் (Gulf Masria) இருக்கின்றன.

இருப்பிடம்: 20°·0'வ×58°·36' கி.

**5. ஏழு தீவுகள்** (Seven Islands)

இவை ஜெஞேபியம் என்ற பெயரால் வழங்கப்பட்டன. மற்றும் இவை மசிரா வளைகுடாவில் (Gulf of Masira) உள்ளன.

இருப்பிடம்: 20°·0'வ×58°·36' கி.

**6. பாரசீக நாட்டிற்குச் சேர்ந்ததாயுள்ளது** (Belonging to Persia)

இத் தீவுகளுக்கப்பால் உள்ள நாடு நாகரிகமற்ற மக்கள் வாழ்ந்து வந்ததாகும். முன்னர் அந் நாடு அராபிய நாட்டின் அரசர் ஆணையின் கீழிருந்தது. பெரிப்ளுஸின் ஆசிரியர் காலத்தில் அந் நாடு பாரசீக அரசர்களின் ஆளுகையின்கீழ் வந்துவிட்டது.

**7. செராபிஸ் தீவு** (Island of Cherrabis)

ஜெஞேபியன் தீவுகள் உள்ள இடத்திலிருந்து 2000 ஸ்டேடியா (250 மைல்கள்—400 கிமீ) தொலைவில் செராபிஸ்

(Cherrabis) தீவு உள்ளது. இது இப்பொழுது ராஸ்ஜிபிஷ் (Ras-jibish) என்று வழங்கப்படுகிறது.

ராஸ்ஜிபிஷ் இருப்பிடம்: 21°·5'வ×59°·0' கி.

மற்றும் சிலர் இச் சொல் ஓசோர் ஹாபி (Osor-hapi) என்பதன் திரிபு என்றும், அதன் பொருள் காளையை வணங்குவோர் (Bull worshippers) என்றும் கூறப்படுகிறது. ஓசோர்-ஹாபியே நவீன மசிரா தீவு (Masira Island) ஆகும்.

இருப்பிடம்: 20°·0வ×58°·36' கி.

**8. மீன் தின்னிகள்** (Icthyophogis)

இவர்கள் நாகரிக மற்ற மக்களாகக் கருதப்பட்டனர். குகைகளில் வசித்து வந்தனர் என்றும் கூறப்படுகிறது. மற்றும் அதிகாரம் 2, குறிப்பு-3 பார்க்கவும்.

**9. அராபியமொழி** (Arabic language)

மேற்கூறப்பட்ட மீன் தின்னிகள் அராபிய நாட்டில் மலைக் குகைகளில் வசித்து வந்ததால், அவர்கள் யாவரும் அராபிய மொழியையே பேசிவந்தனர்.

**10. தென்னை ஓலைகளாலான ஆடைகள்** (Dress made of palm-leaves)

தென்னை ஓலைகளைக் கிழித்துப் பாய்போல் முடைந்து, ஆடையாகப் பயன்படுத்தி வந்தனர். குகைவாழ் மக்கள் ஆன காரணத்தினால், அவர்கள் அதை நாகரிகக் குறைவான செயலாகக் கருதவில்லை.

**11. ஆமை ஓடுகள்** (Tortoise Shells)

இவர்கள் வாழும் இடத்தில், மலைஆமைகள் வாழ்ந்து வந்தன. அவற்றின் ஓடுகளைப் பெரும் அளவில் சேகரித்து வாணிகம் செய்து வந்தனர்.

**12. கானே** (Canae)

பிர்அலி (Birali) அருகில் உள்ள ஹிஸன் கோரப் (Hsn Gorab) என்பதைக் குறிப்பிடுகிறது. இக் கானே (Canae) யிலிருந்து மூஸா (Muza)—நவீன மோசா (Mocha)-விற்குக் கப்பல்கள் அடிக்கடி வாசனைப் பண்டங்களை ஏற்றிச் செல்லும்.

பிர் அலியின் இருப்பிடம்: 13°·20'வ×48°·0' கி.

---

# 34. காலே தீவுகள்

இங்குக் கூறப்பட்ட கடற்கரை வழியாகவே கப்பல் ஊர்ந்து சென்ருல், வடக்கு நோக்கிப் பாரசீக வளைகுடாத்[1] தொடக்கத்தில் காலே[2] எனும் பெயர்கொண்ட தீவுகள் பல காணப்படுகின்றன. அவை 2000 ஸ்டேடியா[3] சென்றபிறகு காணப்படுகின்றன. அவை கடற்கரை அருகில் உள்ளன. அத் தீவுகளின் ஆதிவாசிகள் மிகுந்த கொடுமை வாய்ந்தவர்கள் ஆவர்; மற்றும் மிக மிகக் குறைந்த நாகரிக வளர்ச்சியடைந்தவர்கள் ஆவர்[4].

## விளக்கவுரை

**1. பாரசீக வளைகுடா** (Persian Gulf)

இவ் வளைகுடா அரேபியாவின் முனையிலிருந்து, ஓமன் (Oman) நாட்டிலிருந்து தொடங்குகிறது.

இவ் வளை குடாவின் இருப்பிடம்: 27°·0'வ × 51°·0'கி.

**2. காலே** (Calei)

இக் காலே தீவுகள் பாரசீக வளை குடாவின் (Persian Gulf) தொடக்கத்தில் உள்ளன. இவை ஹார்மஸ் தீவு (Hormuz Island), குயிஷம் தீவு (Qishm Island) என்பவற்றைக் குறிப்பிடுகின்றன. இவை ஓமளு வளை குடாவின் முதலிலும், பாரசீக வளை குடாவின் தொடக்கத்திலும் காணப்படுகின்றன. பந்தார் அப்பாஸ் (Bandar Abbas) இடத்திற்குத் தெற்கே உள்ளது.

ஹார்மஸ், குயிஷம் தீவுகளின் இருப்பிடம்: 27°·5'வ × 56°.27'கி.

மற்றும் சிலர், இது மஸ்காட் (Muscat) இடத்துக்கு வடமேற்கே உள்ள காலுப் (Kaluf) என்பதைக் குறிப்பிடுவதாகவும், மற்றும் சிலர் டைமானியத் தீவைக் (Daimaniyat) குறிப்பதாகவும் கொள்கின்றனர். மஸிரா (Masira) வுக்கு வடக்கே உள்ள காலுப் (Khaluf) என்பதையும் குறிப்பிடக் கூடும். அதன் அருகில் ஒரு தீவு உள்ளது.

டைமானியத் தீவின் இருப்பிடம்: 23°·48'வ × 58°·0'கி.

காலே என்னும் சொல்லுக்கு 'விஷத்தன்மை கொண்ட மக்களை உடைய நாடு' என்று பொருள் கூறபடுகிறது. காளம் என்றால் நஞ்சு என்ற பொருள் உண்டு. காலே எனும் சொல் காளம் என்றதன் அடிப்படையில் பிறந்ததாகக் கூறலாம்.

மற்றும், காளம் என்பது அவுரியைக் (Indigo) குறிப்பிடுகிறது. இந்தியாவிலிருந்து நீலத் துணிகள் (Indigo cloth) ஏற்றுமதி செய்யப்பட்டன. அந்த அவுரிச் சாயத்தில் நனைத்த துணியே நீலத் துணிகள். ஆகையால், காலே தீவில் அவுரிச் செடிகள் மிகுதியாக இருந்தன என்றும் பொருள்கொள்ளலாம். ஆனால், இப்பொழுது காலே என்ற பெயர் கிடையாது.

**3. 2000 ஸ்டேடியா** (2000 Stadia)

ஒரு ஸ்டேடியம் என்பது ஒரு பர்லாங் அளவைக் குறிப்பிடும். இங்குக் குறிப்பிட்ட அளவு 250 மைல்கள் (400 கி.மீ.) தொலைவைக் குறிப்பிடுவதாகும்.

**4. கொடுமை வாய்ந்தவர்கள்; நாகரிகம் குறைந்தவர்கள்** (Wicked and barbarous)

இத் தீவுகள் சிறியவை ஆதலால், மக்கள் அயல் நாட்டினரை அண்டவிடாதவாறு செய்தனர். போர் செய்யும் குணம் வாய்ந்தவர். அவை மீன் தின்னிகள் (Icthyophogis) நிறைந்த தீவுகள். அவர்கள் குகைவாசிகள் ஆன காரணத்தால், நாகரிகம் குறைந்தவராகக் கருதப்பட்டனர்.

---

# 35. அபோலோகஸ்

காலே தீவுகளின்[1] முடிவில், மேற்பகுதியில் தொடர்ச்சியான மலைத்தொடர்[2] ஒன்று உள்ளது. அதன் பெயர் கெலான்[3] என்பதாகும். பாரசீக வளைகுடாவுக்கு[4] வெகு தொலைவில் அல்லாமல், அதற்கருகிலேயே பச்சை நிறம் வாய்ந்த முத்துகள்[5] உள்ள முத்துச்சிப்பிகளைக் கடலுள் மூழ்கி எடுக்கின்றனர். இந்த வளைகுடாவுக்கு இடப்பக்கத்தில் அசபான்[6] எனப் பெயருள்ள மலை காணப்படுகிறது. மற்றும், செமிரிஸ்[7] என்ற மலையும் காணப்படுகிறது. இம் மலை மிகவும்

உயர்ந்ததாயும், வட்டவடிவமாயும், அதன் முழு உருவமும் கண்களுக்குக் காட்சியளிக்கிறது. அவற்றுக்கிடையே வளைகுடாவின் குறுக்களவு 600 ஸ்டேடியா[8] ஆகும். இதற்குமப்பால் — இதைக் கடந்து சென்றால், அகலமாயும் பெரியதாயும் உள்ள பாரசீக வளைகுடா உள்ளுக்குள் நீண்ட தொலைவு செல்கின்றது. இவ்வளைகுடாவின் உயர்ந்த முனையில்[9] சட்டபூர்வமாக நிர்மாணிக்கப்பட்டுள்ளதும், அபோலோகஸ்[10] எனும் பெயர் கொண்டதுமான வாணிகச்சந்தை நகர்ஒன்று காணப்படுகிறது. இந் நகரம் ஸ்பாசினி[11] எனும் இடத்துக்கும், சாரக்ஸ்[12] எனும் இடத்துக்கும் இடையிலேயே அமைந்திருந்தது.

## விளக்கவுரை

**1. காலே தீவுகள்** (Calei Islands)

இவை பாசிரக வளைகுடாவின் நுழைவாயிலில் உள்ள ஹார்மஸ் தீவு, குயிஷம் தீவு ஆகிய இரு தீவுகளைக் குறிப்பிடுகின்றன.

அத் தீவுகளின் இருப்பிடம்: 27°·5'வ × 56°·27'கி. மற்றும், அதிகாரம் 34, குறிப்பு-2 பார்க்கவும்.

**2. தொடர்ச்சியான மலைத்தொடர்** (Continuos Mountain Range)

இம் மலைத் தொடர் காலே மலை என்று வழங்கப்பட்டது. காலுப் என்ற பெயரால் இன்று வழங்கப்படுகிறது.

**3. அம் மலைத் தொடரின் பெயர் கெலான்** (Calon, the Name of the Range)

மேற்கூறப்பட்ட மலைத்தொடர் கெலான் (Calon) என்று வழங்கப்பட்டதாகப் பெரிப்ளூஸின் ஆசிரியர் கூறுகிறார். இப்பொழுது அதன் பெயர் மாறியுள்ளது. ஹைட்ரமௌத் (Hydramaut) இடத்துக்கு வட கிழக்கில் காலிப் (Khalif) எனும் பகுதியைக் குறிப்பிடக்கூடும்.

**4. பாரசீக வளைகுடா** (Persian Gulf)

இவ் வளைகுடாவிற்கருகில் ஓமனா (Omana)வில் முத்துகள் மூகிழ்ந்தெடுக்கப்பட்டன. அவை பச்சை முத்துகளாக இருந்தன.

ஓமனா வளைகுடாவின் இருப்பிடம்: 23° 30'வ × 57°·0'கி.

**5. பச்சை நிறம் வாய்ந்த முத்துகள்** (Pearl Mussel)

இவ்வகைப் பச்சை முத்து மரகதம் (Margaritum) எனப் பெயர் பெறும். இது இலத்தீன் மொழியில் மெலிக்ரினு மார்கரெட்டி ஃபெர்ன் (Melagrina margareti fern) என்று வழங்கப்பட்டது. ஃபெர்ன் (Fern) என்பதால், இது பாசி வகையைச் சார்ந்ததாகக் கருதப்பட்டது.

மரகதம், சிலபொழுது மரதகம் என்றும் வழங்கப்பட்டது.

"செம்பவள மரதகம் நன் முத்தம் காட்டத்
திகழ்பூகம் கதலி பலவளம் மிக்கு எங்கும்,"

—[பெரிய திருமொழி-7-8-8 (5-6)]

"மரகத மணியோடு வயிரங்குயிற்றிய"

—(சிலப்பதிகாரம் 5-147)

"மரகதக் கதிரும்" —(பெரியபுராணம், அமர்நீதி, 7.)

**6. அசபான் மலை** (Asaban Mountain)

இதன் நவீன பெயர் ராஸ் ஜெபல் (Ras-jabel). இதன் உயரம் 2800' அடிகளாகும் (840 மீ.). இத் தொடர் ராஸ் முசண்டிரம் (Rasmusandrum) என்ற முனைவரைத் தொடர்ந்து செல்கிறது.

இருப்பிடம்: 27°·5' வ × 56°·27' கி.

இது ஹார்மஸ் (Hormuz) விரிகுடா அல்லது ஆர்மஸ் கடற்கால் (Strait of Ormuz) என்றும் வழங்கப்பட்டது.

**7. செமினாரிஸ்** (Seminaris)

இது கோ–ஹி-முபாரக் (Ko-Hi Mubarak) என்பதைக் குறிப்பிடுவதாகச் சிலர் கருதுகின்றனர். ஆனால், இங்குள்ள முபாரக் (Mubarak) பெஹ்ரின் தீவு உள்ள இடத்தில்தான் உள்ளது. ஆகையால், செமினாரிஸ் வேறு இடத்தைக் குறிப்பிடவேண்டும்.

செமினாரிஸ் என்ற சொல் ஷெமாரிடா (Shemarida) என்ற சொல்லின் திரிபே. அதன் பொருள் 'புனிதமானவை; 'உயர்ந்தவை' என்பதே. ஓமன் முனையிலுள்ள ராஸ் முஸன்டிரம் (Ras Musandrum) பழங்காலத்திலிருந்தே அராபிய மக்களால் ஒரு புனித இடமாகக் கருதப்பட்டது. அங்குள்ள கோயிலுக்குப்

பெரும் காணிக்கைகள் கொடுக்கப்பட்டன. பேரிடர்கள் யாவற்றையும் அத் தெய்வம் தடுத்து நிறுத்தியதாகக் கூறப்படுகிறது.

ராஸ்முஸண்டிரம் இருப்பிடம்: 27°·5'வ×56°·27'கி.

**8. 600 ஸ்டேடியா** (600 Stadia)

ஒரு ஸ்டேடியம் (Stadium) ஒரு பர்லாங்குத் தொலைவைக் குறிப்பிடும். ஆக, இங்குக் குறிப்பிடப்பட்ட அளவு 75 மைல்கள் (126 கி.மீ.) ஆகும். மற்றும், அதிகாரம் 1, குறிப்பு—5 பார்க்கவும். இத் தொலைவைக் கடந்து பாரசீக வளைகுடா (Persian Gulf) நீண்ட தொலைவு உள்ளுக்குள் செல்கிறது.

**9. பாரசீக வளைகுடாவின் உயர்ந்த முனை** (Persian Gulf's Highest Cape)

இவ்விடம் ஓபோலோ (Obolloh) என்ற நவீன இடத்தைக் குறிப்பிடுகிறது. இது ஸாரஸன் காலத்தில் வெகு முக்கியமான இடமாக-துறையாக- இருந்தது. இங்கிருந்து ஒட்டகம் போகும் பாலைவனக் கப்பல்வழிகள் பல பிரிந்து செல்கின்றன. அவ்விடத்தில், உபுலு (Ubulu) என்ற சொல் ஜோக்டான் (Joktan) என்பவரின் மகனுரான ஓபல் (Obal) என்ற தெய்வத்தின் பெயராக இடப்பட்டது.

இது பைபிளில் (Bible) குறிப்பிடப்பட்டுள்ளது. "ஜோக்டன் அல்மோதாத் என்பவரைப் பெற்றார்: மற்றும் ஷெலப் (Shelab) 'ஹெஸ்மரோத்' என்பவரையும் பெற்றார்; மற்றும் ஹடோரம் என்பவரையும் பெற்றார். மற்றும் ஓபால், அபிபேல் இருவரையும் பெற்றார்."

—[(Genesis (**ஆதியாகமம்** X-26-28)]

**10. அபோலோகஸ்** (Appologus)

இது ஓபொலோ (Obolo) என்ற நவீன இடத்தைக் குறிப்பிடும். இது ஓபால் (Obol) என்ற தெய்வத்தின் பெயரால் வழங்கப்படுவதாகக் கூறப்படுகிறது.

**11. பாசினி** (Spasini)

இது நவீன மொகமாராவைக் (Mohammarh) குறிப்பிடுவதாகும். இது ஷாட் எல் அரப் (Shat-el Arab) என்ற நதியின் கரையிலும், கருண் (Karun) எனும் கிளை நிதி கூடுமிடத்திலும் உள்ளது. இந் நகரம் அலெக்சாந்தர் பேரரசரால் (கி.மு. 356—323) நிர்மாணிக்கப்பட்டது.

இருப்பிடம்: 30°·24'வ ×48°·18'கி.

பிளினி இதைப் பற்றிக் குறிப்பிடுகிருர்:

(பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 31)

**12. சாரக்ஸ்** (Charax)

இது பார்த்திய (Parthia) நாட்டு அரசர்களின் சேனை இருந்த இடம் ஆகும். அச் சேனை, அங்கு நிலவி வந்த வாணிகத்தைக் காப்பாற்றிற்று. மற்றும் வணிகர்களுக்கும், கப்பல்களுக்கும், வாசனைப் பண்டங்களுக்கும் அச் சேனை மிகச் சிறந்த பாதுகாப்பை யளித்து நின்றது.

சாரச்ஸ் (Charax), ஷிராஸ் (Shiras) என்று வழங்கப்பட்டது. இது பார்த்திய நாட்டுத் தலைநகரான பெர்சிபாலிஸ் (Persepolis) அருகில் இருந்தது.

ஷிராஸின் இருப்பிடம்: 29°·30'வ × 52°·40'கி.

---

# 36. ஓமனுவின் இறக்குமதிப் பொருள்கள்

இவ் வளைகுடாவின்[1] வழியாகக் கடலூர்ந்து சென்ருல், ஆறு நாள்கள் பயணம் செய்த பிறகு பாரசீகத்தின் மற்றொரு வாணிகச்சந்தை கூடும் நகர் காணப்படுகிறது. அந் நகரின் பெயர் ஓமனு[2]. இவ்விரு சந்தைகள் கூடும் நகர்களுக்குப் பாரிகாஸாவிலிருந்து[3] குறித்த தவணைகளில் பெரிய கப்பல்கள் அனுப்பப்படுகின்றன. அக் கப்பல்களில் பித்தளை[4], சந்தனம்[5], தேக்குமரக் கட்டைகள்[6], கருங்காலி மரத் தூலங்கள், மற்றும் கறுப்பு நிறங் கொண்ட மரப்பலகைகள்[7] ஆகிய யாவும் கொண்டு வரப்படுகின்றன. கானே[8]விலிருந்து ஓமனுவிற்கு வாசனைப் பொருள்களும், ஓமனுவிலிருந்து அரேபியாவுக்குக் கயிற்ருல் பிணைக்கப்பட்ட பிணையல் கப்பல்களும்,[9] அக் கால நாகரிகத்திற் கேற்ப அனுப்பப்படுகின்றன. அப் பிணையல்

கப்பல்கள் மதரதா[10] எனும் பெயரால் வழங்கப்படும். இவ் வாணிகச் சந்தை கூடும் நகர்களினின்று பாரிகாஸா விற்கும், அரேபியாவிற்கும் பலவகை முத்துகள்[11] ஏற்று மதி செய்யப்படுகின்றன. ஆயினும், இம் முத்துகள் இந்தியாவின் முத்துகளை விட மிகவும் தாழ்ந்த இனத் தைச் சார்ந்தனவாகும். காவியில் தோய்த் தெடுக்கப் பெற்ற ஆடைகள்[12], மதுபானம்[13], பெருவாரியான அளவில் பேரீந்துப்பழமும்[14], பொன்னும்[15] ஏற்றுமதி செய்யப்படுகின்றன. அடிமைகளும்[16] ஓமனுவிலிருந்து ஏற்றுமதி செய்யப்படுகின்றனர்.

## விளக்கவுரை

**1. இவ் வளைகுடாவின் வழியாக** (Through this Gulf)

இவ் வளைகுடா என்று கூறப்படுவது பாரசீக வளைகுடாவும் (Persian Gulf), அதைத் தொடர்ந்து உள்ள ஓமனு வளைகுடாவும் (Gulf of Omana) ஆகும்.

இருப்பிடம்: 27°·5'வ × 56°·27' கி.

**2. ஓமனு** (Omana)

ஓமனு என்னும் நாடு பாரசீக வளைகுடாவின் நுழை வாயிலில் தொடங்குகிறது. அதன் முக்கியத் துறைமுகம் இப்பொழுது மஸ்கட் (Muscat) என்று வழங்கப்படுகிறது. முன்னர் இதுவே ஓமனு எனப் பெயர் பெற்றிருந்தது. மஸ்காட் என்பதன் பொருள், சூரிய ஒளியில் உலர்த்தி எடுக்கப்பட்ட திராட்சை (Sun-dried grapes)களினின்றும் தயாரிக்கப்படும் சாராயத்தை-மதுபானத்தை (Wine)-ஏற்றுமதி செய்யும் இடம் என்பதாகும். ஆகவே, இப் பெயர் பிற்காலத்தில் வந்ததே தவிர, முன்னர் அவ்விடத்தின் பெயர் ஓமனு என்பதே. இத் துறைமுகத்துக்கு 300 மைல்கள் (480 கி மீ) பின் பக்கமுள்ள நாடு முழுவதும் ஓமனு நாடு எனப் படும். வாணிகச் சந்தை நகரில் ஓமனு மிகவும் முக்கியமான தாக விளங்கிற்று

ஓமனுவின் இருப்பிடம்; 23°·37'வ × 58°·36'கி

**3. பாரிகாஸா** (Barygaza)

இத் துறைமுகம் இந்தியாவில் நர்மதை ஆற்றின் கழிமுகத்தில் இருந்தது. பிருகு-கச்சா என்ற சொல் பாரிகாஸா என்றாகி,

அதுவே இன்று புரோச் (Broach) என்று வழங்கப்படுகிறது. இங்கிருந்து பல இந்தியப் பண்டங்கள் அயல் நாடுகளுக்கு ஏற்றுமதியாயின.

பாரிகாஸாவின் இருப்பிடம்: 21°·43'வ × 73°·1' கி.

மற்றும் அதிகாரம் 14, குறிப்பு-3 பார்க்கவும்.

4. **பித்தளை** (Brass)

பித்தளைத் தகடுகள் ஏற்றுமதி செய்யப்பட்டன. பித்தளையில் இருவகைகள் உண்டு: (1) மென் பித்தளை (2) வன் பித்தளை. இவை பாத்திரங்கள் செய்வதற்கும், எகிப்திலும், ரோமிலும் கோயில்களுக்குப் பாதைகளிலும், படிகளிலும், சுவர்களிலும் அலங்காரப் பொருள்களாகவும் பயன்படுத்தப்பட்டன.

பிளினி (கி.பி. 23-79) இந்தியாவிலிருந்து பித்தளை ஏற்றுமதியைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். பித்தளையுடன் ஜாதிலிங்கம், இரும்பு, அரிதாரநஞ்சு (Arsenic) முதலியனவும் ஏற்றுமதி செய்யப்பட்டதாகக் கூறுகிறார்.

(**பிளினி**: புத்தகம் XXXIII, அதிகாரங்கள் 36–41)

மற்றும், அதிகாரம் 6, குறிப்புகள் 8, 9 பார்க்கவும்.

5. **சந்தனம்** (Sandal Wood and Paste)

சந்தனம் எனுஞ்சொல் இலத்தீன் மொழியில் சந்தாலம் ஆல்பம் (Santhalum Album) என்று குறிப்பிடப்படுகிறது. இது சாந்தலசே (Santalace) இனத்தைச் சார்ந்ததாகும். மருந்து வகைகள் விளையும் இந்தியாவின் மேற்கு மலைகளின், மலையாளப் பகுதியில் இச் சந்தனமரம் பயிர் செய்யப்படுகிறது. மற்றும் கோயம்புத்தூர், மைசூர் ஆகிய பகுதிகளிலும் விளைகின்றது. வடமொழியில், இது கந்தம், ஸ்ரீகந்தம் என்றும் வழங்கப்படுகிறது. சந்தனமரம் ஏற்றுமதி பெரிப்ளூஸில்தான் அதிகமாகக் குறிப்பிடப் பட்டுள்ளது. இதைச் சப்பான் மரம் (Sappan wood) என்று மார்க்கோ போலோ (கி.பி. 1254-1324) குறிப்பிட்டுள்ளார். அரைக்க அரைக்க அது தன் சாரத்தை (Sap) வெளியிடுவதன் காரணமாக அது சப்பான் மரம் எனப்பட்டதாகக் கூறுகிறார்.

—(மார்க்கோ போலோ: பக்கம் 74)

சந்தனமரம் கோயில்களுக்கும், தூலங்களுக்கும், தெய்வப்படிமங்கள் செய்வதற்கும், அரண்மனைகளை அலங்கரிப்பதற்கும்,

மற்றும் வாசனைப் பூச்சாகப் பூசிக்கொள்ளவும் இந்தியாவிலிருந்து அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டது. சந்தன எண்ணெய் சிரங்குகளுக்கும், புண்களுக்கும் எகிப்தில் இறந்த அரசர்களின் சடலங்களைப் பாதுகாக்கவும் (Embalming) இப் பூச்சுப் பயன் படுத்தப்பட்டது.

**6. தேக்குமரக் கட்டைகள்** (Teakwood Planks)

தேக்குமரம் இலத்தீன் மொழியில் டெக்டோனு கிரான்டிஸ் (Tectona grandis) என்று வழங்கப்பட்டது. பர்மாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்படும் இம் மரம் மிகவும் உயர்ந்ததும், உறுதி வாய்ந்ததுமாகும். இம் மரப்பலகைகள் ஆப்பிரிக்காவில் உள்ள முகையர் அழிபாடுகளில் (Mughair Ruins) காணப்பட்டன. இவ் அழிபாடுகள் கி.மு. 1000 அளவிலே ஏற்பட்டிருக்கக்கூடும் என்று நம்பப்படுகிறது. ஆகையால், மிகமிகத்தொன்மை யிலிருந்தே, இந்தியாவுக்கும் எகிப்துக்கும் வாணிகம் நடை பெற்று வந்தது என்பது இதனுல் பெறப்படும்.

நேபோனிடஸ் (Neponidus) என்பார் கி.மு. 6 ஆம் நூற் ருண்டில் ஆப்பிரிக்காவில் ஆட்சி செய்துகொண்டிருந்தார். அவர் காலத்தில் தேக்குமரம் இறக்குமதி செய்யப்பட்டன என்று வரலாறுகள் கூறுகின்றன. ஆகையால், கிறித்து பிறப்பதற்குப் பல நூற்ருண்டுகளுக்கு முன்பிருந்தே எகிப்து, ரோம் முதலிய அயல்நாடுகளுக்குத் தேக்கு ஏற்றுமதி செய்யப் பட்டது என்பது தெளிவாகிறது.

**7. கறுப்பு நிறங்கொண்ட மரப்பலகைகள்** (Black-wood)

இலத்தீன் மொழியில் இக் கறுப்புமரம் ஸிஸாமின் மரம் (Sesamin wood) என்று வழங்கப்பட்டது. இது செங்காலி மரத்துக்கு (Rose wood) அடுத்தபடியாகப் பயன்படுத்தப்பட்டது. இதன் ஏற்றுமதி தேக்குமரத்தைவிடக் குறைவானதாகும். இம் மரம் கத்திப் பிடிகள், மரச்சாமான்கள் முதலியன செய்யப் பயன்படுத்தப்பட்டது. கருங்காலி மரங்கள் (Ebony wood) பாம்பே பேரரசரால் (Pompei Magnus) (கி.மு. 106-48) ரோம் நகரத்துக்கு எடுத்துச் செல்லப்பட்டன.

(பிளினி: புத்தகம் XXI, அதிகாரம் 8, 9)

**8. கானே** (Canae)

இது அரேபியாவின், தென்பகுதியில் ஹைட்ரமௌத் (Hydramaut) பகுதியில் இருந்த துறைமுகமாகும். இது இன்றைக்குப் பிர் அலி (Birali) என்று வழங்கப்படுகிறது.

பிர்அலியின் இருப்பிடம்: 13°·20'வ × 48°·0' கி.

இவ்விடம் முற்காலத்தில் வாணிகச்சந்தை கூடும் நகரமாக இருந்தது. மற்றும், அதிகாரம் 27, குறிப்பு-4 பார்க்கவும்.

**9. பிணையல் கப்பல்கள்** (Sewed boats)

கேரளாவில் (மலையாள நாட்டில்) தென்னை மரங்கள் மிகுதியாக விளைந்த காரணத்தால், அதன் பல பகுதிகளும் பயன்படுத்தப்பட்டன. தேங்காய் காயவைத்து கொப்பரையாக்கி எண்ணெய் எடுக்கவும், மட்டைகள் உரிக்கப்பட்டு நார்கள் எடுக்கவும் தேங்காய் ஓடுகள் அகப்பைகள் செய்யவும், மரத்தின் அடிப்பகுதி தூலங்களாகவும், அதன்காய் இளநீர் குடிக்கவும் ஆக அம் மரம் பலவகைகளில் பயன்பத்தப்பட்டது. பட்டை உரிக்கப்பட்டு, அதனின்று எடுத்த நார் கயிறுகளாகத் திரிக்கப்பட்டு, அதைக் கொண்டு கப்பல்களின் பகுதிகள் ஒன்றுகப்பிணைக்கப்பட்டன. இரண்டு பாய்மரக் கப்பல்களும் ஓடங்களும் கயிற்றால் பிணைக்கப்பட்டன. இத்தகைய பிணையல் கப்பல்களே (Sewed boats) இங்குக் குறிப்பிடப்படுகின்றன.

**10. மதரதா** (Madarata)

மேலே கூறப்பட்ட பிணையல் கப்பல்களே மதரதா (Madarata) எனும் பெயரால் வழங்கப்பட்டன. மத்தார–ஆட் என்று அச்சொல் பிரிக்கப்பட்டு, 'தென்னை நாரினல் பிணைக்கப்பட்ட ஓடம்' என்று அதற்குப் பொருள் கூறப்படுகிறது. அது அரபு மொழிச் சொல்லாகும். இவ்வாறு பிணையல் செய்யப்பட்ட கப்பல்கள் கானே, ஓமனு முதலான துறைமுகங்களுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. இவை ஹைட்ரமௌத் (Hydramaut) பகுதியில் பயன்படுத்தப்பட்டிருந்தன.

**11. முத்துகள்** (Pearls)

பாரசீகவளைகுடாவின் அராபியக் கடற்கரைப் பகுதியை ஒட்டி இருக்கும் பஹ்ரீன் கடற்காலில் (Bahrein Straits) முகிழ்ந்தெடுக்கப்படும் முத்துகள் பழுப்பு நிறம் வாய்ந்தவை. மன்னார் வளைகுடாவில் (Gulf of Munnar) எடுக்கப்படும் முத்துகள் சிவப்பு நிறம் வாய்ந்தவை. கொற்கை (Korkai)யில்—தாமிரபருணிநதிக்கழிமுகத்தில்—எடுத்த முத்துகள் வெண்மையானவை. எல்லா முத்துகளைவிடத் தீரு (Tyre)வில்—பீனிசியப் (Phoenix) பகுதியில்—எடுக்கப்படும் முத்தினுக்கே அதிக விலை கொடுக்கப்பட்டது. ஒரு பவுண்டு முத்தின் விலை 1000 தினரி (Dinari) ஆகும்.

ஒரு தினாரி என்பது 65 குந்துமணி எடையுள்ள பொன் நாணயம். இந் நாணயம் அரேபியாவில் புழக்கத்தில் இருந்ததாகும்.

**12. காவியில் தோய்க்கப்பட்ட ஆடைகள்** (Dyed Clothes)

அராபியர்களுக்குச் சாயத்தில் ஊறவைத்த துணிகள் செய்யத் தெரிந்திருந்தது. அவர்கள் காவி நிறத்தைத் (Saffron Coloured) துணியில் ஏற்றி ஏற்றுமதி செய்தனர். ரோம் நாடுகளுக்கும், இந்தியாவின் வடபகுதிகளுக்கும் அனுப்பப்பட்டன.

சொகாத்ரா (Socotra) தீவினின்று கருநீலச் சாயம் தோய்த்த துணிகள் ஏற்றுமதி செய்யப்பட்டதை முன்னரே கண்டோம் (அதிகாரம் 24, குறிப்பு-2; அதிகாரம் 34, குறிப்பு-2 பார்க்கவும்)

**13. மதுபானம்** (Wine)

இது பேரீந்து (Dates or Palm Date) என்ற பழத்திலிருந்து வடித்தெடுக்கப்பட்ட மதுபானம். இது போதையைத்தரும் இனிய பானவகை. மற்றும் வெயிலில் உலர்ந்த திராட்சையினாலும் (raisins) (Sun-dried Grapes) மதுபானம் தயாரிக்கப்பட்டு, ஏற்றுமதி செய்யப்பட்டது. ஆனால், இவ்வகை மிகச் சிறிய அள விலேதான் ஏற்றுமதி செய்யப்பட்டது.

இந் நாட்டில் விளையும் பேரீந்து, பீனிக்ஸ் டேக்டிலிஃபெரா (Phoenix dactli fera) என்று வழங்கப்பட்டது. அது அரேபியர், சிந்துச் சமவெளி, எகிப்து ஆகிய இடங்களில் முக்கியமான உணவாகக் கருதப்பட்டது. பழம் சாப்பிடவும், மதுபானம் தயாரிக்கவும் பயன்பட்டது. பிளினியும் (கி பி. 23-79) இதைக் குறிப்பிட்டுள்ளார்.

(பிளினி: புத்தகம் XIII, அதிகாரம் 7.

**14. பேரீந்துப் பழம்** (Dates)

மேலே குறிப்பு–13 பார்க்கவும்.

**15. பொன்** (Gold)

இந்தியாவிலிருந்து பொற்கட்டிகள் ரோம் நாட்டுக்கு அனுப்பப்பட்டு, அங்கிருந்து அவை நாணயங்களாக அடிக்கப்பட்டு இந்தியாவுக்குத் திரும்ப அனுப்பப்பட்டன. இவ்வகைப் பொன் ஏபிரான் (Apyron) என்று டையோடோரஸ் (Diodorus) வரலாற்றாசிரியரால் (கி.மு. 110-50) குறிப்பிடப்பட்டது. ஏபிரான்

என்றால் 'நெருப்பில் இடப்படாதது'; 'இயற்கையில் கிடைத்த கட்டி' என்பதே பொருள். ஆகையால் பொன்னை உருக்கி நாணய மாக ஆக்க ரோம நாட்டு மக்களுக்கே தெரிந்திருந்தது. பிளினியும் (கி. பி. 23-79) இப் பொன்னை ஏபிரான் (Apyron gold) என்றே வழங்கினர். (பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 23)

**16. அடிமைகள் (Slaves)**

இங்குக் குறிப்பிடப்படுபவர்கள் ஆண் அடிமைகளே ஆவர். இவர்கள் நீகிரோவர்களும், மீன்தின்னிகளும் (Negroes and Icthyo phogis), குகைவாசிகளும் (Troglodytes) ஆவர். பெண் அடிமைகள் அயல்நாடுகளிலிருந்து ஏற்றுமதி செய்யப்படவில்லை. இந்தியா விலிருந்துதான் அயல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டனர். (அதிகாரம் 31, குறிப்பு-7 பார்க்கவும்)

---

# 37. பாரிசதே, ராம்பெய்கா

முன்னர் கூறப்பட்ட ஓமன்[1] நாட்டிற்கும் அப்பால், பாரிசதே[2] எனும் பெயர் கொண்ட மற்றோர் அரசாங்கம் காணப்படுகிறது. கெட்ரோசியா வளைகுடாவும்[3] காணப் படும். இவற்றின் நடுவில் நீண்டமுனை ஒன்றும் உள்ளது.[4] கப்பல்கள் உள்ளே நுழைந்துபோக வசதியாயுள்ள ஆறு[5] ஒன்றும் காணப்படுகிறது. அந் நதியின் கழிமுகத்தில் ஓரியா[6] எனும் வாணிகச் சந்தை கூடும் நகரம் ஒன்று உள்ளது. இவ் விடத்திலிருந்து ஏழு நாள்கள் உள்ளே பயணம் செய்தால், அரசரின் இருப்பிடமும் நியாயத்தலமும் காணப்படும். அவ் விடம் ராம்பெய்கா[7] எனப் பெயர்பெறும். அந் நாடு மிகுந்த கோதுமை, மதுபானம், அரிசி, பேரீந்து முதலியனவற்றை விளைவிக்கின்றது. ஆனால், கடற்கரைப்பகுதியில் பிடெலியம்[8] எனும் வாசனைச் சரக்கு மட்டுமே விளைகின்றது.

## விளக்கவுரை

**1. ஓமன் நாடு (Oman)**

இது அரேபியாவின் வடகிழக்கு மூலைப்பகுதியாகும். இன்றும் அப் பகுதி ஓமன் (Oman) என்றே வழங்கப்படுகிறது. அதன் முக்கியத் துறைமுகம் ஓமன். அது இன்று மஸ்கட் **(Muscat)**

என்று வழங்கப்படுகிறது. இருப்பிடம்: 28°·37′ வ × 58°·36′ கி. மற்றும் அதிகாரம் 36, குறிப்பு-2 பார்க்கவும்.

**2. பாரிசதே (Parisadae)**

இது ஃபார்ஸ்-ஸராத் (Fars–Sarhad) என்று இன்று வழங்கப் படுகிறது. பாரசீக வளைகுடாவுக்கு வடக்கே உள்ள நாடு. பாரசீக நாட்டின் ஒரு பகுதி. ஓமன் நாடு பார்த்தியன் (Parthiya) அரச னுக்குக் கீழ்ப்படிந்து நடந்தது. பாரசீக மன்னனுக்கு அடங்கி நடக்கவில்லை.

பிளினி (கி.பி.23-79) கூறுகிறார்: "பார்சிஸ் (Parsis) மிகுந்த செல்வம் படைத்த நாடாக விளங்கிற்று. ஆனால், அந் நாடு வெகு காலத்துக்கு முன்னரே தன் பெயரைப் பார்த்தியா (Parthiya) என்று மாற்றிவைத்துக் கொண்டுவிட்டது." (**பிளினி: புத்தகம் VI**, அதிகாரம் 28)

**3. கெட்ரோசியா வளைகுடா (Gulf of Gedrosia)**

இது ராஸ்நு (Rasnu), மோன்ஸே (Monse) எனும் இரு கடற் கரை நகரங்களுக்கும் (முனைகளுக்கும்) இடையேயுள்ள பகுதி. முன்னர் கெட்ரோசியா வளைகுடா எனப்பட்டது. இன்று அப் பெயர் கிடையாது. அராபியன் கடல் (Arabian Sea) என்றே வழங்கப்படுகிறது. இருப்பிடம்: 25°·7′ வ × 62°·20′கி.

**4. நீண்ட முனை (Long Cape)**

நீண்ட முனையின் பெயர் ஆர்மரா (Ormara). இங்குச் சிறிய கப்பல்கள் தங்கிச் செல்வதுண்டு.

இருப்பிடம்: 25°· 23′ வ × 64°·48′ கி.

**5. கப்பல் போக வசதியுள்ள ஆறு (Navigable River)**

இவ் ஆறு பராலி (River Parali) என்றும், ஹாப் (River Hab) என்றும் பலவாறு கூறப்படுகிறது. முன் உள்ள ஆற்றின் போக்கு இன்று எவ்வளவோ மாறியிருக்கக்கூடும். ஹாப் (Hab) எனும் நதி மோன்ஸே முனை (Cape Monse) அருகில் ஓடுகிறது.

இருப்பிடம்: 24°· 51′ வ × 67°· 0′ கி.

**6. ஓரியா (Orea)**

இது ஓரிடே (Oritae) என்று முன்னர் வழங்கப்பட்டது. சிந்து நதிக்குத் தெற்கில் உள்ள நாட்டைக் குறிப்பிட்டது. அங்கு வாழும்

மக்கள் இறந்த சடலங்களைக் காட்டில் வனவிலங்குகளுக்குப் போட்டுவிடுவார்கள் என்று டையோடோரஸ் (கி.மு. 110-80) கூறுகிறார். ஒரிதே பிளினியாலும் குறிப்பிடப்பட்டுள்ளது. (**பிளினி:** அதிகாரம் 5, பக்கம் 44)

—(The Early History of India By Vincent Smith, Page 105 Foot note)

இது சோன்மியானிக் கடற்கரைப் பகுதியையும் குறிப்பிடுகிறது. சோன்மியானி இருப்பிடம்: 25°·23′ வ × 66°·35′கி.

**7. ராம்பெய்கா** (Rambaica)

இது கெட்ரோசியாவின் தலைநகரமாகும். இன்று அப் பெயர் மாறிவிட்டது. இவ்விடம் தாலமி (கி.பி. 119-161) எனும் யவனாசிரியராலும் குறிப்பிடப்பட்டுள்ளது. இன்றைக்கு ராம்பெய்கா, பாம்பூர் (Bumbur) என்று வழங்கப்படுகிறது.

—(The Early History of India By Vincent Smith, Page 104)

இருப்பிடம்: 26°·10′ வ × 60°· 35′ கி.

மாவீரர் அலெக்சாந்தர் (கி. மு. 356-323) இந்த ராம்பெய்கா வழியாகத் திரும்பிச்சென்றதாக **அர்ரியன் இண்டிகா** (Arrian Indika) கூறுகிறது.

-(The Early History of India By Vincent Smith Page 104 Foot note)

**8. பிடெலியம்** (Bdellium)

இது போளம் எனப்படும் மருந்துச் சரக்கிலிருந்து வடித்து எடுக்கப்படுகிறது. வெள்ளைப் போளம் பால் சமோதேந்தரம் மர் (Balsamodendrom myrrh) என்று வழங்கப்படுகிறது. இப் பொருள் மலையாள நாட்டிலும், இமயமலையிலும், பலுசிஸ்தானத்திலும் தயாரிக்கப்பட்டது. சிறிய மரவகைப் பிசினினின்று செய்யப்பட்டது. இவற்றுள் கரியபோளம் (Aloes), இரத்தபோளம் (Hepatic Aloes) எனும் பலவகைகள் இருந்தன. (அதிகாரம் 28, குறிப்பு-6 பார்க்கவும்). இப் பிசினைப் பக்குவப்படுத்தி, இறந்த சடலத்தின்மீது பூசி, பல நூற்றாண்டுகள் வரைக் கெடாமல் வைத்திருந்தனர். எகிப்தியர்கள் தங்கள் அரசர்களை இவ்வாறு பதப்படுத்தி மம்மிகள் (Mummies) என்ற பெயரால் வழங்கினர். பிரமிடுகளில் (Pyarmids) அரச சடலங்கள் வைத்துக் காப்பற்றப்பட்டன. மூவாயிரம் ஆண்டுகள் வரை அவற்றின் உயிர் எங்கிருந்தாலும் அதனுள் வந்து புகுந்து கொள்ளும் என்ற நம்பிக்கையே அவர்கள் அவ்வாறு பதப்படுத்தி

வைத்ததற்குரிய காரணமாகும். (அதிகாரம் 24, குறிப்பு–10 பார்க்கவும்).

இச் சொல் பைபிளில் (Bible) குறிப்பிடப்பட்டுள்ளது. இதைத் தமிழில் பிதலோனு என்று வழங்கினர்.

'And the gold of the land is good; there is bdellium and the onyx stone.'

—(Genesis-2-12)

---

# 38. சிந்தஸ் நதி

இதற்குமுன் கூறப்பட்ட இடத்தைக் கடந்து சென்றால்[1], கண்டமானது பெரிய வளைவான கடற்கரையைக் கொண்டுள்ளது. அவ் வளைகுடா கிழக்கிலிருந்து வளைந்து செல்கிறது. அதற்குப் பிறகு சிந்தியா[2] எனும் நாட்டின் கடற்கரை படர்ந்து செல்கிறது. அக் கடற்கரைப் பகுதியில் ஓர் ஆற்றின் கழிமுகம் உள்ளது. அக் கழிமுகம் நீர் நிறைந்தும், சேறு அதிகமாயும் காணப்படுகிறது. அந்த இடத்தில் வந்து விழும் நதியின் பெயர்தான் சிந்தஸ்[3] என்பது. அந் நதிதான் எரித்திரியன் கடலில்[4] விழும் எல்லா நதிகளிலும் மிகப் பெரியதாகும். அந் நதி தன்வழியே, பெருவாரியான அளவில் நீரைக் கொண்டுவருகிறது. அதனால் அது கடலுடன் கலக்கும் இடம் வெகு தொலைவுவரை, அக் கடல் நீர் தூய தன்மையாகவே காணப்படுகிறது. மற்றும் கடல் பகுதியிலிருந்து அந் நாட்டின் உள் அவ்வாற்றின் வழியாகவே சென்றால், சிறிது தொலைவில் வெகு ஆழத்தில் உள்ள பாம்புகள் அங்குச் செல்வோரை வரவேற்கக் காத்திருக்கின்றன[5]. இப் பொழுது கூறப்பட்ட பகுதியும், பாரசீகத்தில்[6] அடங்கிய இடமும் அரியா[7] என்ற பெயரால் வழங்கப்படும். இந்த நதி ஏழு முகப்புக் கிளைகளைக் கொண்டுள்ளது. அவை மிகுந்த ஆழம் இல்லாதனவாயும், குறுகியும், சேறுடையனவாயும் காணப்படுகின்றன. அதன் காரணமாக அவை கப்பல் போக்குவரவுக்கு உகந்ததல்ல. அவற்றுள் நடுவில் ஓடும் நதிமட்டும் போக்குவரவுக்கு உகந்ததாயுள்ளது. இக் கழிமுகத்துக்கருகில் பார்பாரிகம்[8] எனும் பெயருள்ள வாணிகச் சந்தை கூடும் நகரம் காணப்படுகிறது. அதற்கு உள்பக்கமாக அரியாகா[9] என்ற இடத்தின் தலைநகரம் காணப்படுகிறது. அந் நகரத்தின் பெயர் மின்னகரம்[10]. இம் மின்னகரம் சித்தியர்களைச் சார்ந்தது; பார்த்திய நாட்டு அரசர்களுக்குக் கீழ்ப்படிந்து நடக்கிறது. பார்த்தியர்களும்[11], சித்தியர்களும்[12] ஒருவருடன் ஒருவர் போராடி, ஒருவரையொருவர் அழிப்பதிலேயே தங்கள் காலத்தைக் கழித்துவருகின்றனர்.

## விளக்கவுரை

### 1. இதற்குமுன் கூறப்பட்ட இடம் (Place previously mentioned)

இதற்கு முன்னர் ராம்பெய்கா (Rambaica) எனும் இடத்தைக் குறிப்பிட்டார். இதைக் கடந்து சென்றால் என்பதை "இதைக் கடந்து வெகுதூரம் சென்றால்" என்று எடுத்துக்கொள்ளவேண்டும். அல்லது நடுவில், ராம்பெய்காவுக்கு அடுத்தபடியாகச் சென்ற பகுதிகளின் வரலாறு இத்துடன் இணைக்கப்படாமலிருக்க வேண்டும் அல்லது தொலைந்துபோயிருக்கவேண்டும். இங்குக் குறிப்பிடப்படுகிறது சிந்து நதியின் கழிமுகமேயாகும்.

### 2. சிந்தியா எனும் நாடு (The Country named Sindia)

'சிந்தியா' என்று கூறப்பட்ட சொல்லே இன்று 'இந்தியா' என்று மருவிவந்ததற்கும் ஒரு காரணமாகும்.

யுவான் சுவாங் (கி. பி. 629–645) கூறுகிறார்: "ஒளியிடும் சந்திரனைப் போன்று (இந்து) தோன்றிய காரணத்தால், இந்த நாடு இன்-டு (India) என்ற பெயராலேயே வழங்கப்படுகிறது."

—(யுவான் சுவாங்: பக்கம் 15)

சிந்தியா என்ற பெயர் வந்ததன் காரணம் சிந்து நதி—சிந்தஸ் என்ற பெயரால் வழங்கப்பட்டது—என்ற ஆற்றின் பிறப்பிடம் சிந்தியா என்று வழங்கப்பட்டதால் என்று பேராசிரியர்கள் பலர் கருதுகின்றனர். சிலர், ஹிந்துக்கள் (Hindus) வாழ்ந்த இடம் Hindia என்றும், அதுவே இந்தியா என்றும் மருவிற்று என்றுகூறுவதும் மற்றொரு வாதம். மெகஸ்தனிஸ் (கி.மு. 302-296) ஸ்டிராபோ (கி. மு. 64—கி. பி. 24), தாலமி (கி. பி. 119-161) முதலான கிரேக்க நாட்டு வரலாற்றாசிரியர்கள் இந் நாட்டை இண்டிகா (Indika) என்று வழங்கினர். இதில் கா (Ka) எனும் எழுத்து நாட்டைக் குறிப்பிடும். எடுத்துக்காட்டாக டிமிரிகா (Dimirika) என்பதில் உள்ள கா போலவும், ஆப்பிரிக்கா (Africa) என்பதில் உள்ள கா போலவும், கா எனும் சொல் நாட்டைக் குறிப்பிடும். டிமிரி-கா என்பது தமிழகம், ஆப்பிரிக்-கா என்பது ஆப்ரிக் என்பவரின் நாடு. ஆகையால் இங்குப் பழங்கால முதற்கொண்டே இந்தியா என்று வழங்கப்பட்டதென்பது மற்றும் சிலருடைய வாதம்.

வேதங்கள் முதலியவற்றில் பாரததேசம் என்றே இந்தியா வழங்கப்பட்டுவந்தது. மகாகவி பாரதியாரும் நம் நாட்டைப் பாரத நாடு என்றே தம் கவிகளில் பாடி மகிழ்ந்துள்ளார். பரதன் ஆண்ட நாடும், அவன் சந்ததிகள் ஆண்ட நாடும் ஆனதால் பாரதநாடு

என்று பெயர் பெற்றது. பரதன் என்பவன் துஷ்யந்த அரசனுக்கும், சகுந்தலைக்கும் பிறந்த வீரமகன் ஆவான். இவன் சிங்கங்களை அடக்கி ஆண்டான் என்றும், வீரத்தில் சிறந்தவன் என்றும், அவன் பெயரால் நிர்மாணிக்கப்பட்ட நாடே பரத கண்டம் (Bharatha Kandam) என்றும் விளக்கம் கூறப்படுகிறது (Madras University Lexicon Vol. IV—Page 2496).

இந்தப் பரதன் வேறு; இராமாயணத்தில் வரும் இராமரின் இளையவனான அந்தப் பரதன் வேறு. இவ்விருவர்களை வைத்துக் குழம்பவேண்டாம். இராம பரதன் கால அளவில் பிற்காலத்தைச் சேர்ந்தவன். வீரன் பரதன் மிகப் பழங்காலத்திலிருந்த அரசன்.

முன் சொல்லப்பட்ட பரதன் அரசன்; இராமரின் இளையவனான பரதன், இராமரின் பாதுகையை வைத்துப் பூசைசெய்து, அதன் ஆணைகொண்டு அயோத்தியை ஆண்டவனேதவிர, பரதன் உண்மையான அரசன் அல்லன். முன்னவன் சிங்கத்தை அடக்கிய வீரன்; பின்னவன் அண்ணனுக்கு பக்திமேலீட்டால் அடங்கி நடந்தவன். ஆகையால் இவ்விருவர்களும் வெவ்வேறானவர்.

ஆகையால் இந்தியா என்றசொல்லும், பாரதநாடு, பரதகண்டம் என்ற சொற்களும் இந்திய நாட்டையே குறிக்கின்றன.

### 3. சிந்தஸ் (Sindus)

சிந்தஸ் (Sindus) என்ற நதியே பின்னர் இண்டஸ் (Indus) என்ற பெயரால் வழங்கப்பட்டது. சிந்தஸ் என்பது சிந்து நதியைக் குறிப்பிடுகிறது. சிந்துநதிப் பிரதேசத்திலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட துணிவகைகள் யாவும் சின்டான் (Sindon) என்ற பெயராலேயே கிரேக்க மக்களால் வழங்கப்பட்டது. சின்டான் என்பது சின்டோமானா (Sindomana) என்னும் சொல்லின் குறுக்கமே. சின்டோமானா என்பது சிந்து நதியின் மேற்குக் கரைமீது இருந்த நகரமாகும். அவ்விடத்திலிருந்து பருத்தியும், உயர்ந்த ஆடைகளும் பெருவாரியாக ஏற்றுமதி செய்யப்பட்டன. 'சின்டான் பருத்தி' என்றால் உயர்ந்தவகைப் பருத்தி என்ற பொருளிலேயே வழங்கப்பட்டது.

சின்டோமானா இருந்த இடம் இப்பொழுது செக்வான் (Sechwan) என்று வழங்கப்படுகிறது.

செக்வானின் இருப்பிடம்: 26°.26' வ × 67.51 கி.

பிளினி (கி. பி. 23-79) சிந்து நதியைச் சிந்தி (Sindis) என்று வழங்கினார்:

"இப் பிரதேசத்து ஆதிவாசிகளால், இந் நாட்டில் பாயும் நதி **சிந்து** என்று வழங்கப்படுகிறது."

—(**பிளினி:** அதிகாரம் 3, பக்கம் 36)

சிந்துவின் ஐந்து கிளை நதிகளும் பிளினியால் விவரிக்கப்படுகின்றன. அவ்வைந்து நதிகள் பாயும் நாடே பஞ்சாப் (பஞ்ச்-ஆப்) என வழங்கப்பட்டது. பஞ்ச்-ஐந்து; ஆப்-நதி. ஆக, பஞ்சாப் என்ற இடம் ஐந்து நதிகள் பாயும் இடம் என்ற காரணப் பெயரால் அமைந்ததேயாகும்.

ஜீலம், செனுப், ராவி, பீயாஸ், சட்லெஜ் ஆகிய இந் நதிகள் பாயும் நாடே பஞ்சாப் எனப்பட்டது.

—(**பிளினி:** அதிகாரம் 3, குறிப்பு-7, பக்கம் 43)

சிந்துநதியின் கழிமுகத்தின் இருப்பிடம்: 24°·44′வ × 67°58′கி.

### 4. எரித்திரியன் கடல் (Erythrean Sea)

இக் கடல் இன்று அராபியன் கடல் (Arabian Sea) என்பதைக் குறிப்பிடுகிறது. எரித்தியா என்றால் சிவப்பு என்று பொருள்படும். முன்னர் எரித்திரியன் கடல் என்பது செங்கடலைக் (Red Sea) குறிப்பிட்டது. பின்னர் அச் சொல்லே அராபியன் கடல் (Arabian Sea) முழுவதையும் குறிப்பிடுவதாயிற்று. முற்காலத்தில், அராபியன் கடல் செங்கடலின் ஒரு பகுதியாகக் கருதப்பட்டது; மற்றும் செங்கடற்பகுதியின் அரசன் பெயர் எரித்திரியன் (Erythrean) என்பதாகும். ஆகவே, அவன் ஆட்சியிலிருந்த அரேபியன் கடலும் (Arabian Sea), எரித்திரியன் கடல் என்றே வழங்கப்பட்டது. அராபிக்கடல், வங்காள விரிகுடா முதலிய சொற்கள்பிற்காலத்தில் தோன்றியவைகளே.

வங்காள விரிகுடா முன்னர் கங்கை ஏரி (Gangetic Sinus) என்றும், அராபியன் கடல் முன்னர் எரித்திரியன் மேர் (Erythrean Mare) என்றும் வழங்கப்பட்டன.

### 5. பாம்புகள் வரவேற்கின்றன (Snakes welcome you)

சிந்துநதியின் கழிமுகத்துக்கருகில் பாம்புகள் நிறைய இருந்தனவாகவும், அங்குச் செல்வோரை அவை வரவேற்பதுபோல் நீரின் மீது தம் தலைகளை நீட்டும் என்றும், ஆனால் அவர்களைக் கடித்துத் துன்புறுத்திவிடும் என்றும்கூறப்பட்டது. அந்த இடம் கிரேயி (Graoe) எனப்பட்டது என்றும் சிலர் கூறுகின்றனர். இதே மாதிரியான செய்தி மற்றும் அதிகாரம் 55, பகாரே என்னும் பகுதியிலும் கூறப்படுகிறது.

“இந்த இடத்தில் வருவோர் எவராயினும், அவர் வருகையைக் குறிப்பால் அறிவிக்கக் கடற்கரையிலிருந்து பாம்புகள் தலை தூக்கி வரவேற்கும், அவை கறுப்பு நிறம் வாய்ந்தவை; தலைமட்டும் குறுகியது. நீளம் குறைந்த அளவே ஆகும்; கண்களோ மிகுந்த இரத்தச் சிவப்பாகக் காட்சியளிக்கும்.”

—(பெரிப்ளூஸ்: பகுதி-II, அதிகாரம் 40 & 55)

**6. பாரசீகம் (Persia)**

இது பெர்ஸிஸ் (Persis) என்றும், இதன் தலைநகரம் பெர்சிபோலிஸ் (Persepolis) என்றும் வழங்கப்பட்டது. சிந்து நதிக்கு மேற்கே உள்ள பகுதி பலுசிஸ்தானம் என்று வழங்கப்பட்டது. அதையடுத்த பகுதிகளே பாரசீக நாடாகும்.

**7. அரியா (Arria)**

மேற்கூறப்பட்ட பகுதிகள் யாவும் அரியா (Arria) என்ற பெயரால் வழங்கப்பட்டது. பின்னர், இச் சொல் ஆப்கானிஸ்தானத்தையும் (Afganisthan), அதன் தலைநகராயிருந்த ஹீராட் (Herat) என்பதையும் குறிப்பதாயிற்று. பெரிப்ளூஸ் காலத்தில் அரியா என்ற நாடு, பலுசிஸ்தானமும் அதற்கு மேற்கிலுள்ள ஈரான் (Iran) பகுதிகளையும் உட்கொண்டதே யாகும். கீர்மான் (Kerman), பெர்சிபாலிஸ் (Persepolis) முதலிய நகரங்கள் அன்று புகழ் பெற்று விளங்கின.

ஹீராட்டின் இருப்பிடம்: 34°·22′ வ × 62°·8′ கி.

கீர்மானின் இருப்பிடம்: 30°·20′ வ X 57°·10′ கி.

அரியா என்ற நாட்டின் தலைநகரம் ஹீராட் என வழங்கப்பட்டது என்று பேராசிரியர் வின்செண்ட் ஏ.ஸ்மித் கூறுகிறார்.

—(The Early History of India By Vincent A. Smith page 140)

**8. பார்பரிகம் (Barbaricaum)**

இது பழைய துறைமுகப் பெயராகும். இப்பொழுது அப் பெயர் கிடையாது. பெர் பெர் (Berber) என்ற சொல் கிரேக்க ரோம அல்லாத மற்ற அயல் நாட்டு மக்களைக் குறிப்பிடும். அத்தகைய மக்கள் கூடும் இடம் பார்பரிகம் என்று வழங்கப்பட்டிருக்க வேண்டும்.

இது முன்னர் இருந்த பாதலம் (Patale) என்ற ஆற்றுத் துறைமுகத்துக்குத் தெற்கே இருந்திருக்கவேண்டும். காலத்தாலும், சிந்துவின் வெள்ளத்தாலும், அந் நதி தான்போகும் திசையை மாற்றிக்கொள்வதாலும், அந் நகரம் அழிந்துவிட்டிருக்கவேண்டும். இருப்பினும், இன்று டட்டா (Tatta) என்று வழங்கப்படும் இடத்தில் பார்பரிகம் இருந்திருக்கவேண்டும் என்று நம்பப்படுகிறது. டட்டா இன்று சிந்து நதியின் கழிமுகத்தில் உள்ள துறைமுகமாகும்.

பார்பரிகம், பார்பரிகான் (Barbaricon) என்றும் வழங்கப் பட்டது.

டட்டாவின் இருப்பிடம்: 24°·4′ வ × 67°·58′ கி.

**9. அரியாகா (Ariaca)**

இது சித்தியர்களால் (Scythians) வெல்லப்பட்டு, தம் ஆட்சிக் குக்கீழ் கொணர்ந்த நாடு ஆகும். அரியாகா என்பது அரியா-கா என்று பிரிந்து அரியா நாடு என்பதைக் குறித்தது. இது பாக்டிரீயா நாட்டிற்குத் தெற்கிலும், பார்த்தியா நாட்டிற்கு வடக்கிலும், ஹிந்துகுஷ் எனப்படும் பரப்பனிசதே நாட்டிற்கு மேற்கிலும் உள்ளது. இதன் தலைநகரம் அலெக்சாந்திரியா அரியான் (Alex·andria Areion). இதன் நவீன பெயர் ஜிந்தஜான் (Zindajan). அரியாகா என்பது பழைய பாரசீக (Persia) நாட்டின் ஒரு பகுதி யையும் குறிப்பிடும். ஜிந்தஜான் அரி-ருத் (Hari-Rud) என்ற நதிக்கரைமீது உள்ளது. அரியான், அரி-ருத் என்பதில் உள்ள அரி (Arri) என்ற சொல்லே, இப் பகுதி அரியாகாவைச் சார்ந் திருந்தன என்பதற்குப் போதிய சான்றாகும்.

ஜிந்தஜானின் இருப்பிடம்: 34°·28′வ × 61°·0′ கி.

இவ் அரியாகா என்ற நாடு பிளினியால் குறிப்பிடப்பட்டுள்ளது.

—(**பிளினி:** அதிகாரம் **1**, குறிப்பு 39, பக்கம் 14)

**10. மின்னகரம் (Minnagara)**

சித்தியர்கள் (Scythians) என்போர் திபேத்தின் வடக்கிலும், ஹிந்துகுஷ் (Hindukush) மலைகளுக்கு வடகிழக்கிலும், கருங்கடல் பகுதியை ஒட்டியும், காகஸஸ் மலைஅடிவாரத்திலும் இருந்தவர்கள். அவர்கள் இருந்த நாடு சித்தியா (Scythia) எனப்பட்டது. அவர்கள் பிற்காலத்தில் மங்கோலியர்கள் எனப்பட்டனர்.

சித்தியர்கள் போர்வீரம் நிறைந்தவர்கள். அடிக்கடி இந்தியா மீது படையெடுத்து, நகரங்களில் உள்ள பொருள்களை எடுத்துச்

சென்றனர். நாளடைவில் அவர்களுக்கு ஓர் அரசாங்கம் ஏற்பட்டது. அவர்கள் எங்கெங்குத் தங்கள் அரசாட்சியை ஏற்படுத்துகிறார்களோ, அவ்விடங்கள் யாவும் மின்னகரம் (Minnagar) என்ற பெயரால் வழங்கப்பட்டன வாகும்.

மற்றும் சித்தியர்களை வென்றவர்கள் சாகர்கள் ஆவர். அவர்கள் சாகாரிகள் எனப்படுவர். மின்ஸ் என்பது சாகாவமிசத்து அரசர்களைக்குறிப்பிடும் சொல்லாகும்.ஆக சாகாவமிசத்தினர் ஏற்படுத்திய நகரமே மின்-நகரம் என்றாயிற்று என்றும் கூறப்படுகிறது.இவ்வாறு மின்னகரமாக விளங்கிய ஊர்கள் இந்தூர் (Indore), சித்தூர் (Chittoor) முதலியன ஆகும்.

ஆனால் இங்குக் குறிக்கப்பட்ட மின்னகரம் சிந்துநதியின் வெள்ளப் போக்கில் மறைந்துவிட்டிருக்கவேண்டும்.

பேராசிரியர் வின்செண்ட் ஏ. ஸ்மித் கூறுகிறார்: "சிந்து நதியின் கழிமுகத்தையும், அதன் மேற்கிலுமுள்ள நாட்டையும் சித்தியர் வென்று, அப் பகுதி முழுவதையும் சித்தியா (Sythia) என்ற பெயரால் வழங்கினர்."

—(The Early History of India By Vincent A. Smith, page 217)

## 11. பார்த்தியர் (Parthiyas)

இந்தியாவின் வடமேற்குப்பகுதி—பலுசிஸ்தான் உள்ள பகுதி—பார்த்தியா என்று வழங்கப்பட்டது. ஸெல்யூகஸ் நிகேடருக்குப் (Seleucos Nicator) பின் அவர் நாடு பல பகுதிகளாக ஆக்கப்பட்டது. ஒவ்வொரு பகுதியும் சத்ராபி எனப் பெயரிடப்பட்டு, அச் சத்ராபியை ஆள்பவர் சத்ராபிகள் என்றும் வழங்கப்பட்டனர். சத்ராபி என்பது சத்ரபதி (Chatrapathi) என்பதன் திரிபே. ஆக சித்தியர்கள் இந்தியாவின் வடபகுதியிலும், பார்த்தியர்கள் இந்தியாவின் மேற்குப் பகுதியிலும் இருந்தவர் ஆவர். மற்றும் அதிகாரம் 14 காண்க. பார்த்தியர்களே பல்லவர்கள் (Pallavas) எனப் பிரிந்து தென்னாட்டில் குடியேறினார்கள் என்றும் சில வரலாற்று ஆசிரியர்கள் கூறுகின்றனர். ஆனால் இது ஒப்புக்கொள்ளக்கூடியதன்று.

## 12. சித்தியர்கள் (Scythians)

சித்தியர்கள் என்போர் இந்தியாவின் வட பகுதியிலும், கருங்கடலை யொட்டிய பகுதியிலும் வாழ்ந்து வந்தனர். அவர்கள் நாடு சித்தியா (Scythia) என வழங்கப்பட்டது.

இங்குப் பெரிப்ளூஸில் கூறப்படும் நிகழ்ச்சி, சித்தியாவின் கடைசி அரசரான கொண்டாபோரஸ் (Gondapphorus) என்பாரின் காலத்தில் நடந்திருக்கவேண்டும். இவர்தாம் சித்தியர்களில் இறுதியான அரசர். இவர் காலத்தில் இறுதியில்தான் தட்சசீலம் எனும் பகுதி, ஒரு பூகம்பத்தின் காரணமாக, மண்மூடிவிட்டது (கி.பி. 44). இதற்குப்பிறகு, வடக்கு, மேற்கில் உள்ள சத்ராபிகள் ஒன்றுகூடி இந்தியாவில் புகுந்து, தெற்கே சென்றனர்.

சித்தியர்களுக்கும், பார்த்தியர்களுக்கும் என்றுமே பகைமை இருந்தது. இதைத்தான் பெரிப்ளூஸ் ஆசிரியர் கூறுகிருர். ஆகையால் பெரிப்ளூஸின் காலத்தை நிர்ணயிக்க இக் கூற்று உதவுகிறது. சித்தியர்களின் இறுதி அரசரான கொண்டாபேரரஸ் கி. பி. 60-ல் காலமானுர். அவர் பார்த்தியர்மீது படையெடுத்ததைக் கேட்டுப் பெரிப்ளூஸ் ஆசிரியர் எழுதியிருக்கவேண்டும். கொண்டா போரஸ் மறைவுக்குப் பிறகு சித்தியர்களின் மரபு மறைந்துவிட்டது. ஆகையால், இருவரும் போர் செய்தவண்ணம் இருந்தனர் என்பது, கி.பி. 60-க்குள் அவருக்கு எட்டிய செய்தி என்பதால், பெரிப்ளூஸ் கி.பி. 50 அளவில் உருவாக்கப்பட முயற்சி எடுத்துக்கொள்ளப் பட்டிருக்கவேண்டும் என்பது அவருடைய சொற்களாலும், போர் நிகழ்ச்சிகளாலும் உறுதிப்பாடடைகின்றது.

—(The Early History of India By Vincent A. Smith, Page 217)

# 39. பார்பரிகம்

*கப்பல்கள் யாவும் பார்பரிகம்[1] எனப் பெயருள்ள துறைமுகத்தில் நங்கூரம் பாய்ச்சி நிற்கின்றன. ஆனுல், கப்பல்கள் பண்டங்கள் யாவும் அரசனுடைய தலைநகருக்கு[2] நதியின் வழியாக எடுத்துச்செல்லப்படுகின்றன. இந்தச் சந்தை கூடும் நகரத்தில் மெல்லிய ஆடை வகைகளும், மற்றும் உள்நாட்டு முரட்டுத் துணிவகைகளும், சித்திரங்கள் பதியவைக்கப்பட்ட லினன் ஆடைகளும்[3]; புஷ்பராகமும்[4], பவளம்[5], சிலாசத்து[6], வாசனைப் பொருள்களான சாம்பிராணி[7], அகில்[8] முதலிய பொருள்களும்; கண்ணாடியால்[9] செய்யப்பட்ட பாண்டங்களும்; வெள்ளி[10], பொன்[11] ஆகியவற்றால் ஆக்கப்பட்ட தட்டுகளும், உண்கலங்களும்; மற்றும்*

சிறிது மதுபானவகைகளும் இவ்விடத்தில் இறக்குமதி செய்யப்படுகின்றன.

இங்கிருந்து ஏற்றுமதி செய்யப்படும் பொருள்களாவன: கிழங்கு வகைகள்[12], பிடெலியம்[13], வைடூரியம்[14], சேரநாட்டுத் தோல்கள்[15], கடுக்காய் முதலிய கைப்புப் பொருள்கள்[16], சடாமாஞ்சி வகைகள்[17], நவரத்தினக் கற்களின் வகைள்[18], பஞ்சால் நெய்யப்பட்ட ஆடைகள்[18], பட்டுநூல் வகைகள், மற்றும் அவுரி[20] முதலான பொருள்கள்.

கப்பல் மாலுமிகளும், கப்பலோட்டிகளும் இந்திய ஈடீஷியன் காற்றுத்[21] தொடங்கும்பொழுது இவ்விடம் வந்து குழுமுகின்றனர். அவர்கள் இங்கு வருவது ஜூலைத் திங்களில் அதாவது எபிபி[22] மாதத்தில் ஆகும். அக் காலத்தில் இங்கு மேற்கொள்ளப்படும் கடற்பயணம் மிக்க பேரின்னல் வாய்ந்தது. ஆனால், இந்தக் காற்றுத் தொடங்கியதும், இதன் உதவியால், இவ்விடம் வருவது, நேர்முகமாகவும், அப் பயணம் விரைவில் நன்கு முடிவதாகவும் உள்ளது.

## விளக்கவுரை

### 1. பார்பரிகம் (Barbaricum)

இப்பொழுது இத் துறைமுகம் கிடையாது. அயல் நாட்டு மக்கள் கூடி வாணிபம் நடத்திய காரணத்தால், இத் துறைமுகம் பார்பரிகம் என்று வழங்கப்பட்டிருக்கவேண்டும். இப்பொழுது டட்டா (Tatta) என்று வழங்கப்படும் துறைமுகம் இருக்கும் இடத்தில் இருந்ததாக நம்பப்படுகிறது.

டட்டாவின் இருப்பிடம்: 24°·4′ வ X 67°·58 கி. மற்றும், அதிகாரம் 38, குறிப்பு—8 பார்க்கவும்.

### 2. அரசனுடைய தலைநகரம் (King's Head Quarters)

அரசனுடைய தலைநகரம் சிந்துநதியின் கரையிலேயே இருந்தது என்பது இதனால் பெறப்படுகிறது. பார்பரிகம்,இறக்குமதி, ஏற்றுமதித் துறைமுகமாகவும், அதற்கு வடக்கே இருந்த பாதலம் (Patalae) எனும் ஆற்றுத்துறைமுகம் அரசனுடைய இருப்பிடமாகவும் இருந்தது. பாதலே இப்பொழுது ஹைதராபாத்-சிந்து (Hyderabad-Sind) எனும் பெயரால் வழங்கப்படுகிறது. ஹைதர்

ஆலிகாலத்தில் இத் துறைமுகம் முக்கியத்துவம் பெற்று, அவ்வரசன் பெயரை ஏற்று, பழைய பெயராகிய பாதலம் என்பதை விட்டு விட்டது. கி.பி. 1805 முதல் பாதலம், புதியபெயரால்—ஹைதரா பாத்-சிந்து எனும் பெயரால்—விளங்கிவருகிறது.

இப் பாதலம் (Patalae) எனும் பண்டைய நகரம் பிளினி யாலும், மெகஸ்தனிஸ், தாலமி ஆகிய யவனுசிரியர்களாலும் குறிப்பிடப்பட்டது.—(பிளினி: அதிகாரம் 3, குறிப்பு-11)

பாதலம், ஹைதராபாத்-சிந்துக்கு 40 மைல்கள் (64 கி.மீ) வடகிழக்கில் இருந்திருக்கவேண்டும் என்று சிலர் கருதுகின்றனர். —(Vide-The Early History of India, By Vincent A. Smith, Page 101)

சிந்துநதி தன் போக்கை அடிக்கடி மாற்றிக்கொள்வதால் வரும் குழப்பமேயாகும்.

பாதலம் இருந்த இடம்: 25°·25' வ X 68°·38' கி.

**3. லினன் ஆடைகள் (Linen Garments)**

இவ்வாடைகள் இரண்டு இழைகளால் நெய்யப்பட்ட நார்ப்பட்டு வகைகள் ஆகும். இவ் ஆடைகள் பாலிமிதா (Polymitha) என்ற பெயரால் வழங்கப்பட்டன என்று பிளினி (கி.பி. 23-79) கூறுகிருர்.

"இரண்டு இழைகளுக்கும் மேலான நூலிழைகள் கொண்டு நார்ப்பட்டை நெய்யும் விதம் அலெக்சாந்திரியாவில் கண்டுபிடிக்கப் பட்டது. இவை பாலிமிதா என்று வழங்கப்பட்டன."

—(பிளினி: புத்தகம் VIII, அதிகாரம் 74)

அலெக்சாந்திரியா என்பது அலெக்சாந்திரியா அரியான் (Alexandriya Areion) என்பதையே குறிப்பிடுகிறது. இந் நகரம் பார்த்தியா (Parthia) நாட்டில் இருந்தது. இப்பொழுது அது ஜிந்தஜான் என்று (Zindajan) என்று குறிப்பிடப்படுகிறது.

ஜிந்தஜானின் இருப்பிடம்: 34°·28' வ X 61°·0' கி.

இப்பொழுது மலேயாளத்தில் நெய்யப்பட்டுவரும் ஈரிழைத் துண்டுகள்போல், அக் காலத்தில் பாலிமிதா துண்டுகளும் வழங்கப் பட்டு வந்தன. பாலிமிதா என்பதில், பாலி (Poly) என்பது பல என்ற பொருளேயும், மிதா (Mitha) என்ற சொல் மென்மையான (மிருது என்பதன் சிதைவு) என்ற பொருளேயும் தந்து, அச் சொல்

பல இழைகள் கொண்டு நெய்யப்பட்ட மெல்லிய ஆடைகளைக் (Linens) குறிப்பிட்டது. அக் காலத்தில் நார்ப்பட்டே ( Artificial silk) லினன் துணிகள் போன்று அமைப்பில் காணப்பட்டது.

லினன் (Linen) என்பதில் உள்ள லினம் (linum) என்பது கிரேக்கச் சொல். அது மெல்லிய சணல் நாரைக் (flax) குறிப் பிட்டது. ஆக, பாலிமிதா என்ற சொல் நார்ப்பட்டையே குறித்தது.

### 4. புஷ்பராகம் (Topaz)

இக் கற்கள் இலத்தீன்மொழியில் கிரிஸோலிதோ (Chrysolitho) என்று வழங்கப்பட்டன. இந்தியாவில் இவை புஷ்பராகம் (Topaz) என்று வழங்கப்பட்டன. கிரிஸோலிஸ் (Chrysolis) என்றால் பல வண்ணங்கள் பிரதிபலிக்கும் கற்கள் என்று பொருள்படும்.

பிளினி (கி.பி. 23-79) இக் கற்களைப்பற்றி கூறுகிறார்: "இக் கற் கள் அபிசீனியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டன. எரித்திரியன் கடல் பகுதிகளிலும் கிடைக்கின்றன. ஆயினும், இந்தியாவிலிருந்து வந்த கற்களே தரத்தில் மிக உயர்ந்தனவாகும்."

—(பிளினி: புத்தகம்-XXXII, அதிகாரம் 11)

### 5. பவளம் (Coral)

பவளத்தில் சிறந்தவகை மத்தியதரைக்கடலிலிருந்து (Mediterranean Sea) வந்தவை ஆகும். ரோமப்பேரரசில் இவ் வாணிகம் மிகச் சிறப்படைந்திருந்தது. பவழம் என்பது இலத்தீன் மொழியில் கொராலியம் (Corralleum) என்று வழங்கப்பட்டு, அதுவே சுருக்க மாகக் கோரல் (Coral) என்று வழங்கப்பட்டது. செம்பவளம், கொராலியம் ரூப்ரம் (Corraleum rubrum) என்று வழங்கப்பட்டது. இச் செம்பவளமே மத்திய தரைக்கடல் பவளமாகும். இலங்கைக்கு அருகிலும் பவழம் எடுக்கப்பட்டது. அவ்விடம் பவழத்திட்டு (Coral Reef) என்று வழங்கப்பட்டது. இந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட பவழம் உறுதி வாய்ந்தது. ஆனால், மத்திய தரைக் கடல் பவழம்போல் அவ்வளவு சிவப்பு நிறம் வாய்ந்தவை அல்ல.

பிளினி (கி.பி. 23-79) பவழத்தைப்பற்றிக் கூறுகிறார்: "பவளம் இந்தியாவில் மிக உயர்ந்ததாயும், சிறந்ததாயுமான பொருளாகப் போற்றப்பட்டது. ரோம் நகரில் இந்தியக் கொற்கை முத்துகள் எவ்வாறு விலையுயர்ந்தனவாகப் போற்றப்பட்டனவோ அவ்வாறே, ரோம் நகரின் செம்பவளம் இந்தியாவில் மிகவும் மதிப்புவாய்ந்த பொருளாகப் போற்றப்பட்டது."

—(பிளினி: புத்தகம் XXXII-அதிகாரம் 11)

**6. சிலாசத்து (Storax)**

பாறைகளிலிருந்து நீலநிறமாக எடுக்கப்படும் ஒரு பிசின் வகையாகும். இது ஆண்களுக்கு வலிவையும் ஆண்மையையும் கொடுக்க மருந்தாகப் பயன்பட்டது. பாலில் கரைத்துக் கொடுத்து வந்தனர். இதில் சிலா எண்ணெயும் உண்டு. அதை பிடுமென் ஆயில் (Bitumen oil) என்று வழங்கினர்.

**7. சாம்பிராணி (Frankincense)**

இது புகையூட்டும் வாசனைப் பொருளாகும். இந்தியாவில் சிறப்பாகத் தயாரிக்கப்பட்டு, ஏற்றுமதி செய்யப்பட்டது. கடவுளர் கோயில்களுக்குத் தூபம் போடவும், அரசவைக்கு வாசனைத் தூபம் இடவும் பயன்படுத்தப்பட்டது.

இச் சாம்பிராணி பைபிளில் (Bible) குறிப்பிடப்பட்டுள்ளது:

"And when they had opened their treasures, they presented unto him gifts; gold and frankincense and myrrh."

—(St. Matthew: 2-11)

இந்தியக் கோவில்களில் தூபம், தீபம், நைவேத்தியம் இவை மூன்றும் சோடச உபசாரங்களுள் முக்கியமானவை. அவற்றுள் தூபம் முக்கியமானது. மேலைநாடுகளிலும் தூபம் முக்கியமானதும், முதலாவதாகவும் கருதப்பட்டது.

பதினாறு உபசாரங்கள் (சோடச உபசாரங்கள்) ஆவன:

1. ஆசனம் 2. சுவாகதம் 3. பாத்தியம் 4. அர்க்கியம் 5. ஆசமனீயம் 6. மதுபர்க்கம் 7. ஆசமனம் 8. ஸ்நானம் 9. ஆடை 10. ஆபரணம் 11. கந்தம் 12. புஷ்பம் 13. தூபம் 14. தீபம் 15. நைவேத்தியம் 16. வந்தனம்.

**8. அகில் (Agar)**

இது இலத்தீன் மொழியில் அக்விலாரியா அகலோகா (Aquilaria agallocha) என்று வழங்கப்படுகிறது. இம் மரம் வெளியிடும் கரும்பிசின் தூபங்கள் இடப் பயன்படுகிறது. நல்ல நறுமணம் தரும் இவ் வாசனைப் பண்டம், முற்காலத்தில் மிகச் சிறந்த வாணிபப் பொருளாகக் கருதப்பட்டது.

"அறுவகை தூபவர்க்கங்களுள் அகில் ஒன்றாகும்."

—(சீவகசிந்தாமணி: 534)

"அகிற்குடம் பரப்பி"—(சீவகசிந்தாமணி: 2381)

### 9. கண்ணாடிப் பொருள்கள் (Glass Articles)

கண்ணாடிப் பொருள்கள் பீனிசியா (Phoenicia) என்ற இடத்தில் செய்யப்பட்டு, சீதோன் (Sidon) எனும் துறைமுகத்தின் வழியாக ரோம் முதலிய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. இக் கண்ணாடிக் குப்பிகள், விளக்குகள், வளையல்கள் முதலிய பார்பரிகத்தில் பீனிசியாவிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டன. பீனிசியா, சிரியா (Syria) நாட்டுக் கடற்கரையில் விளங்கிற்று. இங்குக் கண்ணாடி செய்த முறையைப் பிளினி (கி.பி.23—79) விவரிக்கிருர். (பிளினி: புத்தகம்-XXXVI, அதிகாரம் 67-70). உலகில் முதன் முதல் கண்ணாடி செய்யப்பட்ட இடம் பீனிசியா ஆகும். மற்றும், பகுதி I, அதிகாரம் 6, பார்க்கவும்.

### 10. வெள்ளி (Silver)

இலத்தீனில் வெள்ளி அர்ஜென்டம் (Argentum) என்று வழங்கப் பட்டது. இது 'ரஜதம்' என்ற வடமொழிச் சொல்லின் சிதைவே. இந்தியாவில் வெள்ளி, (ரஜதம்) எடுக்கப்பட்ட பிரதேசம் அர்ஜென்டின (Argentina). இந்தியாவிலிருந்து வெள்ளி ஏற்றுமதி செய்யப்பட்டது.

### 11. பொன் (Gold)

இந்தியாவில் பொன், பூமியிலிருந்து எடுக்கப்பட்டு, பாளங் களாக்கி, ரோம் நகருக்கு நாணயம் செய்வதற்காக அனுப்பப் பட்டது. அப் பாளங்கள் நாணயங்களாக அடிக்கப்பட்டு, திரும்பவும் இந்தியாவிற்கே அனுப்பப்பட்டன. மற்றும், அதிகாரம் 36, அதிகாரம் 24 பார்க்கவும். மற்றும், பிளினி (கி.பி. 23-79) வெள்ளி ஏற்றுமதியைக் குறிப்பிட்டுள்ளார்.

—(பிளினி: அதிகாரம் 3, குறிப்பு-116, பக்கம் 65)

ஹிராடடஸ் (கி.மு. 484-425) வரலாற்றின் ஆதித் தந்தை என்று கருதப்படுகிருர். அவர் பொன்னைப் பற்றியும், பொன்னை எடுத்தேகும் எறும்பினையும், அவ்வெறும்புகளிடமிருந்து எவ்வாறு பொன்னைப் பெறுகிருர்கள் என்பவற்றையும் தாம் எழுதிய வரலாற் றில் குறிப்பிட்டுள்ளார்.

—(Vide the Histories-By Herodotus-Pages 218-219)

ஓபிர் துறைமுகத்தில் (Ophir) ஏற்றுமதி செய்யப்பட்ட பொன் ஏபிரான் (Aperon) என்று வழங்கப்பட்டது.

## 12. கிழங்கு வகைகள் (Costus)

கிழங்கு வகைகள் என்பன வாசனைதரும் கிழங்கு வகைகளே யாகும். எடுத்துக்காட்டாக, மஞ்சள் கிழங்கு, பூண்டு, இஞ்சி முதலியன பூமியின் அடிப்பகுதியில் விளைபவை. இவற்றுள் மஞ்சளும், இஞ்சியும் ஏற்றுமதி செய்யப்பட்டன. இவை காஸ்டம் (Costum) எனப்பட்டன. காஸ்டம் என்பதற்கு இலத்தீன் அகராதியில் பின்வருமாறு பொருள் கொடுக்கப்பட்டுள்ளது:

"Costum-An eastern aromatic plant, employed in the preparation of unguents."

—(Latin-English Dictionary, Page 140)

"தீங்கனி கிழங்கு செழுங்காய் நல்லன"

—(மணிமேகலை: 17-58)

"கீழுலகில் அசுரர்களைக் கிழங்கிருந்து கிளராமே
ஆழிவிடுத்து அவருடைய கருவழித்தவழிப்பனூர்."

—(பெரியாழ்வார் திருமொழி:4-8-6)

"பூமியினுள்ளிருக்கும் கிழங்கை, வெளியெடுக்காமலே, அமைந்திருக்கும் நிலையிலேயே, இடத்திலேயே அழித்துவிடல்" என்பது இதனுள் வரும் உவமையின் பொருள்.

சில வாசனைக் கிழங்குவகைகள் காஷ்மீரப் பகுதியில் மலைச் சாரல்களில் பயிராக்கப்பட்டன. அவை ஸெளஸாரி லப்பா (Sausari lappa) என்ற பெயரால் வழங்கப்பட்டன. லப்பா (lappa) என்பது கிரேக்கச் சொல்; அதன்பொருள், 'நுனியிலோ, முதலிலோ பெரும் முடிச்சி ஒன்றைக் கொண்டிருப்பது' என்பதாகும். அதுவே பிற் காலத்தில் பர் (Bur) என்றும் வழங்கப்பட்டது.

## 13. பிடெலியம் (Bdellium)

இது பால்சமோதேந்திரம் (Balsamodendrom) எனப்பட்ட வெள்ளைப் போளம் எனும் மருந்துச் சரக்கிலிருந்து தயாரிக்கப் பட்டது. இம் மரம் மிகச்சிறிய அளவிலே வளர்கின்றது. போளத்தில் கரிய போளம் (Aloe), சிவப்புப்போளம் (Hepatic aloe) எனும் மற்றும் இருவகைகள் உள்ளன. பைபிளில் (Bible) இது பிதலோனு என்று வழங்கப்பட்டது. இறந்த அரசர்களின் உடலைப் பாதுகாக்கப் பயன்படுத்தப்பட்டது.

"There is bdellium and onyx stone."

—(Genesis-2-12)

மற்றும், அதிகாரம் 37, குறிப்பு-8 பார்க்கவும்.

## 14. வைடூரியம் (Lapis lazuli)

லாபிஸ் லாஸௌலி (Lapis lazuli) என்பதற்குப் பின்வரும் விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது:

"A mineral of beautiful ultramarine colour used largely in ornamental and mosaic works."

இது ஸபையர் (Sapphire) வகுப்பைச் சார்ந்தது—அதாவது இரத்தினக்கற்கள். இலாபிடரி (Lapidary) என்ற சொல் இரத்தின வியாபாரி எனும் பொருள் தரும்.

இக் கற்களைப்பற்றிப் பிளினி கூறுகிறார்: "இது நீல நிறமானது; இதன் நடுநடுவே பொன்பொட்டுகள் காணப்பட்டன. இவை பெரும்பாலும் பாரசீக நாட்டிலிருந்து வந்தன."

—(பிளினி: புத்தகம் XXXVII, அதிகாரம் 39)

இக் கற்கள் இந்தியாவில் இலங்கையிலும், தென்னிந்தியாவில் சில பகுதிகளிலும் கிடைத்தன. இவை பார்பரிகம் வழியாக ரோம் நாட்டுக்கும், எகிப்துக்கும் ஏற்றுமதி செய்யப்பட்டன.

## 15. செரே நாட்டுத் தோல்கள் (Seric skins)

இச் சொல் இரண்டுவிதங்களாகப் பொருள்கொள்ளப்படுகிறது. சேரிக் (Seric), சேரர் தொடர்புகொண்டது என்றும், தோல்கள் மலையாள நாட்டிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டன என்பதும் ஒரு பொருள்; மற்றொன்று, செரிக் (Seric) என்பது வழவழப்பான பட்டுநூலைக் குறிப்பிடுகிறது. 'செரிக் கல்ச்சர்' என்பது பட்டுத் தொழிலைக் குறிப்பிடுகிறது. கிரேக்க மொழியில் செரே (Seres) என்பவர்கள், கிரேக்கர்களுக்கும், ரோமர்களுக்கும் பட்டுநூல், பட்டுத்துணி தயாரித்துக் கொடுத்த சீன நாட்டு மக்கள் ஆவர்.

ஆகையால், இங்குப் பட்டுப்போன்ற தோல்களைப் பதப்படுத்திக் கொடுத்த ஆசிய மக்களை-இந்தியர், சீனர்-இருவரையுமே குறிப்பிடுகின்றது. இமயமலையில் காட்டு விலங்குகள் மிகுதி. அவற்றின் தோல்களைப் பதப்படுத்தியவர் கங்கை-சிந்து சமவெளியில் வசித்து வந்த இனத்துள் சிலர் ஆவர். இத் தோல்கள்-வழவழப்புமிக்க தோல்கள்-பார்பரிகம் வழியாக ஏற்றுமதி செய்யப்பட்டன. புலித் தோல், சிறுத்தைத்தோல், பாம்புத்தோல், நாய்த்தோல், மான் தோல்-இவை யாவும் நாகரிக மக்களால் அக் காலத்திலும் விரும்பிப் பெறப்பட்டன.

"செரே நாட்டினர் தோல்களுடன், இரும்பையும் ஏற்றுமதி செய்து வந்தனர். இந்திய இரும்புக்கு அடுத்தபடியாக மதிக்கப் பட்டது பார்த்தியன் (Parthiyan) இரும்பாகும்."

—(பிளினி: புத்தகம்-VI, அதிகாரம் 20)

## 16. கடுக்காய் முதலிய கைப்புப் பொருள்கள் (Lyceum)

கடுக்காய், இலத்தீன் மொழியில் செபூலிக் மைரோபலன் (Chebulic Myrobalan) என்றும், பெர்பெரிஸ் லைசியம் (Berberis Lyceum) என்றும் வழங்கப்பட்டது. இந்தியாவில் இம் மருந்து சாயம் ஏற்றவும், பேதிமருந்தாகவும், தலையில் பேன் முதலியவை போக்கும் மருந்தாகவும் இன்றும் பயன்பட்டுவருகிறது. 'திரிபலா' எனும் கூட்டுச்சரக்கில் இதுவும் ஒன்றாகும். கடுக்காய், தான்றி, நெல்லி இம் மூன்றும் சேர்ந்ததே திரிபலா. இச் சரக்கு நிறைந்த குப்பிகள் பல, பாம்பே (Pompei), ஹெர்குபானம் (Hercubanum) எனும் அழிபாடுகளில் காணப்பட்டன என்று வரலாறு கூறுகிறது.

கடுக்காயுடன் இஞ்சியும், கற்றாழைச்சாறும் ஏற்றுமதி செய்யப் பட்டன. பிளினி (கி.பி. 23-79) கூறுகிறார்:

"இதன் வேர் மிகக் கசப்பாயிருக்கும்; மற்றும் கடுகடுப்பும் கொண்டது. மற்றப் பொருள்களுடன் கலந்து மருந்தாகப் பயன் படுத்தப்படுகிறது."

—(பிளினி: புத்தகம் XXI, அதிகாரம் 58)

## 17. சடாமாஞ்சி (Nardus)

இது வெட்டிவேர் போன்ற ஒரு பூண்டின் வேர்ப்பாகம். இலத்தீன் மொழியில் நார்டஸ் (Nardus) எனப்படும்; மற்றும் ஸ்பைக் நார்ட் (Spike Nard) என்றும் வழங்கப்படும். வடமொழி 'நலத்தம்' என்னும் சொல்லே, நார்டஸ் என்று திரிந்து வந்தது. இது தாவர வகையில் சிம்பகான் ஷினந்தஸ் (Cympagan Schoenanthus) எனப்படும். இது மேற்குப்பஞ்சாப், பலுசிஸ்தானம், பாரசீகம் ஆகிய இடங்களில் விளைந்தன. இது தோல் புண்களுக்கு, காயங் களுக்குப் பூச்சாகவும் பயன்படுத்தப்பட்டது. இவ் வகைப் பூண்டே அலெக்சாந்தர் பேரரசரால் (கி.மு. 356-323) கெட்ரோசியாவில் கண்டு பிடிக்கப்பட்டது. இச் செடியை அருடைய சேனைவீரர்கள், அலெக்சாந்தரின் இறப்புக்குப் பிறகு, ரோம் நகருக்கு எடுத்துச் சென்றனர். அதன் பிறகுதான், சடாமாஞ்சி பெருவாரியான அளவில் ரோம் நாட்டுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டது.

## 18 நவரத்தினக் கற்கள் (Callean Stones or Gems)

கோரோசான் (Khorosan) முதலிய இடங்களிலிருந்து சாதாரணக் கற்களும், நிஷாபூர் (Nishapur) என்ற இடத்திலிருந்து பெறப்பட்ட உயர்ரகக் கற்களும் ஏற்றுமதி செய்யப்பட்டன. பார்பரிகத்தில் இக் கற்கள் பெருவாரியான அளவில் ரோம் நாட்டுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. இவை காலியன் கற்கள் (Callean stones) என்று பிளினியால் (கி.பி. 23-79) வழங்கப்பட்டது. **(பிளினி: புத்தகம், XXXVII, அதிகாரம்33).** அவ்விடம் கல்லினே (Callinae) என்று வழங்கப்பட்டது. இந் நவரத்தினக் கற்களுள் பலவகைகள் இருந்தன. அவையாவன:

(1) கோமேதகம் (2) நீலம் (3) பவளம் (4) மரகதம் (5) மாணிக்கம் (6) முத்து (7) புஷ்பராகம் (8) வைடூரியம் (9) வைரம்.

## 19. பஞ்சு ஆடைகள் (Cotton clothes)

மிகமெல்லிய இழைகளாலான பருத்தி ஆடைகள், கிரேக்கர்களால் சிண்டான் (Sindon) என்று வழங்கப்பட்டது. சிண்டோமானு (Sindomana) எனப்படும் துறைமுகம் சிந்துநதியின் கழிமுகத்தில் இருந்தது. சிண்டோமானு இப்பொழுது செக்வான் (Sechwan) என்று வழங்கப்படுகிறது. கிளியோபாத்ரா எனும் எகிப்தியப் பேரழகி, இத் துணியைத் தன் மார்பின்மீது அணிந்து இன்புற்றதாக வரலாறுகள் கூறுகின்றன. பிளினி (கி.பி. 23-79) இத் துணியைச் சிடான் துணி (Sidanian Fabri) என்றே வழங்கினர்.

—(பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 20)

செக்வானின் இருப்பிடம்: 26°·26′வ × 67°·54′கி.

## 20. அவுரி (Indigo)

அவுரி இலத்தீன் மொழியில் இண்டிகோ ஃபெரா டிங்டோரியா (Indigo ferra tinctoria) என்று வழங்கப்பட்டது. இது அவுரிச் செடியின் இலைகளைத் தண்ணீரில் ஊறவைத்து, அதன் அழுகின பாகத்தை இறுகவைத்து, கட்டிகளாக்கிச் சாயம் ஏற்றப்பயன் படுத்தப் பட்டன. இதன் நிறம் கருமை கலந்த நீலம் ஆகும்.

பிளினி கூறுகிறார்:

"நமக்கு இண்டிகம் (Indicum) என்ற பொருள் இந்தியாவிலிருந்து இறக்குமதி செய்யப்படுகிறது. இக் கட்டி பார்வைக்குக்

கறுப்பாக இருப்பினும், இதைத் தூளாக்கி நீரில் கரைத்தால் மிகவும் அழகிய ஊதாவர்ணம் கொடுக்கிறது. இது மருந்து வகையாகவும் பயன்படுகிறது.''

—(பிளினி: புத்தகம் XXXV, அதிகாரம் 25 & 27)

மார்க்கோ போலோ (கி.பி. 1254-1324) தம் வரலாற்றில் குறிப்பிட்டுள்ளார்:

''மிகவும் உயர்ந்த வகையைச்சேர்ந்த அவுரி எனும் நீலச் செடியும் பெருவாரியான அளவில் பயிராக்கப்படுகிறது. இச் செடிகளைப் பாத்திகளில் மூலிகைகள்போலப் பயிரிட்டு, அவற்றை வேர்களுடன் பிடுங்கித் தண்ணீர் நிரம்பிய தொட்டிகளில் இட்டு, அவை தாமே அழுகிப்போகுமாறு விட்டுவிடுகின்றனர். அதன் பின்னர், அச் செடிகளைக் கசக்கிப் பிழிந்து, அவற்றினின்று வரும் சாற்றினைக் கிண்ணங்களில் இட்டுவைக்கின்றனர். அவை பசை போன்று சில தினங்களில் ஆகி, மற்றும் சில தினங்களில் இறுகிக் கட்டியாகிவிடும். அக் கட்டிகளைத் துண்டுகளாக்கி விற்பனைக்கு அனுப்புகிறார்கள்.''

—(மார்க்கோ போலோ—பக்கம் 75)

## 21. ஈடீஷியன் காற்று (Etesian winds)

இக் காற்று ஆண்டுதோறும் ஜூலை மாதத்தில் முப்பது நாள்கள் இடைவிடாது அடிக்கும் குளிர்காற்று ஆகும். இக் காற்று அராபியன் கடல் சிந்துநதிப் பக்கமாக அடித்த காற்றாகும். எகிப்திலிருந்து பார்பரிகம் வரும் கப்பல்களுக்கு இக் காற்று மிகவும் உதவியாயிருந்தது. இதைப் பிளினியும் விவரித்துள்ளார். (பிளினி: புத்தகம் II, அதிகாரம் 47); மற்றும் (பிளினி: அதிகாரம் 6, குறிப்பு-63, பக்கம் 125).

## 22. எபிபி (Eppi)

எபிபி என்பது ஜூலை மாதத்தைக் குறிப்பிடும் கிரேக்கச் சொல்லாகும். இதுபோன்று மற்ற மாதங்களின் பெயர்களுக்கு, அதிகாரம் 6, குறிப்பு-24 பார்க்கவும்.

# 40. ஈரினன், பராகா

சிந்தஸ்[1] என்ற நதிக்கும் அப்பால், மற்றொரு வளைகுடா காணப்படுகிறது. ஆனால், இது கப்பல் செல்ல உதவாதது; இது வடக்கு நோக்கிச் செல்கிறது. இதன் பெயர் ஈரினன்[2] என்பதாகும். இதன் பகுதிகள் ஒவ்வொன்றும் தனித் தனியான பெயர்கள் கொண்டனவாகும். அவை சிறிய வளைகுடா, பெரிய வளைகுடா என்ற பெயர்களால் வழங்கப் படுகின்றன. இவ் விரு பகுதிகளிலும் நீர் ஆழமில்லாமல் இருக்கிறது. ஆங்காங்கு நிலைமாறும் மணல் திட்டுகள் அடிக்கடி தோன்றியவண்ணம் உள்ளன. மற்றும் அவை கடற்கரைக்கு வெகு தொலைவிலேயும் கடல் நடுவிலும் காணப் படுகின்றன. இவை கப்பல்களைச் சேதமுறச் செய்கின்றன. இவ் வளைகுடாவிலிருந்து, ஒரு முனை[3] நேர்முகமாகக் காட்சி யளிக்கிறது. இஃது ஈரினன் இடத்திலிருந்து வளைந்து கிழக்கு முகமாகச் செல்கிறது. அதன் பிறகு தென்புறமாகவும், மற்றும் அதன்புறம் மேற்குநோக்கியும் வளைந்து செல்கிறது. இவ் வளைவினால் பராகா[4] எனும் பெயருள்ள வளைகுடா உண்டாகி, அதன் முனையில் வரும் கப்பல்கள் சிறிது தங்கி இளைப்பாறிச் செல்ல வசதி பெற்றுள்ளது. இவ் வளைகுடா வினுள் ஏழு தீவுகள்[5] காணப்படுகின்றன. ஆனால், இவ் வளைகுடாவுக்குள் தெரியாமல் புகுந்துவிட்டால், அவர்கள் திசைதடுமாறிப்போவர். இதற்குக் காரணம் இங்கு வீசும் வேகமான அலைவீச்சு. சிலபொழுது பேரலைகள் எழுந்து, நடுநடுவில் பெரும் நீர்சுழல்களை ஏற்படுத்திவிடுகின்றன. உள் நிலம் சில பகுதிகள் சமமாயும், சில பாறைகள் உள்ளதாயும் காணப்படுகிறது. கடற்கரையில் கடலுக்கடியில் நில நீட்சிகள், குன்றுகள்போல் காணப்படுகின்றன. அங்கு நங்கூரம் பாய்ச்சப்பட்ட கப்பல்கள் அந்த நங்கூரம் அறுபட்டோ, சிதைந்தோ, பிரிந்து சென்றுவிடுகிறது. இவ் விடங்களில் வருவோர்க்கு ஒரு முக்கிய அறிவிப்பு: மிகவும் பெரியனவாயும், கருநிறம் கொண்டனவாயுமுள்ள பாம்பினங் கள் அவ் வளைகுடாவினுள் வருவோரை வரவேற்கின்றன[6]. ஆனால், இதையொட்டிய மற்ற கடற்கரைப் பகுதிகளில்—

பாரிகாஸாவைச்[7] சுற்றிலும்—சிறிய அளவுள்ள பாம்பினங்கள் காணப்படுகின்றன. சிறிய பாம்பினங்கள் பசுமை கலந்த பொன்னிறம் கொண்டவையாக உள்ளன.

## விளக்கவுரை

**1. சிந்தஸ்** (Sindus)

இது சிந்து நதியைக் குறிப்பிடும் சொல்லாகும். மற்றும் அதிகாரம் 38, குறிப்பு-3 பார்க்கவும். இதன் கழிமுகத்தில்தான் பார்பரிகம் எனும் துறைமுகம் சிறப்புப் பெற்று விளங்கிற்று.

**2. ஈரினுன் வளைகுடா** (Gulf of Eirinon)

ஈரினுன் என்பது இப்பொழுது ரான் (Rann) என்று வழங்கப் படுகிறது. இதன் முழுப்பெயர் ரான் ஆப் கட்ச் (Rann of Cutch). இச் சொல் "இருணம்" அல்லது "இரிணம்" என்ற சொல்லின் அடிப்படையாகப் பிறந்தது. இருணம் என்ருல் உவர் நிலம் (Saline soil) என்பது பொருள். -(Vide Madras University Lexicon, page 328). இப் பகுதி முன்னர் கடலுள் மூழ்கிக் கடற் பகுதியாக இருந்து, பின்னர் கடல் ஒதுங்கி, நிலம் ஏற்பட்டிருக்கவேண்டும். 'கட்ச்' (Cutch) என்பது காசியபர் (Kasyapa) மகரிஷி என்பதைக் குறிப்படுகிறது. அதற்கடுத்துள்ள பாரிகாஸா எனும் இடம் பிருகு கச்சா எனப் பிரிந்து, பிருகுவால் ஏற்படுத்தப்பட்ட சமவெளி என்று பொருள் கொள்வதைப்போல், ரான் ஆப் கட்ச் என்பது காசியப ரிஷியின் பெயருடன் தொடர்பு கொண்டு விளங்குவதாயிற்று.

இந்த ரான் ஆப் கட்ச் பிரதேசத்தில் பாலைவனப் பகுதியே மிகுதி. எல்லா இடமே உவர்நிலம். இங்கு உள்ள வளைகுடா கட்ச் வளைகுடா (Gulf of Cutch) என்று வழங்கப்படுகிறது. இவ் வளை குடாவில் உள்ள தீவுகள் பேயி (Beiyi), கரும்பார் (Karunbhar) என்று வழங்கப்படுகின்றன. இவ்விரண்டு இடங்களிலும் ஏழு தீவுகள் உள்ளன.

கட்ச் வளை குடாவின் இருப்பிடம்: 22°·35'வ × 69°·40'கி.

**3. ஒருமுனை** (Cape)

இப் பொழுது அம் முனை ஓஹா துறைமுகம் (Port Okha) என்று வழங்கப்படுகிறது. கட்ச் வளைகுடாவில் நுழைந்தால் எதிர்ப் படும் முதல் முனை இதுவே.

ஓஹா துறைமுகத்தின் இருப்பிடம்: 22°27'வ × 69°·32'கி.

### 4. பராகா (Baraca)

இப் பெயரே கட்ச் வளைகுடாவின் பெயராகும். இதன் உண்மைப் பெயர் பாலிகா (Balika). இது இராமாயணத்திலும், விஷ்ணுபுராணத்திலும் குறிப்பிடப்பட்டுள்ளது. 'பாலிகா' என்றால் மிகுந்த நீரோட்டம் என்பது பொருள். ஆகையால், கட்ச் வளை குடாவில் மிகுந்த அலைவீச்சிருந்த காரணத்தால், அவ்விடம் 'பாலிகா' என முதலில் வழங்கப்பட்டு, அவ்விடமே கிரேக்கர்களால், உச்சரிக்க முடியாமல் 'பராகா' என்று வழங்கப்பட்டது போலும்!

கட்ச் வளைகுடாவின் இருப்பிடம்: 22°·35'வ × 69°·40'கி.

### 5. ஏழு தீவுகள் (Seven Islands)

இவை இப்பொழுது பேயி (Beiyi), கரும்பார் (Karumbhar) என்று வழங்கப்படுகின்றன. இவ்விடத்தில் ஏழு தீவுகள் உள்ளன. கட்ச் வளைகுடாவில் உள்ளன.

ஏழு தீவுகளின் இருப்பிடம்: 22°·27'வ × 69°·40'கி.

### 6. பாம்பினங்கள் (Sea serpents)

துறைமுகப் பகுதியில் பாம்பினங்கள் நிறைய இருந்ததாகக் கூறப்படுகிறது. எவராகிலும் பகைவர் அவ் வளைகுடாவில் நுழைந்து விட்டால், அங்குள்ள பாம்பினங்கள் கீழிருந்து மேல் கிளம்பி, உள் நுழைவோரை, நாட்டில் உள்ள மக்களுக்குத் தெரியப்படுத்தும். அவர்கள் உடன் கூட்டமாக வந்து, அக் கப்பலையோ, பகைவர் களையோ விரட்டிவிடுவர் என்று கூறப்படுகிறது. மற்றும் இதே போன்ற நிகழ்ச்சி பகாரே (Bacarae) என்னும் மலையாள நாட்டைக் கூறும் போதும் விவரிக்கப்படுகிறது. அதிகாரம் 55 பார்க்கவும்.

### 7. பாரிகாஸா (Barygaza)

இது பிருகு—கச்சா என்றதன் திரிபே. இன்று இந்த இடம் புரோச் (Broach) என்று வழங்கப்படுகிறது. இவ்விடத்தைச் சுற்றிச் சிறிய பாம்பினங்கள், பசுமை கலந்த பொன்னிறமான உடலுடன் காணப்படுகின்றன என்று கூறுகிறார். (மற்றும், அதிகாரம் 55 பார்க்கவும்).

பாரிகாஸாவின் இருப்பிடம்: 21°·41'வ × 73°.1'கி.

# 41. பாரிகாஸா, அரியாகா, ஸைராஸ்டிரின்

பராகா வளைகுடாவுக்கு[1] அப்பால், பாரிகாஸா வளைகுடா[2] காணப்படுகிறது. அங்கிருந்து லாரிகா[3] நாட்டின் கடற்கரை தொடங்குகிறது. இந் நாடு நம்பநூஸ்[4] அரசு எல்லையின் தொடக்கமாகும். இவ்விடமே அகண்ட தாய் நாட்டின் மிகப்பரந்த அகலத்தின் தொடக்கமாகும். இதில் உள்ளுக்குள் அடங்கி நிற்கும் நாடு சித்திய அபிரியா[5] (அரியாகா) என்பதாகும். ஆனால், அதன் கடற்கரை ஸைராஸ்டிரின்[6] என்ற பெயரால் வழங்கப்படுகிறது. அந் நாடு மிகவும் செழிப்பு மிக்கது. அங்குக் கோதுமை[7], அரிசி[8], எண்ணெய்[9], இறுகிய வெண்ணெய்க் கட்டிகள்,[10] பஞ்சு[11], பஞ்சால் ஆன முரட்டுத் துணிகள்[12], ஆடைகள் முதலியன உற்பத்தி செய்யப்படுகின்றன. ஆடுமாடுகள் கூட்டம் கூட்டமாக—மந்தை மந்தையாக — அங்கு மேய்ச்சலுக்கு விடப்படுகின்றன. அங்குள்ள மக்கள் மிக்க உறுதியான உடற்கட்டு வாய்ந்தவர். ஆனால், அவர் கறுப்பு நிறம் வாய்ந்தவர்களாகக் காணப்படுகின்றனர். அந் நாட்டின் தலைநகரம் மின்னகரம்[13] எனப் பெயர்பெறும். அங்கிருந்து பஞ்சாலான ஆடைகள் பாரிகாஸாவிற்குப் பெருமளவில் ஏற்றுமதி செய்யக் கொண்டு வரப்படுகின்றன. அவ் விடங்களில் இன்றைக்கும் மாவீரர் அலெக்சாந்தர் படையெடுப்புகளின் சின்னங்கள் காணப்படுகின்றன. அவற்றுள் சில கோட்டைகளின் உறுதியான மதிற் சுவர்கள், பெரிய அளவுள்ள கிணறுகள், கிரேக்கக் கடவுளர்க்குக் கட்டப்பட்ட சில கோயிற் சின்னங்கள் முதலியனவாகும். அந்தக் கடற்கரை யோரமாகவே சென்றால், பாரிகாஸாவிற்கு எதிராக அஷ்ட சம்பரா[14] எனும் இடம் உள்ளது. பார்பரிகம்[15] துறைமுகத்திலிருந்து பாபைகா முனை[16] வரையிலும் உள்ள தொலைவு 3000 ஸ்டேடியா[17] ஆகும்.

## விளக்கவுரை

### 1. பராகா வளைகுடா (Gulf of Baraca)

இவ்வளை குடா, இன்று கட்ச் (Cutch) வளைகுடா என்று வழங்கப்படுகிறது. முன்பெயர் 'பாலிகா'. இதுவே பராகா எனக் கிரேக்கர்களால் வழங்கப்பட்டது. மற்றும், அதிகாரம் 40, குறிப்பு-4 பார்க்கவும்.

கட்ச் வளைகுடாவின் இருப்பிடம்: 22°· 35'வ × 69°· 40'கி.

### 2. பாரிகாஸா வளைகுடா (Gulf of Barygaza)

பாரிகாஸாவின் இன்றைய பெயர் புரோச் (Broach). இது பிருகு-கச்சா என்பதன் சிதைவே.

இதைப் பிளினி (கி.பி.23-79) பிரென்கோஸி (Brencosi) என்று வழங்கினர். (பிளினி: அதிகாரம் 3, குறிப்பு-53, பக்கம் 55)

பாரிகாஸாவின் இருப்பிடம்: 21°· 41வ' வ × 73°· 1'கி.

### 3. லாரிகா (Larica)

இது இப்பொழுது காம்பே விரிகுடாவுக்கு இருமருங்கிலும் உள்ள நாட்டைக்குறிப்பிடுகிறது. இச்சொல் ராஷ்ட்ரிகா(Rashtrika) என்ற வடமொழிச்சொல்லின் திரிபே. ராஷ்ட்ரிகா என்பதே கிரேக்கர்களால் லாரிகா என்று வழங்கப்பட்டது. தாலமி (கி.பி. 119-161) என்பாரும் இவ்விடத்தை 'லாரிகே' (Larikae) என்று வழங்கினர். முதலில் வழங்கப்பட்ட சொல்லே, பின்னர் மகாராஷ்டிரம் (Maharatta) என்றும், சௌராஷ்டிரம் (Sowrashtra) என்றும் வழங்கப்பட்டது. சௌராஷ்டிரம் என்பது வடபகுதியையும், மகாராஷ்டிரம் என்பது தென்பகுதியையும் குறிப்பிட்டது.

### 4. நம்பநூஸ் (Nambanus)

அந் நாட்டை ஆண்டுவந்த அரசரின் பெயர் மம்பாரஸ் (Mambarus) என்பதாகும். அவ்வரசர் சாகா (Saka) வகுப்பினைச் சார்ந்தவர் ஆவார். இச் சொல் புலுமாயி II(கி பி. 78-104) அரசரைக் குறிப்பிடவும் கூடும் என்று நம்பப்படுகிறது. சாகா அரசர்களின் தலைநகரங்கள் மின்னகரம் என்ற பெயரால் வழங்கப் பட்டனவாகும். மற்றும், கீழே குறிப்பு-12ஐப் பார்க்கவும்.

### 5. அபிரியா (Abiriya)

இது ஒபிர் (Ophir) என்று வழங்கப்படும் நாட்டைக் குறிப்பிடும் என்று சிலர் கூறினும், ஒபிர் என்ற நாடு பாரசீக வளைகுடாவில் இருந்ததாகக் கருதப்படுகிறது.

இது அபிரர்கள் நாடு (Abhiras) என்று விஷ்ணுபுராணத்தில் (Vishnu Purana) கூறப்பட்டுள்ளது. அதாவது சிந்துநதியின் தெற்கில்-கட்ச் பிரதேசத்தில் வாழ்பவர்கள்-அபிரர்கள் எனப் பட்டனர்; மற்றும் பின்வருபவர்கள் அப் புராணத்தில் குறிப்பிடப் பட்டுள்ளனர்: கர்த்தபிலர் (Gardhabilas)–இவர்கள்கெட்ரோசி யாவின் பகுதிகளில் வாழ்ந்தவர்; சாகர்கள் (Sakas)-இவர்கள் செல்யூகஸ் நிகேடரின் காலத்துக்குப்பிறகு (கி.மு. 280) சத்ராபிகள் என அந்நாடு பிரிக்கப்பட்டு, அச் சத்ராபிக்கு அரசர்களாக சாகா கிளையினர் அமர்த்தப்பட்டனர்; யவனர்கள் (Yavanas)-இவர்கள் சிந்துநதிக்கு மேற்கிலும், காந்தார நாட்டிற்கு எல்லை ஒட்டியும் வாழ்ந்தவர்கள்; பாலிகர்கள் (Bhalikas)–இவர்கள் பாலைவனத்தைச் சார்ந்தவர்கள். ராஜபுதனப்பாலைவனம், ரான் ஆப் கட்ச் என்ற பாலைவனம் ஆகியவற்றைச் சார்ந்தவர்கள். காம்பே விரிகுடாவில் வாழ்ந்து வந்தனர். ஆகவே, அபிரர்கள் என்பவர்கள் காம்பே விரிகுடாவைச் சுற்றி வாழ்ந்தவர் ஆவர். —(The Early History of India By Vincent Smith, Page 255).

காம்பே விரிகுடாவைச் சுற்றியுள்ள பகுதி அரியாகா (Ariaca) என்று வழங்கப்பட்டது. இப் பகுதி ஒரு காலத்தில் சித்தியா (Scythia) என்றே வழங்கப்பட்டது. பேராசிரியர் வின்செண்ட் ஸ்மித் கூறுகிறார்:

"சிந்து நதியின் கழிமுகத்தையும், அதன் மேற்கிலுள்ள நாட்டையும் சித்தியர் (Scythias) வென்று, அப் பகுதி முழுவதை யும் சித்தியா (Scythia) என்றே வழங்கினர்."

—(The Early History of India By Vincent A Smith, Page 217)

மற்றும் அதிகாரம் 38, குறிப்பு–10 பார்க்கவும்.

**6. ஸைராஸ்டிரின் (Syrasterene)**

இச் சொல் சௌராஷ்டிரம் என்பதன் கிரேக்க உச்சரிப்பே. காம்பே விரிகுடாவின் பகுதி சௌராஷ்டிரம் (Saurashtra) என்று வழங்கப்பட்டது. அதன் தென்பகுதி மகாராஷ்டிரம் என்று வழங்கப் பட்டது.

இன்று கத்தியவார் (Kathiawar) உள்ள பகுதி சௌராஷ்டிரம் என வழங்கப்பட்டது.

கத்தியவாரின் இருப்பிடம்: 22°·0'வ × 71°·0' கி.

**7. கோதுமை (Wheat)**

உலகத்தில் முதன் முதல் கோதுமை விளைந்த இடம் சீனு என (China) என்றே கருதப்படுகிறது (கி.மு. 2700). வடமொழியில்

இது 'யவம்' (yava) எனப்படுகிறது. அதன் காரணமாகவே, கோதுமை போன்று உருவ அமைப்பில் உள்ள ஜாவா தீவு (Java) முன்னர் யவத் திவீபம் (Yavadvipa) என்றே வழங்கப்பட்டது. வாற்கோதுமையும் (Barley) யவம் என்று வழங்கப்பட்டது.

இக் கோதுமை, ஆப்பிரிக்காவில் உள்ள பிரமிடுகளில் (pyramids) அரசர்களின் உடலருகில் (கி.மு. 3000) தூவப் பட்டிருந்தன என ஆராய்ச்சியாளர்கள் கூறியுள்ளனர்.

மற்றும் அதிகாரம் 7, குறிப்பு-7 பார்க்கவும். பிளினி, கோதுமை பற்றியும், வாற்கோதுமை (Barley) பற்றியும் குறிப்பிட்டுள்ளார். (**பிளினி:** புத்தகம் XII, அதிகாரங்கள் 72-76)

## 8. அரிசி (Rice)

இது ஒரிஜா (Oryza) என்று இலத்தீன் மொழியில் வழங்கி, ஆங்கிலத்தில் அதுவே ரைஸ் (Rice) என்று வழங்கப்பட்டது. இந்தியநாட்டு அரசி அன்று உலகம் முழுவதும் விரும்பி அந்தந்த நாடுகளில் இறக்குமதி செய்யப்பட்டது. அரிசி தமிழ்ச் சொல்லே, இச் சொல்லே ஆங்கிலத்தில் ரைஸ் (Rice) என்று வழங்கப்படுகிறது.

## 9. எண்ணெய் (Seasame Oil)

இது எள்ளிலிருந்து செக்கிலாட்டப்பட்ட எண்ணெயைக் குறிப் பிடுகிறது. நல்லெண்ணெய் என்று வழங்கப்படுகிறது. இலத்தீனில் இது சீஸாமம் இண்டிகம் (Seasamum indicum) என்று வழங்கப் பட்டது. இதன் பொருள் எள் என்பதே. இவ் எண்ணெய், பண்டங் களுக்கு வாசனையூட்டவும், தலைமீது தடவி, ஸ்நானம் செய்யவும் ரோமநாட்டு மக்களால் பெரிதும் விரும்பப்பட்டது. கண்களுக்குக் குளிர்ச்சியைத்தருவது என்று கருதப்பட்டது. மெஸபொடேமியாவில் (Mesapotamia) எண்ணெய் தேய்த்துக் குளிக்கும் பழக்கம் கி.மு. பல நூற்றுண்டுகளுக்கு முன்னரே இருந்து வந்தது. இது ஆங்கிலத்தில் ஜிஞ்சிலி ஆயில் (Gingelly oil) என்று வழங்கப் பட்டது.

கிறித்தவ வேதமாகிற பைபிளில் (Bible) இவ் எண்ணெய்த் தேய்க்கும் பழக்கம் குறிப்பிடப்படுகிறது:

"நீ என் தலைமீது எண்ணெய் பூசவில்லை; இவளோ என் பாதங்களில் பரிமளத் தைலம் பூசினாள்."

—(**லூக்கா:** 7—46)

**10. இறுகிய வெண்ணெய்க் கட்டிகள் (Clarified Butter)**

இது புடிரம் (Butyrum) என்று இலத்தீன் மொழியில் வழங்கப் பட்டது. வெண்ணெயைக் காய்ச்சி நெய் எடுத்துப் பயன்படுத்தப் பட்டது வெகுகாலத்துக்கு முன்பு தெரிந்ததே. இவ் வெண்ணெயை இறுக வைத்து, அயல் நாட்டிற்கு அனுப்பப்பட்டது. எண்ணெயும், வெண்ணெயும் அக் கால அயல்நாட்டு மக்களாலும் போற்றப் பட்டனவாகும்.

**11. பஞ்சு (Cotton)**

பஞ்சு சுத்தம் செய்யப்பட்டு ஏற்றுமதி செய்யப்பட்டது. இப் பஞ்சினுல் ஆன ஆடை வகைகளே அதிகமாய் ஏற்றுமதி செய்யப்பட்டன.

**12. பஞ்சாலான முரட்டுத்துணிகள் (Coarse clothes from coiton)**

இம் முரட்டு வகைத் துணிகள் ஆப்பிரிக்காவுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. இவை அடிமைகளுக்கும் கூலியாள்களுக்கும் ஏற்றவையாகத் தைத்து அனுப்பப்பட்டன. கருநீலத்துணியும் (Indigo Dyed clothes) இவற்றில் அடங்கும்.

**13. மின்னகரம் (Minnagaram)**

இம் மின்னகரம், சித்தூரையும், இந்தூரையும் (Chttoor and Indore) குறிப்பதாகக் கூறப்படுகிறது. சித்தூருக்கருகில் இருக்கும் நகரி (Nagari) என்பதே முன்னுளில் மின்னகரம் எனப் பெயர் பெற்றிருக்க வேண்டும் என்று கூறுகின்றனர். மின்னகரம் எனும் சொல், மின்–நகரம் என்று பிரிந்து, 'மின், என்று வழங்கப்படும் சாகா (Saka) கிளைமக்களால் வெல்லப்பட்டு, நிர்மாணிக்கப்பட்ட நகரம்' என்றும் அதற்குப் பொருள் கூறப்படுகிறது. சாகா வமிசத் தினர் 'மின்' (Mins) என்ற அடைமொழியால் குறிப்பிடப்பட்டனர். ஆந்திரநாட்டில் விளங்கிய அரசர்கள் சாகா வமிசக் கிளையினராக ஒவ்வொரு அரசரும் கருதிவந்தனர். சித்தியர்கள் (Scythians), பார்த்தியர்கள் எனப்படும் பஹ்லவர்களைவென்று, அவர்கள் நாட்டில் தங்கி, இந்தோ—பார்த்தியர்கள் (Indo-parthians) என்றே குறிப்பிடப்பட்டனர். இங்கு இந்தோ-பார்த்தியர்களை வென்றவர்கள் சாதவாகனர் என வழங்கப்பட்டனர்.

சாகா வமிசத்தினர் மின் எனப்பட்டனர். அம் 'மின்' வமிசத் தினரைப் பார்த்தியர்கள் வென்று, மின்னகரம் என்று வழங்கப் படும் நகரங்களை ஏற்படுத்தினர். 'மின்'களை வெற்றி கொண்ட நகரம் என்பதே இதன் பொருள் ஆகும்.

சாகா அல்லது சகவமிசத்தினரை (சித்தியர்களை) வென்ற அரசர்கள் சாதவாகனர் என்று தங்களை வழங்கிக்கொண்டனர். அவ்வமிசத்தின் முதல் தாபகர் சிமுகன் என்பவர் ஆவார். அவ்வமிசத்தைப் புகழுடையச் செய்தவர் அவருடைய மருமகனான சாதகர்ணி I என்பவர் ஆவார். அவ்வமிசத்தினருள் கௌதமி புத்ர சாதகர்ணி என்னும் அரசர் சித்தியர்களையும், கிரேக்கர்களையும் (யவனர்), பஹ்லவர்களையும் (பார்த்தியர்) வென்று, தம் அரசை வடக்கே மால்வாவிலிருந்து, தெற்கே கன்னடம் வரையில் பரவச் செய்தார். அவருடைய மகன் வசிஷ்திபுத்ர புலுமாயி, கோதவரி நதியின் கரையில் பைதான் அல்லது பிரதிஸ்தானு என்னும் இடத்தைத் தம் நகராகக் கொண்டு, புகழ் ஓங்க அரசாட்சி செய்தார். அவருடைய அரசு காலத்தில் மற்றும் இரண்டு நகரங்கள்—வடகானராவில் வைஜயந்தியும், குண்டூர் மாவட்டத்தில் அமராவதியும்—சிறப்புற்று விளங்கின. இவ்விரு நகரங்களையும் அவரே நிர்மாணித்தார். இவ்வாறு விளங்கிய சாதகர்ணி வமிசத்தின் இறுதி அரசர் யக்ஞசாதகர்ணி ஆவார். பின்னர் அவ்வமிசம் அழிந்து விட்டது.

சக ஆண்டு என்பது கி. பி. 78-ல் தொடங்கிற்று. கௌதமி புத்ர சாதகர்ணி கி.பி. 78 முதல் கி.பி. 104 வரை ஆட்சி செய்தார். அவர் புலுமாயி-II என்று வரலாற்றில் வழங்கப்பட்டார். மற்றும், அதிகாரம் 52, விளக்கவுரை சரகணஸ் என்ற பகுதியில் பார்க்கவும்.

சக வமிசத்தினர் தம் அரசாட்சியில் பல நகரங்களை வென்றார்கள். அவர்கள் ஆந்திர நாட்டில் பல நகரங்களை நிர்மாணித்தார்கள். சகர்களை வென்றவர் பார்த்திய அரசர்கள். அவர்கள் பல இடங்களில் வெற்றித் தம்பங்களைக் நாட்டினர். 'மின்' என்ற சொல் சகர்களைக் குறிக்கும். ஆக சகர்களை வென்ற இடங்களில் கட்டின—நிர்மாணித்த நகரங்களை—**மின்னகரம்** என்று வழங்கினர். மின்னகரம் பார்த்திய அரசர்களால் ஏற்படுத்தப்பட்டன,

அவ்வாறு கிளர்ந்தெழுந்த மின்னகரங்கள் பல. அவற்றுள் ஒன்று தென்னாட்டில் சித்தூர் அருகேயுள்ள நகரி என்ற நகரம் ஆகும். சித்தூர் என்பது முதலில் சிற்றூர் என்று இருந்தது. அச்சிற்றூரே நாளடைவில் சித்தூர் என்று மருவி வந்தது. சிற்றூர் என்று ஒன்று இருந்தால், பேரூர் ஒன்று இருக்கவேண்டுவது அவசியமல்லவா? ஆகையால், அச் சிற்றூருக்கருகே ஒரு நகரத்தை—நகரி என்னும் நகரத்தை—நிர்மாணித்தனர். அவ்விடம் சகரரை வெற்றி கொண்ட இடமாகும். அது முன்னாளில் மின்னகரம் என்று பெயர் பெற்றிருந்தது. நாளடைவில், மின்னகரம், நகரம் என்று மாறி,

இப்பொழுது நகரி என்று வழங்கப்படுகிறது. ஆக, ஒரு காலத்தில் பேரூராக இருந்த நகரி, இன்று சிற்றூராக விளங்குகிறது. ஒரு காலத்தில் சிற்றூராக விளங்கிய சித்தூர் இன்று பேரூராக விளங்கு கிறது. இது வரலாறு அரசர்கள் காலத்தோடு போட்டிபோட்டுத் தனக்குத் தானே ஏற்படுத்திக்கொண்ட ஒரு முறையாகும். ஆக, மின்னகரம் என்பது சித்தூர் அருகில் உள்ள நகரியைக் குறிப் பிடுகிறது என்பது ஒப்புக்கொள்ளத்தக்கதே.

## 14. அஷ்டசம்பரா (Ashtasambara)

இது அன்று விளங்கிய கத்தியவார் பிரதேசம் எட்டு பகுதி களாகப் பிரிக்கப்பட்டிருந்ததைக் குறிப்பிடுகிறது.

## 15. பார்பரிகம் (Barbaricum)

இது சிந்து நதியின் கழிமுகத்தில் விளங்கிய முக்கிய வாணிக நகரத் துறைமுகமாகும். இப்பொழுது இது டட்டா (Tatta) என்று வழங்கப்படுகிறது.

டட்டாவின் இருப்பிடம்: 24°·4′ வ × 67°·58′ கி. மற்றும் அதிகாரம் 38, குறிப்பு–8; அதிகாரம் 39, குறிப்பு–1 பார்க்கவும்.

## 16. பாபைகா முனை (Cape Papica)

இன்று டையு துறைமுகம் (Port Diu) உள்ள இடமே—அம் முனையே—கிரேக்கர்களால் பாபைகா முனை என்று வழங்கப் பட்டிருக்கவேண்டும்.

டையு துறைமுகத்தின் இருப்பிடம்: 20°·42′வ × 70°·56′கி.

## 17. 3000 ஸ்டேடியா (3000 Stadia)

ஒரு ஸ்டேடியம் என்பது ஒரு பர்லாங்கைக் குறிப்பிடும். ஆக, 3000 ஸ்டேடியா என்பது 375 மைல்கள் (600 கிமீ.) தொலைவைக் குறிப்பிடுகிறது.

மற்றும் அதிகாரம் 1, குறிப்பு-5 பார்க்கவும்.

# 42. நம்மதூஸ்

இதற்கும்ப்பால் உள்ள வளைகுடா, அலைகளின் காரணமாக, அது மிகுந்த சேதத்திற்குள்ளாக்கப்பட்டுள்ளது. இது வடக்கு நோக்கிச் செல்கிறது. அதன் நுழைவாயிலில் பெகோனஸ்[1] என்ற பெயரால் வழங்கப்படும் தீவு ஒன்று உள்ளது. அதன் மிகவும் உள்ளடங்கிய பகுதியில் மாயிஸ்[2] எனும் பெயர் பூண்ட பெரியநதி ஓடிக்கொண்டிருக்கிறது. பாரிகாஸாவிற்குக்[3] கப்பலில் செல்வோர் இவ் வளைகுடாவைக் கடந்துதான் செல்லவேண்டும். இதன் அகலம் 300 ஸ்டேடியா[4] ஆகும். இவ் வளைகுடாவைக் கடந்து செல்ல வேண்டுமாயின், கப்பலைக் கிழக்கு நோக்கிச் செலுத்த வேண்டும். அவ்வாறு செல்பவர், பாரிகாஸா விளங்கும் நதியின் கழிமுகத்தை அடைகின்றனர். இந்த நதியின் பெயர்தான் நம்மதூஸ்.[5]

### விளக்கவுரை

**1.** பெகோனஸ் (Bacones)

இது நர்மதை ஆற்றின் (River Narmada) கழிமுகத்திற்குச் சற்றுத் தொலைவில் உள்ள பிரம் தீவினைக் (Pram Island) குறிப்பிடுகிறது. இப்பொழுது அங்கலேஸ்வர் (Anklesvar) என்று வழங்கப் படுகிறது. இத் தீவு காம்பே (Cambay) வளைகுடாவில் உள்ளது.

அங்கலேஸ்வர் இருப்பிடம்: 21°·38′ வ × 73°·3′கி. இஃது இன்றைக்குச் சிறந்த மீன் பிடிக்கும் இடமாக விளங்குகிறது.

**2.** மாயிஸ் நதி (River Mais)

இத் நதி இப்பொழுது மாஹி எனப்படுகிறது. மாஹி நதி (Mahi River) காம்பே விரிகுடாவில் (Bay of Cambay) விழுகிறது. இந் நதிக்குக் கிழக்குப் பகுதியில் பஞ்ச் மஹால்ஸ் (Panch Mahals) என்ற இடமும், மேற்குப் பகுதியில் கைரா (Kaira) என்ற இடமும் உள்ளது. இவ்வாற்றில் சிறு படகுகள் போகக்கூடியது. கிரேக்கர்கள் இந் நதியை மாயிஸ் நதி என்று வழங்கினர்.

மாஹி நதியின் இருப்பிடம்: 22°·20′ வ × 73°·5′ கி.

**3. பாரிகாஸா** (Barygaza)

இது இன்றைக்குப் புரோச் (Broach) என்று வழங்கப்படுகிறது. பிருகு, கச்சா என்ற இரு சொற்களின் இணைப்பே, பாரிகாஸா என்று கிரேக்கர்களால் வழங்கப்பட்டது. பாரிகாஸா என்பது இன்றைக்குப் புரோச் என வழங்கப்படும் துறைமுகமாகும்.

பாரிகாஸா இருப்பிடம்: 21°·41′ வ × 73°·1′ கி.

மற்றும் அதிகாரம் 41, குறிப்பு-2 பார்க்கவும்.

**4. 300 ஸ்டேடியா** (300 Stadia)

ஒரு ஸ்டேடியம் என்பது ஒரு பர்லாங் அளவைக் குறிப்பிடு கிறது. இங்குக் குறிப்பிட்ட 300 ஸ்டேடியா, 37½ மைல்களைக் (60 கிமீ) குறிப்பிடுகிறது. மற்றும் அதிகாரம் 1, குறிப்பு-5 பார்க்கவும்.

**5. நம்மதூஸ்** (Nammadus)

நர்மதை (Narmada) நதியே கிரேக்கர்களால் நம்மதூஸ் (Nammadus) என்று வழங்கப்பட்டது. நர்மதை ஆற்றுக் கழிமுகத்தில்தான் பாரிகாஸா—நவீன புரோச்—இருந்தது. நர்மதையில் உள்பகுதியில் கப்பல்கள் சென்றன. சிறிய கப்பல் களின் மூலமாக, உள்நாட்டிலிருந்து வாசனைப்பண்டங்கள், பஞ்சு, சணல் முதலியவை பாரிகாஸாவுக்கு எடுத்து வரப்பட்டன. பாரிகாஸாவிலிருந்து அப் பொருள்கள் அரேபியா, ஆப்பிரிக்கா, ரோம் முதலிய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன.

நர்மதை நதியின் இருப்பிடம்: 21°·38′ வ × 74°· 0′ கி.

# 43. ஹிரோனி, அஷ்டசம்பரா

*பாரிகாஸாவிற்குச்[1] செல்லும் இவ் வளைகுடா குறுகியே காணப்படுகிறது. கடல்வழி வரும் பெரிய கப்பல்கள் இவ் வளைகுடாவினுள் செல்ல முடியாமல் தத்தளிக்கின்றன. நடு நடுவே பல இன்னல்களும் அக் கப்பல்களை வரவேற்கின்றன. வலப்பக்கம், இடப்பக்கம் ஆக இருபக்கங்களிலும் இடையூறு கள் உள்ளன. இடப்பக்கம் உள்ள வழிமட்டும் சிறிதே சௌகர்யம் வாய்ந்ததாக உள்ளது. வலப்பக்கத்தில் உள் நுழையும் இடத்தில்—நுழைவாயிலில்—சிறிய கடற்கால்[2]*

ஒன்று பற்பல பாறைகளுடன் காணப்படுகிறது. இதன் பெயர் ஹிரோனி.[3] இது சிம்போலி[4] எனும் இடத்தை எதிர்நோக்கி உள்ளது. இதற்கு எதிராக இடப்பக்கத்தில் அஷ்டசம்பரா[5] உள்ளது. அதற்குச் சற்று முன்னால் காணப்படும் முனை பாபைகா[6] எனப்படும். இங்கு நங்கூரம் பாய்ச்ச வசதி இல்லை. காரணம், இங்கு மிகுந்த சுழற்சி கொண்ட அலை வீச்சுகளும், நீர்ச் சுழல்களும், அந் நங்கூரத்தின் சங்கிலிகளை — கயிறுகளை — அறுத்தெறிந்துவிடுகின்றன. அக் கடற்கரையின் அடிப்பாகம் பாறைகள் நிறைந்ததாயும், கரடு முரடான நிலப்பகுதியை உடையதாகவும் காணப்படுகிறது. வளைகுடாவுக்குள் எப்படியேனும் நுழைந்துவிட்டாலும், பாரிகாஸா விளங்கும் நம்மதாஸின்[7] கழிமுகம் சரிவரப் புலப்படுவதில்லை. அவ்வாறு புலப்பட்டாலும், அந் நதியின் ஊடே செல்வது மிகக் கடினம். அதற்குக் காரணம் அக் கழிமுகத்தில் சிறிது தொலைவு வரை குத்தான கற்பாறைகள்[8] ஆங்காங்கே காணப்படுகின்றன. இக் கற்பாறைகளே கப்பல்கள் உள்ளே போவதற்குப் பெருந்தடைகளாக உள்ளன.

## விளக்கவுரை

**1. பாரிகாஸா** (Barygaza)

இது இன்றைக்குப் புரோச் (Broach) என்று வழங்கப்படுகிறது. பிருகு, கச்சா இரு சொல்லின் ஆக்கமே பாரிகாஸா. அதற்குச் செல்லும் வளைகுடா காம்பே வளைகுடா (Gulf of Cambay) என்று பெயர் பெறும். இவ் வளைகுடா இன்னல்களும், கற்பாறைகளும் நிறைந்த இடமாகும். இவை இங்கு ஒரு காலத்தில் மலை இருந்த தென்பதைக் குறிப்பிடுகின்றன.

பாரிகாஸாவின் இருப்பிடம்: 21°·41′ வ X 73°·1′ கி.

**2. கடற்கால்** (Bay)

இக் கடற்கால் காம்பே கடற்கால் (Bay of Cambay) என்று வழங்கப்படுகிறது. இக் கடற்காலில்தான் மாஹி நதி (River Mahi) தன் கழிமுகத்தை ஏற்படுத்தியுள்ளது.

கடற்காலின் இருப்பிடம்: 22°·20′ வ × 73°·5′ கி.

**3. ஹிரோனி (Herone)**

இச் சொல் 'இருணம்' அதாவது உவர்நிலம் என்பதன் சிதைவே. இருணம் என்பதே இன்று ரான் (Rann) என்று வழங்கப் படுகிறது. இவ்விடம் இன்று ஒரு சிறிய தீவாக உள்ளது. பண்டார் (Bandar), பவிலியாரி (Baviliari) ஆக இரு துறைமுகங்களுக்கு இடையேயுள்ள தீவே இங்குக் குறிப்பிடப்படுகிறது.

இருணத் தீவின் இருப்பிடம்: 22°·0′வ × 72°·11′கி.

**4. சிம்மோனி (Simmone)**

இச் சொல் சிம்மவாஹினி (Simmavauhini) என்றதன் சிதைவே. சிம்மத்தை வாகனமாக உடைய தேவதை சண்டி (காளி). இச் சண்டியின் பெயரால் புரோச் இருக்கும் இடத்திற்குச் சற்று வடக்கில் சண்டோத் (Chandod) எனும் பிரதேசம் உள்ளது. இவ்விடமே முன்னர் சிம்மவாஹினி என்று வழங்கப்பட்ட இடமாகும். இவ்விடத்தைக் கிரேக்கர்கள் சிம்மோனி (Simmone) என்று வழங்கினர்.

சிம்மோனியின் இருப்பிடம்: 22°·0′வ × 73°·7′கி.

அக் காலத்தில் இவ்விடம் பார்த்திய அரசர்களுக்குச் சொந்த மாயிருந்தது. பார்த்தியர்கள் (Parthias) க்ஷேத்திரபதிகள் (Satraps) எனவும் வழங்கப்பட்டனர்.

**5. அஷ்டசம்பரா (Ashtasambara)**

இது கத்தியவார் பகுதியைக் குறிப்பிடுகிறது. கத்தியவாரில் நவ நகர் (Navanahar) என்பது ஒன்பது ஊர்களைக் கொண்டு விளங்கும் புதிய நகரம் எனும் பொருள்பட ஏற்பட்டதாகும். கத்தியவார் அருகில் உள்ள ஓர் இடம் பாஞ்ச் மஹால்கள் (Panchmahals) என்று வழங்கப்படுகிறது—ஐந்து பெருங் கட்டடங்களான மஹால்கள் இருப்பதால். இதுபோன்று அன்று எட்டு கிராமங்கள் கொண்ட பகுதி அஷ்டசம்பரா என்ற பெயரால் வழங்கப்பட்டிருக்க வேண்டும்.

தமிழ்நாட்டிலும் எண்களைக்கொண்ட ஊர்கள் பல உள்ளன. எண்ணாயிரம், சதுர்வேதபுரம், நவபாஷாணம், முக்கூடல், நான் மாடல், ஐந்தருவி, ஆறுமுகனேரி, ஏழுமலை, அட்டபுரம் முதலியன வாகும்.

அஷ்டசம்பராவின் இருப்பிடம்: 22°·0′ வ × 70°·0′கி.

**6. பாபைகா முனை** (Cape Papica)

இன்று இவ்விடம் டையு (Port Diu) என்று வழங்கப்படுகிறது. இவ்விடம் கத்தியவாரின் தென் கடற்பகுதியிலுள்ள முனையாகும். இன்று இம் முனையின் பெயர் டையு (Diu).

பாபைகாவின் இருப்பிடம்: 20°·42'வ X 70°·56'கி.

மற்றும் அதிகாரம் 41, குறிப்பு-16 பார்க்கவும்.

**7. நம்மதூஸ்** (Nammadus)

இச் சொல் நர்மதை நதியைக் (River Narmada) குறிப்பிடுகிறது. நர்மதை ஆற்றின் கரைமீதுதான் பாரிகாஸா (Barygaza) இருந்தது. அதன் இன்றைய பெயர் புரோச் (Broach).

நர்மதை நதியின் இருப்பிடம்: 21°·38' வ × 74°·0'கி. மற்றும் அதிகாரம் 42, குறிப்பு–5 பார்க்கவும்.

**8. குத்தான பறைகள்** (Ridges of stones)

நர்மதை ஆற்றின் கழிமுகம் இருந்த இடம் ஒருகாலத்தில், மலைப்பாங்கான—சிறு குன்றுகள் விளங்கிய—பிரதேசமாகும். ஆகையால், கடலோரங்களில் ஆங்காங்குச் சிதறிய பாறைத் துண்டுகள் காணப்படுகின்றன. அலைவீச்சுகள் காரணமாக, அவற்றின் முனைகள் கூராக்கப்பட்டுள்ளன. கப்பல்கள் அப் பாறைகள் வெளிக்குத் தெரியாத காரணத்தால் அவைமீது மோதி உடைந்து விடுகின்றன. ஆக, அவ் வளைகுடாவில் மிகப் பழகிய மாலுமிகளே படகோட்டமுடியும்; அவர்களே கப்பல்களை வெகுவிழிப்புடன் செலுத்தமுடியும்.

# 44. சைராஸ்டிரின்வரைக் கடல்வேவு

இத்தகைய இன்னல்கள் ஏற்படுவதன் காரணமாக,[1] உள்நாட்டுப் பரதவர் அரசாங்க ஊழியர்களாக அமர்த்தப்பட்டுள்ளனர்.[2] அவர்கள் திரப்பகா,[3] கோடிம்பா[4] ஆகிய பெரும் படகுகளில் ஆற்றின் கழிமுகத்தின் நுழைவாயிலில், பாதுகாப்பாளராக வைக்கப்பட்டுள்ளனர். அவர்கள் ஸைராஸ்டிரின்[5] வரையில் கடற்கரையோரமாகவே வேவு பார்த்து வருகின்றனர். பாரிகாஸாவிற்கு[6] வரும் கப்பல்களை, அவை அடையும் பேரின்னல்களிலிருந்தும் காப்பாற்றி,

சேதமுறுவண்ணம், துறைமுகத்துக்குச் செல்லுமாறு உதவி செய்து வருகின்றனர். சில பொழுது அக் கப்பலைப் பயணி களுடன் தாங்களே சிறு திட்டுகளின் வழியாகவும் செலுத்து கின்றனர். குறிப்பிட்ட சில துறைகள் வழியாகவே செலுத்தி வருகின்றனர். ஆற்றின் வெள்ளப்பெருக்கின்போதும், பெரும் அலைவீச்சுகளின்போதும் கப்பலை நங்கூரம் பாய்ச்சி, ஆழ்ந்த நீர்நிலைகளில் அதை நிறுத்தித் தாங்களும் மேற்கொண்டு செல்ல நல்ல வாய்ப்பான நேரத்தை எதிர்ப்பார்த்திருப்பர். இவ் வாழமான நீர்நிலைகள் ஆங்காங்கே பாரிகாஸா வரையிலும் உள்ளன. பாரிகாஸா துறைமுகம் ஆற்றின் கழிமுகத்திலிருந்து 300 ஸ்டேடியா[7] தொலைவு உள்ளது.

## விளக்கவுரை

### 1. இன்னல்கள் காரணமாக (On account of certain impediments)

இங்கு இன்னல்கள் என்று கூறப்படுவது, செங்குத்தான கூரான கற்பாறைகள் ஆங்காங்கே தடையாக நிற்பதையே. இவ் விவரம் முன் அதிகாரத்தில் குறிப்பிடப்பட்டது (அதிகாரம் 43, குறிப்பு-3 பார்க்கவும்).

### 2. பரதவர் ஊழியர்களாக அமர்த்தப்படுதல் (Fishermen engaged as Government servants)

அவ்விடம் உள்ள புவியியல் நிலைமை அங்கு வசிக்கும் பரதவர் களுக்கே தெரியுமாதலால், அரசாங்கம் அத்தகையவர்களை உதவி செய்ய நியமித்தது. அவர்களுடைய பொறுப்பு, துறைமுகத்துக்கு வரும் கப்பல்களையும், உள்நாட்டிலிருந்து பண்டங்கள் ஏற்றிவந்து, துறைமுகத்திலிருந்து வெளிச் செல்லும் கப்பல்களையும் அவர்கள் எச் சேதமுமின்றி அக் கடல் எல்லையைத் தாண்டிப் போகுமாறு உதவிசெய்வதேயாகும். பண்டங்களும், ஆள்களும் சேதமுற்றால், அரசாங்கத்தின் வருவாய் குறைந்துவிடும் என்ற காரணமே முக்கிய மாகும்.

### 3. திரப்பகா (Trappaga)

இச் சொல் ஒருவகைப் படகைக் குறிப்பதாகும். இவ்வகைப் படகுகள் மெழுகினால் பூசப்பட்டு, மிக உறுதியான நார்களால் இணைக்கப்பட்டுள்ளன. இம்மியளவும் அதில் நீர் புகா. பெரிய அலைகள் வந்தாலும், அவ்வலைமீது அப்படகு போகுமே தவிர, அலை

நீர் அப்படகில் புகா. இது தமிழிலிருந்து எடுத்தாண்ட சொல் போன்று தெரிகிறது. திரைபுகா-அதாவது கடல் நீர்புகா—என்பது அதன் பொருள்.

"தென்கடலமு வத்துத் திரை நீக்கா வெழுதரூஉம்"
—(கலித்தொகை 121)

"தன்னுளே திரைத் தெழும் தரங்க வெண்தடங்கடல்"
—(திருச்சந்தவிருத்தம் 10)

திரை என்ற சொல்லினடியாகப் பிறந்ததே திரையன் எனும் சொல். திரையன் என்பதன் பொருள்: "கடல் வழியாக வந்து தொண்டை நாடாண்டதாகக் கருதப்படும் அரசமரபினன்."

"வென்வேற்றிரையன் வேங்கடநெடுவரை."—(அகநானூறு 85)

ஆகையால் 'திரைபுகா' எனப்பட்ட படகே, முன்னர் 'திரப்பகா' என வழங்கப்பட்டதாகும்.

## 4. கோடிம்பா (Cotymba)

இச் சொல் மற்றொருவகைப் படகைக் குறிப்பிடுகிறது. பிளினி (கி.பி.23-79) இத்தகைய படகைக் கொட்டனுரா (Cottonora) என்று வழங்கினர். அதாவது 'கட்டுமரம்' என்பதன் கிரேக்க உச்சரிப்பே கொட்டனுரா (பிளினி: அதிகாரம் 6, குறிப்பு-92, பக்கம் 135 பார்க்கவும்). மற்றும் இதே பொருள்படும் சொல்—கோடியா (Cotia) எனப்படும் சொல்– சோமாலிலாந்து (Somaliland) நாட்டில் பயன் படுத்தப்படும் படகைக் குறிப்பிடுகிறது. அச் சொல்லும் 'கட்டுமரம்' எனும் தமிழ்ச் சொல்லின் திரிபே.

ஆகவே, கோடிம்பா என்பது 'கட்டுமரம்' என்பதன் திரிபே.

## 5. ஸைராஸ்டிரின் (Syrasterene)

இச் சொல் 'சௌராஷ்டிரம்' என்பதன் கிரேக்க உச்சரிப்பாகும். சௌராஷ்டிரம் என்பது தற்போதையே கத்தியவார் (Kathiawar) எனும் பகுதியைக் குறிப்பிடுகிறது. மற்றும், அதிகாரம் 41, குறிப்பு 6 பார்க்கவும்.

சௌராஷ்டிரத்தின் இருப்பிடம்: 22°·0'வ × 71°·0'கி.

## 6. பாரிகாஸா (Barygaza)

இது இன்றைய புரோச் (Broach) எனும் இடத்தைக் குறிப்பிடு கிறது. பிருகு, கச்சா என்பதன் இணைப்பே பாரிகஸா ஆகும். மற்றும் அதிகாரம் 41, குறிப்பு-2 பார்க்கவும்.

பாரிகாஸாவின் இருப்பிடம் 21°·41'வ × 73°·1'கி.

**7. 300 ஸ்டேடியா** (300 Stadia)

ஒரு ஸ்டேடியம் என்பது ஒரு பர்லாங் அளவைக் குறிப்பிடும். இங்குக் குறிப்பிடப்பட்டுள்ள 300 ஸ்டேடியா என்பது 27½ மைல்களைக் (44 கிமீ) குறிப்பிடும். நர்மதை ஆற்றின் கழிமுகத்திலிருந்து, உள்தள்ளி (44 கிமீ) பாரிகாஸா துறைமுகம் இருந்தது என்பதே இங்குக் குறிப்பிடப்படுகிறது. ஆக, பாரிகாஸா ஓர் ஆற்றுத் துறைமுகமேயன்றி, கடற்கரைத் துறைமுகம் அன்று என்று இதனால் தெளிவாகிறது. மற்றும் அதிகாரம் 1, குறிப்பு-5 பார்க்கவும்.

# 45. பாரிகாஸாவில் நீர்வற்ற ஏற்றம்

*இந்தியா முழுவதிலும் நதிகள் பல உள்ளன. அவற்றில் நீர்வற்றமும்[1] ஏற்றமும்[2] பெரும் அளவிலேயே காணப்படுகின்றன. அவ் அலைவீச்சு — நீர்ப்பெருக்கம் — அமாவாசையன்றும், பௌர்ணமி[3] அன்றும் மூன்று நாள்கள்வரை வலுத்தே இருக்கிறது. மற்ற நாள்களில் அவை குறைந்து விடுகின்றன. ஆனால், பாரிகாஸாவை[4] அடுத்துள்ள கடற்கரையில் நீர்வற்றமும், நீர்ப்பெருக்கமும் மிகப் பெரிய அளவிலேயே காணப்படும். அதன் காரணமாகச் சிலபொழுது நீரின் அடியில் உள்ள பூமி, நீர்வற்றத்தால், உடன் வெளியே தெரிகின்றது; சிலபொழுது நிலமாக இருந்த பகுதிகள், நீர் ஏற்றம் காரணமாக, கடல்போல் காணப்படும். இவ்வாறான திடீர் வற்ற ஏற்றம் காரணமாக, நீர் ஏற்றத்தில் சென்று கொண்டிருக்கும் படகு, திடீரென நீர்வற்றத்தால், அப் படகு அங்குக் காணப்படும் பூமியின்மீது நின்றுவிடும். மற்றும் அது பூமி எனத் தோற்றமளித்த இடத்தில் உள்ள பகுதி, நீர் ஏற்றம் காரணமாக, நீரில் வேகத்துடன் அடித்துச் செல்லப்படுவதும் உண்டு.[5] கடல் கொந்தளிப்பால் சிலபொழுது கடல் நீர் ஆற்றின் கழிமுகத்தில் சிறிது தொலைவுவரை புகுந்து சென்றுவிடுகிறது. பல ஸ்டேடியா[6] தொலைவுவரை கடல் நீர் புகுந்து, ஆற்று நீருடன் கலந்து, மீண்டும் கடலுக்கே அந் நீர் திரும்பிவிடுகின்றது.*

## விளக்கவுரை

### 1. நீர் வற்றம் (Ebb)

கடலில் சிலபொழுது அலைவீச்சு அதிகமாகவும், சிலபொழுது குறைவாகவும் இருக்கும். நீர் வற்றம் இலத்தீன் மொழியில் ரிசெசஸ் (Recessus) எனப்படும். ஆங்கிலத்தில் எப் (Ebb) எனப்படும்.

### 2. நீர் ஏற்றம் (Flow)

இச் சொல் இலத்தீன் மொழியில் ஃப்ளோரே (fleure) எனப் படும். இச் சொல்லிலிருந்துதான் ஆங்கிலச் சொல் ஃப்ளோ (flow) ஏற்பட்டது. இச் சொல் நீர்ப்பெருக்கத்தைக் குறிப்பிடும். அதாவது நீர் ஏற்றம் என்பதைக் குறிப்பிடும். இந் நீர் ஏற்றம் 30 அடி (9 மீ) வரை உயர்ந்து காணப்படும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

### 3. அமாவாசை, பௌர்ணமி (New Moon and Full Moon Days)

இன்றும் அமாவாசை, பௌர்ணமி நாள்களில் கடல் கொந் தளிப்பு அதிகமாக இருப்பதையும், மக்கள் கடல் ஓரம் செல்லக் கூடாதென்றும், மீனவர் வெகு விழிப்பாக இருக்கவேண்டும் என்ற இதுபோன்ற அறிக்கை வானொலிமூலம் கேட்கப்படுவதையும் காணலாம். அதுவும் சூறுவளியும், அமாவாசையும் சேர்ந்து விட்டால், கடற்கரையினுள் சில மீட்டர்கள்வரை, அலைவீச்சு புகுந்துவிடுவது இன்றும் நாம் காணக்கூடிய காட்சியே. இதைப் பெரிப்ளூஸ் ஆசிரியர் அக் காலத்தே மிகவும் உன்னிப்பாய்க் கவனித்து எழுதியுள்ளார்.

### 4. பாரிகாஸா (Barygaza)

இது இன்று புரோச் (Broach) என்று வழங்கப்படுகிறது. மற்றும், அதிகாரம் 41, குறிப்பு-2 பார்க்கவும்.

பாரிகாஸாவின் இருப்பிடம்: 21°· 41′ வ × 73°· 1′ கி.

### 5. அடித்துச்செல்லப்படுதல் (Carried away by currents)

இத்தகைய நிகழ்ச்சிகள் தென் நாட்டில்–தமிழகத்தில்–இன்றும் காணப்படும். காறுை எனப்படும் சில ஆறுகளில் திடீர் வெள்ளம் வந்து இருக்கிற ஆடு, மாடு, மனிதர்களை அடித்துக்கொண்டுபோய் விடும். இது 'காட்டாறு' என்றும் வழங்கப்படும். இது எப்பொழுது ஏற்படும் என்று உறுதியாகச் சொல்லவே முடியாது.

### 6. ஸ்டேடியா (Stadia))

ஒரு ஸ்டேடியம் என்பது ஒரு பர்லாங் அளவைக் குறிப்பிடும். அநேகமாக 8 முதல் 12 ஸ்டேடியாவரை கடல் புகலாம். அதாவது

1 மைல் முதல் $1\frac{1}{2}$ மைல்வரை கடல், அலைவீச்சு காரணமாக, உள்ளேபுகுந்து செல்லக்கூடும் என்று கூறப்படுகிறது.

---

## 46. பாரிகாஸாவின் மணல் திட்டு

*அலைகளின் ஏற்ற வற்றம் காரணமாக, பயிற்சியில்லாத மாலுமிகள் தம் கப்பல்களை இப் பகுதிக்குச் செலுத்திவருவது இன்னல் நிரம்பியதாகக் காணப்படும். அல்லது இந்தச் சந்தை கூடும் வணிக நகருக்கு[1] முதன்முறையாக வருகை தருவோர்க்கும் அவ்வாறே இன்னல் நிறைந்து காணப்படும். ஏனெனில், உள்ளேபுகுந்து மோதும் அலைவீச்சின் வேகம் தடுத்து நிறுத்த முடியாத அளவினதாயிருக்கும். நங்கூரம் நாட்டப்பட்ட இடங்களில் நில்லாமல், கப்பல்கள் கழன்று சென்றுவிடுகின்றன. இதனால் பெரிய கப்பல்களும் நீர்ப்பெருக்கத்தில் அகப்பட்டுக்கொண்டு, இப்படியும் அப்படியும் ஊசலாடி, இறுதியில் அருகில் உள்ள மணல் திட்டுகளில் சென்று புதைந்து நின்றுவிடுகின்றன. சில, அங்குக் காணப்படும் செங்குத்தான பாறைகளில் மோதி சுக்கல்சுக்கலாக உடைந்துவிடுகின்றன. சிறிய படகுகளுக்குச் சொல்லவே தேவையில்லை. அவை தலைகீழாக்கப்பட்டு, மூழ்க்கடிக்கப்படுகின்றன. மற்றும் நீர்வற்றம் ஏற்படும்போது, அப் படகுகள் கரையோரமாக ஒதுக்கப்பட்டோ, அல்லது தென்படும் பூமிப் பகுதியில் புதைந்தோவிடுகின்றன. அவை உடனடியாகக் கயிறு கொண்டோ, நங்கூரம் கொண்டோ பிணைக்கப்படாவிட்டால், உடன்தோன்றும் நீர் ஏற்றத்தினால் அவை நீர் நிரம்பி, அடித்துச்செல்லப்படவும் கூடும். அதுவும் அமாவாசையன்று,[2] கழிமுகத்துக்கு உள்ளே அமைதியாயிருப்பினும், ஏற்றவற்ற அலைகள்[3] நதியின் கழிமுகத்தில் புகுந்து, பெரும் பேரொலி எழுப்பி நிற்கும். அலைவீச்சின் வேகத்தின் காரணமாக, பேரலைகள் அங்குள்ள பாறைகளின்மீதும், மணல் திட்டுகளின்மீதும் பாய்ந்து, இடிமுழக்கம்போன்ற பேரொலியை[4] எழுப்பி நிற்கின்றன.*

## விளக்கவுரை

**1. சந்தைகூடும் வாணிக நகர் (Commercial Market Town)**

இந் நகரம் பாரிகாஸா என்று வழங்கப்படுகிறது. பாரிகாஸா (Barygaza) என்பது பிருகு, கச்சா என்பதன் இணைப்பே. இங்கு வாசனைப் பண்டங்கள் முதலியவை அயல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன. இவ்விடம் அலைவீச்சு மிக அதிகமாயுள்ளது என்று பெரிப்ளூஸ் ஆசிரியர் கூறுகிறார். இவ்வாணிகச் சந்தைகூடும் நகரம் நர்மதை ஆற்றங்கரைமீது இருந்தது. அதுவே இன்று புரோச் (Broach) என்று வழங்கப்படுகிறது.

பாரிகாஸாவின் இருப்பிடம்: 21°·41'வ × 73°·1'கி.

**2. அமாவாசையன்று அலைகள் பேரொலி எழுப்பும் (Creating a thunderous sound on New Moon day)**

அமாவாசையன்றும், பௌர்ணமியன்றும் அலைவீச்சு மிக அதிகமாயிருப்பதை இன்றும் கடற்கரையோரங்களில் காணலாம். சந்திரனின் ஈர்புக் காரணமாகப் பௌர்ணமியன்று அலைவீச்சு பெருகிக் காணப்படுகிறது. அதேபோல் சூரியனும் சந்திரனும் ஒரே பக்கத்தில் இணையாக இருப்பதன் காரணமாக, சூரியன் ஒளி சந்திரன்மீது படமுடியாத காரணத்தால் அமாவாசை ஏற்படுகிறது. அவ்விரு கோள்களின் சேர்ந்த ஈர்ப்பு விசையே அமாவாசையன்றும் அலைவீச்சு பெருகக் காரணமாயுள்ளது. அப்பொழுது அப் பேரலைகள் பெரும் ஒலி எழுப்பி, கழிமுகத்தில் நுழைகின்றன.

**3. ஏற்ற வற்ற அலைகள் (Flow and Ebb of Tides)**

பௌர்ணமியன்றும், அதைத் தொடர்ந்து காணப்படும் அலைகள் ஏற்றவற்ற அலைகள் எனப்படும். இவை காரணமாக, கடற்கரையின் பகுதி சுருங்கியும், விரிந்தும் காணப்படுகின்றது. மற்றும், அதிகாரம் 45, குறிப்புகள 1, 2 பார்க்கவும்.

**4. இடிமுழக்கம்போன்ற ஒலி (Of a thunderous sound)**

அலைகள் ஒன்றுடன் ஒன்று மோதி பேரொலி எழுப்பி, கழிமுகத்தில் நுழைகின்றன. அவ்வாறு நுழையும்போது இடி போன்ற பேரொலியை எழுப்புகின்றன. மேலே குறிப்பு-2 பார்க்கவும்.

---

# 47. காந்தாரம், பூசிபாலஸ், அலெக்சாந்திரியா

பாரிகாஸாவிற்கு[1] உள்ளடங்கிய பகுதி, பெருநிலப்பகுதி யாகும். அந் நிலப்பகுதியில் பார்பிகம்[2] என்ற இடத்திற்கும் தொலைவில் குடிமக்கள் பலர் வசித்துவருகின்றனர். அவர்களுள் அரட்டி,[3] அரகோசியா,[4] காந்தாரை,[5] பொக்காலிஸ்[6] என்ற குடிமக்கள் கொண்ட பகுதிகள் முக்கியமானவை. இந்த பொக்காலிஸ்[7] பகுதியிலேயே பூசிபாலஸ்,[8] அலெக்சாந்திரியா[4] உள்ளன. இவற்றுக்கும் அப்பால் பாக்டிரியர்கள்[10] என்று வழங்கப்படும் யுத்தப் பிரியர்களின் நாடு காணப்படுகிறது. அந் நாடு, தன் அரசனுக்குக் கீழ்ப்படிந்து நடக்கிறது. மற்றும் அலெக்சாந்தர்,[11] இவ்விடங்களைக் கடந்துவந்து, சிந்து-கங்கை நிலத்திற்குப்[12] படையெடுத்துச் சென்றார். ஆனால், அவர் டமிரிகாவையும்,[13] இந்தியாவின் தெற்குப்பகுதியையும்[19] விட்டுவிட்டார்.

இன்றையவரையில், பாரிகாஸாவில் பண்டைய நாணய மான டிராக்மா[15] செலாவணியில் இருந்துகொண்டு வருகிறது. அவை இந்த நாட்டிலிருந்து வெளி நாடுகளுக்குப் போகின்றன. அவை கிரேக்க மொழியில் பொறிக்கப்பட்ட முத்திரைகளைக் கொண்டவையாகும்.[16] மற்றும் அலெக்சாந்தருக்குப் பின்னர் ஆண்ட அப்போலோடோரஸ்[17] என்பவரும், மினந்தர்[18] என்பவரும் வெளியிட்ட நாணய வகைகளும் புழக்கத்தில் இருந்துவருகின்றன. இந் நாணயங்கள் வாணிகத்தில் செலாவணியாக ஏற்றுக்கொள்ளப்பட்டு வருகின்றன.

### விளக்கவுரை

**1. பாரிகாஸாவிற்கு உள்ளடங்கிய பகுதி (Land in the interior of Barygaza)**

பாரிகாஸா (Barygaza), இன்று புரோச் (Broach) என்று வழங்கப்படுகிறது. இதன் அடிப்படைப் பெயர்கள் பிருகு, கச்சா. இதன் உளளுக்குள் அடங்கியிருந்த பெரும்பகுதி இங்குக் குறிப்

பிடப்படுகிறது. அப் பகுதிகள் அநூபம் (Anuba), விதர்பம் (Vidarba), சௌராஷ்டிரம் (Sourashtra) என்று வழங்கப்பட்டன.
—(பிளினி: தென்னிந்தியா-கி.பி. 75 வரைபடம், பக்கம் 52)

பாரிகாஸாவின் இருப்பிடம்: 21°·41′வ × 73°·1′ கி.
மற்றும், அதிகாரம் 41, குறிப்பு-2 பார்க்கவும்.

**2. பார்பிகம் (Barbicum)**

சிந்துநதிக் கழிமுகத்தில் பார்பரிகம் (Barbaricum) என ஒரு துறைமுகம் இருந்தது. இன்று அது மறைந்து, வேறொரு துறை முகம் டட்டா (Tatta) என்ற பெயரில் உருவாகியுள்ளது. அத் துறைமுகம் மிக முக்கியமான துறைமுகமாக விளங்கிற்று. பார்பரிகமே, இங்குப் பார்பிகம் எனக் குறுகி வழங்கப்பட்டுள்ளது.

டட்டாவின் இருப்பிடம்: 24°·4′வ × 67°·5′கி.
மற்றும் அதிகாரம் 41, குறிப்பு-15 பார்க்கவும்.

இது பெர்பெர் எனும் சொல்லினடியாகப்பிறந்த ஊர்ப் பெய ராகும். கிரேக்கமொழியில் பெர்பெர் என்றால் விளங்கிக் கொள்ள முடியாத-புரியாத-பலமொழிகள் பேசும் நாட்டு மக்கள் கூடும் இடம் என்று பொருள்படும். இதேபெயருள்ள பெர்பெர் எனும் சந்தை நகரம் ஆப்பிரிக்காவில் செங்கடலை யொட்டி இருக்கின்றது. பெர்பெரா (Berbera) என்ற மற்றொரு நகரமும் நைல்நதிக்கருகில் இருந்தது. ஆக, பார்பரிகம் என்ற சொல் பலமொழிகள் பேசும் வாணிகம் செய்வோர் கூடும் நகரமாகும். அங்கிருந்து பல பொருள்கள் அயல் நாடுகளுக்கு ஏற்றுமதியாயின.

பார்பரிகத்தின் இருப்பிடம்: 24°· 4′வ × 67°·5′கி.

**3. அரட்டி (Aratti)**

இச் சொல் ஹிராட் (Herat) பகுதியைக்குறிப்பிடுவதாகும். இது இன்றைய ஆப்கானிஸ்தானம் (Afganistan) உள்ள பகுதியைச் சார்ந்தது. அங்கே ஹிரிருத் (Harirud) என்ற நதி பாய்கிறது. அதற்கருகில் ஜிந்தஜான் (Zindazan) இடமும் உள்ளது.

ஹிராட்டின் இருப்பிடம்: 34°·28′வ × 62°·9′கி.

**4. அரகோசியா (Arachosia)**

இது நவீன காண்டகார் (Kandahar) எனும் இடத்தைச் சுற்றிலுமுள்ள பகுதியைக் குறிப்பிடுகிறது. மேக்கிரிண்டில்

(McCrindle) என்பார் பின்வருமாறு கூறுகிறுர்: "அரகோசியா மேற்குப்பக்கமாகப் படர்ந்து சென்றது; காண்டகார் நகரம், மேற்குப்புற எல்லையாகவும், சிந்துநதி கிழக்குப்புற எல்லையாகவும் கொண்டிருந்தது; மற்றும் ஹிந்துகுஷ் மலையை வடக்கு எல்லையாகவும், கெட்ரோசியா எனும் பகுதியைத் தெற்கு எல்லையாகவும் கொண்டு விளங்கிற்று. இவ்விடம் மக்கள் தொகை நெருக்கமாக உள்ளது. பாரசீகம் இந்தியாவுடன் நெருங்கிய தொடர்புகொண்டது முதல், இங்குக் கூறப்படும் அரகோசியாவின் சிறப்புப் பன்மடங்கு பெருகிக் காணப்பட்டது."

(McCrindle—Ancient India)

காண்டகாரின் இருப்பிடம்: 31°'37'வ × 65°·30'கி.

## 5. காந்தாரை (Gandharaei)

இது காந்தாரம் (Gandaram) என்ற சொல்லின் கிரேக்க உச்சரிப்பேயாகும். காபூல் நதிக்கு (River Kabul) இருமருங்கிலும் மக்கள் வசித்துவந்தனர். இது புருஷபுரம் என்று முன்னர் வழங்கப்பட்டதும், அதுவே இன்று பெஷாவர் (Peshawar) என்று வழங்கப்படுவதுமான நகரத்தையும் உட்கொண்டிருந்தது சிந்து நதிக்குக் கிழக்கிலும் சிறிது தொலைவு பரந்து காணப்பட்டது. கிழக்குக் காந்தார நாட்டின் தலைநகரம் தக்ஷசீலம் (Taxila) எனப்பட்ட நகரமாகும். இது பண்டைக்காலப் பல்கலைக்கழகமாக விளங்கிற்று. இந் நகரம் பரதனின் புத்திரன் தக்ஷன் என்பவன் பெயரால் நிர்மாணிக்கப்பட்டது. மற்றென்று புஷ்கலபுரம் (Peucolatis) என்பதாகும். இந் நகரம் புஷ்கலன் என்ற மற்றொரு மகனின் பெயரால் நிர்மாணிக்கப்பட்டது. காந்தாரம் என்பது ஆப்கானிஸ்தானத்தின் (Afghanistan) வட பகுதியைக் குறிப்பிடும்.

தக்ஷசீலம் என்பது நவீன ஷாதேரி (Shaderi) யில் உள்ளது. ஷாதேரி ராவல்பிண்டி (Rawalpindi) அருகில் உள்ளது. இதன் அகழ்வாராய்ச்சியை மிக அருமையாகக் கொடுத்துள்ளார் சர் ஜான் மார்ஷல் (Sir John Marshall) என்பவர். தக்ஷசீலத்தின் முந்தைய பெயர் பத்திரசீலா; பிந்தைய பெயர் மரிகலா.

யுவான் சுவாங் (கி.பி. 629-645) எனும் சீனப் பயணி பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்:

"போலார் எனும் இடத்திலிருந்து புறப்பட்டு, உதககண்டாவிற்குச் சென்று, அங்கிருந்து திரும்பிச் சிந்துநதி வழியாகத் தெற்குப் பக்கமாகச் சென்றால், 4 அல்லது 5 லி-த் தொலைவைக் கடப்பதற்குள்ளாகவே த-ச-சீ-லோவை அடையலாம்."

—(**யுவான் சுவாங்: பக்கம் 65**)

ஷாதேரி (தக்ஷசீலம்) யின் இருப்பிடம்: 33°·17′வ×72°·49′ கி.

6. பொகாலிஸ் (Pocalis)

இது புஷ்கலபுரம் அல்லது புஷ்கலவதி என்னும் நகரத்தைக் குறிப்பிடுகிறது. பரதன் மகனுன புஷ்கரன் பெயரால் நிர்மாணிக்கப் பட்டது. இதை மெகஸ்தனிஸ், ஸ்டிராபோ முதலியவர்கள் பியூகலாடிஸ் (Peucolatis) என்று வழங்கினர். இந் நகரம் மேற்குக் காந்தாரத்தின் தலைநகரமாக விளங்கிற்று. இன்று கார்சட்டா (Charsadda) என்று வழங்கப்படும் இடத்தில் பழைய புஷ்கலபுரம் இருந்ததென்பது அழிபாடுகளால்-புதைபொருள் ஆராய்ச்சியால்-தெரியவருகின்றது. —(பாஹியான்: பக்கம் 54)

இந் நகரத்தை யுவான் சுவாங், பாஹியான் (கி.பி. 399-414) எனும் சீனப்பயணிகள் இருவரும் தம் குறிப்புகளில் குறித்துள்ளனர். பெஷாவருக்கு (Peshawar) வடகிழக்காக 17 மைல்கள் (27 கிமீ) தொலைவில், ஸ்வாத் நதிக்கரையில் (River Swat) இருந்தது என்று ஆராய்ச்சியாளர்கள் தெரிவித்துள்ளனர்.

அருங்கலைகள் பல தக்ஷசீலத்திலும், போர்ப்பயிற்சி முதலியவை புஷ்கலபுரத்திலும் கற்றுக் கொடுக்கப்பட்டன என்று வரலாறுகள் கூறுகின்றன.

கார்சட்டா (புஷ்கலபுரம்) வின் இருப்பிடம்: 34°·8′வ×71°·46′கி.

7. பொகாலிஸ் (Pocalis)

இது புஷ்கலபுரத்தின் கிரேக்க உச்சரிப்பு.

மேலே குறிப்பு-6 பார்க்கவும்.

8 பூசிபாலஸ் (Bucephalus)

பூசிபாலஸ் என்பது மாவீரர் அலெக்சாந்தர் (கி.மு. 356–323) பயன்படுத்திய மிகவும் மிடுக்கான குதிரையாகும். அக் குதிரை அலெக்சாந்தரைத் தவிர வேறு எவரையும் தன்கிட்ட நெருங்கவே விடாது. அக் குதிரைமீது இவர்ந்தே சிந்துநதிக் கரைவரை பல வெற்றிகள் பெற்று வந்தார். சிந்துநதிக் கரையின் கிளையான ஜீலம் நதியின் மேற்குக் கரையிலே, அக் குதிரை நோய்வாய்ப் பட்டது. சிகிச்சை செய்தும் பலனில்லை. உடன் இறந்துவிட்டது. அலெக்சாந்தர் மிகவும் வருத்தமுற்று, அதற்கு ஒரு நினைவுச் சின்னம் எழுப்பவேண்டுமென்று கருதி, அது இறந்த இடத் திலேயே, அதைப் புதைத்து, அதன்மீது ஒரு நினைவுச் சின்னத்தை

எழுப்பி, அவ்விடத்தைப் பூசிபாலா (Bucephala) என்றே தம் குதிரையின் பெயரால் வழங்கினர் (கி.மு. 325).

இவ் வரவாற்றைப் பிளினி (கி.பி. 23-79)யும் தருகிறர்: "அசினி என்ற மக்கள் மூன்று நகரங்களில் வசித்து வருகின்றனர். அவர் களுடைய தலைநகரம் பூசிபாலா என்பதாகும். அந் நகரம் அலெக்சாந்தர் பேரரசரின் குதிரையின் சமாதியைச் சுற்றி நிர்மா ணிக்கப்பட்டதாகும். அத் தலைநகரம் அரசரின் குதிரையின் பெயரையே பூண்டு நிற்கிறது."

—(பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 23, பக்கம் 40, குறிப்பு-80, பக்கம் 59).

இந் நகரம் இருந்த இடம் இப்பொழுது ரசுல் (Rasul) என்று வழங்கப்படுகிறது.

பூசிபாலாவின் இருப்பிடம்: 32°·45′வ × 73°·50′கி.

## 9. அலெக்சாந்திரியா (Alexandria)

அலெக்சாந்தரால் நிர்மாணிக்கப்பட்ட நகரங்கள் பல. அவர் பெயரால் பின் வந்தவர் நிர்மாணித்தவையும் சில. இங்குக் கூறப் படுவது அலெக்சாந்திரியா அரியான் (Alexandria Areon) எனப் படும் நகரமாகும். இதன் நவீனப் பெயர் ஜிந்தஜான் (Zindajan) என்பதாகும். இந் நகரம் ஹரி-ருத் (Hari-Rud) எனும் நதிக்கரை மீது உள்ளது. நவீன ஹீராட் (Herat) பகுதியைச் சார்ந்ததாகும்.

அலெக்சாந்திரியா அரியான் (ஜிந்தஜான்) இருப்பிடம்: 34°·28′வ×61°·0′கி.

## 10. பாக்டிரியர்கள் (Bactrians)

பாக்டிரியா (Bactria) என்பது பாரசீக நாட்டைச் சார்ந்தது. அதை அலெக்சாந்தர் வென்றர் (கி.மு.328). அதன் தலைநகரம் பாக்ட்ரா (Bactra) அல்லது ஜாரியஸ்பா (Zariaspa) என்பதாகும் அது ஹிந்துகுஷ் மலை அடிவாரத்தில், பாக்ட்ரஸ் நதியும் (River Bactrus), ஆக்ஸஸ் (River Oxus) நதியும் கூடும் இடத்துக்கு 25 மைல்கள் (40 கிமீ) தெற்கே அமைந்திருந்தது. அப் பகுதியில் வசித்தவர்கள் யாவரும் பாக்டிரியர்கள் எனப்படுவர். அப் பகுதி இன்று பொக்காரா (Bukhara) என்று வழங்கப்படுகிறது.

—(Vide A Smaller Classical Dictionary, Page 96)

பொகாராவின் இருப்பிடம்: 39°·52′வ×64°·30′கி.

## 11. அலெக்சாந்தர் (Alexander)

மாவீரர் அலெக்சாந்தர் (கி.மு. 356-323) கிரேக்க நாட்டிலிருந்த மாசிடோனியாவின் (Macedonia) அரசரான பிலிப்ஸ் (Philips) என்பாரின் மகனாராகக் கி.மு. 356-ல் பிறந்தார். உலகம் முழுவதையும் தம் ஒரே குடைக்கீழ்க் கொண்டுவர வேண்டுமென்று பேராவல்கொண்டு, அவ்வாசையால், இந்தியாவின் வடமேற்கு எல்லையில் கி.மு. 326-ல் புகுந்து, சிந்துநதியின் சிலபகுதிகளை வெற்றி கொண்டு, தம் நாட்டுக்குத் திரும்பும்பொழுது பாபிலோனில் (Babylon) கி.மு. 323ஆம் ஆண்டு, நச்சுக் காய்ச்சல் கண்டு இறந்து விட்டார். அவர் இறக்கும்பொழுது அவருக்கு வயது 33.

பிளினி (கி.பி. 23-79) இவரைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளார். தனிஸ், ஸ்டிராபோ ஆகியோரும் குறிப்பிட்டுள்ளனர்.

—(பிளினி: புத்தகம் VI-அதிகாரம் 21, பக்கம் 2, குறிப்பு-15, மெகஸ் பக்கம் 10)

## 12. சிந்து-கங்கை வடிநிலம் (Gangetic-Indus Valley)

அலெக்சாந்தர் சிந்துநதியைக் கடந்து, சில பகுதிகளை வென்று, கங்கை கிளைகள் உள்ள சில பகுதிகளையும் வென்று தம் நாடு திரும்பினர். இந் நாடுகளை அப்பொழுது புருஷோத்தமர் ஆண்டு வந்தார். அவர் கிரேக்கர்களால் போரஸ் (Porus) என்று வழங்கப் பட்டார். புருஷோத்தமர் முதலில் அடிபணிய மறுத்து, இறுதியில் தோல்வியடைந்தார் (கி.மு. 325). அவருடைய வீரத்தைப் பாராட்டி அலெக்சாந்தர் அவர் கைதியாயிருந்தும்கூட, "உமக்கு என்ன வேண்டும்?" என்று கேட்க, "என்னை ஓர் அரசன்போல நடத்துங்கள்," என்று சொல்ல, அப் பதிலை மெச்சி, அவரிடமிருந்து பெற்ற இராச்சியத்தை அவருக்கே திருப்பிக் கொடுத்துவிட்டதாக வரலாறு கூறுகிறது.

—(The Early History of India By Vincent A. Smith, Page 65)

## 13. டிமிரிகா (Dimirica)

இச் சொல் தமிழகம் என்பதன் மருஉ ஆகும். கா என்பது நாட்டைக் குறிக்கும். ஆப்பிரிக்கா என்பதில் உள்ள கா, ஆப்ரி என்பவரின் நாடு என்று பொருள்தரும். சிலர் இச் சொல்லையே லிமிரிகா என எழுதி, அதையே லெமூரியா என மாற்றிப் பல கோளாறுகளைச் செய்துவிட்டுள்ளனர். இங்குக் குறிப்பிடப்படுவது தமிழகம் என்பதே.

**14. இந்தியாவின் தெற்குப்பகுதி** (South of India)

இந்தியாவின் தெற்குப் பகுதியில் போகவேண்டுமென்று அலெக்சாந்தர் நினைத்தாலும், அவருடைய சேனை வீரர்கள் உடன் தம் நாடு திரும்ப விழைந்தனர். அதன் காரணமாகத் தமிழகத்தின் மீதும், இந்தியாவின் தென்பகுதிமீதும் படையெடுக்காமல் சென்று விட்டார்.

**15. டிராக்மா** (Drachma)

இது ரோமன் நாணயமான தினுரியஸ் (Denarius) என்பதன் மதிப்பேதான். ஓர் அவுன்சில் $\frac{1}{8}$ பாகம் என்று கூறப்படுகிறது.

—(Latin-English Dictionary-Page 182)

இது அரேபியாவிலும், பாரிகாஸாவிலும் செலாவணியில் இருந்தது.

**16. கிரேக்க முத்திரைகளைக்கொண்டவை** (Minted coins of Greek origin)

பொன் நாணயங்கள் இந்தியாவில் அச்சடிக்கப்படவில்லை. அவை ரோம் நகரில்தான் செய்யப்பட்டது. இந்தியாவிலிருந்து பொன்கட்டிகளாகத்தான் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்தனர். நாணயங்களாகச் செய்யும் முறை—தங்கத்துக்கு எவ்வுலோகம் சேர்த்து எவ்வாறு காய்ச்சி உருக்கவேண்டும் எனும் முறை—இந்தியர்களுக்குத் தெரிந்தில. அதன் காரணமாகத்தான், பொற் கட்டிகள் ரோம் நாட்டுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டு, நாணயங்களாக இறக்குமதி செய்யப்பட்டன.

காட்பிசஸ் I (Kadphises I) என்னும் அரசர் பிரான்ஸ் (Bronze) நாணயங்களை வெளியிட்டார். காட்பிசஸ் II என்பவர் யூசி (Yuchi) நாட்டின் அரசர். இவர் பொன் நாணயங்களை வெளியிட்டார். அந் நாணயங்கள் ரோமப் பேரரசிலிருந்து வந்தன. அகஸ்டஸ் பேரரசரின் (கி.மு. 63—கி.பி.14) நாணயங்களைப் போல இருந்தன.

பிளினியும் (கி.பி. 23-79) இந் நாணய மாற்றைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். (பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 23).

**17. அப்போலோடோரஸ்** (Appolodorus)

இவர் அலெக்சாந்தர் விட்டுச் சென்ற நாட்டை ஆண்டவர்களுள் ஒருவர். இவர் நாணயங்களை வெளியிட்டார். அவை செலாவணியில் இருந்தன.

**18. மினந்தர்** (Minander)

இவர் அலெக்சாந்தர் சேனைக்குத் தளபதியாக இருந்தார். ஜெனரல் மினந்தர் (General Minander) என்று வழங்கப்பட்டார். இவரும் தாம் அரசரானவுடன் நாணயங்களை வெளியிட்டார். இவையும் புழக்கத்தில் அன்று இருந்தன. இவர் அலெக்சாந்தருக்கு முன்னரே கிளம்பி சிந்து-கங்கைச் சமவெளியில் சில பகுதிகளைப் பார்வையிட்டுச் சென்றார் (கி.மு. 324-323).

இவருடைய நாணயங்களும் செலாவணியாக ஏற்றுக்கொள்ளப் பட்டன. இவர் வெளியிட்டது பொன் நாணயங்களாகும். இப் பொன் நாணயங்களும் ரோம் நாட்டிலிருந்து வந்தனவே.

மற்றொருவர் மினந்தர், பாக்டிரிய அரசராகக் (Bactrian king) குறிக்கப்படுகிறார். அவர் யூக்ரடிடஸ் (Eukratides) என்பாருக்கு அடுத்து வந்தவர். யூக்ரடிடஸ் ஆண்ட ஆண்டுகள் கி.மு. 175-156. மினந்தர் கி.மு. 155-ல் பட்ட மெய்தியவுடன், இந்தியாமீது படை யெடுத்தார் (கி.மு. 155). அவர் கங்கைப் பிரதேசம் வரை வந்தார். அவர் வெள்ளி நாணயங்களை வெளியிட்டார்.

—(Vide The Early History of India By Vincent Smith, page 229-230).

# 48. ஓஜினி

*இதற்கும் அப்பாலுள்ள நாடுகளின் பெயர்களாவன: காஸ்பபிரா,[1] பரப்பனிசதே,[2] காபோலிதிக்.[3] இவற்றிற்கு அடுத்த நாடு சித்தியா[4] என்பது. இங்கிருந்தும் சடாமாஞ்சி,[5] கிழங்கு வகைகள், போளம்[6] முதலியவை கிடைக்கப் பெறு கின்றன.*

*பாரிகாஸாவிலிருந்து[7] கிழக்குப் பகுதியில் ஓஜினி[8] நகரம் உள்ளது. இது முன்னர் அரசாங்கத் தலைநகரமாக விளங் கிற்று. இந்த இடத்திலிருந்து நடீக்குத் தேவையானதும், நாட்டின் நலத்துக்கு இன்றியமையாததுமான வாணிகத்துக் குகந்த பொருள்கள் கொண்டுவரப்படுகின்றன. வைடூரியம்,[9] வைரக்கற்கள்,[10] இந்திய லினன் ஆடைகள்,[11] வழவழப்பான ஆடைகள், சாதாரண பஞ்சு ஆடைகள் பலவும் பாரிகாஸா விற்கு இங்கிருந்து எடுத்துச்செல்லப்படுகின்றன. பொகாலிஸ்[12]*

வழியாக நமக்குத் தேவையான கண்ணாடிப் பொருள்கள்,[13] சடாமாஞ்சி முதலியவை இவ்விடத்துக்குக் கொண்டுவரப்படு கின்றன.

## விளக்கவுரை

### 1. காஸ்பபிரா (Caspapyra)

இச் சொல் காஸ்யபபுரம் (Kasyapapura) என்ற அடிப்படைச் சொல்லின் கிரேக்க உச்சரிப்பே. காஸ்யப மகரிஷியின் பெயரால் நிர்மாணிக்கப்பட்ட இடம். இவ்விடமே இன்று காஷ்மீர் (Kashmir) என்று விளங்குகிறது.

யுவான் சுவாங் (கி.பி. 629-645) எனும் சீனப்பயணி இதைக் கிய-ஷி-மி-லோ என்று வழங்கினுர். (**யுவான் சுவாங்:** பக்கம் 75). கிய-ஷி-மி-லோ என்பது காஷ்மீரம் என்பதன் சீன உச்சரிப்பாகும்.

காஷ்மீரம் இந்தியாவின் வடபகுதியில் உள்ளது.

காஷ்மீரப் பகுதியில் குங்குமப்பூ நிறைய விளைந்தது. அக் குங்குமப்பூ (Saffron) பல உணவுப் பண்டங்களுக்கும், மருந் தாகவும் பயன்படுத்தப்பட்டது.

காஷ்மீரத்தின் இருப்பிடம்: 34°·6′ வ × 74°·51′கி.

### 2. பரப்பனிசதே (Parappanisadae)

இது ஹிந்து குஷ்மலைத் தொடரையும், அதைச் சார்ந்த பகுதியையும்-காபூல் (Kabul)-குறிப்பிடுகிறது. அலெக்சாந்தருக்குப் பின்னர் வந்த அரசர்கள் சத்ராபிகள் (Satraps) என்று வழங்கப் பட்டனர். க்ஷேத்திரபதிகள் என்பதன் திரிபே சத்ராபிகள்-க்ஷேத் திரம்-இடம்; பதி-அரசன். ஆக அவ்வவ் இடத்தின் அரசன் சத்ராபி என வழங்கப்பட்டான். அவ்வாருன சத்ராபிகளுள் செல் யூகஸ் நிகேடர் (Seleukos Nikator) ஒருவர் ஆவார். அப்பொழுது இந்திய எல்லையையும், நாட்டையும் ஆண்டு வந்தவர் சந்திரகுப்த மௌரியர் ஆவார். இவர் கி.மு. 324-ல் பட்டம் எய்தினுர். செல்யூகஸ் நிகேடருக்கும் சந்திரகுப்த மௌரியருக்கும் ஏற்பட்ட போரில் (கி.மு. 303) செல்யூகஸ் நிகேடர் தோல்வியடையுந்தறு வாயில் ஓர் உடன்படிக்கை செய்து கொண்டார். அதன்படி சந்திரகுப்த மௌரியருக்கு அரியா (Arria), (ஹீராட்), ஹிந்துகுஷ் மலையை ஒட்டிய பரப்பனிசதே (காபூல்), அரகோசியா (Archosia) (காண்டகார்), கெட்ரோசியா (Gedrosia) (பலுசிஸ்தானம்) ஆகிய

நாடுகள் திறையாக அளிக்கப்பட்டன. இந்திய எல்லையைக் கடந்து அயல் நாட்டை-அண்டை நாட்டைத்-தம் ஆட்சியின் கீழ்க்கொண்டு வந்த அரசர்களுள் சந்திரகுப்த மௌரியரே முதன்மைத் தானம் வகிக்கிறார். ஆக, பரப்பனிசதே மௌரிய ஆட்சியின்கீழ் வருவதற்கு முன் அது ஒரு சத்ராபியாக இருந்தது.

—(An Advanced History of India, By Mookerji M.A., Page 101)

சந்திரகுப்த மௌரியர் 24 ஆண்டுகள் அரசாண்டு, தம் இறுதி நாள்களை சிரவணபெலகோலா எனும் இடத்தில் தம் குருவான பத்ரபாகு முனிவருடன் இருந்து துறவறம்பூண்டு, கி.மு. 297-ல் காலமானார்.

ப்ரப்பனிசதேயின் இருப்பிடம்: 34°·30'வ × 69°·18'கி.

இவ்விடம் பிளினி, மெகஸ்தனிஸ், ஸ்டிராபோ முதலான வரலாற்றாசிரியர்களாலும் குறிப்பிடப்பட்டுள்ளன. பிளினி (கி.பி. 23-79) இதைப் பரபனிசஸ் (Parapanisus) என்று குறிப்பிட்டுள்ளார்.

—(**பிளினி:** புத்தகம் VI, அதிகாரம் 21, குறிப்பு-32, பக்கம் 13)

**3. காபோலிதிக்** (Cabolithic)

இது காபூல் ஆற்றைச்சுற்றியுள்ள பகுதியைக் குறிப்பிடுகிறது. காபூல் நதி (River Kabul) ஹிந்துகுஷ் மலையில் (Hindu Kush) உற்பத்தியாகி, கிழக்குமுகமாகப் பாய்ந்து, சிந்துநதியுடன் கலக்கிறது. இவற்றைச் சுற்றியுள்ள பிரதேசமே காபோலிதிக் (Cabolithic) என்று கிரேக்க உச்சரிப்பில் குறிக்கப்பட்டது. காபூல் நதிப்பகுதி அன்று மக்கள் நெருக்கம் கொண்ட பகுதியாயிருந்தது.

பிளினி (கி.பி. 23-79) இதைக் கோபஸ் (Copes) என்று வழங்கினார். காபூல் நதியும், ஸ்வாத் நதியும் கலக்கும் இடத்தில்தான் புஷ்கலபுரம் (Peucolatis) இருந்தது.

—(**பிளினி:** புத்தகம் VI, அதிகாரம் 23, குறிப்பு-101, பக்கம் 62)

**4. சித்தியா** (Scythia)

இந் நாடு கருங்கடலை (Black Sea) ஒட்டிய பகுதியைக் குறிப்பிடுகிறது. சித்தியர்கள் (Scythians) நாளடைவில் சிந்து நதிக் கழிமுகம் வரையில் தங்கள் ஆட்சியைப் பரவச் செய்தனர். சித்தியர்களில் இறுதியான அரசர் கொண்டாபோரஸ்-II (Gondapphoros-II). இவருக்கு முன் அரசாண்டவர் கொண்டாபோரஸ்-I (Gondapphoros-I) ஆவார். கி.பி. 44-ல் பெரும் பூகம்பம் ஏற்பட்டு, தக்ஷசீலம் மண்மூடப்பெற்றது.

சிந்தியா நாட்டின் இருப்பிடம்: 40°·0′ வ × 45°·0′ கி.

மற்றும் அதிகாரம் 38, குறிப்பு-12 பார்க்கவும்.

**5. சடாமாஞ்சி (Spike Nard)**

இது இமயமலையில் கிடைக்கும் ஒரு மூலிகைப்பொருளாகும். இது இலத்தீன் மொழியில் "நார்டஸ் டேசி ஜடாமன்ஸி" (Nardus tachy jatamansi) என்று வழங்கப்படும். வடமொழியில் இது நாளத்தம் (Nalatha) என்று வழங்கப்படுகிறது. இது சருமப் புண்களுக்கு மருந்துப் பூச்சாகப் பயன்படுத்தப்படுகிறது. இது பைபிளில் (Bible) குறிப்பிடப்படுகிறது: (**மாற்கு**: XIV-3-5)

மற்றும் அதிகாரம் 39, குறிப்பு-17 பார்க்கவும்.

இது பிளினியாலும் குறிப்பிடப்பட்டுள்ளது.

—(**பிளினி**: புத்தகம் XII, அதிகாரம் 26)

**6. போளம் (Myrrh)**

இதில் வெள்ளைப்போளம் (Balsamodendrum), கரிய போளம் (Aloe), சிவப்புப்போளம் (Hepatic Aloe) முதலிய பலவகைகள் உள்ளன. இது பைபிளில் குறிப்பிடப்பட்டுள்ளது. (St Matthew:2-11)

மற்றும் அதிகாரம் 28, குறிப்பு–6 பார்க்கவும்.

**7. பாரிகாஸா (Barygaza)**

இது நவீன புரோச் (Broach) என்பதைக் குறிப்பிடும். பிருகு, கச்சா என்பதன் இணைப்பே பாரிகாஸா. இது முக்கியத் துறை முகமாக அக் காலத்தில் விளங்கியது.

பிளினியும் இதைப் பிரென்கோஸி (Brencosi) என்று குறிப்பிட்டுள்ளார். (**பிளினி**: புத்தகம் VI, அதிகாரம் 23, பக்கம் .5)

பாரிகாஸாவின் இருப்பிடம்: 21°·41′ வ × 73°·1′கி.

**8. ஓஜினி (Ozene)**

இது நவீன உஜ்ஜியினி (Ujjain) எனும் நகரைக் குறிப்பிடுகிறது. உஜ்ஜயினி என்பதே கிரேக்க உச்சரிப்பில் ஓஜினி என்று வழங்கப்பட்டது. இது மாளவ (Malva) நாட்டின் தலை நகரமாகும். இது இந்தியாவின் புனிதமான ஏழு நகரங்களுள் ஒன்று. இந் நாடு அவந்தி என்று முன்னர் வழங்கப்பட்டது.

முக்தி தரும் ஏழு நகரங்களாவன:

(1) அயோத்தி (2) மதுரை (3) மாயை (4) காசி (5) காஞ்சி (6) அவந்தி (7) துவாரகை.

இங்குப் பௌத்த சின்னங்களும் அடையாளங்களும் புதை பொருளாராய்ச்சியில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. புத்த பிரானுரின் சீடர் ஒருவரின் பிறப்பிடமும் ஆகும். இந் நகரம் அவந்தி நாட்டின் தலைநகரமாயிருந்ததால், பாரிகாஸாவிற்கும் இந் நகரத்துக்கும் பெருமளவில் வாணிகத்தொடர்பு ஏற்பட்டது. பாரிகாஸாவில் இறக்குமதி செய்யப்பட்ட பொருள்கள் யாவும் இங்குதான் கொண்டு வரப்பட்டன. இங்கிருந்தே கங்கைச் சமவெளியில் உள்ள நாடுகளுக்கு அனுப்பப்படுகின்றன. பெரிப்ளூஸ் இயற்றப்பட்ட ஆண்டில் (கி.பி. 50-80) இந் நகரம் தலைநகரமாக விளங்கவில்லை. இதன் அருகில் மின்னகரம் (Minnagara) என்று ஓர் ஊர் நிர்மாணிக்கப்பட்டு, அதுவே தலைநகரமாயிருந்தது. இந் நகரம் சாகா (Saka) கிளை வமிசத்தவரிடம் கி.பி. 5ஆம் நூற்றுண்டு வரை இருந்தது. உஜ்ஜயினி, குப்தர்களுடைய ஆளுகையின்கீழ் வந்தடைந்தது. அவர்கள்கீழ் இதன் புகழ் மேலும் வளர்ந்தது. அப்பொழுது குப்த பேரரசரான யசோதர்ம தேவர் (Yasodarma Devar) என்ற அரசர் விக்ரமாதித்யன் என விருது பூண்டு, மாளவ நாட்டு அரசராக முடிசூடினர். இவர் சந்திரகுப்த விக்ரமாத்தியன் என்று வழங்கப்பட்டார். இவர் காலத்தில்தான் இலக்கியம் உச்சநிலை அடைந்தது. அதற்குக் காரணம் இவர் அவையில் ஒன்பது புலவர்கள்—நவரத்தினம் எனப்படுபவர்-வீற்றிருந்தனர். அவற்றுள் காளிதாஸர் (Kalidasa) முக்கியமானவர் ஆவார். இப் புலவர் பெருமக்களால் வடமொழி இலக்கியம் உன்னதநிலை அடைந்தது. காளிதாஸர் பலப்பல காவியங்களை இயற்றிப் புகழ் சேர்த்தார். அவருடைய நூல்கள் இரகுவம்சம், மேகதூதம், சாகுந்தலம் இறவாப்புகழுடையன.

சந்திரகுப்தர் II என்பவரே விக்கிரமாதித்யன் விருதுபூண்டவர் என்றும், அவரே வெள்ளி நாணயங்களை வெளியிட்டார் என்றும் வரலாறு கூறுகிறது. இவர் கி.பி. 380 முதல் கி.பி. 413 வரை 34 ஆண்டுகள் செவ்வனே அரசாட்சி செய்ததாக வரலாறு கூறுகிறது—(Vide An Advanced History of India By Mookerji M.A, Page 148). கி.பி. 4ஆம் நூற்றுண்டின் இறுதியே சம்ஸ்கிருதத்தின் பொன்யுகம் என்று கருதப்படுகிறது.

உஜ்ஜயினியின் இருப்பிடம்: 23°·9′வ×75°·43′ கி.

## 9. வைடூரியம் (Lapizlazuli)

இது ஸபையர் (Sapphire) வகுப்பைச் சார்ந்தது. இது நீலநிற முள்ளது. இது பிளினியாலும் குறிப்பிடப்பட்டுள்ளது. (**பிளினி:** புத்தகம் XXXVI, அதிகாரம் 39). இக் கற்கள் இலங்கையிலும், தென் தமிழ் நாட்டில் சில இடங்களிலும் எடுக்கப்பட்டு, பார்பரிகம்

(Barbaricum) வழியாக ரோம் நாட்டுக்கும், எகிப்துக்கும் ஏற்றுமதி செய்யப்பட்டன. மற்றும் அதிகாரம் 39, குறிப்பு-14 பார்க்கவும்.

**10. வைரக்கற்கள் (Diamond stones)**

வைரம் நவரத்னக் கற்களுள் ஒன்று. மிகவும் உறுதி வாய்ந்தது. எளிதில் நொறுங்காதது; உடையாதது. நவரத்னக்கற்களாவன:

(1) கோமேதகம் (2) நீலம் (3) பவளம் (4) மரகதம் (5) மாணிக்கம் (6) முத்து (7) புருடராகம் (புஷ்பராகம்) (8) வைடூரியம் (9) வைரம்.

மற்றும், அதிகாரம் 39, குறிப்பு 18 பார்க்கவும்.

**11. இந்திய-லினன் ஆடைகள் (Indian Linen Clothes)**

இது வழவழப்பான துணிவகைகளுள் சேர்ந்தது. பட்டுத் துணி ரோம் நாட்டுக்கு, பார்பரிகம் மூலமாக ஏற்றுமதியாயிற்று. லினன் வகை மெல்லிய இழைகளாலாகிய ஆடை வகைகள்.

**12. பொகாலிஸ் (Pocalis)**

இது புஷ்கலபுரம் என்று வழங்கப்பட்ட நகரத்தின் கிரேக்க உச்சரிப்பாகும். இதைப் பியூகலாடிஸ் (Peucolatis) என்றும் வழங்கினர். இது இன்றைய கார்சட்டா (Chrasadda) உள்ள இடத்தில் இருந்தது

புஷ்கலபுரத்தின் இருப்பிடம்: 34°·8′ வ × 71°·46′கி.

மற்றும் அதிகாரம் 47, குறிப்பு-6 பார்க்கவும்.

**13. கண்ணாடிப் பொருள்கள் (Glass Articles)**

கண்ணாடிப் பொருள்கள், பீங்கான் பொருள்கள் முதலியன இறக்குமதி செய்யப்பட்டன. அரண்மனை அலுவலர்க்கும், மற்ற உயர்குடி மக்களுக்கும் இத்தகைய பொருள்கள் இறக்குமதி செய்யப்பட்டன. கண்ணாடிப் பொருள்கள் பீனிசியா (Phoenicea) வில் உற்பத்திச் செய்யப்பட்டு, பாரிகாஸாவில் இறக்குமதி செய்யப் பட்டன. கண்ணாடி செய்வதைப் பற்றிப் பிளினி விவரமாகக் கூறி யுள்ளார். (பிளினி: புத்தகம் XXXVI, அதிகாரம் 67-70). மற்றும் பகுதி I, அதிகாரம் 6, குறிப்பு-5; அதிகாரம் 39, குறிப்பு-9 பார்க் கவும்.

# 49. ஓஸீனியின்
# ஏற்றுமதி இறக்குமதிப் பொருள்கள்

இந்தச் சந்தை கூடும் நகரத்தில் இலாவோடிசியா,[1] அரேபியா[2] ஆகிய நாடுகளில் தயாரிக்கப்பட்ட மதுபானங்கள் இறக்குமதி செய்யப்பட்டாலும், இத்தாலி நாட்டு மதுபான வகைகளையே மக்கள் பெரிதும் விரும்புகின்றனர். மற்றும் பித்தளை,[4] தகரம்,[5] ஈயம்[6] ஆகியவையும், பவளம்,[7] புஷ்பராகம்,[8] மெல்லிய ஆடைவகைகள்,[9] ஒரு முழம் அளவுள்ள வண்ணத்தில் தோய்த்தெடுத்த கச்சைகளும்,[10] ஓர்க்கோலை,[11] இனிப்பு இலவங்கம்,[12] சக்கிமுக்கிக் கற்கள்,[13] மனோசிலை,[14] நீலாஞ்சனக்கல்,[15] பொன் நாணயங்கள்,[16] வெள்ளிக்காசுகள்[17] அந்தந்த நாட்டின் நாணயங்களோடு மாற்றப்படும்போது தரக்கூடிய நாணய வகைகளும்; மற்றும் களிம்புப் பூச்சுகள்,[18] உயர்விலை இல்லாத மூலிகை வகைகளும் இறக்குமதி செய்யப்படுகின்றன. இந் நாட்டு அரசர்க்கெனப் பின்வரும் பொருள்கள் இறக்குமதி செய்யப்படுகின்றன: விலைமதிப் பேறப்பெற்ற வெள்ளிப் பாத்திரங்கள்,[19] விலையுயர்ந்த சிறந்த மதுபான வகைகள், மெல்லிய இழை கொண்ட ஆடைகள், வாசனையேற்றப் பெற்றுள்ள மேல் பூச்சுகள்; மற்றும், இசைபாடும் பாணர் சிறுவர்களும்,[20] அந்தப்புரத்தை அலங்கரிக்கத் தகுதிவாய்ந்த அழகுமிக்க பெண்களும்,[21] அயல்நாடுகளிலிருந்து இந் நாட்டுக்குக் கொண்டுவரப்படுகின்றனர்.

இவ்விடத்திலிருந்து பின்வரும் பொருள்கள் ஏற்றுமதி செய்யப்படுகின்றன: சடாமாஞ்சி,[22] கிழங்கு வகைகள், பிடெலியம்,[23] போளவகைகள்,[24] தந்தம்,[25] வைரக் கற்கள்,[26] கார்னிலியன் கற்கள்,[27] கடுக்காய் வகைகள்.[28] எல்லாவிதமான பஞ்சு ஆடைகள், பட்டுத்துணிகள், வழவழப்பான ஆடைகள்,[29] பட்டு நூல் இழைகள்,[30] நீண்ட மிளகுகள்,[31] மற்றும் உள்நாட்டுச் சந்தை நகரங்களிலிருந்து கொண்டுவரப்படும் வாசனைப் பண்டங்கள் பலவும் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. இவ் வாணிக நகர் சந்தைக்கு எகிப்

திலிருந்து[32] புறப்படும் கப்பல்கள் யாவும் ஜூலை மாதத்தில் தங்கள் பயணத்தை மிகச்சௌகர்யமாகத் தொடங்குகின்றனர். இந்த ஜூலை மாதமே எபிபி [33] என்று வழங்கப்படும்.

## விளக்கவுரை

### 1. இலாவொடீசியா (Laodicea)

செல்யூகஸ் நிகேடர் (Seleucos Nicator) என்பவர் அலெக்சாந்தர் இறப்பிற்குப்பிறகு (கி.மு. 323) அவர் அரசாட்சியைப் பங்கு போட்டுக் கொண்டு ஆண்டுவந்த சத்ராபிகளுள் (Satraps) ஒருவர் ஆவார். இவருடைய தாயாரின் பெயர் லாவோடிஸ் (Lovodice) என்பதாகும். தம் தாயாரின் பெயரால், செல்யூகஸ் நிகேடர், ஆசியாவில் பல கிரேக்க நகரங்களை நிர்மாணித்தார். அக் கிரேக்க நகரங்கள் இலாவொடீசியா (Laodicea) எனும் பெயரைப் பெற்றன. இங்குக் குறிக்கப்பட்ட இடம் பெர்சியாவில் இருந்தது. அங்கு மதுபானம் நிறையத் தயாரிக்கப்பட்டது.

—(Vide A Smaller Classical Dictionary, page 212)

இது இன்று லாரிஸ்தான் (Laristan) என வழங்கப்படுகிறது. இது ஹார்மஸ் விரிகுடாவிற்குச் (Bay of Hormuz) சற்று வடக்கே உள்ளது.

இலாவொடீசியாவின் இருப்பிடம்: 28°·0′ வ × 55°·0′ கி.

இது பெர்சியாவைச் சார்ந்து நின்றது. இன்று ஈரான் பகுதியைச் சார்ந்துள்ளது.

### 2. அரேபியா (Arabia)

அரேபியாவில் பேரீச்சம்பழம் கொண்டு மதுபானம் தயாரித்து ஏற்றுமதி செய்யப்பட்டது. இம் மதுபானம் மூஸா (Muza) என்று வழங்கப்பட்டு வந்ததும், இன்று மோசோ (Mocha) என்று வழங்கப் பட்டுவருவதுமான துறைமுகத்திலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டது.

மோசாவின் இருப்பிடம்: 13°·0′ வ × 43°·0′ கி.

மற்றும், அதிகாரம் 24, குறிப்பு-1 பார்க்கவும்.

### 3. இத்தாலி நாட்டு மதுபானம் (Italian Wine)

இத்தாலி நாட்டு மதுபானம் தரத்தில் உயர்ந்தது. நேப்பிள்ஸ (Naples) எனும் இடத்தில் செய்யப்படும் மதுபானம் அயல்நாடு

களுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டது. ரோமப் பேரரசர்கள் மது பானம் அருந்துவதில் புகழ்பெற்றவர்களாதலால், ரோமநாட்டுச் சாராய வகைகள் அயல் நாடுகளால் விரும்பி வரவழைக்கப்பட்டன. கிளியோபாத்ரா எனப்படும் எகிப்தியப் பேரரசி, தன் மதுக் கிண்ணத்தில் முத்தைக் கரைத்து விருந்திட்டதாக வரலாறுகள் கூறுகின்றன.

(பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 23, குறிப்பு-45, பக்கம் 54)

**4. பித்தளை** (Brass)

இதில் மென்பித்தளை, வன்பித்தளை என இருவகைகள் இருந்தன. இவ்விரு வகைகளுமே இறக்குமதி செய்யப்பட்டன. இவை பாத்திரங்கள் செய்யவும், கோயில்களின் படிகள், கதவு களுக்குமேல் அப் பித்தளைத் தகட்டை அடிக்கவும் இறக்குமதி செய்யப்பட்டன.

மற்றும் அதிகாரம் 36, குறிப்பு-4 பார்க்கவும்.

**5. தகரம்** (Stannum)

இது இலத்தீனில் ஸடானம் (Stannum) என்று வழங்கப் பட்டது. இது இந்தியாவிலேயே அர்ஜென்டைனு, பெகு முதலிய பகுதிகளில் எடுக்கப்பட்டது. பர்மாவை ஒட்டிய பகுதிகளிலும் எடுக்கப்பட்டது. எபிரேய மொழியில் (Hebrew) பெடில் (Bedil) என்றும், கிரேக்க மொழியில் (Greek) காஸிடெராஸ் (Kassiteros) என்றும், வடமொழியில் காஸ்திரம் (Kasthira) என்றும் பலவாறு வழங்கப்பட்டுவருகிறது. இதற்கு முன் வந்த உலோகங்களான பொன், வெள்ளி, பித்தளை, இரும்பு, ஈயம் ஆகியவையே பெரும் பாலான பொருள்கள் செய்யப் பயன்பட்டன. பின்னரே, தகரம் எடுக்கப்பட்டுச் சிறுகுப்பிகள், டப்பாக்கள் செய்யப் பயன்படுத்தப் பட்டது.

மற்றும் அதிகாரம் 7, குறிப்பு-8 பார்க்கவும்.

**6. ஈயம்** (Lead)

இதில் வெள்ளீயம், காரீயம் என்று இருவகைகள் உண்டு. பிளினி (கி.பி. 23-79) கூறுகிறார்: "வெள்ளீயம் ஸ்பெயின் (Spain) தேசத்திலிருந்து வந்ததாகும். இவ் ஈயம் புற்றுநோய்களுக்கும், புரையோடிய இரணங்களுக்கும் மருந்தாகப் பயன்படுத்தப்பட்டது. மற்றும் கண்ணோய் மருந்து செய்யப்படும் களிம்புக்கும் பயன் படுத்தப்பட்டது. இந்த ஈயம் பெருவாரியாகப் பாரிகாஸாவில் இறக்குமதி செய்யப்பட்டது. இந்த ஈயம் சாகா (Saka)

நாட்டினரின் நாணயத்தை உருக்குவதற்கும், உருவாக்குவதற்கும் பயன்படுத்தப்பட்டது.''

—(பிளினி: புத்தகம் XXXIV, அதிகாரம் 47-50)

காரீயம் செம்புகள், பாத்திரங்கள் செய்யப் பயன்படுத்தப் பட்டது. நச்சுப்பொருள் கலந்திருப்பதால், இது மருந்துப் பூச்சாகப் பயன்படுத்தப்பட்டது.

**7. பவளம் (Corraleum)**

இது கோரல் (Coral) என்று வழங்கப்படுகிறது. இலங்கைக்குப் பக்கத்தில் பவழத்திட்டுகள் (Coral reefs) உள்ளன. மத்தியதரைக் கடலில் எடுக்கப்படும் பவளம் செம்பவளம் என்றும், அது விலை உயர்ந்ததாக மதிக்கப்படுகின்றதென்றும் கூறப்பட்டுள்ளது. இந்தியப் பவளம் முசிறி, தொண்டி, பாரிகாஸா முதலான துறை முகங்கள் வழியாக ஏற்றுமதி செய்யப்பட்டன.

மற்றும் அதிகாரம் 39, குறிப்பு-5 பார்க்கவும்.

**8. புஷ்பராகம் (Topaz)**

இக் கற்கள் அபிசீனிய நாட்டிலும், அரேபியாவிலும் எடுக்கப் பட்டு, இந்தியாவில் பாரிகாஸா துறைமுகத்தில் இறக்குமதி செய் யப்பட்டன. இலத்தீன் மொழியில் கிரிஸோலிதோ (Chrysolitho) என்று வழங்கப்பட்டது. கிரிஸோலிஸ் என்றால் பல வண்ணங்களைப் பிரதிபலிப்பது என்று பொருள். பிளினி, இந்தியப் புஷ்பராகமே மிகவும் சிறந்ததெனக் கூறுகிறார். —(பிளினி: புத்தகம் XXXII-அதிகாரம் 11)

மற்றும் அதிகாரம் 39, குறிப்பு-4 பார்க்கவும்.

**9. மெல்லிய ஆடைவகைகள் (Linen Clothes)**

இது வழவழப்பான ஆடைவகை; எகிப்திலிருந்து இறக்குமதி செய்யப்படுகிறது. இதில் மிகவும் துல்லியமான ஆடைவகைகள் அரச குடும்பத்துக்கு என்று இறக்குமதி செய்யப்படுகின்றன.

**10. வண்ணக் கச்சைகள் (Coloured Girdles)**

இவ்வகை ஆடைகள் சுரங்கங்களில் (Mines) பணியாற்று வோர்க்கு அளிக்கப்பட வேண்டியவைகள். பொன், வெள்ளி, பித்தளை, ஈயம் முதலியன எடுக்கப்படும் சுரங்கத் தொழிலாளர் களுக்குக் கொடுப்பதற்காக இவை இறக்குமதி செய்யப்பட்டன.

**10. ஓர்க்கோலை (Storax)**

இதில் இருவகைகள் உள்ளன: (1) இறுகிக் கட்டிபோன்று உள்ளது. இது சாம்பிராணியுடன் கலந்து தூபம் போடப் பயன் படுத்தப்பட்டது. (2) திரவ உருவமாக உள்ளது. இது மார்ச்சளி, இருமல் முதலிய கடுமையான நோய்களுக்கு மருந்தாகப் பயன் பட்டது.

மற்றும் அதிகாரம் 28, குறிப்பு-4 பார்க்கவும்.

**12. இனிப்பு இலவங்கம் (Sweet Clove)**

இது இலத்தீன் மொழியில் திரிபோலியம் மெலிடோடஸ் (Tripholeum melitotus) என்று வழங்கப்படுகிறது. இது நறுமண தூபங்கள் செய்யப் பயன்பட்டது. இதில் மிகவும் சிறந்தது இத்தாலியில் உள்ள கம்பெனியா (Compania) எனும் இடத்தி லிருந்து வந்ததும், கிரேக்க நாட்டில் சுனியம் (Sunium) எனும் இடத்திலிருந்து வந்ததும் ஆகும். இது கண் நோய்களுக்கு, முட்டைக் கருவுடன் கலந்து பயன்படுத்தப்பட்டது. உடல் தோலின்மீது காணப்படும் வீக்கங்களுக்கும் மேல் பூச்சாகப் பூசப் பயன்படுத்தப்பட்டது. மற்றும், இதன் சாறு வயிற்று வலிக்கும் பயன்பட்டது. மற்றும் இப் பண்டம் வில்லைகளாக ஆக்கப்பட்டுச் சமாதிகள், கல்லறைகள் உள்ளும் அவை வைக்கப்பெற்றன. இதன் வாசனை எளிதில் போகா. (பிளினி: புத்தகம் XXI, அதிகாரம் 29).

**13. சக்கிமுக்கிக் கற்கள் (Flint Stones)**

இவை உடன் தீப்பற்ற வைக்கப் பயன்படுத்தப்பட்டன. மற்றும் சமாதிகள் கட்டவும், குறிப்பாகச் சில அறைகள் கட்டவும் பயன் படுத்தப்பட்டன.

**14. மனோசிலை (Realgar)**

இது சான்டிரேக் (Sandrake) என்றும் வழங்கப்பட்டது. இது ஆர்செனிக் எனப்படும் பாஷாணத்தின் சிவப்பு கந்தக உப்பாகும். இது பாரசீக நாட்டில் பெருவாரியாகக் கிடைக்கிறது. அங்கிருந்து பாரிகா ஸாவுக்கும், பாரிகாஸாவிலிருந்து உஜ்ஜயினிக் கும் அனுப்பப்பட்டு, இறக்குமதி செய்யப்பட்டது. இதன் தூய்மை அதிகம் ஆக ஆக, அதன் நறுமணமும் அதிகமாகக் காணப்படும். சான்டிரேக் மரத்தின்பட்டை கிரேக்கர்களாலும், ரோமநாட்டு மக்களாலும் பெரிதும் போற்றப்பட்டு வரவேற்கப் பட்டது. இது ஆர்செனிக்-ரூபம் (Arsenic Rubum) என்றும் வழங்கப்படுகிறது. மனோசிலை இயற்கையிலேயே பாஷாண வகையைச் சார்ந்தது.

## 15. நீலாஞ்சனக்கல் (Antimony)

இது ஒரு ஸ்படிக வகையைச் சார்ந்ததாகும். தூய்மை செய்யப் பட்ட இக் கற்கள் இந்தியாவிலும், எகிப்திலும் (Egypt) அதிகமாகக் கிடைத்தன. இதன் கனிப்பொருள் அரேபியாவிலும், கார்மேனியா விலும் கிடைத்தது. இக் கனிப்பொருள் தூய்மை செய்யப்பட்டு, எகிப்திற்கும் இந்தியாவிற்கும் அனுப்பப்பட்டது. பிளினி (கி.பி. 23-79) இதைப் பற்றிக் குறிப்பிடுகிறார்: "இது பளபளப்பாய் உள்ளது. இது குளிர்விக்கும் தன்மை கொண்டது. இது கண் களுக்குச் செய்யப்படும் மை வகைகளுடன் சேர்க்கப்பட்டு, மருந் தாகப் பயன்படுத்தப்படுகிறது."

—(பிளினி: புத்தகம் XXXVII, அதிகாரம் 33–34);

(பிளினி: புத்தகம்: V. அதிகாரம் 99)

இந்தியாவில், இது கண் மை செய்யப்பயன்படுத்தப்பட்டது. நீலாஞ்சனக்கல் (Sulphide of Antimony) என்று கூறப்படுகிறது. இது பாஷாண வகையைச் சார்ந்தது.

## 16. பொன் நாணயங்கள் (Gold Coins)

பழைய ரோமன் நாணயமான தினரியம் (Dinarium) இந்தியாவிலும் வடமேற்கு எல்லையிலும் புழக்கத்தில் இருந்தன. ரோமானியர்கள், நாணயங்களை உருவாக்குவதிலும், உறுதியான நாணயங்களைச் செய்வதிலும் பெயர்பெற்றிருந்தனர். இந்தியாவில் பொற்கட்டிகளை உருக்கி நாணயங்களாகச் செய்யும் முறையை அறிந்திலர் போலும். அதன் காரணமாகத்தான் பொற்கட்டிகளை ரோம் நகருக்கு அனுப்பி, அவற்றை நாணயங்களாக ஆக்கித் திரும்பப்பெற்றனர்.

மற்றும் அதிகாரம் 47, குறிப்பு-16 பார்க்கவும்.

## 17. வெள்ளிக் காசுகள் (Silver coins)

பொன் போலவே வெள்ளிக் கட்டிகளும் ஏற்றுமதி செய்யப் பட்டன. வெள்ளி நாணயங்களும் அயல்நாடுகளில் செய்யப்பட்டு, இந்தியாவில் இறக்குமதி செய்யப்பட்டன.

## 18. களிம்புப் பூச்சுகள் (Ointments)

இவை காலில்வரும் சேற்றுப்புண்களுக்கும், பெருவியாதி எனப் படும் லெப்ரசி (Leprosy) வகைகளுக்கும் மேல்பூச்சாகப் பயன் படுத்தப்பட்டன. இவற்றுடன் தாமிரம் (Copper) கலந்திருப்பதால், அக் காப்பர் ஆக்ஸைடு கிருமிகளைக்கொல்லும் சக்திவாய்ந்தது. அதன் காரணமாக வியாதிகள் குறைகின்றன; தீர்கின்றன,

## 19. வெள்ளிப் பாத்திரங்கள் (Silver Vessels)

இவை அரச குடும்பங்களுக்குப் பயன்படும் வகையில் மிகுந்த வேலைப்பாட்டுடன், உள்ளே பொன்முலாம் பூசப்பெற்று, அயல்நாடு களிலிருந்து, பாரிகாஸாவுக்கும், உஜ்ஜயினியிக்கும் அனுப்பப் பட்டன.

## 20. இசைபாடும் பாணர் சிறுவர்கள் (Singing boys)

இவர்கள் பாணர்கள் வகுப்பைச் சார்ந்தவர்கள். கப்பலில் சிரமம் தோன்றுதிருக்க அவ்வப்போது இசையால் மகிழ்விக்கவும், அயல்நாடுகளில் இசையரங்குகளில் பங்குகொள்ளவும், சிறுவர்கள் இனிய சாரீரத்துடன்-குரலுடன்-கூடியவர்கள் அயல்நாடுகளுக்கு அனுப்பப்பட்டனர். அவர்கள் உஜ்ஜயினியிலுள்ள அரசவைக்கு வரவழைக்கப்பட்டவர்போலும்.

## 21. அழகுமிக்க பெண்கள் (Beautiful Damsels)

இவர்கள் அரண்மனையில் அந்தப்புரத்தில் இருக்க அயல்நாடு களிலிருந்து அனுப்பப்பட்டவர் ஆவர். பல அரசர்கள் அயல்நாட்டு மாதர்களைத் தங்கள் அரண்மனைகளில் வைத்துப் போற்றி வந்துள் ளனர். சிலர் அரசர்க்கு மெய்க்காப்பாளராகவும் இருந்திருக் கின்றனர். ஆக செவிலியர்களாக அழகுமிக்க பெண்கள் அயல் நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டனர்.

## 22. சடாமாஞ்சி (Spikenard)

இது நாளத்தம் என்ற சொல்லின் சிதைவே. நார்ட் (Nard) என்று வழங்கப்பட்டது. இது சருமப்புண்களுக்குப் பயன்படுத்தப் பட்டது. மற்றும், பைபிளில் (Bible) குறிப்பிடப்பட்டுள்ளது. (Mark-XIV, 3-5). இது பிளினியால் (கி.பி. 23-79) குறிப்பிடப் பட்டுள்ளது. (**பிளினி:** புத்தகம் XII, அதிகாரம் 26).

மற்றும் அதிகாரம் 39, குறிப்பு–17 பார்க்கவும்; அதிகாரம் 84, குறிப்பு–5 பார்க்கவும். இப்பொருள் அயல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டது.

## 23. பிடெலியம் (Bdellium)

இது வெள்ளைப் போளத்திலிருந்து தயாரிக்கப்படுகிறது. இது பைபிளில் (Bible) குறிப்பிடப்பட்டுள்ளது. மற்றும் அதிகாரம் 37, குறிப்பு–8 அதிகாரம் 39, குறிப்பு–13 பார்க்கவும்.

## 24. போள வகைகள் (Myrrhs)

போளத்தில் கரியபோளம் (Aloe) என்றும், சிவப்புப்போளம் (Hepatic Aloe) என்றும், வெள்ளைப்போளம் (Bal-Samodendrum) என்றும் மூவகைகள் உள்ளன. இது இறந்த அரசர்களின் உடலைப் பாதுகாக்க (Embalm) அயல்நாடுகளுக்கு-எகிப்திற்கு-அனுப்பப்பட்டது.

மற்றும் அதிகாரம் 39, குறிப்பு-31 பார்க்கவும்.

எகிப்து நாட்டில் இறந்த உடல் பல நூற்றுண்டுகளுக்கு எவ்வாறு காப்பாற்றப்படுகின்றது என்பதைப்பற்றி **ஹிராடடஸ்** (கி.மு 484–425) மிக விரிவாகக் கூறுகிருர்:

"சடலப் பாதுகாப்பு ஒரு தனி கலை. இவற்றுள் மூன்றுவகைகள் உள்ளன. (i) மிகவும் உயர்ந்தது; செலவுமிக்கது; (ii) செலவு அதிகமில்லாதது; (iii) கடைநிலையானது; செலவு மிகக் குறைவு. அவர்களிடம் ஒரு சடலம் கொண்டுவரப்பட்டவுடன், எந்தவகையில் பாதுகாக்கப்படவேண்டும் என்று கூறி, அதற்கான மாதிரியைக் காண்பிப்பர். அதற்கான விலையைப் பேசி முடித்ததும், அச் சடலத்தை அவர்களிடம் விட்டுத் தங்கள் இடம் சென்றுவிடுகின்றனர்.

**முதல்தரம்** என்பது பின்வருமாறு செய்யப்படுகிறது: மூக்கின் வழியாக, மூளையின் எல்லாப்பகுதிகளும் கொக்கிபோட்டு எடுத்துவிடப்படுகின்றன. அவ்வாறு முடியாது, மிஞ்சி இருப்பவை மருந்து செலுத்தி வெளிக் கொணரப்படுகின்றன. பிறகு வயிற்றை இரண்டாகக் கிழித்து, அதனுள் இருக்கும் குடல் வகைகளைக் களைந்துவிடுவர். குடல் இருந்த பாழ்இடம் மருந்துகள்போட்டு நன்ருகக் கழுவப்படுகின்றது. அதற்குத் தென்னை, பனை ஆகிய வற்றிலிருந்து செய்த சாராயத்தைப் (palm wine) பயன்படுத்துவர். அதன்பின் அவ்விடம் போளம், வாசனைப்பண்டங்கள், இலவங்கம், இலவங்க பத்திரி–சாம்பிராணி நீங்கலாக—மற்ற வாசனைப் பொருள்கள் இட்டு நிரப்புவர். பிறகு அறுத்த பகுதியை-வயிற்றை-மீண்டும் தைத்து, அவ்வுடலின்மீது வெள்ளைப்போளம் முதலிய மருந்துகள் தடவி, 70 நாள்களுக்கு எண்ணெய்க் கொப்பரையில் வைத்துவிடுகின்றனர். 70 நாள்கள் ஆனவுடன், இதை எடுத்துக்கழுவி, லினன் துணிகளால் அலங்காரம் செய்து, அதற்காகத் தனியாகச் செய்த பெட்டியில் அச் சடலத்தைவைத்து, அடியில் கோந்து போன்ற பிசிஞல் தடவிக் கீழே நழுவி விழாதவண்ணம் செய்துவிடுகின்றனர். அப் பெட்டியைமூடி, சீல்வைத்து, அதற்குடையவர்களிடம் கொடுத்துவிடுகின்றனர்,

**இரண்டாம் தரம்** என்பது பின்வருமாறு செய்யப்படுகிறது: மூக்கின் வழியாக மூளையை எடுப்பதில்லை; வயிற்றிலுள்ள குடலையும் எடுப்பது கிடையாது. ஆசன வாயில் வழியாக மருந்து ஒன்றை உடலில் ஏற்றி, அத் துவாரத்தை மூடி, எண்ணெய்க் கொப்பரையில் இட்டுவிடுவர். அதற்குரிய நாள்களுக்குப் பிறகு அவ்வுடலை எடுத்து, ஏற்றப்பட்ட மருந்தை வெளியே விட்டுவிடுவர். இப்பொழுது மூளை, குடல், சதை ஆகிய யாவும் குழம்புபோல் வந்து, வெற்று எலும்பு மட்டும்தான் இருக்கும். பிறகு அவ்வுடலை லினன் துணியால் அலங்கரித்து, உடையவரிடம் சேர்த்துவிடுகின்றனர்.

**மூன்றும் தரம்** என்பது பின்வருமாறு செய்யப்படுகிறது: இஃது ஏழை மக்களுக்காக ஏற்படுத்தப்பட்ட முறை. குடலில் உள்ள பொருள்கள் மருந்தினுல் வெளியேற்றப்பட்டு, அதற்குரிய நாள்கள் வரை எண்ணெய்க் கொப்பரையில் இட்டு, பிறகு உரியவர்களிடம் கொடுத்துவிடுகின்றனர். இது பல ஆண்டுகள் இருப்பதில்லை.

அரசர்கள் இறந்துவிட்டால், மிகவும் பெருமிதமாக இச் சடலப் பாதுகாப்பு நடைபெறும். அச் சடலம் ஆயிரக்கணக்கான ஆண்டுகள் ஆனுலும் கெட்டுவிடா. அதற்குப் பயன்படுத்தப்படும் பொருளின் தரத்தையே அப் பாதுகாப்பு பொறுத்துள்ளது.

—(ஹிராடடஸ்: புத்தகம் II, பக்கம்-135)

## 25. தந்தம் (Ivory)

'இபம்' என்ற சொல்லே ஐவரி என்று சொல்லாக மருவ உதவிற்று. இபம் என்ற சொல்லே கிரேக்க மொழியில் இப (Iba) என்று வழங்கப்பட்டது. ஹப்பின் என்பது யானையைக் குறிப்பிடுகிறது. இதில் உள்ள இப என்பதே அடிப்படைச் சொல்லாகும். இப-தந்தா என்ற சொல்லே எலி-பெண்டா என்று ஆகி, அது யானையைக் குறிப்பதாக ஆயிற்று. எலி–பெண்டா பின்னர் எலிபெண்ட் (Elephant) ஆக மருவிற்று. மருவி, யானையைக் குறிப்பிடலாயிற்று. யாளி–தந்தா என்ற சொல் எலிபெண்டாக மாறிற்று என்று கூறப்படுவதும் உண்டு. யானை இந்தியாவில்தான் முதன் முதல் தோன்றிற்று. தந்தம் இந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டது.

## 26. வைரக்கற்கள் (Diamond Stones)

இது அகேட் (Agate) என்று வழங்கப்பட்டது. இக் கற்கள் மத்திய தரைக்கடல் நாடுகளிலும், மற்றைய மேலை நாடுகளிலும், பெரிதும் விரும்பப்பட்டன. இவை பாரிகாஸாவிலிருந்தும், உஜ்ஜயினி (Ujjain) யிலிருந்தும் அயல் நாடுகளுக்கு அனுப்பப்பட்டன.

## 27. கருநீலக் கற்கள் (Cornelian Stones)

இக் கற்கள் வைரக்கற்கள் போன்று பளபளப்பானவை. இக் கற்கள் வெயிற்காலத்தில் வயல்சார்ந்த இடங்களில் காயவைக்கப்படுகின்றன. பிறகு 2 முதல் 3 அடி அளவுள்ள ஆழம் பள்ளம் தோண்டி, இக் கற்களைப் பானைகளில் இட்டு, அப் பானைகளைத் தலை கீழாக்கிப் புதைத்துவிடுகின்றனர். அதன் அடியில் சிறிது துளை விடப்பட்டிருக்கும். பிறகு வரட்டிகள் கொண்டு, அப் பானையைச் சுற்றிலும் அடுக்கிவைத்து தீ மூட்டி விடுவர். இத் தீ அணையாமல், காலை சூரிய உதயம் முதல் மாலை சூரியன் மறையும் வரைக்கும் காக்கப்படும். பிறகு அப் பானை எடுக்கப்பட்டு, அதில் உள்ள நல்ல வேக்காடு பெற்ற கற்களைப் பொறுக்கிக்கொள்வர். இது சாதாரணமாக மே (May) மாதத்தில் நடைபெறும். இக் கற்கள் நர்மதை ஆற்றின் கழிமுகத்தில் உள்ள பாரிகாஸாவின்மூலமாக அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன.

கார்னீலியன் கற்கள் நர்மதை ஆற்றுக்கு அருகிலேயே காணப்படுகின்றன. அக் கற்கள் பெருவாரியான அளவில் விரும்பி வரவேற்கப்படுகின்றன. கார்னீலியன் (Cornelian) என்ற சொல், கருநீலம் என்ற தமிழ்ச் சொல்லின் உருவமேயாகும். இக் கற்கள் பிளினி (கி.பி 23-79) யாலும் குறிப்பிடப்பட்டுள்ளது (பிளினி: புத்தகம் XXXXVII, அதிகாரம் 7, 8).

ரோமானியர் இந்தியாவுக்கு வழிகண்டுபிடிப்பதன் முன்னர், அவர்கள் பார்த்தியநாட்டு வழியாக வந்தனர். வரும் வழியில் அந் நாட்டில் உள்ள கருநீலக் கற்களைப் பெற்றனர். ஆனால், அவை இரண்டாந்தரமான கற்கள் ஆகும். இந்தியாவுக்குக் கடல் வழி கண்டுபிடித்த பிறகு (கி.பி. 40-60), ரோமானியர்கள் நேரடியாக இந்தியாவிற்குவந்து, இந்தியக் கருநீலக் கற்களையே பெற்றனர். இதனால் பார்த்தியர் (Parthians) வாணிகம் குறைந்தது. சில ஆண்டுகளில் நசித்தும்விட்டது. பின்னர் இந்தியக் கருநீலக் கற்களே உயர்ந்த ரகக் கற்களாக ஏற்றுக்கொள்ளப்பட்டன. இக் கற்கள் ஏற்றுமதி செய்யப்பட்டன.

## 28. கடுக்காய் (Lyceum)

இது இலத்தீனில் பெர்பெரிஸ் லைஸியம் (Berberis lyceum) என்று வழங்கப்பட்டது. இது கைப்பு வகையைச் சார்ந்தது. இது சாயமேற்றவும், பேதிமருந்தாகவும் பயன்பட்டது. இது பிளினியால் குறிப்பிடப்பட்டுள்ளது (பிளினி: புத்தகம் XXI-அதிகாரம் 58).

மற்றும் அதிகாரம் 39, குறிப்பு-16 பார்க்கவும்,

**29. வழவழப்பான ஆடைகள்** (Smooth clothes)

இவை சிந்துநதிக் கரையில் இருந்த சிண்டோமானு (Sindo mana) வழியாகவும், உஜ்ஜயினி, பாரிகாஸா முதலிய வாணிகச் சந்தை நகர்கள் வழியாகவும் அயல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. சிண்டான் என்ற சொல்லே இன்று செடான் (Sedan) என்று மருவி, அதுவே சாட்டின் (Sattin) எனும் வழ வழப்பான துணிவகைகளைக் குறிப்பிடுவதாயிற்று. இத் துணி வகைகளை எகிப்து இளவரசி கிளியோபாத்ரா விரும்பி வாங்கி அணிந்து மகிழ்ந்ததாக வரலாறு கூறுகிறது.

**30. பட்டுநூல் இழைகள்** (Silk Yarns)

பட்டுநூல் இழைகள் அரேபியாவுக்கு ஏற்றுமதி செய்யப் பட்டன. அரேபியாவில் ஆடை தைக்கும் வல்லுநர் இருந்தனர். அவர்கள் இப் பட்டுநூலால் ஆகிய ஆடைகளை உருவாக்கி, எகிப்துப் பேரழகி கிளியோபாத்ராவுக்கு அனுப்பினர்.

மற்றும் அதிகாரம் 39, குறிப்புரை-19 பார்க்கவும்.

**31. நீண்ட மிளகுகள்** (Long Peppers)

இவ்வகை மிளகு இலத்தீனில் பெப்பர் லாங்கம் (Pepper langum) என்று வழங்கப்பட்டது. வடமொழியில் மிளகு, பிப்பாளி என்று சொல்லப்படுகிறது. இதுவே, ஆங்கிலத்தில் பெப்பர் (Pepper) என்ருயிற்று. பிப்பாளி என்பது தமிழில் திப்பிலி (Tippili) என்று வழங்கப்படுகிறது. அத் திப்பிலி நீண்டு கருமையாயுள்ளதால், அதை நீண்ட மிளகு என்று வழங்கினர் அயல் நாட்டார். இது பிளினியால் குறிப்பிடப்பட்டுள்ளது (பிளினி: புத்தகம் XII, அதி காரம் 7). இதன் கொடியின் பழங்கள் பச்சையாயிருக்கும் பொழுதே சேகரிக்கப்பட்டு, மிளகுபோல் உலர்த்தப்பட்டு, காய வைக்கப்படுகின்றன. இம் மிளகு, மருந்தாகவும், காசநோய் களுக்கும் பயன்படுத்தப்பட்டது.

இன்றும் நம் நாட்டில் திப்பிலி மிகச் சிறந்த மருந்தாகப் பயன் படுத்தப்பட்டு வருகிறது. தமிழ் இலக்கியத்தில் பதினெண் கீழ்க் கணக்கில் ஒன்ருகிய திரிகடுகம் எனப்படும் நூலின் பெயர் வந்த தற்குக் காரணம், சுக்கு, மிளகு, திப்பிலி ஆகிய இம் மூன்றும் எவ்வாறு உடல் நோய்க்குப் பயன் அளிக்குமோ, அதுவேபோல், மனநோய்க்கு இத் திரிகடுகம் எனும் நூல் பயன்படும் என்பதே. ஆக, திப்பிலி, தென்னிந்திய வாணிகப் பொருளாகச் சிறப்படைந் திருந்தது என்பது திரிகடுகம் எனும் நூலின் தலைப்புப் பெயராலே தெரியவருகிறது.

திரிகடுகம் எனும் நூலின் ஆசிரியர் நல்லாதனார். அந் நூலில் 100 செய்யுள்கள் உள்ளன. ஒவ்வொரு செய்யுளும் மூன்று விஷயங்களை உணர்த்துகின்றது.

**32. எகிப்து (Egypt)**

எகிப்து நாடே பண்டைய நாகரிங்கள் தோன்றின முக்கிய மான இடங்களுள் ஒன்றாகும். அங்கிருந்து பல பொருள்கள் இந்தியாவிற்கு வந்தன. இந்தியாவிலிருந்து பல பொருள்கள் ஏற்றுமதி செய்யப்பட்டன. எகிப்தியர் கணக்கிலும், வானவியலி லும் வல்லுநராக இருந்தனர். அதன் முக்கியத் துறைமுகம் அலெக்சாந்தரால் நிர்மாணிக்கப்பட்ட அலெக்சாந்திரியா (Alexandria) ஆகும். இது நைல் நதிக் கழிமுகத்தில் விளங்கிற்று.

அலெக்சாந்திரியாவின் இருப்பிடம்: 31°·12′ வ × 29°·53′ கி.

**33. எபிபி (Epipi)**

இச் சொல் கிரேக்க மொழியில் ஜூலை மாதத்தைக் குறிப்பிடும். இதுபோல் மற்ற மாதங்களுக்கும் ஒவ்வொரு பெயர் உண்டு.

மற்றும் அதிகாரம் 6, குறிப்பு-23 பார்க்கவும்.

இம் மாதத்தில் அடிக்கும் காற்று ஈடிஷியன் காற்று எனப் பட்டது. அதிகாரம் 39, குறிப்பு-21 பார்க்கவும்.

---

# 50. தட்சிணபதேஸ்

பாரிகாஸாவிற்கு[1] அப்பால் அதையடுத்த கடற்கரை நேரான கடற்கரையாக வடக்கிலிருந்து தெற்காகச் செல்கிறது. இக் காரணமாக இந் நாடு தட்சிணபதேஸ்[2] என்று வழங்கப்படுகிறது. 'தட்சிணஸ்' என்ற சொல்லுக்கு அந் நாட்டு மொழியில் 'தெற்கு' என்பது பொருளாகும். இந்த நாடு கடற்கரையிலிருந்து உள்ளே நீண்டு சென்று, மலைகள் மிகுந்ததாயும்,[3] பாலைவனம் செறிந்ததாயும்[4] காணப்படுகிறது. மற்றும் எல்லாவகையான காட்டு விலங்குகளும்—சிறுத்தைகள்,[5] யானைகள்,[6] நீண்டு பருத்த பாம்பினங்கள்,[7] கழுதைப் புலிகள்,[8] வாலிலாப் பெருங்குரங்குகள்[9]—ஆகியவைகளும், கங்கைநதிக் கழிமுகம்வரை மிகுந்த மக்கள் நெருக்கம் கொண்ட நாடுகளும்[10] காணப்படுகின்றன.

## விளக்கவுரை

### 1. பாரிகாஸாவிற்கு அப்பால் (Beyond Barygaza)

பாரிகாஸா என்ற துறைமுகம் நவீன புரோச் (Broach) என்பதைக் குறிப்பிடுகிறது. இதற்குத் தெற்கிலுள்ள கடற்கரைப் பிரதேசங்களையும், நாடுகளையும் இனிக் குறிப்பிடுவார். பிருகு, கச்சா என்ற இருசொற்களின் இணைப்பே பாரிகாஸா இது நர்மதை ஆற்றங் கழிமுகத்தில் உள்ளது.

பாரிகாஸாவின் இருப்பிடம்: 21°·41′வ × 73°·1′ கி.

### 2. தட்சிணபதேஸ் (Dakshina Badesh)

இச் சொல் தட்சிணப் பிரதேசம் என்பதன் திரிபே. தட்சிணம் என்ற வடசொல்லுக்குத் தெற்கு என்பது பொருள். இங்கு உள்ள பீடபூமி, தட்சிணபீடபூமி என்று பெயர் பெற்றது. விந்தியமலைக்குத் தெற்கில் உள்ள நாடுகள் யாவும் இச் சொல்லால் குறிப்பிடப்படு கிறது.

### 3. மலைகள் மிகுந்தது (Full of Mountains)

இந்தத் தக்ஷிணப் பகுதியில் மலைகள் பல உள்ளன. விந்திய மலை, மகேந்திரமலை, மேற்கு மலைத்தொடர், கிழக்குமலைத்தொடர், வேங்கடமலை, ஆனைமலை, நீலமலை, கழுகுமலை, குற்றாலமலை முதலான பல மலைகளைக் கொண்டுள்ளது இப் பகுதி.

### 4. பாலைவனம் செறிந்ததாயும் (Interspersed with desert regions)

சிலவிடங்களில் பாலைவனம் போன்ற இடங்கள் உள்ளன என்றே கூறப்படுகிறது. பெரும் பாலைவனம் வடநாட்டில்தான் ராஜபுதானா பாலைவனம் என்ற பெயரில் அமைந்துள்ளது. ஆனால் தென்னாட்டில், வறட்சியான-வறண்ட-பகுதிகளைப் பாலைவனம் என்று விளிக்கிறார் போலும்.

### 5. சிறுத்தைகள் (Leopards)

விந்தியமலைக் காடுகளில் (Vindhya Forests) பலவகை விலங்குகள் இருந்தன. அவற்றுள் ஒன்று சிறுத்தை (Leopard) இனம். இது புலிவகையைச் சார்ந்தது. இதன் உடலில் வரிக்கோடு கள் இல்லாமல், புள்ளிகளாகக் காட்சியளிக்கும் சிறுத்தையைக் குறவர்கள் அக் காலத்தில் பிடித்து வளர்த்தனர். இவை மலையாளப் பகுதியிலும், கத்தியவாரிலும் (Kathiawar), கங்கைப்பிரதேசக் காடு களிலும் காணப்படுகின்றன. சிறுத்தையில் சிறுத்தைப்புலி

(Cheetah) என்ற மற்ெருருவகை உண்டு. அது வேங்கை அல்லது வேங்கைப்புலி என்று வழங்கப்படும். வேங்கை வேகமாய்ப் பாய்ந்து ஓடும், சிறுத்தை மரமேறும். வேங்கைப்புலி மரம் ஏருது. ஆனல், பாய்ந்து ஓடும்.

சிறுத்தையைப் பற்றி மேனுடுகளில் பழமொழி ஒன்று விளங்கி வருகிறது:

"Neither the leopard can change his spots nor the Ethiop become white."

அதாவது, சிறுத்தையின் புள்ளிகளை மாற்றமுடியாது; அது போல, ஈதியாப் (ஆப்பிரிக்க நீகிரோவர்) தன் நிறத்தை மாற்றி வெண்மையாக ஆகமுடியாது.

**6. யானைகள் (Elephants)**

தந்தங்களுக்காக யானைகள் பிடிக்கப்பட்டு வந்தன. மற்றும், காடுகளில் மரங்களை, மரத்தூலங்களை இழுத்துச் செல்லப் பழக்கப்படுத்தப்பட்டன. யாளி என்பதே யானை எனப் பின்னர் வழங்கப்பட்டது. யாளி-தந்தா என்ற சொல்லே எலிபெண்டா என மருவிற்று. எலிபெண்டா (Elephanta) எனும் சொல்லே அத் தந்தத்தையுடைய யானையைக் குறிப்பிடும் எலிபெண்ட் (Elephant) எனும் சொல்லாக மருவிற்று. "யானை இருந்தாலும் ஆயிரம் பொன்; இறந்தாலும் ஆயிரம் பொன்" என்னும் பழமொழி யானையின் தந்தத்தைக் கருதியே ஏற்பட்டது.

**7. நீண்டுபெருத்த பாம்பினங்கள் (Long big Serpents)**

ஸர்ப்பம் என்ற வடமொழிச் சொல்லினடியாகப் பிறந்ததே ஸெர்பெண்ட் (Serpent) என்பது. மலைப் பகுதிகளில் மலைப் பாம்புகள் நீண்டு பெருத்துக் காணப்பட்டன. அவை அவற்றின் தோலுக்காகப் பிடிக்கப்பட்டுக் கொல்லப்பட்டன. மலைப்பாம்பின் மிகப் பெரிய இனம் போ (Boa). இது ஆப்பிரிக்காவில் உள்ளது.

**8. கழுதைப் புலிகள் (Hyenas)**

இவை மலைச்சரிவுகளில் வாழ்ந்து வருபவை. வரிக்குதிரை (Zebra) போன்று, உடலில் வரிகளுடன் காணப்படும் கழுதை வகை (Ass). மேனுடுகளில் இதை நாயினத்தில் சேர்த்தனர். தென் ஆப்பிரிக்காவில் இவை காணப்படுகின்றன. இவற்றில் சிரிக்கும் கழுதைப் புலிகள் உள்ளன (Hyenas). இவை பயங்கர மான சிரிப்பொலி போன்ற ஒரு சத்தத்தை வெளியிடும்.

**9. வாலிலாப் பெருங்குரங்குகள் (Babboons)**

இவை மனித இனம் போன்றே காணப்படுகின்றன. வால்கள் கிடையா. இவை மரமேறி மரத்தின்மீதே வாழ்கின்றன. முகம், மனிதச்சாயலை ஒத்துள்ளது.

**10. மக்கள் நெருக்கம் கொண்ட நாடுகள் (Thickly populated countries or towns)**

பெரிப்ளூஸின் ஆசிரியர் ஹிப்பலூஸ் (Hippalus) காற்றின் உதவியால் இந்தியாவை அடைந்த பொழுது—அதுதான் முதல் முதல் தொடங்கப்பட்ட நடுக்கடல் பயணம்—இந்தியாவில் பின் வரும் அரசியல் நிலை காணப்பட்டது:

வடமேற்குக் கோடியில் குஷானர்கள் ஆட்சிசெய்தனர் (Kushans); பாரிகாஸா, காம்பே விரிகுடா ஆகியவற்றைச் சுற்றிலுமுள்ள நாடுகளைச் சாக (Sakas) வமிசத்தினர் ஆண்டுவந்தனர்; கடற்கரைப் பகுதிகளில் மௌரியர்களின் இறுதிச் சந்ததியார்கள் ஆண்டுவந்தனர்; கிழக்குக் கடற்கரையில் ஆந்திரர்களும் (Andhras), தென்தமிழ்நாட்டில் சேரர் (Cheras), சோழர் (Cholas), பாண்டியர் (Pandyas) வமிசத்தினர் ஆண்டு வந்தனர். வடக்கே சித்தியர்கள் (Scythians) என்பவர்களின் இறுதி மன்னர், கொண்டாபரஸ் (Gondophares) என்பவர் (கி.பி. 21-60) கொண்டாபர்னஸ் என்றும் வழங்கப்பட்டார்-ஆண்டு வந்தார். அவர் இந்தோ-பார்த்திய வம்சத்தினர் கூட என்று கூறப்படுகிறது. (Vide An Advanced History of India By R.K. Mukerjee, page 118). இப் பார்த்திய அரசர், புனிதர் தாமஸ் என்பவருடன் தொடர்பு கொண்டவராகக் கூறப்படுகிறது.—(Vide An Early History of India By Vincent A Smith, page 218-222). இந்தோ-கிரேக்க மன்னர் காட்பிஸஸ் I (Kadphises) கி.பி. 50-ல் ஆண்டு வந்தார்.

பிளினி (கி.பி. 23-79) கி.பி. 80 வரை நிலவிய இந்தியாவின் வரலாற்றை விரிவாகக் கொடுத்துள்ளார்.

—(பிளினி: புத்தகம் VI, அதிகாரங்கள் 21-23)

# 51. பேதானு, தகரா

தட்சிணபதேசின்[1] வாணிகச் சந்தை கூடும் நகரங்களுள் மிக முக்கியமானவை இரண்டு உண்டு. அவற்றுள் பேதானு[2] என்பது ஒன்று. அது பாரிகாஸாவிலிருந்து[3] 21 நாள்கள் பயண அளவில் தெற்கில் உள்ளது. அதிலிருந்து 10 நாள்கள் கிழக்கு நோக்கிப் பயணம் செய்தால், தகரா[4] எனும் பெயர் தாங்கி நிற்கும் மற்றொரு பெரிய நகரம் வருகிறது. இவ்விடங்களிலிருந்து பாரிகாஸாவிற்குக் குறுக்குப் பாதைகள் வழியாகப் பளுவான மூட்டைகள் பண்டங்களைத் தாங்கி எடுத்துவரப் பெறுகின்றன. போதனு எனும் இடத்திலிருந்து கருநீலக் கற்கள்[5] பெரும் அளவிலும், தகரா நகரத்திலிருந்து எல்லா வகை ஆடைகளும், லினன் வகைகளும், நீலத்துணிவகைகளும்,[6] மற்றும் பலப்பல வாணிகப் பண்டங்களும் உள்நாட்டிலிருந்து கடற்கரைக்குக் கொண்டுவரப்படுகின்றன. இவ்விடத்திலிருந்து டிமிரிகா[7] முடிவுவரை 7000 ஸ்டேடியா[8] தொலைவு உள்ளது. ஆனால் கடற்கரைவழியாக அளவிட்டால், அதன்தொலைவு இன்னும் கூடுதலாகவே காணப்படும்.

## விளக்கவுரை

### 1. தட்சிணபதேஸ் (Dakshina badesh)

இச் சொல் தட்சிணப்பிரதேசம் என்பதன் திரிபே. தட்சிண பீடபூமியையும், தென்னாடுகளையும் குறிப்பிடுகிறது. அதிகாரம் 50, குறிப்பு-2 பார்க்கவும்.

### 2. பேதானு (Paethana)

இது வடமொழிச் சொல்லான பிரதிஸ்தானம் அல்லது பிரதிஷ்டானம் (Prathisthana) என்பதன் திரிபே. இது கோதாவரி நதிக் கரையில், நைசாம் டொமினியனில் உள்ள ஔரங்காபாத் (Aurangabad) பிரதேசத்தில் உள்ள பைதான் (Paithan) எனும் நகரத்தைக் குறிப்பிடுகிறது.

பைதான் நகரம் தட்சிணப்பிரதேசத்தில் மிகப் பண்டைய நகரங்களுள் ஒன்று. அசோகப் பேரரசர் (கி.மு. 263-224) இவ்விடத்துக்குப் பௌத்தமதப் பிரசாரகர்களை அனுப்பிவைத்தார். அங்குள்ள கல்வெட்டுகளும், பட்டயங்களும் அசோகரின் ஆட்சிப்

பெருமையையும், பிரதிஸ்தானத்தின் வணிகப் பெருமக்களின் நன்கொடையையும் விவரிக்கின்றன. தாலமி (கி.பி. 119-161) என்ற யவனாசிரியரும், இதை ஆந்திரர்களின் தலைநகரம் என்று வர்ணித்துள்ளார். (தாலமி: அதிகாரம் 6). அப்பொழுது அரசாண்ட அரசனின் பெயர் புலுமாயி II (Pulumayi II) என்று சொல்லப்படுகிறது. இப் பேரரசர் கி.பி. 80 முதல் கி.பி. 104 வரை அரசாண்டார். இவரே கௌதமி புத்திர சாடகர்ணி (Gautamiputra Satakarni) என்ற பெயரால் குறிக்கப்படுகிறார். இவர் 24 ஆண்டுகள் அரசாட்சி செய்தார். சாதவாகனரின் புகழை ஓங்கச்செய்தார். இவருடைய வெள்ளி நாணயங்கள் கோதாவரி, குண்டூர் மாவட்டங்களில் கிடைத்துள்ளன. —(Vide A History of South India By K.A. Nilakanta Sastri M.A. Page 91.) தாலமி குறிப்பிட்டது ஒருகால் விஜயவாடா (Vijayawada) வாக இருக்கலாம். அதுதான் மற்றவர்களால் தானிய கடகம் (Dhanyakataka) என்றும் வர்ணிக்கப்பட்டுள்ளது. மேற்கில் இருக்கும் பிரதிஸ்தானத்தைக் குறிப்பிடுவது, அது வாணிக நகர்ச் சந்தையாக இருந்ததால், சுங்கவரி வசூல் காரணமாக அங்கு அரசாங்க அலுவலர்கள் இருந்து பணியாற்றியிருப்பர். ஆந்திரர்களின் தலைநகரங்கள் கிழக்கில் இருந்தனவே தவிர மேற்கில் இருந்ததில்லை.

பைதானில் சிறந்த வேலைப்பாடமைந்த துணிகள் நெய்யப்படுகின்றன. அன்றும் அந் நகரம் லினன் ஆடைகள் (Linen garments) தயாரித்து அயல்நாடுகளுக்கு அனுப்பி வந்தது. பைதானுடன் மற்ற வாணிகநகர்ச் சந்தைகளின் போக்குவரவு வழிகள் இணைக்கப்பட்டிருந்தன.

பைதான் (பிரதிஸ்தானத்தின்) இருப்பிடம்: 19°·29′வ × 75°·25′கி.

**3. பாரிகாஸா (Barygaza)**

இது நவீன புரோச் எனும் துறைமுகத்தைக் குறிப்பிடுகிறது. பிருகு, கச்சா எனும் இரு சொற்களின் இணைப்பே பாரிகாஸா. பாரிகாஸா என்பதே புரோச் ஆயிற்று. இது நர்மதை ஆற்றின் கழிமுகத்தில் உள்ளது.

பாரிகாஸாவின் இருப்பிடம்: 21°·41′ வ × 73°·1′கி.

**4. தகரா (Tagara)**

இந் நகரம் வடமொழிச் சொல் தகரா (Takara) என்பதன் உருவமேயாகும். இது நவீன தெர் (Ter) அல்லது தாயிர் (Thair)

எனும் இடத்தில் முன்னர் இருந்ததாகக் கூறப்படுகிறது. நவீன உஸ்மானுபாத்தில் (Osmanabad) உள்ளது.

தகராவின் இருப்பிடம்: 18°·19′வ × 76°·9′கி.

கி.மு. முதல் நூற்றுண்டு இறுதியிலும், இரண்டாம் நூற்றுண்டுத் தொடக்கத்திலும் பின்வரும் நகரங்கள் புகழ் பெற்றிருந்தன:

பாரிகாஸா, சோப்பாரா (Soppara), கலியாண் (Kalyan), நாட்டினுள் இருக்கும் பைதான், தகரா, ஜுன்னுர், காஹடாகா, நாஸிக், வைஜயந்தி.

இவற்றில் வணிகர் பலர் வாழ்ந்துவந்தனர்.

தகரா எனப்படும் இடம் பைதானுக்கு 75 மைல்கள் (120 கிமீ) தொலைவில் தென்கிழக்கில் உள்ளது. இங்கு வரும் பண்டங்கள் யாவும் கிழக்குக் கடற்கரைப் பகுதிகளிலிருந்தும், வங்காள, கங்கைநதிப் பகுதிகளிலிருந்தும் வந்தனவேயாகும்.

ஆந்திர நாட்டில் மசூலிப்பட்டினம், வினுகொண்டா, தகரா, பைதான், தௌலதாபாத் ஆகியவற்றிற்கிடையே போக்குவரத்துக்கான ஒரு பாதை இருந்தது. இறுதிக்கட்டமான மார்கிண்டா விலிருந்து பாரிகாஸாவிற்குப்போகும் பாதைதான் மிகவும் சிக்கல் பொருந்தியதாகக் காணப்பட்டது. அதுவரை போடப்பட்ட பாதை நல்ல பாதையே.

மற்றும் சில பயணிகள் குறிப்பிட்டுள்ளனர்:

"இம் மார்கிண்டாவிற்கும் பாரிகாஸாவிற்கும் உள்ள தொலைவு 100 மைல்கள் (160 கிமீ) இருந்தன. இவ் வழியே அக் காலத்தில் பாரிகாஸாவுக்குப் போக்குவரத்துக்குரிய வழியாக இருந்தது. பாரிகாஸாவில் பற்பல இடங்களிலிருந்துவரும் பாதைகள் ஒன்று சேர்கின்றன. இதன் காரணமாகப் பாரிகாஸா மிக முக்கியத் துறைமுகமாக விளங்கிற்று. அக் காலத்தில் பாரிகாஸா துறைமுகம் வழியாக ஏற்றுமதியாகாத பண்டங்களே இல்லை என்று கூறலாம்."

ஆக, தகரா வாணிக நகர்கள் இணைக்கப்படும் பாதையில் இருந்தது என்பதும், அது பைதானுக்குத் தென்கிழக்கில் 75 மைல்கள் (120 கிமீ) தொலைவில் இருந்ததென்றும் தெரிய வருகிறது.

**5. கருநீலக் கற்கள் (Cornelian Stones)**

இக் கற்கள் வைரக்கற்கள்போன்று பளபளப்பாக இருக்கும். இவை நர்மதை ஆற்றுக்கு அருகிலேயே காணப்படுகின்றன. இவை பானையில் இடப்பட்டு, தீமூட்டி, பளபளப்பாக்கப்படுகின்றன.

மற்றும் அதிகாரம் 49, குறிப்பு-27 பார்க்கவும்.

**6. நீலத்துணி வகைகள் (Indigo dyed clothes)**

அவுரியின் சாயத்தில் நனைத்து ஊதா சாயம் ஏற்றப்பட்ட துணிகள் அயல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன.

**7. டிமிரிகா (Dimirica)**

இச் சொல் தமிழகம் என்பதன் கிரேக்க உச்சரிப்பேயாகும். மற்றும் அதிகாரம் 47, குறிப்பு-13 பார்க்கவும்.

**8. 7000 ஸ்டேடியா (7000 Stadia)**

ஒரு ஸ்டேடியம் என்பது ஒரு பர்லாங்கைக் குறிப்பிடும். ஆக, இங்குக் குறிக்கப்பட்ட 7000 ஸ்டேடியா என்பது 875 மைல்கள் (1400 கிமீ) அளவைக் குறிப்பிடுவதாகும்.

மற்றும் அதிகாரம் 1, குறிப்பு-5 பார்க்கவும்.

# 52. சோப்பாரா, கலியாண்

பாரிகாஸவிற்கு[1] அப்பால் காணப்படும் வாணிகச் சந்தை கூடும் நகரங்கள் இந்தப்பிரதேசத்தில் ஒழுங்காகவே காணப்படுகின்றன. சோப்பாரா,[2] கலியாண்[3] எனும் நகரங்கள் சரகணஸ் அரசர்[4] ஆட்சி செலுத்துங்காலத்தில், சட்டபூர்வமான வாணிக நகர்ச் சந்தைகளாக ஆக்கப்பட்டன. ஆனால், கலியாண்[5] என்ற நகரம் சந்தேரஸ்[6] எனப் பெயர்பூண்ட அரசரின் ஆளுகைக்கு உட்பட்டிருந்தது. அப்பொழுது அத் துறைமுகம் மிகவும் துன்புறுத்தலுக்கு ஆளாயிற்று. வணிகப் பெருமக்கள் பெரும் அவதிக்குட்பட்டனர்.[7] அங்குத் தங்க வரும் கிரேக்கக் கப்பல்கள், திரும்பவும் பாரிகாஸாவிற்கு மிகுந்த பாதுகாப்போடு செல்ல ஏற்பாடுகள்[8] செய்யப் பட்டுள்ளன.

## விளக்கவுரை

**1. பாரிகாஸா** (Barygaza)

இது நவீன புரோச் (Broach) எனும் துறைமுகத்தைக் குறிப்பிடுகிறது.

மற்றும் அதிகாரம் 42, குறிப்பு-3 பார்க்கவும்.

பாரிகாஸாவின் இருப்பிடம்: 21°·41′வ × 73°·1′கி.

**2. சோப்பாரா** (Soppara)

இது சோபாரா (Soppara) எனும் இடத்தைக் குறிப்பிடுகிறது. இதன் நவீன பெயர் ஷஹாபூர் (Shahapur) என்றும், இப்பொழுதைய டாமன் (Daman) துறைமுகத்தைக் குறிப்பதாயும் கருதப்படுகிறது. வின்சென்ட் ஸ்மித் இதைத் தாணுவில் (Thana) உள்ளது என்கிறார். (Vide An Early History of India By Vincent A Smith, Page 156). முகர்ஜி அவர்கள் பம்பாயிக்கு (Bombay) வடக்கே என்கிறார். மற்றும் இது சூர்ப்பாரகா (Surparaka) என்று வழங்கப்பட்டது என்றும் கூறுகிறார்.

—(Vide An Advanced History of India By Mookerjee, page 81)

ஷகாபூர் என்ற நவீன இடம் (பழைய சோபாரா) தாணுவில் (Thana) உள்ளது. இஃது ஒரு காலத்தில் கொங்கணம் பிரதேசத்துக்குத் (Konkanam) தலைநகராயிருந்தது. அசோகர் இங்குக் கற்றூண்களை நாட்டினார் என்று வரலாறு கூறுகிறது. இவ்விடமே சுபாரகா (Suparaka) என்று மகாபாரதத்திலும் (Mahabaratha) குறிப்பிட்டுள்ளது என்பர்.

இவ்விடம் தாலமி (கி.பி. 119-161) என்பவராலும் குறிப்பிடப்பட்டுள்ளது. இதை சௌபாரா (Saupara) என்று குறித்துள்ளார். அவருடைய கணக்கின்படி, சுபாரகா இருந்த இடம், நவீன உம்பர்கான் (Umbarkon) என்ற இடமே என்று ஏற்படுகிறது.

—(**தாலமி**: அதிகாரம் 6, குறிப்பு-2)

உம்பர்கானின் இருப்பிடம் : 20°·15′ வ × 72°·52′ கி.

இது நவீன டாமன் இருக்கும் இடமாகவும் இருக்கக்கூடும் எனக் கருதப்படுகிறது. காரணம் சோபாரா, ஒரு வாணிகச் சந்தை கூடும் துறைமுகமாகும்.

சோபாராவில் போதிசத்துவர் பழம்பிறப்பில் அவதரித்ததாகப் புத்தஜாதகக் கதைகள் கூறுகின்றன. ஆகையால்; இது புகழ்

பெற்றிருந்த இடமாகும். ஆனால், இது ஐயத்துக் கிடமான-தெளி வாகத்தெரியாத-ஓர் இடமாகவே விளங்குகிறது. கடல்கோளும், இயற்கைச் சக்திகளும் முந்தைய துறைமுகத்தை அழித்து விட்டிருக்கக்கூடும்.

சுபாரகாவின் (ஷகாபூர்) இருப்பிடம்: 19°·25′ வ × 73°·41′ கி

டாமன் (Daman) இருப்பிடம்: 20°·25′ வ × 72°·23′ கி.

### 3. கலியாண் (Kallien)

இது நவீன கல்யாண் (Kalyan) என்னும் நகரத்தைக் குறிப் பிடுகிறது. இது பம்பாய்க்கு (Bombay) வடகிழக்குப் பகுதியில் உள்ளது. தாணவுக்கு (Thana) அருகில் உள்ளது. ஆந்திரர்கள் உச்சநிலையில் இருந்தபொழுது, வாணிக நாட்டம் மிகுந்திருந்த அவர்களுக்கு இது மேற்கு வாணிகச் சந்தையாக விளங்கிற்று. ஆந்திராவின் விஜயவாடா, தானியகடகம் (Dhanyakayaka) என்று சில அயல்நாட்டுப் பயணிகளால் குறிக்கப்பட்டுள்ளது. கல்யாண் ஒரு காலத்தில் மிகவும் புகழ் பெற்றிருந்தது. அதன் காரண மாகவே, அங்கு வாணிகச் சந்தைநகர் ஏற்பட்டது எனலாம்.

கல்யாணின் இருப்பிடம்: 19°·14′ வ × 73°·10′ கி.

கல்யாண் அருகில் உள்ள சால்செட் (Salsette), பெஸ்ஸின் (Bassein) இரு இடங்களுமே, கலியாணில் கொணரப்பட்ட பண்டங் களுக்குத் துறைமுகமாக விளங்கின. அத் துறை முகங்களின் பெயர் இப்பொழுது மாறியுள்ளன.

### 4. சரகணஸ் அரசர் (King Saraganus)

இது சாடகர்ணி (Satakarni) என்றதன் கிரேக்க உச்சரிபபே யாகும். சாகா வமிசத்தைச் சார்ந்த சாடகர்ணி (Satakarni) என்ற அரசர் ஆந்திர நாட்டின் அரசர் ஆவார். இவர் கௌதமி புத்திர சாடகர்ணி (Gautami Putra Satakarni) என்றும் வழங்கப் பட்டார். மற்றும் புலுமாயி II (Pulumayi II) என்றும் வழங்கப் பட்டார். இவர் அரசாண்ட காலம் கி.பி. 80-104 ஆகும். சாகா ஆண்டு கி.பி. 78-ல் தொடங்கிற்று.

இது சனபாரஸ் (Sanabares) எனும் அரசரைக் குறிப்பிடும் என்றும், இது பார்த்திய அரசரைக் குறிக்கும் (Parthians) என்றும் சிலர் கூறுவர். இவர் கொண்டாபரஸ் II (Gondo pheres II) ஆட்சிக்குப் பிறகு அரியாசனம் ஏறினர். கொண்டா பரஸ் கி.பி. 60-ல் காலமானர். அதற்குப் பிறகு சனபாரஸ் ஆட்சி எய்திருக்க வேண்டும், பெரிப்ளூஸ் காலம் கி.பி. 50-80 என்பதால்,

சனபாரஸ் என்பதே சரகணஸ் அரசரைக் குறிப்பிடக்கூடும் என்ற வாதமும் ஏற்றுக்கொள்ளத்தக்கதே.

மற்றும் அதிகாரம் 41, குறிப்பு-13 பார்க்கவும்.

**5. கலியாண் (Kallien)**

மேலே குறிப்பு-3 பார்க்கவும். இது கல்யாண் எனும் நவீன இடத்தைக் குறிப்பிடும்.

கல்யாணின் இருப்பிடம் : 19°·14′ வ × 73°·10′ கி.

**6. சந்தேரஸ் (Sanderas)**

இச் சொல் சுந்தர சாடகர்ணி (Sundara Satakarni) என்ற தன் கிரேக்க உச்சரிப்பாகும். இவர் ஆண்டு வந்தகாலம் கி.பி. 70-84 ஆகும். இக் காலத்தில் மேற்குக் கடற்கரைப் பகுதிகளில் கடற்கொள்ளைக் கூட்டத்தினர் அதிகமாயினர். கப்பல்களைச் சூரையாடினர். இதன் காரணமாக வணிகப் பெருமக்கள் பெரும் அவதிக்குள்ளாயினர். இக் காலத்தில் நன்னன் முதலிய கொள்ளைக் கூட்டத்தினர் இருந்ததாகப் பழந்தமிழ் இலக்கியங்கள் கூறுகின்றன.

**7. வணிகப்பெருமக்கள் அவதிக்குட்பட்டனர்(Merchants exploited)**

கடற்கொள்ளைக் கூட்டத்தினர் காரணமாக, வணிகப் பெருமக்கள் பெரும் அவதிக்குள்ளாயினர். அரசர் கீழ்க் கடற்கரையில் தம் தலைநகரை வைத்துக்கொண்டு, கல்யாண் என்பதை மேற்கு வணிக சந்தையாகப் பயன்படுத்தினர். அதனால், கல்யாண் ஆந்திர அரசர் சுந்தர சாடகர்ணியின் ஆட்சியின்கீழ் இருந்தது. இருப்பினும் அவராலும் கடற்கொள்ளைக் கூட்டத்தினரை அடக்க முடியவில்லை. மற்றும் அதிகாரம் 53,பார்க்கவும்.

**8. பாரிகாஸாவிற்குச்செல்ல பாதுகாப்பு (Safety arrangements to Barygaza)**

இக் கப்பற் கொள்ளைக் கூட்டத்தினரின்று, பண்டங்கள் சேதமுறுவண்ணம், அயல் நாடுகளிலிருந்து வரும் கப்பல்களுக்குப் பாதுகாப்பளிக்கப்பட்டு, அவை பாரிகாஸா துறைமுகம் வரையில் கொண்டுவிடப்பட்டுவந்தன. இப் பாதுகாப்பு முறைகளை அரசாங்கமும், வணிகப் பெருமக்களும் ஒன்றுசேர்ந்து ஏற்படுத்திக் கொண்டனர். அப் பகுதியை ஆண்ட அரசருக்கு-சுந்தர சாடகர்ணிக்கு-சுங்கவரி வசூலில் இதனால் குறைவுவராமல், இலாபமே கிடைத்தது.

# 53. நௌரா, திண்டிஸ், முசிறிஸ்

கலியாண்[1] எனும் பெயர்பூண்ட இடத்துக்கும் அப்பால் இதைச் சார்ந்த மற்ற வாணிகச் சந்தை கூடும் நகரங்கள், இருக்கின்றன. அவையாவன: செமில்லா,[2] மந்தகோரா,[3] பளயபட்மே,[4] [illegible]காரா,[5] பைஜாண்டியம்,[6] நகரா, அரணபோ[8] என்பன. மற்றும், செசக்ரினே[9], ஆகிட்டி[10] எனும் தீவுகளும் உள்ளன. கிரிசோனிஸஸ்[11] இடத்துக்கு எதிராகக் கார்ளிதே[12] என வழங்கப்படும் நாடும் இருக்கிறது. இந்த இடங்கள் யாவற்றிலும் கடற்கொள்ளைக்காரர்கள்[13] இருந்து வருகின்றனர்.

இவற்றிற்கும் அப்பால் வெள்ளைத்தீவு[14] காணப்படும். இதற்குப் பிறகு நௌராவும்,[15] டிமிரிகாவைச்[16] சார்ந்த திண்டிஸ்[17] எனப்படும் வாணிகச் சந்தை நகரமும் முதன் முதலாகக் காணப்படுகின்றன. இவற்றிற்குப் பிறகு முசிறிஸ்,[18] நெல்கிந்தா[19] எனப்படும் இரு துறைமுக நகரங்களும் காட்சி யளிக்கின்றன. இவை இன்று மிக உன்னதத் துறை முகங்களாக விளங்குகின்றன.[20]

## விளக்கவுரை

**1. கலியாண் (Kallien)**

இது இன்றைய கல்யாண் (Kalyan) என்ற இடத்தைக் குறிப் பிடும். மற்றும் அதிகாரம் 52, குறிப்பு-3 பார்க்கவும்.

கல்யாண் இருப்பிடம் : 16°·14′ வ × 73°·10′ கி.

**2. செமில்லா (Semylla)**

தாலமி (கி.பி. 119-161) எனும் யவன வரலாற்றுசிரியரால் இது சிமுல்லா (Symulla) என்றும், யுவான் சுவாங் (கி.பி. 629-645) எனும் சீனப்பயணியால் சி-மோ-லோ (Chi-Mo-Lo) என்றும் வழங்கப்பட்டது. இது நவீன சவுல் (Chaul) என்னும் இடத்தைக் குறிப்பிடுகிறது. இது பம்பாய்க்குத் தெற்கே 25 மைல்கள் (40 கி.மீ.) தொலைவில் உள்ளது. இதன் மிகப் பழைய பெயர் (Shampavathi) சாம்பாவதி எனப்படுகிறது.

செமில்லா (சவுல்) இருப்பிடம் : 18°·34′ வ × 72°·55′ கி.

**3. மந்தகோரா (Mandagora)**

இது மந்தரகிரி (Mandragiri) என்ற ஊர்ப் பெயரின் திரிபே. மந்தரகிரி இன்று மைந்தர்கி (Maindargi) என்று வழங்கப்படு கிறது. இது அகல்காட் (Akalkot) எனும் நகர் அருகில் உள்ளது. முன்னர் இவ்விடம் மிகுந்த புகழ் பெற்றிருந்தது.

மந்தகோரா (மைந்தர்கி)வின் இருப்பிடம் : 17°·29′வ × 76·17′ கி.

**4. பளயபடுரே (Palaya Paturae)**

இது பழைய பட்டினம் என்பதன் கிரேக்க உச்சரிப்பேயாகும். இவ்விடம் இன்றைய தாபோல் (Dabhol) எனும் இடத்தைக் குறிப் பிடும். இது அராபியன் கடற்கரையில் உள்ள ஒரு துறைமுக மாகும். இவ்விடத்தில் கடல் 30 மைல்கள் (48 கிமீ.) வரை உள்ளே சென்று ஒரு சிறிய வளை குடாவை (Gulf) ஏற்படுத்தியுள்ளது. இது தென் கொங்கணத்தின் முக்கியத்துறைமுகமாக முன்னர் விளங் கிற்று. இது வடமொழியில் தாபிலேஷ்வார் (Dabileswar) எனப் படும். இத் தாபிலேஷ்வாரே மக்களால் பழைய பட்டினம் என்று வழங்கப்பட்டது.

பளயபடுரே (தாபோல்) இருப்பிடம் : 17°·35′ வ × 73°·10′ கி.

**5. மெலிஜிகாரா (Meligicora)**

இது நவீன ஜைகார் (Jaigar) எனும் நகரைக் குறிப்பிடுகிறது. முன்னர் இது பெரும் வாணித்துறைமுக நகரமாயிருந்தது. நாளடைவில், இதன் முக்கியத்துவம் குறைந்து, இன்று இது ஒரு மீன் பிடிக்கும் துறையாக மட்டும் வளங்குகிறது. இது ரத்னகிரிக்கு வடக்கில் உள்ளது.

இவ்விடம் பிளினி (கி.பி. 23-79) என்பவரால் சைகரஸ் (Sygerus) என்று விளிக்கப்பட்டது. (**பிளினி**: புத்தகம் VI, அதிகாரம் 26, குறிப்பு-53, பக்கம் 124).

தாலமி (கி.பி. 119-161) இதை மெலிசீகிரஸ் (Melizegyris) என்று வழங்கினர். இது மலே-செகிரஸ் எனப்பிரிந்து, மலே நாட்டில் உள்ள செகிரஸ் எனும் ஊர் என்று பொருள்படும் சொல் லாகும். இம் மலே நாடு பெரிப்ளுஸ் காலத்தில் (கி.பி. 50-80) சேரர் ஆட்சியின் கீழ் இருந்தது.

மெலிஜிகாரா (ஜைகார்)வின் இருப்பிடம்: 17°·17′வ×71°·13′ கி.

**6. பைசாண்டியம் (Byzantium)**

பைசாண்டியம் என்ற சொல் கிரேக்க நாகரிகத்தை உட் கொண்டதும், கி.பி. 1453 வரை விளங்கியதுமான கான்ஸ்டாண்டி

நோபிளைக் குறிப்பிடும். ஆனால் இங்குக் கிரேக்கப் பண்பாடு நிலவிய இடம் என்றே கொள்ள வேண்டும்.

மற்றும் இது விஜயதுர்க்கம் என்றும் கருதப்படுகிறது.

கிரேக்கர்கள் தேவர்கள் போல காட்சியளித்ததால், அவர்கள் நாகரிகம் வளர்ந்த இடம் தேவரிடம் என்பதாகும். இதுவே இன்று தேவகர் (Devgar) என்று வழங்கப்படுகிறது. இது அரேபியன் கடலில், ரத்னகிரிக்குத் தெற்கில் உள்ள ஒரு துறைமுகமாகும்.

தேவகர் இருப்பிடம் : 16°·20′ வ × 73°·35′ கி.

**7. தகரா (Tagara)**

இது நவீன தெர் அல்லது தாயிர் (Thair) எனும் இடத்தைக் குறிப்பிடுகிறது. நவீன உஸ்மானாபாதில் (Osmanabad) உள்ளது.

தகராவின் இருப்பிடம் : 18°·19′ வ × 76°·9′ கி.

மற்றும் அதிகாரம் 51, குறிப்பு-4 பார்க்கவும்.

**8. அரணபோ (Auranaboas)**

இது இருண-பாகம் அதாவது உப்பு நிலப்பகுதி—உவர்நிலம்—என்று பொருள்படும். இருண-பாகம் என்பதே அரணபோ (Auranaboas) என்று கிரேக்க உச்சரிப்பில் வழங்கப்பட்டது.

மால்வான் என்ற இடம் மகா-லவணம் எனப்பொருள்பட்டு, உவர் நிலப்பகுதியைக் குறிப்பிடுகிறது. ஆக, அரணபோ என்ற இடம் மால்வான் (Malvan) எனும் இடத்தைக் குறிப்பிடுவதாகக் கொள்ளப்படுகிறது. இதே பொருளில்தான் ரான் ஆப் கட்சு (Rann of Cutch) என்ற பிரதேசமும் பெயர் பெற்றது. ரான் (Rann) என்பது இருணம் என்பதன் சிதைவே. மால்வான், தேவகர் இடத்துக்குத் தெற்கே உள்ளது.

மால்வானின் இருப்பிடம் : 16°·3′ வ × 73°·30′ கி.

**9. செசக்ரினே (Sesecrinae)**

இது நவீன சால்செட் (Salsette) எனும் தீவு உள்ளதைக் குறிப்பிடும்.

சால்செட் தீவின் இருப்பிடம்: 19°·17′ வ × 72°·50′ கி.

**10. ஆகிட்டி (Aegidie)**

இது தாணாவின் (Thana) கடற்கரையில் உள்ள அகஷி (Agashi) எனும் தீவைக் குறிப்பிடுகிறது. இது பெஸ்ஸின் (Bassein)

என்பதற்கு 15 மைல்கள் (24 கிமீ) வடக்கே உள்ள ஒரு கடற்கரைப் பட்டினம்.

ஆகிட்டி (அகஷி)யின் இருப்பிடம்: 19°·29′வ × 72°·55′கி.

சிலர் இது இலட்சத்தீவில் உள்ள அகட்டி (Agatti) தீவினைக் குறிப்பதாகக் கொள்கின்றனர்.

**11. கிரிசோனிஸஸ்** (Chrysonesos)

இது கிருஷ்ணை (Krishna) எனும் நதியையும், அது பாயும் நாட்டையும் குறிப்பிடுகிறது.

கிருஷ்ணர் ஸ்ரீமத் பாகவதத்திலும், மகாபாரதத்திலும் பரக்கப் பேசப்படுபவர். கிருஷ்ணர் இருந்து விளையாடிய யமுனை நதிக் கரையை அவர் பெயரால் கிரிசோப்ரா (Chrysobra) என்று பிளினி (கி.பி.23-79) கூறுகிருர்.

—(**பிளினி**, புத்தகம் VI, அதிகாரம் 22, குறிப்பு-50, பக்கம் 34)

கிரிசோ என்ருல் கிரேக்கமொழியில் பொன் எனப்படும். பொன்னி எனப்படும் காவிரிநதி உற்பத்தியாகும் இடமாகிய மைசூர்ப் பகுதியையும், நீலகிரிமலைப்பகுதியையும் குறிப்பிடக்கூடும் எனக் கருதப்படுகிறது.

கிருஷ்ணை நதியின் இருப்பிடம்: 15°·55′வ × 81°·10′கி.

**12. கார்னிதே** (Carnitae)

இது கன்னடம் (Kanara) எனும் இடத்தைக் குறிப்பிடுகிறது. இது வடகன்னடம், தென் கன்னடம் என இரு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. பெரிப்ளுஸ் குறிப்பிடுவது தென் கன்னடப் பகுதியாகும் (South Kanara). காரணம் இதற்கு அடுத்தாற்போல் கொள்ளைக்கூட்டத்தினரைக் குறிப்பிடுகிருர் அல்லவா? அக் கடற் கொள்ளைக் கூட்டத்தினர் மங்களூர் (Mangalore) என்பதிலிருந்து தொடங்கி, மௌன்ட் டெலி (Mt Dely), கண்ணனூர் (Cannanore) வரையில் இருந்தனர் எனப் பிளினி, மார்க்கோபோலோ (கி.பி. 1254-1324) முதலிய வரலாற்றாசிரியர்கள் எழுதியுள்ளனர். ஆகையால், கார்னிதே என்பது தென் கன்னடத்தைக் குறிப்பிடுகிறது.

கார்னிதே (தென் கன்னடத்தின்) இருப்பிடம்: 12° 52′வ × 74°·53′கி.

**13. கடற்கொள்ளைக்காரர்கள்** (Sea pirates)

இக் கடற்கொள்ளைக்காரர்கள் அராபியன் கடலில், மங்களூர் கடற்கரை (Mangalore) முதல் கண்ணனூர் (Cannanore) வரைத்

தங்கள் இருப்பிடங்களை வைத்துக் கொண்டிருந்தனர். கொள்ளை யடித்து, வழிப்பறி செய்து, கப்பலில் உள்ள பண்டங்களைச் சூறையாடி வாழ்வதே இவர்களது தொழில். இவர்களைப் பற்றி மார்க்கோபோலோ (கி.பி. 1254-1324) பின்வருமாறு எழுதியுள்ளார்: "ஐந்து மைல் களுக்கு ஒருவராக 20 வேவுகள் 100 மைல்கள்வரை (160 கிமீ) வேவு பார்த்துச் சுற்றிக் கொண்டிருப்பார்கள். ஒருவருக்கு மற்றவர் குறிப்பால் கொடியின் மூலமாகவோ, நெருப்பு அல்லது தீ மூட்டுவதன் மூலமாகவோ, அந்நியக் கப்பல் வருவதைத் தெரிவிப்பர். ஆக, சில மணி நேரங்களுக்குள்ளாகவே எல்லா வேவுகாரர்களுக்கும் கப்பல் வரும் செய்தி தெரிந்துவிடும். பின் யாவரும் ஒன்று சேர்ந்து அக் கப்பலைக் கொள்ளை அடிப்பர். பொருள்களை எடுத்துக் கொள்வரே யன்றி, ஆள்களுக்கு எவ்விதச் சேதமும் விளைவிப்பதில்லை. கொள்ளையடித்த பிறகு அக் கப்பலைக் கடல் ஓரமாகப்போகுமாறு செய்துவிடுவர்.

—(மார்க்கோபோலோ : பக்கம் 79-80)

பிளினி (கி.பி. 23-79) பின் வருமாறு கூறுகிறார் :

"இந்தியாவிற்கு ஆண்டுதோறும் பயணங்கள் பெருவாரியாக மேற்கொள்ளப்படுகின்றன. அவ்வாறு மேற்கொள்ளப்படும் பயணங் களில், வில்வித்தையில் தேர்ந்த வில்லாளிகள் பலர் கப்பலில் ஏற்றிச் செல்லப்படுகின்றனர். அதற்குக் காரணம் அக் கடலில் கடற்கொள்ளைக் கூட்டத்தினர் மிகுந்து காணப்படுகின்றனர். அவர்களால் கப்பல்கள் தாக்கப்பட்டு அவை பல சேதங்களுக்கு உட்படுகின்றன என்பதேயாம்."

—(பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 26, குறிப்பு—56, பக்கம் 124)

மற்றும், இக் கடற்கொள்ளைக் கூட்டத்தினரைப் பற்றிய செய்திகள் தமிழ் இலக்கியத்திலும் கூறப்படுகின்றன.

சேரன் செங்குட்டுவன் சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப்படு கின்றான். அவனுடைய தந்தை இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன். அவ் இமயவரம்பனுக்குத் தம்பி ஒருவன் இருந்தான். இமய வரம்பனும், அவன் தம்பியும் ஒன்று சேர்ந்து கொள்ளைக் கூட்டத் தினரைத் தடுக்கத் திட்டமிட்டனர். மேற்கடலில், வேலி மேடு என்னும் தீவு கடற் கொள்ளைக்கூட்டத்துக்கு ஆளாயிற்று. அத் தொல்லையை ஒழிக்க இமயவரம்பனும் அவன் தம்பியும் பாடு பட்டனர். அச் செயலில் அவர்கள் வெற்றியும் கண்டனர். அத்தகைய கொள்ளைக்கூட்டத்தின் தலைவனின் பெயர் நன்னன் என்பது. அத் தலைவனது தலைநகரம் கடம்பின் பெருவாயில் எனப்பட்டது. அத்

தகைய கடற்கொள்ளைக் கூட்டத்தின் தலைவனை இமய வரம்பன் வென்றான் என்று பதிற்றுப்பத்து கூறுகிறது:

"பூழிநாட்டைப் படையெடுத்துத் தழீஇ
உருள் பூங் கடம்பின் பெருவாயில் நன்னனை
நிலைச் செருவின் ஆற்றலை அறுத்தவன்."

—[பதிற்றுப்பத்து : நாலாம் பத்து 40(13-15)]

கடம்பர் என்னும் சொல் நான்கு குடிகளுள் ஒருவர் என்பதை உணர்த்துகிறது. இதைப் புறநானூறு கூறுகிறது:

"துடியன் பாணன் பறையன் கடம்பன் என்று
இந்நான் கல்லது குடியுமில்லை."

—[புறநானூறு : 355 (7-8)]

ஆகையால் கடம்பின் பெருவாயில் என்பது கடம்பர் தலைவன் நன்னனின் பெருவாயில் என்று பொருள் காட்டுகிறது. வேலி மேடு என்பதே பின்னர் மௌண்ட் ஏலி அல்லது மௌண்ட் டெலி (Mt. Dely) என்று வழங்கப்பட்டது.

மற்றும் நன்னனின் மலை ஏழிற்குன்றம் என்று கூறப் பட்டுள்ளது.

"நன்னன் நாள்
ஏழிற் குன்றம் பெறினும் பொருள்வயின்"—(நற்றிணை : 391).

இதில்வரும் ஏழிற்குன்றமே ஏழில் மலையாகி,அதுவே மௌண்ட் டெலி (Mt.Dely) என்றாயிற்று.

—(Vide The Beginnings of South Indian History By Dr. S. K. Iyengar M.A. page 93.)

மௌண்ட் டெலியின் இருப்பிடம் : 12°·0′ வ × 75°·0′ கி.

இது கேரள நாட்டில், கண்ணனூருக்கு வடக்கே 20 மைல் (32 கிமீ.) தொலைவில் உள்ளது.

மற்றும் நன்னனைப் பற்றி இலக்கியத்தில் வரும் செய்திகள் :

நன்னன் தோட்டத்தின் வழியாகச் சென்ற ஓர் ஓடை நீரில் மிதந்துவந்த அவன் தோட்டத்து மாம்பழமொன்றை உடன்

எடுத்துச் சுவைத்த பெண்ணை நன்னன் கொலை செய்தான் என்ற செய்தி குறுந்தொகையில் காணப்படுகிறது. இது பரணரால் பாடப்பட்டது.

"புண்ணிய சென்ற ஒண்ணுதலரிவை
புனல்தரு பசுங்காய் தின்றதன் தப்பற்கு
ஒன்பதிற் றொன்பது களிற் றொடவணிறை
பொன் செய்பாவை கொடுப்பவும் கொள்ளான்
பெண் கொலைபுரிந்த நன்னன் போல."

—[குறுந்தொகை: 292 (1-5)]

அப் பெண்ணின் உறவினர், அப் பழத்துக்குத் தண்டமாக ஒன்றுக்குப்பத்தாக அதாவது தொண்ணூறு யானைகளையும், பொன்னால் செய்த பாவையினையும் கொடுப்பதாகக் கூறியும், அக் கொள்ளைக் கூட்டத்தலைவன் நன்னன், அதற்கிசையாது, அப் பெண்ணைக் கொன்றான் என்பது இதன் பொருள்.

மற்றும் பரணர் பாடியுள்ளார்:

"மகிழ்நன் மார்பே வெய்யை யானீ
அழியல் வாழி தோழி நன்னன்
நறுமா கொன்று நாட்டிற் போக்கிய
ஒன்று மொழிக் கோசர் போல."

[—(குறுந்கொதை : 73 (1-4)]

தன் கனியை உண்டாற்கு நீண்ட ஆயுள் பெருகும் எனக் கூறப் பட்ட மாமரம் ஒன்றினை நன்னன் வளர்த்தான். அம் மாமரம் நெடுநாள் சென்று ஒரே ஒரு பழத்தை ஈன்றது. அப் பழம், ஆற்றில் விழ, அங்குக் குளிக்கச் சென்ற கோசர் குடிப்பெண் ஒருத்தி அப் பழத்தை எடுத்து உண்டாள். அதைக் கேட்டுச் சினந்து தனக்கென வளர்த்த மரத்தின் பழத்தை அப் பெண் தின்றாளே என்று வெகுண்டு, அப் பழத்துக்குப்பதிலாகக் கொடுக்க இசைந்த யானை, பொன்பதுமை யாவற்றையும் வேண்டாவென ஒதுக்கி, அப் பெண்ணைக் கொன்றான். கோசர் குடிமக்கள் இதை யறிந்து அவனைப் பழிவாங்க எண்ணி, அவன் வேற்றூர் சென்றி ருக்கும்பொழுது, அகுதை என்னும் பாடினி பெற்ற யானைப் பரிசிலை அம் மரத்தில் பிணைத்து, அவ் யானைகளை விரட்டினர். அவ் யானைகள் மிரண்டு, வெகுண்டு அம் மாமரத்தையே பிடுங்கிக் கொண்டு ஊருள்புக, அவ் யானைகளுடன் கோசர் குடிமக்களும் சென்று அந் நகரத்தைத் தீக்கிரையாக்கினர் என்பதே இச் செய்யுளில் காணப்படும் வரலாறு.

ஒன்றுமொழிக் கோசர் என்னும் சொற்றொடர் ''என்றும் உண்மையையே பேசும் கோசர்'' என்றும், ''மொழிதப்பாதவர்கள்'' என்றும் பொருள் தந்து நிற்கிறது. ஆகையால், நன்னன் கோசரால் அழிக்கப்பட்டான் என்பது தெரிகிறது.

மற்றும் அகநானூற்றில் வரும் செய்தியாவது :

''இலங்குவளை நெகிழச் சாய், அல்கலும்
கலங்கு அஞர் உழந்து, நாம் இவண்ஒழிய
வலம்படு முரசிற் சேரலாதன்
முந்நீர் ஓட்டிக் கடம்பு அறுத்து.''

—[அகநானூறு–127 (1-4)]

இதில் ''கடம்பு அறுத்து'' என்னும் சொற்கள், ''கடம்பின் பெருவாயிலுக் குடையவனை நன்னனைக் கொன்று'' என்று பொருள் காட்டுகின்றன. ஆகையால், நன்னன் கொடுமை செய்ததற்காகப் பழிவாங்கப்பட்டான் என்பது இச் செய்யுளால் கண்டறியும் செய்தி யாகும்.

இன்று விளங்கும் ''கண்ணனூர்'' என்னும் ஊரே முன்னர் ''நன்னனூர்'' என்று இருந்திருக்க வேண்டும் என்றும், அதுவே நாளடைவில் கண்ணனூர் என்று மருவிற்று என்றும் கொள்வதற்குப் போதிய ஆதாரமாக மேற்கூறிய செய்யுள்களே அமைந்துள்ளன.

மற்றும் நன்னன் கடற்கொள்ளைக் கூட்டத் தலைவன் என்பதும், அவன் கொடுமையான குணம் வாய்ந்தவன் என்பதும், அவன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனாலும், அவன் தம்பி யாலும் கடற் போரில் கொல்லப்பட்டான் என்பதும் இப் பாடல்கள் வாயிலாகத் தெரிய வருகின்றன.

இதனால் அக் கடற்கொள்ளைக் கூட்டத்தினர் பிளினி, பெரிப்ளூஸ் காலத்தில் இருந்து வந்தனராகத் தெரியவருவதால், பெரிப்ளூஸ் காலம் கி.பி.50—80 என்று நிர்ணயிக்கப்பட்டுள்ள தால், அக் கொள்ளைக் கூட்டத் தலைவன் நன்னனின் காலமும் கி.பி. 80 அளவில் ஆகும் என்று தெரியவருகிறது. மற்றும், சேரன் செங்குட்டுவன் தந்தை இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் என்று தெரிவதால், இமயவரம்பன் காலமும் கி.பி. 80 அளவினதாக இருத்தல் வேண்டும். அத்துடன், சேரன் செங்குட்டுவன் இமயவரம்பன் மகன் ஆதலாலும், சேரன் செங்குட்டுவன் காலத்தில் சிலப்பதிகாரம் இயற்றப்பட்டது என்று சிலப்பதிகாரமே கூறுவ தாலும், சிலப்பதிகாரம் இயற்றப் பட்ட காலம் கி.பி. 110 அளவில்

இருக்க வேண்டும் என்றும் உறுதிப்பாடடைகிறது. ஆக, சிலப்பதிகாரக்காலம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டின் தொடக்கப்பகுதி என்பதே நன்னன் நிகழ்ச்சியால் அறியப்படும் செய்தி. இதற்குப் பெரிப்ளூஸ் (கி.பி. 50-80) சான்றாக உள்ளது.

மற்றும், நன்னனைப்பற்றி மாமூலனார் கூறுவதால், மாமூலனார் காலமும் கி.பி. 80 அளவில் இருந்திருக்கவேண்டும் என்பது உறுதியடைகின்றது. கிரேக்க வரலாற்றாசிரியர்கள் எழுதிய வரலாறுகளே, நம் இந்திய—சிறப்பாகத் தமிழ்—இலக்கியத்தின் காலவரையறைகளை நிர்ணயிக்க எத்துணை அளவு உதவுகின்றன என்பது அறிந்து இன்புறற்குரியதன்றோ!

**14. வெள்ளைத் தீவு (Leuke Island)**

இது இலட்சத்தீவு (Laccadives Islands) என்பதைக் குறிப்பிடுகிறது. இலட்சம் என்பதை lakh எனவும், lakh ஐக் கிரேக்க உச்சரிப்பில் லூகே என்றும் வழங்கினர். அதை மொழிபெயர்த்தவர்கள் வெள்ளைத்தீவு(White Island)என மொழி பெயர்த்துவிட்டனர். லூகே என்ற கிரேக்கச் சொல்லுக்கு வெண்மை என்று பொருள் உண்டு. ஆக, இலட்சத்தீவை, வெள்ளைத்தீவு (White Island) என்று எழுதிவிட்டனர். இது மொழிபெயர்ப்பால் வந்த விபரீதமேயாகும்.

இலட்சத்தீவின் இருப்பிடம்: 10°·0′ வ × 73°·0′ கி.

**15. நௌரா (Naura)**

நௌரா (Naura) என்பது கண்ணனூர் இருந்த இடத்தைக் குறிப்பிடுகிறது. கண்ணனூர் என்பது நன்னன் ஊர் என்று இருந்திருக்கவேண்டும். கொள்ளைக் கூட்டத் தலைவனான நன்னன் இருந்த இடம் ஆதலால், அது நன்னனூர் என்றே முதல் விளிக்கப்பட்டது. நன்னனூர் என்பதன் கிரேக்க உச்சரிப்பே நௌரா (Naura) என்பதாகும். இங்குக் கொள்ளைக் கூட்டத்தினர் இருந்தனராகப் பழந்தமிழ் இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. மேலே குறிப்பு-13 பார்க்கவும்.

சிலர், நௌரா என்பது நீரா (Neera) என்ற சொல்லின் அடியாகப் பிறந்து, தென்னைமரங்கள் அடர்ந்த ஊரைக் குறிப்பிடும் எனக் கொள்கின்றனர். நீரா (Neera) என்பது தென்னை, பனை, முதலியவற்றைக் குறிப்பிடும். மற்றும் மலையாள நாட்டிற்கு 'நாளிகேரம்' என்ற பெயரும் உண்டு. 'நாளிகேரம்' என்பது தென்னை மரத்தைக் குறிப்பிடும் சொல்லாகும். ஆனால், இது பொதுப்படையான சொல்லே தவிர, ஓர் ஊரின் பெயர் அன்று.

நௌராவின் இருப்பிடம்: 11°·52′ வ × 75°·22′ கி.

மற்றும், நௌரா (Naura) எனப்படும் இக் கண்ணனூரே, பழந்தமிழ் இலக்கியங்களில் நவிரை (நவிரம்) என்று குறிப்பிடப் பட்டுள்ளது. நவிரம் ஒரு மலைப்பகுதியாகும். இது மலைபடுகடாம் கொண்ட நன்னனுடைய மலையாகும்.

> "நீரகம் பனக்கு மஞ்சுவரு கடுந்திறற்
> பேரிசை நவிர மேஎ யுறையுங்
> காரியுண்டிக் கடவுள தியற்கையும்."
>
> —[மலைபடுகடாம் : (81-83)]

> "வெம்பினுன் காரியுண்டிக் கடவுளிற் கனன்று"
>
> —(சீவகசிந்தாமணி-காந்தருவதத்தை: 647)

இங்குக் காரியுண்டிக் கடவுள் என்பது விஷம் உண்ட சிவ பிரான் என்று பொருள்படும் (காரி-விஷம்; உண்டி-உண்ட; கடவுள்). இவ்வாறு விஷம் அருந்தி, நெஞ்சிலேயே பதியவைத்த தனுல், அவர் நீலகண்டன் என்று வழங்கப்பட்டார். ஆக நவிர மலையில் உள்ள நீலகண்டன் ஊர் என்று கொண்டு, கண்டன் ஊர் என்பதே கண்ணனூர் என்று ஆயிற்று என்றும் கூறுவதற்கு இடங்கொடுக்கிறது.

நன்னன் கொள்ளைக் கூட்டத் தலைவன். கடற்பகுதியில் இருப் பிடத்தைக் கொண்டவன். வேலிமேடு என்னும் அவன் உறைந்த இடமே இன்று மௌண்ட் டெலி (Mount Dely) என்று வழங்கப் படுகிறது. ஆக, கண்டனூர் என்பதும் கண்ணனூரைக் குறிப்பிடு கிறது; கண்ணனூர் என்பது முன்னர் நன்னனூர் ஆக இந்திருக்க வேண்டும்.

ஆக நௌரா (Narua) என்பதே நவிரம் என்பதும், அதுவே கண்ணனூர் என்பதும் உறுதிப் பாடடைகிறது.

## 16. டிமிரிகா (Dimirica)

இச் சொல் தமிழகம் என்பதன் கிரேக்க உச்சரிப்பே. தாலமி (கி.பி. 119-161) இதை டிமிரிகே (Dimiricae) என்று கூறுகிறுர். இது லிமிரிகா (Limirica) எனவும் வழங்கப்பட்டது. கிரேக்க எழுத்துகள் டி.லி. இரண்டும் ஏறக்குறைய ஒன்று போலவே காணப்படும். அதன் காரணமாக, எடுத்து எழுதுபவர், டிமிரிகாவை, லிமிரிகா என எழுதி விட்டார். தமிழகம் சேரர், சோழர், பாண்டியர்

அரசர்களால் ஆளப்பட்டு வந்தது. அவர்களால் ஆளப்பட்ட நாடுகள்: சேரநாடு, சோழநாடு, பாண்டிநாடு. ஆக, டிமிரிகா, தமிழகத்தையே குறிப்பிடுகிறது.

யுவான் சுவாங் (கி.பி. 629-645) தமிழ் நாட்டைத்தி-லோ-பி-டு என்று வழங்கினர் அச் சொல்திராவிட நாடு என்று பொருள் படும்.

—(யுவான் சுவாங்: பக்கம் 164)

**17. திண்டிஸ் (Tyndis)**

இது முற்காலத்தில் தொண்டி (Tondi) என வழங்கப்பட்டது. மிகச்சிறந்த வாணிகச்சந்தைத் துறைமுகமாக விளங்கிற்று. ரோமப் பேரரசர் காலத்தில் இதன் புகழ் உச்சநிலே யடைந்தது. சேரர் தொண்டி என்றும், குட்டுவன் தொண்டி என்றும் இத் துறைமுகம் வழங்கப்பட்டது. இத் துறைமுகத்தில் இருகிளேகள சுங்கவரியை வசூலித்தன. அவற்றுள் ஒன்று சேரன் தொண்டி அரசு. மற்றது குட்டுவன் தொண்டி அரசு. இத் தொண்டி என்பதே கிரேக்கர் களால் திண்டிஸ் (Tyndis) என்று உச்சரிக்கப்படுவதாயிற்று.

'தொண்டி' எனும் துறைமுகம் தமிழ் இலக்கியத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

> "திண்டேர் நள்ளி கானத் தண்டர்
> பல்லாப் பயந்த நெய்யில் தொண்டி."—(குறுந்தொகை 210)

நள்ளி, தமிழ் வள்ளல் எழுவருள் ஒருவன்; நள்ளிமலே நாடன். நொய்யல் என்பதை நெய்யில் என்பதாகத் தவருக ஏட்டில் எழுதி விட்டார்கள் போலும். நொய்யல் ஆறும் (Noyil River) பொன்னுனி ஆறும் (Ponani River) கலக்கும் மேலேக் கடல் அருகே தொண்டி இருந்தது. இதுதான் மேல்காணும் பாடலின் பொருள். ஆக, இன்று பொன்னுனி (Ponnani) என்று இருக்கும் இடமே அன்று தொண்டி (Tyndis) என்று விளங்குவதாயிற்று. மேற்குக்கடற் கரையில் கிடைத்த ரோம நாணயங்களிலிருந்து ரோமப் பேரரசு எத்தகைய சிறந்த தொடர்பை மேற்குக் கடற்கரைப் பிரதேசங்களுடன் வைத்துக் கொண்டிருந்தது என்பது தெற்றென விளங்கும். அப்பொழுது ஆண்ட ரோமப் பேரரசர்கள்:

| | |
|---|---|
| கிளாடியஸ் நீரோ (Claudius Nero) | கி.பி. 41-54 |
| நீரோ (Nero) | கி.பி. 54-68 |
| கால்பா (Galba) | கி.பி. 68-69 |

| | |
|---|---|
| வைபீலியஸ் (Vibelius) | கி.பி. 69 |
| வெஸ்பாஸியன் (Vespasian) | கி.பி. 69-79 |
| டைடஸ் (Titus) | கி.பி. 79-81 |

மேற்கூறப்பட்ட நாணயங்கள் கிளாடியஸ் நீரோ (கி பி.41-54) அரசரால் வெளியிடப்பட்டனவாகும்.

பெரிப்ளூஸின் ஆசிரியர் கூறுகிறார்: 'முசிறிஸுக்கும் தொண்டிக்கும் இடையே 500 ஸ்டேடியா தொலைவு உள்ளது.'' (அதிகாரம் 54). முசிறிஸ் என்பது நவீன கிராங்கனூர் (Cranganore) என்று வரலாற்றாசிரியர்கள் ஒப்புக்கொண்டது ஒன்றாகும். இக் கிரேங்கனூர் என்பதே கொடுங்களூர் என்றதன் ஆங்கில உச்சரிப்பாகும். 500 ஸ்டேடியா என்பது 62½ மைல்கள் (108 கி.மீ.) தொலைவைக் குறிப்பிடும். இன்று அவ் இரு இடங்களுக்கும் இடையே உள்ள தொலைவு 58 மைல்கள் (93 கிமீ.) ஆகும். ஆக, பெரிப்ளூஸின் ஆசிரியர் கூற்றின்படியும், பொன்னானிக்கும் (தொண்டி), முசிறி (கொடுங்களூர்)க்கும் இடையே உள்ள தொலைவு ஏறக்குறையவொன்றாக இருத்தலால், தொண்டி என்பது இன்றைய பொன்னானி (Ponnani) எனும் துறைமுகம் இருக்கும் இடத்தையே குறிப்பிடுகிறது என்பது உறுதிப்பாடடைகிறது.

திண்டிஸ் (பொன்னானி) இருப்பிடம் : 10°·48'வ × 75°·56'கி.

சிலர் கொயிலாண்டியைத் தொண்டி என்றும் கூறுகின்றனர். அது பொருந்தாது. காரணம், குறிப்பிடப்பட்ட தொலைவில் வித்யாசம் காணப்படுகிறது.

**18. முசிறிஸ் (Muziris)**

இதன் பழைய பெயர் முயிறிக் கோட்டம். இச் சொல் முசிறி என்றாயிற்று. முசிறி என்பதே முசிறிஸ் (Muziris) என்று கிரேக்க மக்களால் வழங்கப்படுவதாயிற்று. இப்பொழுது அதன் நவீன பெயர் கிரேங்கனூர் (Cranganore). இக் கிரேங்கனூரின் பழைய பெயர் கொடுங்களூர். ஆக, கொடுங்களூர் இருந்த இடமே பழைய முசிறி இருந்த இடமாகும்.

முசிறியின் (கிரேங்கனூர்) இருப்பிடம்: 10°·14' வ × 76°·11'கி.

கி. பி. இரண்டாம் நூற்றாண்டு வரை முசிறி என்றே வழங்கப்பட்டது. அதன்பின், காவிரிப்பூம்பட்டினத்தை அழித்த அதே கடல் கோள், முசிறிக் கோட்டத்தையும் அழித்துவிட்டது. அம் முசிறியின் முனையில் ஒரு மலை இருந்தது. அம் மலை முயிறிக்கோடு

என வழங்கப்பட்டது. முசிறிக்கருகில் இருந்த கொடுங்களூர் எனும் ஊரே முசிறியின் அழிவுக்குப் பிறகு துறைமுகமாக விளங்கு வதாயிற்று.

மற்றும், சிரியன் கிறித்தவர்களின் பட்டயங்களின்படி, முசிறி எனும் துறைமுகமே "மாகோதைப் பட்டினம்" என்று வழங்கப் படுவதாயிற்று. மாகோதை என்ற சொல்லுக்கு 'அரசர் போகும் ராஜபாதை' என்பது பொருளாகும். இம் முசிறியின் உள்ளடங்கிய சில மைல் தொலைவில்தான் பழைய சேரநாட்டுத் தலைநகரமாகிய "வஞ்சி மாநகரம்" இருந்தது. அது பேரியாற்றங்கரையின் கழி முகத்தில் இருந்தது. இப்பொழுது பேரியாறு, பெரியாறு என்று வழங்கப்படுகிறது. கருவூர் என்ற சொல்லே இறுதியில் கரூர் என்று ஆயிற்று. இது சேர நாட்டுக் கரூர். சேரநாட்டுக் கரூர் வேறு; சோழநாட்டுக் கரூர் திருச்சி-ஈரோடு பாதையில் உள்ளது. வஞ்சியே கரூர் என்பதற்குப் போதிய புதைபொருளாராய்ச்சிச் சான்றுகள் உள்ளன.

சிலப்பதிகாரத்தின் மூன்றுவது காண்டம் வஞ்சிக் காண்டம் என்று பெயர் பெறும். வஞ்சி என்பதே இப்பொழுது வஞ்சிக்களம் அல்லது திருவஞ்சைக்களம் என்று வழங்கப்படுவதாகும். இது பேரியாற்றங்கரையில் (Periyar) உள்ளது. அங்குள்ள திக்பாலர் (Digbalas) என்பதே சதுக்கப்பூதம் என மாறி வழங்கப்பட்டது. சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய இருகாவியங்களிலும் கரூர் எனும் பெயரே காணப்படவில்லை. வஞ்சிமாநகரே குறிக்கப் பட்டுள்ளது. யாரோ ஓர் உரைகாரர்—நாட்டு அபிமானத்தை முன் னிட்டு—வஞ்சியைக் கரூர் என்று பொருள்கூறி, அது சற்றும் ஆராயப்படாமலே, வேதவாக்காகச் சிலபேரால் பின்பற்றப்பட்டது. வஞ்சிக்குப் பக்கத்தில் கடற்கரையில் உள்ள ஊர் கரையூர் என்று ஏற்பட்டு, அதுவே கருவூராகி, அக்கருவூரே, பிற்காலத்தில் கரூர் ஆகிவிட்டதுபோலும். இதற்கும், சோழ நாட்டுக் கரூருக்கும் எத் தகைய தொடர்பும் கிடையாது.

"முந்நீரினுள்புக்கு மூவாக் கடம்பெறிந்தான்
மன்னர் கோச் சேரன் வளவஞ்சி வாழ்வேந்தன்"

—(சிலப்பதிகாரம் : **ஆய்ச்சியர் குரவை :**
உள்வரிவாழ்த்து—3.)

"வளந்தலை மயங்கிய வஞ்சி முற்றத்து"

—(சிலப்பதிகாரம்: காட்சிக்காதை—34)

"பூவா வஞ்சிப் புன்னகர்ப் புறத்தென்"

—(சிலப்பதிகாரம் : காட்சிக்காதை—148)

"வஞ்சிமுற்றம் நீங்கிச் செல்வோன்"

—(சிலப்பதிகாரம்: காட்சிக்காதை—9)

இன்னும் பல இடங்களில் வஞ்சி சேரர் தலைநகரம் என வலியுறுத்தப் பட்டுள்ளது. கண்ணகி விமானம் ஊர்ந்து வானுலகம் புகுந்த இடம் செங்குன்றம் எனப்படும். அத்தகைய இடம் வஞ்சிக்கருகில் உள்ளது. இன்றும் அக் குன்று பத்தினிக் கோட்டம் என்று வழங்கப்படுகிறது.

இவ் வரலாற்றை மிகவும் விரிவாக டாக்டர் எஸ். கிருஷ்ண ஸ்வாமி ஐயங்கார் M. A. தாம் இயற்றிய "சேரன் வஞ்சி" என்ற நூலில், ஆதாரத்துடன் எடுத்தியம்பியுள்ளார்.

"முழங்கு கடன் முழவின் முசிறியன்ன"

—(புறநானூறு : 343)

"முகையவிழ் தார்க்கோதை முசிறியார் கோமான்"

—(முத்தொள்ளாயிரம் : 6)

முசிறி என்பது முசாபரிஸ் (Muzabaris) என்ற அரபுச் சொல் லினடியாகப் பிறந்ததாகவும் கொள்ளலாம். முசாபரிஸ் என்றால் பயணிகள் தங்கும் இடமாகக் கொள்ளலாம். அரபுநாடு, ரோம் நாடு, கிரேக்க நாடு, பாரசீகம் நாடு முதலிய பல நாடுகளிலிருந்தும் வணிகப் பெருமக்கள் இங்குவந்து தங்கினர்; மற்றும் எதியோபியா, ஜாவா, சீனம் முதலிய நாடுகளிலிருந்தும் வந்தனர். ஆக, பல வேறு பயணிகள் ஆங்குத் தங்கியதன் காரணமாக, இது முஸாபரிஸ் என்று கூறப்படத் தொடங்கி, அதுவே நாளடைவில் முசிறி என்றாயிற்று என்றும் கொள்ளலாம்.

அல்லது முயிறிக்கோடு என்ற சொல்லுக்குச் செங்குன்றம் என்று பொருள் உண்டு (முயிறி-சிவப்பு; கோடு-குன்றம்). ஆக, இங்குள்ள சிவந்த குன்றின் காரணமாக, அது முயிறிக்கோடு எனக் கூறப்படத் தொடங்கி, அதுவே பின்னர் முயிறி, முசிறி என்றே வழங்கப்பட்டிருத்தலும் கூடும். செங்குன்றம், மலையாள மொழியில் 'செங்குன்னம்' என்று வழங்கப்பட்டது. திருச்செங்குன்றம் கண்ணகி தன் கணவனை இழந்தபின், சேரநாட்டில் ஒரு வேங்கை மரத்தடியில் தங்கிய இடமாகிய குன்று.

"குன்றக்குறவர் ஒருங்குடன் கூடி"

—(சிலப்பதிகாரம்: பதிகம் 3)

இங்குக் குன்றம் என்றது திருச்செங்குன்றமே.

"பெருமலை விலங்கிய பேரியாற்றடைகரை
இடுமணை லெக்கர் இயைந்தொருங் கிருப்பக்
குன்றக் குரவையொடு கொடிச்சியர் பாடலும்"

—(சிலப்பதிகாரம்: காட்சிக்காதை 22-24

இதனால் பேரியாற்றங்கரையில் வஞ்சிநகர் இருந்ததும், அதன் அருகே குரவைபாடும் குன்றமாகிய திருச்செங்குன்றம் இருந்ததும் தெரியவருகின்றன.

திரு. வின்சென்ட் ஸ்மித் எனும் பேராசிரியர், பேரியாற்றங் கரையில் விளங்கும் கரூர் (Karur) என்பதே வஞ்சியாக இருக்கக் கூடும் என்று கூறியுள்ளார்.

—(Vide The Early History of India By Vincent Smith, page 412)

சிலர் பரூர் (Parur) எனும் ஊரே, வஞ்சியிருந்த இடம் என்று கூறியுள்ளனர். முதலாவது பரூர், பேரியாற்றங்கரையில் இல்லை. இரண்டாவது, தமிழ் இலக்கியத்தில் பரூர் சேரர் தலைநகராகக் குறிப்பிடப்படவில்லை.

"பாத்தரு நால்வகை மறையோர் பறையூர்க்
கூத்தச் சாக்கை யாடலின் மகிழ்ந்தவன்"

—(சிலப்பதிகாரம்-நடுகற்காதை 76-77)

இங்குக் குறிப்பிடப்படும் பறையூர் என்பதே இன்றைய பரூர் (Parur) ஆகும். பரூர் மறையோர் வாழ்ந்த ஊர் என்றும், அவர்களுள் கூத்தர் கூத்து நிகழ்த்தவும், கதகளிநடனம் ஆடவும் புகழ் பெற்றிருந்தனர் என்பதுமே இதன் பொருள். பறையூர் என்பது பறையறைந்து ஆடுபவர் வாழ்விடம் என்றும், அவ்வாறு பறையடித்து ஆடியவர் அவ்வூர் அந்தணர் என்றும் தெரியவருகிறது. இப் பரூரில் கி.பி. முதல், இரண்டாம் நூற்றாண்டுகளில் யூதர்கள் (Jews) தங்கித் தம் இருப்பிடங்களை ஏற்படுத்திக் கொண்டனர் (Jewish Settlements) என்று அவ்விடத்தில் வழங்கும் பட்டயங்களால் அறியப்படுகிறது. இப் பட்டயங்கள் ரிகார்ட்ஸ் (Recorts) என்று வழங்கப்பட்டன. யூதர்களின் குடியேற்றமும், யவனர்களின் குடியேற்றமும் அங்குக் கிடைத்த சில நாணயங்களால் தெரியவருகின்றன. இங்குக் குறிப்பிடப்படும் 'சாக்கையன்' எனும்

அந்தணர் வகுப்பினரே, பின்னர் கிறித்தவராக மாறிச் 'சாக்கோ' என்று குறிப்பிடப்பட்டனர் ஆவர்.

இவ்வாறான யவனர் இருக்கை காவிரிப்பூம் பட்டினத்திலும் இருந்தது பின்வரும் அடிகளால் தெரியவருகிறது:

> "கயவாய் மருங்கிற் காண்போர்த் தடுக்கும்
> பயனற வறியா யவனரிருக்கையும்."
>
> —[சிலப்பதிகாரம்: இந்திர விழவூரெடுத்தகாதை, (9-10)]

ஆக இங்கு அறியப்படுவது சேரர் தலைநகரம் வஞ்சி என்பதும், முசிறி என்பது அந் நாட்டின் துறைமுகம் என்பதும், இரண்டும் முறையே பேரியாற்றங்கரையிலும், கழிமுகத்திலும் விளங்கின என்பதும், முசிறி இருந்த இடம் இன்று கிராங்கனூர் என்று வழங்கப்படுகிறது என்பதும், முசிறியில் யவனர்களும் அராபியர் களும் தங்கியிருந்தனர் என்பதும், முசிறி கடல்கோள் காரணமாக அழிந்து விட்டது என்பதும், முயிறிக்கோடு (செங்கோடு—செங் குன்றம்) என்பதே முசிறி என்று வழங்கப்பட்டது என்பதும், அம் முசிறியே கிரேக்கர்களால் முசிறிஸ் (Muziris) என்று வழங்கப் பட்டது என்பதும் ஆகிய பல செய்திகள் ஆகும்.

## 19. நெல்கிந்தா (Nelcinda)

இது நக்கிடா (Naccyda) என்ற இடத்தைக் குறிப்பிடுகிறது. இத் துறைமுகம் பொகாரே (Bokarae) என்ற இடத்துக்கு 15 மைல் தொலைவில் (24 கிமீ) உள்ளது. பொகாரே என்பது இன்று பொரக்காடு (Porakkad) என்று வழங்கப்படுகிறது.

நக்கிடாவின் இருப்பிடம் : 9°·22′ வ × 76°·22′ கி.

நக்கிடா என்றாள் தேள் கொடுக்கு என்றும், அவ்விடம் தேள் கொடுக்குப்போல் அமைந்துள்ளதால், நக்கிடா என்று வழங்கப் பட்டது என்றும் கூறப்படுகிறது.

## 20. உன்னதத் துறைமுகங்களாக (As most important ports)

முசிறியும், நெல்கிந்தாவும் முக்கியமான துறைமுகங்களாக விளங்கின. தென்னிந்தியாவின் முக்கால் பங்கு வாணிகம் இத் துறைமுகங்கள் வழியாகவே நடைபெற்றன.

'இன்று' என்று கூறப்படுவது 'பெரிப்ளூஸ் ஆசிரியர் காலத்தில்' அதாவது கி.பி. 50-80 அளவில் என்று பொருள்படும்.

# 54. நெல்கிந்தா

திண்டிஸ்[1] எனும் துறைமுகம் சேரபோத்திரா[2] அரசரைச் சேர்ந்ததாகும். இது கடற்கரை நோக்கி நிற்கும் ஒரு கிராமம் ஆகும். அவ்வரசரைச் சேர்ந்த கப்பல்கள் பலப்பல முசிறிஸில்[3] தங்கி நிற்கின்றன. அவை வாசனைப் பண்டங்களுடன் அராபியர்களாலும், கிரேக்கர்களாலும் இவ்விடத்துக்கு அனுப்பப்படுகின்றன. இத் துறைமுகம் ஓர் ஆற்றங்கரைமீது உள்ளது. திண்டிஸ் துறைமுகம், முசிறிஸ் துறைமுகத்திலிருந்து கடல் வழியாகவும், தரை வழியாகவும் 500 ஸ்டேடியா[4] தொலைவு உள்ளது. மற்றும், திண்டிஸ் என்னும் இடம் தான் இருக்கும் ஆற்றின் கழிமுகத்திற்கு 20 ஸ்டேடியா உள்தள்ளி இருக்கிறது. நெல்கிந்தா எனும் இடம் முசிறிஸ் துறைமுகத்திலிருந்து நதி வழியாலும் கடல் வழியாலும் 500 ஸ்டேடியா தொலைவு உள்ளதாகும். அவ்விடம் பாண்டியன்[5] என்ற அரசரைச் சார்ந்ததாகும். நெல்கிந்தா என்ற இடம் ஒரு நதியின் கரைமீது உள்ளது; அது கடலினின்று 120 ஸ்டேடியா தொலைவு உள்ளது.

## விளக்கவுரை

**1. திண்டிஸ்** (Tyndis)

இது தொண்டி என வழங்கப்பட்டது. நொய்யில் அல்லது நெய்யில் ஆற்றுத் தொண்டி என்றும் விளிக்கப்பட்டது. ஒருகால் இராமநாதபுரத்தைச்சார்ந்த தொண்டி (Tondi) என்னும் இடத்திலிருந்து வேறுபடுத்தி அறிவதற்காக இருக்கலாம். மற்றும் அதிகாரம் 53, குறிப்பு-17 பார்க்கவும்.

திண்டிஸ் (தொண்டியின்) இருப்பிடம்: 10°·48′வ × 75°·56′கி.

**2. சேரபோத்திரா** (Serabothra)

இது சேரபுத்ரா அல்லது கேரளபுத்ரா என்பதன் கிரேக்க உச்சரிப்பே. சேரநாடு, கார்வார் முனையிலிருந்து (Karwar point) தெற்கே குமரிமுனை (Cape Camorin) வரைப் பரவியிருந்தது. சேரர்களின் தலைநகரம் வஞ்சி (Vanji). அத் தலைநகரம் பேரியாற்றங் கரையில் இருந்தது.

பிளினி கி.பி 23-79 இச் சொல்லை அரசனின் பெயராகவே குறிப் பிடுகிறார். ஆனால் இச் சொல், தனிப்பட்ட அரசரைக் குறிப்பிடாமல், அரசபரம்பரையையே குறிப்படுவதாகும்.

அயல்நாடு, சீனநாடு, இலங்கை, அரேபியா நாடு, ஆப்பிரிக்கா, ரோம், கிரேக்க நாடு, மத்தியதரைக்கடல் நாடு, கிழக்கிந்தியத் தீவுகள்-ஜாவா, புஷ்பகம் முதலியன—ஆகிய இவற்றிலிருந்து வந்த பண்டங்கள் பாரிகாஸாவில் (Barygaza) இறக்குமதி செய்யப்பட்டுக் குவிந்து கிடந்தன. மற்றும், மிளகு, திப்பிலி, இலவங்கம், போளம், சந்தனம் தந்தம் முதலியவை திண்டிஸ், முசிறிஸ் துறைமுகங் களில் ஏற்றுமதி செய்யப்படுவதற்காகக் குவிக்கப்பட்டிருந்தன.

மேற்குக் கடற்கரையில் என்னென்ன பொருள்கள் ஏற்றுமதி யாயின என்பது பின்வரும் பகுதியால் அறியலாம் :

"யானைவெண்கோடும், அகிலின் குப்பையும்
மான்மயிர்க்கவரியும், மதுவின் குடங்களும்
சந்தனக் குறையும் , சிந்துரக் கட்டியும்
அஞ்சனத் திரளும் , அணியரி தாரமும்
ஏலவல்லியும் , இருங்கறிவல்லியும்
கூவைநூறுங் கொழுங் கொடிக் கவலையும்
தெங்கின் பழனும் , தேமாங்கனியும்
பைங்கொடிப்படலையும், பலவின் பழங்களும்."

—[சிலப்பதிகாரம் : காட்சிக்காதை (37-44)]

இவையாவும் மலையாளநாட்டில் விளையும் பொருள்கள்.

மன்னார்குடாவின் முத்துகளும், கொற்கை முத்தும், கோயம் புத்தூரில் உண்டான மிளகு, எலிமயிர்க் கம்பளங்கள், போளம், அகில், பெரில் முதலியன தென்னிந்தியாவிலிருந்துதான் உலகின் அன்றைய பகுதிகளுக்கு ஏற்றுமதியாயினவே தவிர, வேறெங் கிருந்தும் அவை அனுப்பப்பட்டனவாகத் தெரியவில்லை.

பிளினி, தாலமி போன்ற வரலாற்றாசிரியர்களும் திண்டிஸ், முசிறிஸ் என்பவற்றைக் குறிப்பிட்டுள்ளனர். பெயர்களில்தான் சிறிது மாற்றமே தவிர, இடம் ஒன்றுதான்.

### 3. முசிறிஸ் (Muziris)

இது முயிறிக் கோட்டம் என்பதன் திரிபே. முயிறிக்கோடு, முயிறிஆகி, அதுவே முசிறி என வழங்கப்பட்டது. இது பண்டைக்

காலத்தில் முக்கியத் துறைமுகமாகக் கருதப்பட்டது. மற்றும் அதிகாரம் 53, குறிப்பு-18 பார்க்கவும்.

முசிறியின் இருப்பிடம் : 10°·14′×76°·11′ கி.

## 4. 500 ஸ்டேடியா தொலைவு (500 Stadia distance)

ஒரு ஸ்டேடியம் என்பது ஒரு பர்லாங் அளவைக் குறிப்பிடும். இங்கு 500 ஸ்டேடியா என்பது 62½ மைல்கள் (108 கிமீ.) தொலைவைக் குறிப்பிடுகிறது. தொண்டிக்கும் முசிறிக்கும் உள்ள தொலைவு 62·5 மைல்கள் (108 கிமீ ) என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இன்று அத் தொலைவு 58 மைல்கள் (93 கிமீ.) ஆகும். எவ்வளவு நுணுக்கமாக அக் காலத்தில் அளவுகளை அளந்துள்ளனர் என்பது வியப்பிற்குரியதன்றோ? மற்றும் அதிகாரம் 1, குறிப்பு-5 பார்க்கவும்.

## 5. பாண்டிய அரசன் (Pandeon King)

இப் பாண்டியர் குலமே தென்னிந்தியாவில் பழம்பெரும் குலம் என்று கருதப்படுகிறது. பாண்டிநாடு என்பது திருநெல்வேலி, மதுரை, தஞ்சாவூர், இராமநாதபுரம் ஆகிய மாவட்டங்களைக் கொண்டிருந்தது. தாமிரபருணி நதியின் கழிமுகத்தில் இருந்த துறைமுகம் கொற்கை என்று வழங்கப்பட்டது. அப்பொழுது பாண்டிய அரசனின் ஆட்சி மேற்குக் கடல் வரையில் எட்டியிருந்தது. தாலமி (கி. பி. 119—161) கொற்கையைக் கோல்கே (Colchae) என்று வழங்கினர். கொற்கை கடல் கோளால் அழிந்த பிறகு, மதுரை பாண்டிநாட்டின் தலைநகரமாயிற்று.

மெகஸ்தனிஸ் (கி.மு. 302-296) பாண்டி நாட்டைப் பற்றிப் பின் வருமாறு கூறுகிறார் :

"இப் பாண்டிநாடு பெண் ஒருத்தியால் பண்டைக் காலத்தில் ஆளப்பட்டு வந்தது. ஹிராக்ளீசுக்குப் (Heracles) பாண்டியே (Pandeae) என்ற பெண்மகவு பிறந்தது. அவ்வரசன் தன் மகளுக்குத் தென் கடலைச் சார்ந்த ஒரு நாட்டைச் சீதனமாக அளித்தான். இந்தியாவின் தெற்குப் பிரதேசத்தில் உள்ளதும், கடல்வரையில் படர்ந்து கிடந்ததுமான அவர் நாட்டில், நாட்டு மக்களை 350 ஊர்களில் குடியேறச் செய்து, ஒவ்வோர் ஊரினரும் ஒவ்வொரு நாளைக்கு அரசிக்குத் திறை கொணர்ந்து தரவேண்டுமென்றும், அவ்வாறு தராத மக்களைத் தண்டிப்பதில் மற்ற மக்கள் உதவ வேண்டும் என்றும் அவ்வரசன் ஒரு கட்டளைப் பிறப்பித்தான்." (மெகஸ்தனிஸ் இண்டிகா: அதிகாரம் 23, குறிப்பு-2)

பிளினி (கி.பி. 23-79) பாண்டிநாட்டைப் பற்றிப் பின்வருமாறு கூறுகிருர்:

"ஹெர்குலிஸுக்குப் பிறந்தவள் ஒருத்தியே. அதன் காரண மாக, இந்த அரசாங்கத்தின் முக்கியப் பகுதியை அவளுக்குக் கொடுத்தான். இப் பெண்வழியாகத் தோன்றிய பிற்கால அரசர்கள் 300 நகரங்களை ஆண்டு வருகின்றனர். மற்றும் அவர்களிடம் 150 ஆயிரம் ஆள்கள் கொண்ட காலாட்படையும், 500 யானைகள் கொண்ட யானைப்படையும் இருந்தன."

—(**பிளினி:** புத்தகம் VI, அதிகாரம் 23, பக்கம் 39)

இராமாயணத்திலும் பாண்டியர் குறிக்கப்படுகின்றனர். பாண் டியர் அதன் காரணமாக மிகப் பழங்காலந்தொட்டே வாழ்ந்து அரசாட்சி செய்து வருகின்றனர் என்று பெறப்படுகிறது.

வடநாட்டில் விளங்கிய பாண்டவர்கள் வேறு; தென்னுட்டில் விளங்கிய பாண்டியர் வேறு. இருவரையும் ஒன்றுபடுத்திக் குழப்ப மடையக் கூடாது.

பாண்டியன் தன் கொடியில் மீன் உருவத்தைப் பொறித்துக் கொண்டதால், கடல்கடந்து பல நாடுகளையும் தனதாக்கி வீரம் செறிந்தவன் என்றும், அவன் கடலினின்று பெரும்பகுதியை மீட்டவன் என்றும், கடல் வாணிகத்தில் சிறந்தவன் என்றும் பெறப்படுகின்றன.

'பாண்டில்', 'பாண்டஸ்' என்ற சொற்களுக்கு வளைந்த என்ற பொருள் உண்டு. இந்தியாவின் முனைப்பாகம் வளைந்து செல் வதால், அவ் வளைந்த நாட்டுக்கு அரசன் என்ற பொருளில் பாண்டி யன் என்ற சொல் உருவாக்கப்பட்டதுபோலும்.

—(**பிளினி:** பக்கம் 51, குறிப்பு-45)

---

# 55. பகாரே

*ஆற்றின் கழிமுகத்தில், பகாரே[1] என்ற ஒரு கிராமம் இருக்கிறது. அங்கே நெல்கிந்தாவிலிருந்து[2] வெளிச் செல் லும் கப்பல்கள் தங்கி இளைப்பாறி, அங்குக் குவித்து வைக்கப் பட்டுள்ள வாசனைப் பண்டங்களை ஏற்றிக்கொண்டு செல் கின்றன. இவ்வாறு வழி நெடுகக் கடற்கழிகளும், ஆழ மில்லாத் திட்டுகளும் காணப்படுவதால், ஆற்றோட்டம் ஒரே*

சீரான வேகத்தில் இருப்பதில்லை. ஆற்றில் தெளிந்த நீர் கிடையாது. இவ்விரு வாணிகச் சந்தை நகரங்களின் அரசர்களும்[3] நாட்டினுள்ளேயே தங்கள் இருப்பிடத்தை வைத்துக் கொண்டுள்ளனர். இந்த இடத்தில் வருவோர் எவராயினும், அவர் வருகையைக் குறிப்பில் அறிவிக்கக் கடற்கரையிலிருந்து பாம்புகள் அவரை வரவேற்கும்.[4] தலை மட்டும் குறுகியே காணப்படும்; நீளமும் குறைந்தேயிருக்கும். ஆனால், கண்கள் மட்டும் இரத்தச் சிவப்பாய்க் காட்சியளிக்கும். அப் பாம்புகளின் ஒலிகேட்டு, அம் மக்கள் ஒன்றுகூடிப் போர் செய்யத் தயாராகின்றனர்.




பராகே – நெல்கிந்தா

**விளக்கவுரை**

**1.** பகாரே (Bacarae)

இவ்விடத்தைத் தாலமி (கி.பி. 119-161) பராகே (Baracae) என்று வழங்கினர். இது நெல்கிந்தா (Nelcynda) விலிருந்து 120 ஸ்டேடியா அதாவது 15 மைல்கள் (24கிமீ.)தொலைவு இருப்பதால், பகாரே என்பது பொரக்காடு (Porakkad) எனும் இடத்தையே குறிப்பிடுகிறது என்பது உறுதியாகிறது. இது கோட்டயம் (Kottayam) எனும் இடத்திலிருந்து 14 மைல்கள் (23 கிமீ.) தொலைவில்

உள்ளது. அக் காலத்தில் பொரக்காடு மிகவும் புகழ்பெற்ற ஆற்றுத் துறைப்பட்டணமாக விளங்கிற்று. ஆனால், ஆலப்புழை (Alleppey) ஏற்பட்டபின், அதன் பயன் குறைந்து, ஒன்றுமில்லாமல் ஆகி விட்டது. கி. மு. 800 அளவில், அருகில் உள்ள மலைக் குன்றுவரை கடல் உள்ளே புகுந்து விட்டதென்று கூறப்படுகிறது. அச்சன் கோவில் நதியின் (Achchankoil River) கழிமுகத்தில்தான் பொரக்காடு எனும் துறைமுகப்பட்டினம் இருந்தது.

பிளினி இதைப் பராகே எனக் குறிப்பிடுகிறார்.

பொரக்காடின் இருப்பிடம் : 9°·22′வ × 76°·22′ கி.

## 2. நெல்கிந்தா (Nelcynda)

இத் துறைமுகம் பிளினியால் (கி.பி. 23-79) நியசிந்தி (Neacyndi) என்றும், தாலமி (கி.பி. 119—161) யால் மேல்கிண்டா (Melcynda) என்றும் வழங்கப்பட்டது. சிலர் இதைக் கோட்டயம் (Kottayam) இருக்கும் இடமே என்றும் கூறுகின்றனர். ஆனால் நெல்கிந்தா என்ற இடம் நக்கிடா(Naccyda) என்று கூறப்படுகிறது. இத் துறைமுகம் பொகாரே (Bokare) எனும் இடத்திலிருந்து 14 மைல்கள் (23 கிமீ.) தொலைவில் உள்ளது.

இங்கே அச்சன்கோவில் (Achchankoil) எனும் ஆற்றின் கழிமுகம் உள்ளது. பம்பா (Pampa) என்ற நதியின் போக்கு, பாம்பின் நாக்கைப் போல் இரு பிளவாகப் பிரிந்து செல்கிறது. மணிமாலா (Manimala River) என்ற ஆறு வடக்கில் 2 மைல்கள் (3 கிமீ) தொலைவில் இத்துடன் சேர்கிறது. ஆக இம் மூன்று ஆறு களும்—மணிமாலா நதி, பம்பா நதி, அச்சன் கோவில் ஆறு—குறிக் கும் முக்கோணப் பகுதியே, நக்கிடா என்று வழங்கப்படுகிறது. இங்கே மூன்று நதிகள் ஒன்று கூடுவதால், இதுவே முக்கூடல் என் றும் வழங்கப்பட்டு, அதுவே கிரேக்க மொழியால் நக்கிடா என்றும் வழங்கப்பட்டிருக்க வேண்டும். முக்கூடல் என்பது மூன்று நதிகள் கூடும் இடமாகும். திருநெல்வேலியில் உள்ள முக்கூடல் என்ற ஊர்ப் பெயரும் இப்பொருளை உட்கொண்டே விளங்குகிறது.

நெல்கிந்தாவின் இருப்பிடம் : 9°·22′ வ × 76°·22′ கி.

நக்கிடா என்பதற்குத் தேள் கொடுக்கு என்ற ஒரு பொருளும் உண்டு. இங்கு இம் மூன்று நதிகளும் சேர்ந்து ஒரு தேள் கொடுக்குப் போல் அமைந்த காரணமாக,அவ்விடம் நக்கிடா என்று வழங்கப்பட்டது என்றும் கூறுவர்.

மற்றும் அதிகாரம் 53, குறிப்பு-19 பார்க்கவும்.

**3. இவ்விரு வாணிகச் சந்தை நகரங்கள் (These two Commercial Market Towns)**

இது மேலே கூறப்பட்ட பகாரே, நெல்கிந்தா ஆகிய வாணிகச் சந்தை நகரங்களைக் குறிப்பிடும். இவற்றின் அரசர்கள் துறை முகங்களில் தங்கள் இருப்பிடங்களை வைத்துக்கொள்ளாமல், நாட்டின் உள் பகுதியிலேயே தங்கள் அரண்மனைகளைக் கட்டிக் கொண்டுள்ளனர்.

**4. பாம்புகள் வருபவர்களை வரவேற்கும் (Serpents welcoming the entrants)**

பிளினி (கி.பி. 23-79) குறிப்பிடுகிறார்:

"இவ்வாறு பாம்புகள் தங்கள் தலைகளை நீட்டி வருபவர்களை வரவேற்கும். இவ்வாறு பாம்புகள் தலைகளை நீட்டியதும், நாட்டின் உள்ளிருப்பவர் வருபவர்களைக் கண்காணிப்பர்."

—(**பிளினி** : புத்தகம் VI, அதிகாரம் 26, குறிப்பு-26, பக்கம் 121)

---

# 56. பகாரேயில் இறக்குமதி, ஏற்றுமதி

*இவ்விடத்திலுள்ள சந்தை கூடும் வாணிக நகரங்களுக்கு அவர்கள் உருவத்தில் பெரிய கப்பல்களை அனுப்பி வைக்கின்றனர். அதற்குக் காரணம், மிகப்பெரிய அளவில் மிளகும்,[1] இலவங்கபத்திரியும்[2] இங்கிருந்து ஏற்றுமதி செய்யப்படுகின்றன. இவ்விடத்தில் பெருவாரியாக இறக்குமதி செய்யப்படும் பொருள்களில் நாணயங்களுக்கு[3] முதலிடம் கொடுக்கப்படுகிறது. மற்றும் புஷ்பராகம்,[4] மெல்லிய துணிகள்[5] இவை குறைந்த அளவிலேயே இறக்குமதி செய்யப்படுகின்றன. சித்திரம் வரையப்பட்ட நார்ப்பட்டுகள்,[6] நீலாஞ்சனக்கல்,[7] பவளம்,[8] சுதேசிக் கண்ணாடிகள்,[9] பித்தளை,[10] தகரம்,[11] ஈயம்[12] ஆகியவைகளும் இறக்குமதி செய்யப்படுகின்றன. மதுபானக் குப்பிகள்,[13] குறைந்த அளவிலே பட்டுத் துணிகள்,[14] பட்டு நூலிழைகள்[15] இவையும் குறைந்த அளவிலே இறக்குமதி செய்யப்படுகின்றன. ஆனால், இம் மதுபானம் பாரிகாஸாவில்[16] இறக்குமதி செய்யப்படும் அளவு இங்கேயும் செய்யப்படுகிறது. மஞ்சேசிலை,[17] அரிதாரம்,[18] கப்பல் மாலுமிகளுக்குத் தேவையான கோதுமை[19] ஆகியன*

வும் இறக்குமதி செய்யப்படுகின்றன. கோதுமை இங்குள்ள வணிகர்களால் விற்கப்படுவதில்லை. இங்கு அது வாணிகப் பொருளாகக் கருதப்படவில்லை.

இனி எப் பொருள்கள் ஏற்றுமதி செய்யப்படுகின்றன எனப் பார்ப்போம். மிளகு ஏற்றுமதி செய்யப்படுகிறது. இம் மிளகு இங்கு உள்ள பிரதேசம் ஒன்றில்தான் பயிராக்கப்படுகிறது.[20] இவ் வாணிக நகரத்திற்கருகில் உள்ள மாவட்டம் கொட்டநாரா[21] என்பதாகும். இதைத் தவிர, பெருவாரியான அளவில் முத்துகளும்,[22] தந்தமும்,[23] பட்டுத்துணியும்,[24] கங்கைக் கரையிலிருந்து எடுத்துவரப்படும் சடாமாஞ்சியும்,[22] உள்நாட்டிலிருந்து வரும் இலவங்கபத்திரியும்,[26] ஒளி ஊடுருவிப்பாயும் படிகக்கற்கள் வகைகளும்,[27] வைரம்,[22] நீலக் கற்கள்,[29] ஆமை ஓடுகள்,[30] கிரிஸே தீவினின்று[31] வரும் பொருள்கள், டிமிரிகா[32] கடற்கரையோரமாகவே அந்தந்தத் தீவுகளுக்கு எடுத்துச் செல்லப்படும் பொருள்கள்[33] ஆகிய இவை யாவும் ஏற்றுமதி செய்யப்படுகின்றன.

அயல் நாட்டிலிருந்து இங்கு வரும் கப்பல்கள், நல்ல காற்று அடிக்கும் பருவத்தில் பயணம் ஏற்று வருகின்றன. அவை எகிப்து நாட்டில்[34] ஜூலை மாதத்தில் புறப்படுகின்றன. ஜூலை மாதம் எபிபி[35] என்ற பெயரால் வழங்கப்படுகிறது.

## விளக்கவுரை

**1. மிளகு (Pepper)**

இங்கு முதலில் இரண்டு பொருள்களை ஏற்றுமதிப்பொருள்களாகக் கூறிவிட்டு, மற்றவற்றை இறக்குமதிப்பொருள்களாக விவரித்து, மீண்டும் ஏற்றுமதிப்பொருள்களைக் குறிப்பிடுகிருர். பெரிப்ளூஸ் நூலாசிரியர் ஒழுங்காகக் கல்வி கற்றவர் அல்லர் என்பது எதையும் அவர் ஒழுங்கு படுத்திக் கூருததிலிருந்து தெரிய வருகிறது. எவ்வகைக் கருத்துகள் தோன்றுகின்றனவோ, அவற்றை அவ்வப்படியே எழுதிவிடுவார் என்றே கருதவேண்டியுள்ளது.

இங்கு மிளகு ஏற்றுமதி செய்யப்படுவதைக் குறிப்பிடுகிருர்.

மிளகில் வெண்மை, கறுப்பு என இருவகைகள் உள்ளன. மிளகு இலத்தீன் மொழியில் பெப்பர் நிகாரம் (Pepper Nigarum)

என்று வழங்கப்படுகிறது. இது மலையாள நாட்டில் விளையும் கொடி வகையைச் சார்ந்தது. திருவிதாங்கூர் சமஸ்தானத்தின் சில பகுதிகளிலும் பயிர் செய்யப்படுகிறது. இம் மிளகு மிகப் பழங்காலம் முதற்கொண்டு மலையாள நாட்டில் முக்கிய விளைபொருளாக விளங்கு கிறது. இதற்கு ஈரமும் வெப்பமும் அதிகம் தேவை. இவ்விரண்டும் மலையாள நாட்டுப் பகுதியில் வேண்டிய அளவு உள்ளன. மற்றும் அந் நாட்டின் மண்வளமும் அதன் விளைச்சலுக்கு ஏற்றதாயிருந்தது. வடமொழியில் மிளகுக்குத் திப்பிலி (Tippili) என்றொரு பெயரும் உண்டு. இச் சொல் திப்பிலி, இலத்தீனில் பப்பாளி (Pappali) என்று வழங்கி, அதுவே ஆங்கிலத்தில் பெப்பர் (Pepper) என வழங்கப் பட்டது. திப்பிலி என்பது நீளமான மிளகு வகையைச் சார்ந்தது. ஆனால், காரம் அதிகம் இல்லாதது. இதன் நிறம் கறுப்பு. இதையே அயல்நாட்டார் மிளகு என நினைத்துப் பப்பாளி என வழங்கினர். அதுவே பெப்பெர் என்று ஆகி, அப் பெயரே மிளகைக் குறிக்கும் பெயராக நின்றுவிட்டது.

இந்திய நாட்டில் திப்பிலி வேறு, மிளகு வேறு. இரண்டும் மருந்துச் சரக்காகப் பயன்படுத்தப்படுகின்றன.

இம் மிளகு மேலைநாட்டு வரலாற்றாசிரியர்களால் குறிக்கப்பட்டுள் ளது. தியோப்ராஸ்டஸ் (Theophrastus) (கி.மு. 372-287) எனும் வரலாற்றாசிரியர் மிளகை ஒரு மருந்துச்சரக்காகக் கூறியுள்ளார். அவருக்குப்பின்னர் வந்த டையஸ்காரிடே (Dioscoridae), (கி.பி. 2 ஆம் நூற்றாண்டு) மிளகை மூன்று வகைகளாகப் பிரித்துக் கூறு கிறார். அவை: வெண்மை, கறுப்பு, நீண்ட வகை. இவர் தாம் மெடீரியா மெடிகா (Materia Medica) என்னும் மருத்துவ நூலின் ஆசிரியர். இந் நூல்தான் பலநூற்றாண்டுகளுக்கு ஆதார மருத்துவ நூலாக இருந்தது. வடநாட்டு மருத்துவ நூல்கள் மிளகை வயிற்றுவலி, வயிற்றுக் கடுப்பு, வாயு (Gastric) சம்பந்தமான நோய்கள் ய வற்றுக்கு மருந்தாகப் பயன்படுத்துமாறு கூறின. மற்றும் இஞ்சி, திப்பிலி என்பவற்றுடன் காஷாயமிட்டுப் பருகினால், வயிற்றுக் கோளாறு எதுவானாலும் சரியாகிவிடும் என்று கூறுகின்றன. இஞ்சி காய்ந்தால் சுக்கு ஆகிவிடும்.

தமிழ் நாட்டில் திரிகடுகம் எனும் நூல் உள்ளது. திரிகடுகம் என்பது சுக்கு, மிளகு, திப்பிலி ஆகிய மூவகை மருந்துச் சரக்கு களின் கலவை ஆகும். இவை எவ்வாறு உடலுக்கு நலம் பயக் குமோ, அவ்வாறே திரிகடுகம் எனும் தமிழ் நூலில் ஒவ்வொரு செய்யுளிலும் கூறப்படும் மூன்று பொருள்களும், நல் வாழ்க்கைக்கு நலம் பயப்பனவாகும். இந் நூலின் ஆசிரியர் நல்லாதனார். இந் நூல் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றாகும்.

மருந்துச் சரக்குகளைப் பெயராகக் கொண்ட மற்றொரு நூல் சிறுபஞ்ச மூலம். இதன் ஆசிரியர் காரியாசான். இதில் சேர்க் கப்பட்ட மருந்துச் சரக்குகளாவன: சிறுவழுதுணை, சிறு நெருஞ்சி, சிறுமல்லிகை, பெருமல்லிகை, கண்டங்கத்திரி எனப் படும் ஐவகை மூலிகை மருந்துகள். இவ்வைந்து மூலிகைகளின் கூட்டுப் பொருள் எவ்வாறு மனித உடலுக்கு நன்மை பயக்குமோ, அவ்வாறே சிறுபஞ்ச மூலம் எனும் நூலின் ஒவ்வொரு பாடலிலும் கூறப்படும் ஐவகைப் பொருள்களும் மனித உள்ளத்தைப் பக்குவப் படுத்தும் தன்மையனவாகும்.

ரோமப் பேரரசர்கள், எகிப்தின் படையெடுப்பின்போதும், ஆசியாமைனரின் படையெடுப்பின்போதும் இந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டு, அயல்நாடுகளில் செலாவணியாகும் மிளகையும் இலவங்கபத்திரியையும் கண்டு, அவற்றின் சுவை அறிந்து, அவற்றைத் தங்கள் நாட்டில் வரவழைக்கத் தொடங்கினர். எகிப்தியர்களும், பாபிலோனியர்களும், கிறித்து பிறப்பதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரிருந்தே மிளகை அறிந்து பயன் படுத்தி வந்தனர். சீனநாடு, மலையாள நாட்டு மிளகை கி.மு. 3 ஆம் நூற்றாண்டில் பயன்படுத்தியதாகத் தெரிகிறது. தாலமி (கி.பி. 119—161), மார்க்கோபோலோ (கி.பி. 1254-1324) இவ் விருவரும் மிளகு வாணிகத்தைப்பற்றித் தங்கள் வரலாறுகளில் கூறியுள்ளனர்.

"மிளகும், இஞ்சியும், பாக்கும் உலகில் கிடைத்தற்கரிய துணி மணிகளும் இவ்விடத்தில் பெருவாரியாக உற்பத்தி செய்யப் படுகின்றன."

—(**மார்க்கோபோலோ**: பக்கம் 80)

இம் மிளகு வாணிகமே முற்காலத்தில் வணிகர்களுக்குப் பெருஞ்செல்வத்தைக் கொடுத்தது. கனவில் நினைக்க முடியாத இலாபத்தையும் கொடுத்தது. ரோமப்பேரரசுக்கும் இந்தியாவுக்கும் இடையே சென்ற கப்பல்களின் சரக்கில் முக்கால்பகுதி இம் மிளகும் இலவங்கமும், ஸ்படிகக் கற்களுமாயிருந்தன. இவை யாவும் தென்னிந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டன.

பிளினி (கி.பி. 23-79) மிளகைப் பற்றிக் கூறுகிறார்:

"இம் மிளகு சமையலில் மிகவும் பயன்படுத்தப்பட்டது. அதன் காரணமாக ரோம்-நகரில் இம் மிளகு ஒரு பவுண்டு 15 தினரி வரை விற்கப்பட்டது."

**புத்தகம்** XII, அதிகாரம் 4)

போர்த்துக்கீசியர் காலத்தில் (கி.பி. 1503-1759) கொச்சி (Cochin) எனும் இடத்தில் மிளகைச் சேகரித்து வைக்க ஒரு கிடங்கைக் கட்டிவைத்திருந்தனர். அதன் பெயர் பெப்பர் ஹௌஸ் (Pepper House).

தமிழ் இலக்கியங்களில் மிளகு குறிப்பிடப்பட்டுள்ளது:

"ஏல வல்லியும், இருங்கறி வல்லியும்
தெங்கின் பழனும், தேமாங்கனியும்"

—[சிலப்பதிகாரம், காட்சிக் காதை (41-42)]

இதில் 'இருங்கறி வல்லி' என்று குறிப்பிடப்படுவது கரிய மிளகுக் கொடிகளையே.

## 2. இலவங்கபத்திரி (Malabothrum)

இலவங்க இலைகள் உலர்த்தப்பட்டு அவை மருந்தாகப் பயன் படுத்தப்பட்டன. பத்திரம் என்றால் இலை என்று பொருள். மலை பத்திரம் என்று மலையில் விளையும் இலை என்றும், அது இலவங்க மரத்தின் இலை என்றும் கூறப்படுகிறது. இலவங்கபத்திரியும், சடாமாஞ்சியும் (Spikenard) ஏற்றுமதி செய்யப்பட்ட இரண்டு முக்கியச் சரக்குகளாகும். பெரிப்ளூஸில், இலவங்க ஏற்றுமதியைக் குறிப்பிடவில்லை. சோமாலி நாட்டு மக்கள் இலவங்கத்தை, இலவங்க இலை என்று மாற்றுப் பெயரால் வரவழைத்து, அவ் இலவங்கத்தைச் சுத்தம் செய்து, அதிலிருந்து எண்ணெய் எடுத்து, இலவங்கமும், இலவங்க எண்ணெயும் (Clove oil) தங்கள் நாட்டில் உற்பத்தியான சரக்குப் போல் ரோம் நகருக்கு அனுப்பி வந்தனர். பல நூற்றாண்டுகளுக்குப் பிறகு, அயல்நாட்டார் இந்திய நாட்டுக்கு வந்து, இந்திய இலவங்கத்தைப் பெற்று, ரோம் முதலிய நாடுகளுக்கு நேரடியாக அனுப்பினர். நேரடியான வாணிகம் தொடர்ந்தபிறகு சோமாலிலாந்தின் (Somaliland) இலவங்க வியாபாரம் நலிவுற்றது. சோமாலிலாந்து எனும் நாடு ஆப்பிரிக்காவின் வடகிழக்குப் பகுதி ஆகும்.

## 3. நாணயங்கள் (Coins)

தென்னிந்தியாவில் மேற்குக் கடற்கரையில் ரோமப் பேரரசின் நாணயங்கள் கிடைத்துள்ளன. அந் நாணயங்கள் டைபீரியஸ் (Tiberius), காலிகூலா (Caligula), கிளாடியஸ், (Claudius), நீரோ (Nero) ஆகிய ரோமப் பேரரசர்கள் காலத்தில் அச்சடிக்கப் பட்டன.

ரோமப் பேரரசர்கள் ஆண்ட வரலாறு பின்வருமாறு:

| | |
|---|---|
| டைபீரியஸ் (Tiberius) | கி.பி. 14-37 |
| காலிகூலா (Caligula) | கி.பி. 37-41 |
| கிளாடியஸ் (Claudius) | கி.பி. 41-54 |
| நீரோ (Nero) | கி.பி. 54-68 |

ரோம நாட்டுக் கப்பல்கள் கி.பி. 14 முதல் நாணயங்களை ஏற்றிக் கொண்டு தென்னிந்தியாவில் இறக்குமதி செய்தன என்றும், நாணயம் செய்யும் முறை ரோம் நாட்டினருக்குத் தெரிந்தது என்றும், இந்தியாவிலிருந்து வெள்ளி, பொற்கட்டிகளை ஏற்றி, அவை ரோம் நகரிலிருந்து நாணயங்களாக இறக்குமதி செய்யப் பட்டன என்றும் தெரியவருகிறது. நாணயங்கள் பொன்னாலும், வெள்ளியாலும் செய்யப்பட்டன.

**4. புஷ்பராகம்** (Topaz)

இவை வைரக்கல் போன்று பளபளப்பாய் இருக்கும். நாட்டு மக்களில் எளியவாழ்க்கை வாழ்பவர் இவற்றை அணிந்திருந்தனர்.

**5. மெல்லிய துணிகள்** (Linen Clothes)

இவை அராபிய மக்களால் மஸ்லின் வகைபோன்று நூற்கப் பட்டவை. ஆனால் பெருவாரியான அளவில் அல்லாமல், அரசர்க் கும், அரசாங்கக் குடும்பத்தினருக்கும் வேண்டிய அளவுமட்டும் இவை இறக்குமதி செய்யப்பட்டன. அவற்றின் விலை மிக அதிகம் ஆன காரணத்தினால், அரசர்களும் அவர் குடும்பமுமே அவற்றை வாங்கி அணியமுடியும். மற்றும் அதிகாரம் 49, குறிப்பு-8 பார்க்கவும். பிளினியும் இதைப்பற்றிக் குறிப்பிடுகிறார். (பிளினி: புத்தகம் XXXII, அதிகாரம் 11)

**6. சித்திரம் வரையப்பட்ட நார்ப்பட்டுகள்** (Embroidered linens)

கரைகள் வேய்ந்ததும், சித்திரங்கள் வரையப்பட்டதுமான நார்ப்பட்டுகள் இறக்குமதி செய்யப்பட்டன. நார்ப்பட்டுகள் ஃப்ளாக்ஸ் (Flax) எனும் பொருளால் ஆனது. இந்தியாவிலேயே இந் நார்ப்பட்டுகள் உற்பத்தி செய்யப்பட்டன வெனினும், நைல் நதிக் கரையின் நார்ப்பட்டுகள் மிக உறுதியானவையாவையாகவும், பளபளப்புமிக்கவையாகவும் இருந்தன என்று கூறப்படுகிறது.

**7. நீலாஞ்சனக் கல்** (Antimony)

இது ஒரு ஸ்படிக வகையைச் சார்ந்ததாகும். இது கண் மை செய்யப் பயன்படுத்தப்பட்டது. இது பாஷாண வகையைச் (Sulphide of Antimony) சார்ந்தது. பிளினி

இவைப்பற்றிக் குறிப்பிடுகிருர். (**பிளினி:** புத்தகம் V, அதிகாரம் 99). மற்றும் அதிகாரம் 49, குறிப்பு-15 பார்க்கவும்.

**8. பவளம்** (Coral)

இது இலத்தீன் மொழியில் கொராலியம் (Corraleum) என்று வழங்கப்பட்டது. இந்தியப்பவளம், மத்திய தரைக்கடல் பவளம் இவை இரண்டுமேதான் ரோம் நகரில் விரும்பி வரவேற்கப்பட்டன. பவழம் என்பது தமிழ்ச் சொல். இது வடமொழியில். ப்ரவளம் என்று வழங்கப்பட்டது. இது பிளினியால் குறிப்பிடப்பட்டுள்ளது.

—(**பிளினி:** புத்தகம் XXXII–அதிகாரம் 11)

மற்றும் அதிகாரம் 39, குறிப்பு-5 பார்க்கவும்.

**9. சுதேசிக் கண்ணுடிகள்** (Crude glass)

இவை லென்ஸ் (Lens) வகையைச் சார்ந்தவை. வயோதிகர்கள் அணியக்கூடிய கண்ணுடிவகைகள் எனப்படுகின்றன. பிளினி (கி.பி. 23-79) இதைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளார். (**பிளினி:** புத்தகம் XXXVI-அதிகாரம் 66). இவை பீனிசியாவிலிருந்து இறக்குமதி செய்யப்படுபவை. பீனிசியமக்களே (Phoenicians) கண்ணுடியை முதன் முதல் உருவாக்கியவர்கள் ஆவர்.

**10. பித்தளை** (Brass)

இது மென் பித்தளை, வன் பித்தளை என இருவகைப்படும். சிறிய பாத்திரங்கள் செய்யவும், கோயில்களுக்குப் படிகள் வேயவும் அயல் நாட்டுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன.

மற்றும் அதிகாரம் 49, குறிப்பு-4 பார்க்கவும்.

**11. தகரம்** (Tin)

இது இலத்தீனில் ஸ்டானம் (Stannum) என்று வழங்கப் பட்டது. இந்தியாவில் அர்ஜெண்டைனு, பெகு முதலிய பகுதிகளில் எடுக்கப்பட்டது. முதலில் பொன்னும் வெள்ளியும், அதற்கு அடுத்துப் பித்தளையும், அதன் பின்னரே தகரம் பயன்படுத்தப் படுவதாயிற்று.

மற்றும் அதிகாரம் 49, குறிப்பு-5 பார்க்கவும்.

இது அர்ஜெண்டைனு பகுதிகளிலிருந்து இறக்குமதி செய்யப் பட்டது.

### 12. ஈயம் (Lead)

இதில் வெள்ளீயம், காரீயம் என இரு வகைகள் உண்டு. பிளினி கூறுகிருர்: "வெள்ளீயம் ஸபெயின் தேசத்திலிருந்து வந்ததாகும். இது புற்றுநோய்க்கும், புரையோடிய இரணங்களுக்கும் மருந்தாகப் பயன்படுத்தப்படுகின்றது. இது பெருவாரியாக பாரிகாஸாவில் இறக்குமதி செய்யப்பட்டது. சாகா நாட்டினரின் நாணயத்தை உருவாக்கக் கலவைப் பொருளாகப் பயன்படுத்தப்பட்டது."

—(பிளினி: புத்தகம் XXXIV-அதிகாரம் 47-50)

மற்றும் அதிகாரம் 49, குறிப்பு-6 பார்க்கவும்.

### 13. மதுபானக் குப்பிகள் (Wine bottles or casks)

மதுபானம் இத்தாலியிலிருந்தும், அரேபிய நாட்டிலிருந்தும் இறக்குமதி செய்யப்பட்டது. எகிப்திலிருந்தும் வந்திறங்கியது. இதில் இத்தாலி நாட்டு மதுபானம் உயர்ந்ததாகக் கருதப்பட்டது.

மற்றும் அதிகாரம் 49, குறிப்பு-3 பார்க்கவும்

### 14. பட்டுத் துணிகள் (Silk clothes)

பட்டுத் துணிகள் சீனுவிலிருந்து கடல் வழியாக, பராகேவுக்கு வந்து இறங்கின. சீனப் பட்டுதான் பட்டில் உயர்ந்ததாகும். பராகேவில் இறக்குமதி செய்யப்பட்டு, அயல்நாடுகளுக்கு அப்பட்டுத் துணிகள் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. சிண்டோமானுவிலிருந்து சாட்டின் (Sattin) துணிகளும் வந்து இறங்கின.

### 15. பட்டு நூலிழைகள் (Silk yarns)

இவை அரேபியாவுக்கு அனுப்புவதற்காக, இங்குச் சீனு விலிருந்து இறக்குமதி செய்யப்பட்டன. அரேபியாவில் நல்ல நுண்கலை நெசவாளர்கள் இருந்தனர் என்றும், அவர்கள் தைத்த ஆடைகளை அரசரும், அரச குடும்பத்தினரும் உடுத்துவர் என்றும் கூறப்பட்டுள்ளது.

மற்றும் அதிகாரம் 49, குறிப்பு-30 பார்க்கவும்.

### 16. பாரிகாஸா (Barygaza)

இது பிருகு, கச்சா என இருசொற்களின் இணைப்பே; இன்றைய புரோச் (Broach) துறைமுகத்தைக் குறிப்பிடுகிறது. இங்கு மது பானம் அயல் நாடுகளிலிருந்து இறக்குமதிசெய்யப்படுகிறது. அதே அளவு மதுபான் வகைகள் பகாரே (Bakarae) யிலும் இறக்குமதி செய்யப்படுகின்றன என்று கூறுகிருர்,

**17.** **மனோசிலை** (Realgar)

இது சாண்டிரேக் (Sandrake) என்று வழங்கப்பட்டது. இது ஆர்செனிக் எனும் பாஷாணத்தில் சிவப்பு கந்தக உப்பாகும். இது ஒரு மருந்துவகை. இதன் தூய்மை அதிகம் ஆக ஆக, நறுமணமும் அதிகமாகும்.

மற்றும் அதிகாரம் 49, குறிப்பு-14 பார்க்கவும்.

**18.** **அரிதாரம்** (Orpiment)

இது தாளக பாஷாணம் (Arsenic Sulphide) எனப்படும். இது குன்மம் போன்ற வியாதிகளுக்கு மருந்தாகக் கொடுக்கப் படுகிறது. குன்மம் என்பது பொறுக்கமுடியாத வயிற்றுவலி (Chronic dyspepsia). இதற்கு அரிதாரம் மருந்தாக முற்காலத்தில் பயன்பட்டது. மற்றும், வீடுகளுக்கும் மரத்திற்கும் வெளிப்பூச்சாக மஞ்சள் நிறங்கொடுக்கப் பயன்பட்டு வந்தது. அரிதாரம் என்பது கஸ்தூரி (Musk) யையும் குறிப்பிடக் கூடும்.

"மான் வயிற்றின் ஒள்அரிதாரம் பிறக்கும்" —(**நான்மணிக்கடிகை** 6). இக் கஸ்தூரி மகப்பேறுஅடைந்த பெண்களுக்கும், சிறு குழந்தைகளுக்கும், இருமல், சளி இவற்றின் பாதுகாப்புக்காகக் கொடுக்கப்படுகிறது. இக் காலத்தில் கஸ்தூரி மாத்திரைகளாகக் கிடைக்கின்றன.

**19.** **கோதுமை** (Wheat)

கோதுமை தென்னிந்தியாவின் உணவன்று. அரிசியே தென்னாட்டு உணவு.

மார்க்கோபோலோ (கி.பி. 1254-1324) பின்வருமாறு கூறுகிறார்:

"தானிய வகையில் அரிசி மட்டுமே அதிகமாகச் சேகரித்து வைக்கப்படுகிறது. அதுவே இம் மலையாள நாட்டின் பெரும்பாலான உணவாகும்."

—(**மார்க்கோபோலோ**—பக்கம் 77)

வடநாட்டிலிருந்தும், சீனாவிலிருந்தும் கோதுமை தென்னாட்டிற்கு இறக்குமதி செய்யப்பட்டது. கோதுமை சீனாவிலேதான் முதன் முதல் உற்பத்தியானதாகக் கருதப்படுகிறது.

மற்றும் அதிகாரம் 41, குறிப்பு-7 பார்க்கவும்.

**20. மிளகு இப் பிரதேசத்தில்தான் பயிராக்கப்படுகிறது (Pepper grown only in these parts)**

மிளகு தென்னிந்தியாவில் மலையாள நாட்டைத் தவிர வேறு எங்கும் பயிர் செய்யப்பட்டது கிடையாது. இம் மலைநாட்டின் தட்பவெட்ப நிலையும், மண்வளமும் அதற்கு ஏற்றதாயுள்ளதே, இங்கு விளைவதற்குரிய காரணமாகும். நல்ல வெப்பமும், நீரும் தேவை. இம் மிளகு அயல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகிறது.

**21. கொட்டநாரா (Cottanara)**

இது குட்டநாடு (Kuttanadu) என்பதன் கிரேக்க உச்சரிப்பாகும். இந் நாடு பராகேவுக்கும், நக்கிடாவுக்கும் அருகில் இருந்தது. பிளினி (கி.பி. 23-79) இந் நாட்டைக் கொட்டநாரா என்றே வழங்கினர். இங்கு மிளகு அதிகமாக விளைகிறதென்றும், அது ஒன்றாக இணைக்கப்பட்ட படகுகளின் மூலமாகப் பராகேவுக்கு எடுத்துச்செல்லப்படுகின்றன என்றும் கூறுகிறார் (பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 26, பக்கம் 115). இப் பெயரைக் குளத்து நாடு என்றும், கடத்து நாடு என்றும் பலவாறாகக் கூறி வந்துள்ளனர். குட்ட நாடு என்பதே சரியான பெயராகும். இதைத் தாலமி (கி.பி. 119-161) குட்டியாரா (Kuttiyara) என்று வழங்கினர்.

சேரரின் தமிழ்நாடு முன்னர்ப் பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அவற்றுள் முக்கியமானவை 12 நாடுகள். இப் பன்னிரண்டனுள்ளும் முக்கியமானவை குடகு நாடு, குட்ட நாடு, பூழி நாடு, வேணாடு.

செந்தமிழ் நாட்டைச்சார்ந்த 12 கொடுந்தமிழ் நிலங்களாவன:

"தென்பாண்டி குட்டம் குடங்கற்கா வேண்பூழி
பன்றி யருவா வதன் வடக்கு—நன்றாய
சீத மலாடு புனனாடு செந்தமிழ்சேர்
ஏதமில் பன்னிரு நாட்டெண்."

—(பழம்பாடல்)

இவற்றுள் குட்ட நாடு என்பது கோட்டயம் (Kottayam), கொல்லம் (Quilon) இவற்றையும், இங்குள்ள ஏரிப் பகுதிகள் கொண்ட ஊர்களையும் சார்ந்த பகுதிகளாகும். வேணாடு என்பது தென் திருவிதாங்கூர்ப் பகுதியைக் குறிப்பிடுகிறது. (குட்டம்-ஏரிப் பகுதிகள்).

குட்டநாடு என்பது இன்றைய கோட்டயம், கொல்லம் ஏரிப் பகுதியைக் குறிப்பிடுவதாக வின்சென்ட் ஸ்மித் கூறுகிறார்.

—(Vide The Early History of India By Vincent A. Smith, page 411)

"...குட்டநாட்டுத் திருப்புலியூர்,
அருமாயன் பேரன்றிப் பேச்சிலள் அன்னைமீர்!
இதற்கென் செய்கேனே?"
—(திருவாய்மொழி 8-9-1)

திருப்புலியூர் என்பது கொல்லத்துக்கு (Quilon) வடகிழக்கே 61 மைல்கள் (97 கிமீ) தொலைவிலும், திருச்செங்கன்னூரிலிருந்து 3 மைல்கள் (4 கிமீ) தொலைவிலும் உள்ளது. (**நூற்றெட்டுத் திருப்பதிப்பிரபாவம்**, பக்கம் 42). நம்மாழ்வார் காலத்திலேயே கொல்லம், கோட்டயம் முதலிய பகுதிகள் குட்டநாடு என்றே வழங்கப்பட்டுவந்தது என்பது இதனால் தெரியவருகின்றது.

கோட்டயத்தின் இருப்பிடம்: 9°·36'வ × 76°·34'கி.

கொல்லத்தின் இருப்பிடம்: 8°·54'வ × 76°·38'கி.

## 22. முத்துகள் (Pearls)

இது தென் தமிழ்க் கடற்கரைகளில் முகிழ்ந்து எடுக்கப்படுகிறது. முத்து தமிழ்ச் சொல். வடமொழியில் இது மௌத்திக, மோதி என்று பலவாறு வழங்கப்படுகிறது.

மன்னார் குடாவின் முத்துகள் சிவப்பு நிறமாயும், பெஹ்ரின் விரிகுடாவின் முத்துகள் மஞ்சள் நிறமாயும், கொற்கை முத்து வெண்மையாகவும் இருந்தன. பீனிசியாவில் தீரே (Tyre) எனும் இடத்தில் எடுக்கப்பட்ட முத்தே சிறந்ததாகக் கருதப்பட்டது.

முத்து தமிழ் இலக்கியங்களில் வந்துள்ளது:

"முறிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோள் அவட்கு"

—(திருக்குறள்: 1113)

"முத்துடை வான்கோடு தழீஇத் தத்துற்று"

—(திருமுருகாற்றுப்படை: 305)

"பேணிப் பவளவாய் முத்திலங்க பண்டு"

—[பெரியாழ்வார் திருமொழி: 1-6-1)]

"தென்கடல் முத்தும், குணகுடல் துகிரும்"

—(பட்டினப்பாலை; 189)

முத்துக் குளித்தலைப்பற்றி மார்க்கோபோலோ விரிவாகவே எழுதியுள்ளார்.—(மார்க்கோபோலோ: பக்கம் 16-18)

மற்றும் அதிகாரம் 36, குறிப்பு-11 பார்க்கவும்.

பிளினி (கி.பி. 23-79) முத்தைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

—(பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 24, பக்கம் 73)

**23.** **தந்தம்** (Ivory)

இது இபம் என்ற வடசொல்லின் அடியாகப் பிறந்தது. யானைகளுக்கு இந்தியாவே சிறந்த இடமாகக் கருதப்பட்டது. இந்திய யானைகளே வலிமையும் உறுதியும் வாய்ந்தனவாகக் கருதப்பட்டன. யாளி என்பதே யானையாகி, யாளி-பல் என்பதே எலிபெண்ட் ஆகியிருக்கவேண்டும். எலிபெண்ட் (Elephant) என்பது யானையைக் குறிப்பிடும் ஆங்கிலச் சொல்லாகும்.

யானைத் தந்தங்கள் முக்கிய வாணிகப் பொருளாகக் கருதப்பட்டுவந்தன.

மற்றும் அதிகாரம் 49, குறிப்பு-25 பார்க்கவும்.

**24.** **பட்டுத்துணி** (Silk Garment)

பட்டுத்துணிகள் என்பவை சீனப்பட்டுகளையே குறிப்பிடுகின்றன. இப் பட்டுத்துணிகள் ரோம் நாட்டிலும், எகிப்திலும் விரும்பி வாங்கப்பெறுகின்றன.

மற்றும் அதிகாரம் 49, குறிப்பு-29 பார்க்கவும்.

**25.** **சடாமாஞ்சி** (Spikenards)

நாளத்தம் என்ற சொல்லே 'நார்ட்' என்று திரிந்து உச்சரிக்கப்படுவதாயிற்று. இது சருமப் புண்களுக்குப் பயன்படுத்தப்பட்டது. மற்றும் பைபிளில் (Bible) குறிப்பிடப்பட்டுள்ளது. (Mark: XIV-3-5). பிளினியாலும் குறிப்பிடப்பட்டுள்ளது (பிளினி: புத்தகம் XII—அதிகாரம் 26). இப் பொருள் அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகிறது.

மற்றும் அதிகாரம் 39, குறிப்பு–17 பார்க்கவும்.

**26.** **இலவங்கபத்திரி** (Malabothrum)

மேலே குறிப்பு-2 பார்க்கவும். இச் சரக்குப் பெரும் அளவில் ஏற்றுமதி செய்யப்பட்டது. பத்திரி என்ற சொல்லிற்கு இலை என்பது பொருள்.

## 27. ஒளி ஊடுருவிப்பாயும் படிகக் கற்கள் (Transparent stones)

இக் கற்களுள் பெரும்பாலும் பெரில் (Beryl) எனும் கோமேதகக் கற்களே ரோமப் பேரரசால் விரும்பி வாங்கப்பட்டன. மற்றும் வைரக்கற்கள் (Diamonds), கருநீலக்கற்கள் (Cornelian stones), முத்துகள் (Pearls), புஷ்பராகம் (Topaz) ஆகியவையும் மேனாட்டில் வரவேற்கப்பட்டன.

ஒளி ஊடுருவிப்பாயும் கற்களில் பலவகையுள்ளன. அவை யாவன:

(i) **கோமேதகம்** (Beryl): கடற்பச்சையிலிருந்து கிடைக்கப் பெறுகின்றன என்றும் கூறப்படுகிறது. பிளினி இதைப் பெரிலியம் (Berilium) என்று வழங்கினர்.

(ii) **வைரக்கற்கள்** (Diamonds): இவை உயர்ந்த அணி வகைக் கற்களாகக் கருதப்பட்டன. பிளினி இதை அடமாஸ் (Adamas) என்று வழங்கினர்.

—(பிளினி: புத்தகம் XXXVII, அதிகாரம் 20)

(iii) முத்து (Pearls): இது தென்னாட்டுக் கடல்களிலிருந்து முகிழ்ந்தெடுக்கப்பெற்றன. இதில் பரல் என்றொருவகை உருண்டை வடிவமாய் உள்ளது. இதுவே ஆங்கிலத்தில் பெர்ல் (Pearl) என்று வழங்கப்பட்டது.

(iv) கெம்பு (Ruby): இக் கற்களும் பெரும் அளவில் விரும்பப் பட்டு, ஏற்றுமதி செய்யப்பட்டனவாகும். இது செம்காணிக்கம் என்று தமிழில் வழங்கப்பட்டது. பிளினி இதைக் கார்பங்குலஸ் (Corbunculus) என்று விளிக்கிறார். இவற்றில் நான்கு வகைகள் உள்ளன:

அவையாவன: (i) சாதுரங்கம் (ii) குருவிந்தம் (iii) சௌகந்திகம் (iv) கோவாங்கம்.

(v) **கருநீலக்கற்கள்** (Sapphire); இவை நீலநிறம் வாய்ந்தவை. கருநீலக் கற்களே கார்னீலியன் ஸ்டோன்ஸ் (Cornelian stones) என்று வழங்கப்பட்டன.

(vi) **புஷ்பராகம்** (Topaz): இவை பளபளப்பு மிக்கவை. வைரம்போல் மின்னுபவை. இவற்றின் விலை குறைவால் எளிய மக்களே இவற்றை வாங்கினர்.

(vii) **டர்காயிஸ்** (Turquoise): இவை இந்தியாவில் கிடைக்காதன. பாரசீக நாட்டில் மட்டும் உற்பத்தியாவன. பிளினி இதைக் கலீனு (Callina) என்று எழுதியுள்ளார்.

(viii) **செம்மணி** (Garnet): இவை கெம்புவகையில் சேர்ந்தவை. இராசபுதனத்தில் பெருவாரியாகக் கிடைக்கின்றன.

(ix) **பச்சைக் கல்** (Jade): இக் கல் துருக்கிஸ்தானத்திலும், பர்மாவின் வடக்குப்பகுதியிலும் கிடைக்கின்றன. இது கோமேதகம் (Beryl) வகையைச் சார்ந்தது.

(x) **வைடூரியம்** (Lapis lazuli): இவை எல்லா அலங்கார வகைகளுக்கும் பயன்பட்டன. பிளினி இதைச் சாபையர் (Sapphire) என்று குறிப்பிட்டார்.

(xi) **ஸ்படிகக் கற்கள்** (Quartz): இவை கூழாங்கற்கள் வகையைச் சார்ந்தவை. இவை மலைகளிலிருந்தும் ஆறுகளிலிருந்தும் கிடைக்கின்றன.

(xii) **பவளம்** (Coral): பவழங்கள் பவழத் திட்டுகளிலிருந்து எடுக்கப்படுகின்றன.

நம் தமிழ் நாட்டில் பழங்காலந்தொட்டு ஒன்பது வகைக் கற்கள் பயன்படுத்தப்பட்டுவந்தன. அவை 'நவமணிகள்' என்று வழங்கப்பட்டன.

**நவமணிகளாவன:** (i) கோமேதகம் (ii) நீலம் (iii) பவளம் (iv) மரகதம் (v) மாணிக்கம் (vi) முத்து (vii) புஷ்பராகம் (viii) வைடூரியம் (ix) வைரம்.

அயல் நாட்டார் கோமேதகத்தையே விரும்பிவாங்கினர். காரணம், அணிகள் செய்து அவற்றைப்பதிக்க அதிகப் பொன் தேவையில்லை. கொஞ்சம் பொன்னிலேயே நன்கு பதியும் தன்மை கொண்டது.

## 28. வைரக்கற்கள் (Diamonds)

பிளினி (கி.பி. 23-79) இவற்றை அடமஸ் (Adamas) என்று குறிப்பிட்டார். இவ் வைரம் ஆறுகோணங்களாக அமையுமாறு வெட்டப்படுகின்றன என்றும் கூறினார் (பிளினி: புத்தகம் XXXVII, அதிகாரம் 20). ஆனால் வைரம் எட்டு கோணங்களாக அறுக்கப்படுகின்றன (Octogonal). ஒன்றின் ஒளி இன்னொரு கோணத்தில் பாய்ந்து, அவ்வாறே மற்றவையும் ஒன்றனுள் ஒன்று பாய்ந்து மிகுந்த

ஒளியை வெளியிடுகிறது. இவற்றில் கருநீல ஒளிவிடுபவை (Blue Jagger diamonds) எனப்படுகின்றன. அடமஸ் என்னும் சொல்லுக்குப் பின்வருமாறு பொருள் கூறப்படுகிறது: அ–தன்வசமாக, டமஸ்—துர்தேவதைகளினின்று பாதுகாப்பது. டெமன்ஸ் (Demons) என்பதன் சிதைவு.

வைரம் எடுக்கும் முறையை மார்க்கோபோலோ (கி.பி. 1254-1324) தம் குறிப்பில் கொடுத்துள்ளார். (**மார்க்கோபோலோ**–பக்கம் 61-62)

**29. நீலக்கற்கள்** (Sapphire)

இவை ஹியசிந்தோ (Hyacinthos) எனப்பட்டன. இதுவே ஜைசிந்தி (Jaicynth) என்றாயிற்று. இவை கார்னீலியன் கற்கள் என்றும் வழங்கப்படும். இவை அயல் நாடுகளுக்கு அனுப்பப்பட்டன.

**30. ஆமை ஓடுகள்**

ஆமை ஓடுகள் உறுதியானவை. இவை அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. மற்றும் அதிகாரம் 4, குறிப்பு-11 பார்க்கவும்.

**31. கிரிஸே தீவு** (Chrysae Island)

கிரிஸே (Chrysae) என்றால் பொன் என்று பொருள். பொன் தீவு என்று குறிப்பிடுகிறார். பிளினி, பொன்தீவு (Chrysae Island)என்றும் வெள்ளித்தீவு (Argyrae Island) என்றும் குறிப்பிட்டார் (**பிளினி:** புத்தகம் VI, அதிகாரம் 23, பக்கம் 42)

இலத்தீன் மொழியில் **கிரிசோ** (Chrysoe) என்ற சொல்லுக்குப் பொன் என்பது பொருள். (Latin-English Dictionary, page 94). ஆகையால் கிரிஸே தீவுகள் எனப்படுவன பொன் தீவுகளைக்குறிப்பிடும். அத் தீவு எங்கே உள்ளது?

இலத்தீனில் **கேடோ** (Caedo) என்ற சொல்லுக்கு அடித்தல், அகழ்தல், துண்டுகளாக்குதல் எனப் பல பொருள்கள் உண்டு. (Latin-English Dictionary, page 77). ஆரம் (Aurum) என்ற சொல் பொன்னுக்கு வழங்கப்படுகிறது. (Latin-English Dictionary, page 750). ஆகையால் பொன் எடுக்கப்படும்–அகழப்படும்–இடம் (Caedo aurum) என்று வழங்கப்பட்டது. இச் சொல்லே தமிழில் **கடாரம்** என்று மருவி வந்துள்ளது. கடாரம் என்பது நவீன பர்மாவையும் (Burma), அதைச்சுற்றியுள்ள பிரதேசங்களையும் குறிப்பிட்டு நின்றது.

"தொடு கடற் காவற்கடு முரட் கடாரமும்"

—(S.I.I. Vol-II-107)

ஆகையால் கடற்கரைத் துறைமுகமாகயிருந்தது கடாரம். பர்மாவின் தலைநகரான இரங்கூன் (Rangoon) இருந்த இடமே அன்றைய கடாரமாக விளங்கிற்று. ஆனால், கடாரம் தீவல்லவே? ஒரு நாடன்றோ?

மற்றும் **காழகம்** என்பது பொன்னைக் குறிக்கும் சொல்லாகும்.

"கங்கைவாரியும் காவிரிப்பயனும்
ஈழத்துணவும் காழகத்தாக்கமும்"

—[**பட்டினப்பாலை** (190-191)]

இங்குக் காழகம் என்பது கிழக்கிந்தியத் தீவுகளுள் ஒன்றாகிய **சுமத்திரா** (Sumatra) என்ற தீவைக் குறிப்பிடுகிறது. அதற்குத் தொன்று தொட்டு ஸ்வர்ணத்வீபம் அதாவது "**பொன்தீவு**" என்று பெயர் வழங்கிவந்துள்ளது —(Vide The Beginnings of South Indian History by Dr. S. Krishnaswamy Iyengar M.A. page 124). இத் தீவினைத்தான் "**கிரிஸே தீவு**" என்று பெரிப்ளூஸ் (கி.பி. 50-80) நூலாசிரியர், பிளினி (கி.பி. 23-79), தாலமி (கி.பி. 119-161), ஸ்டிராபோ (கி.மு. 64—கி.பி. 24) முதலிய வரலாற்றாசிரியர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

இச் சுமத்திராவுக்கு (Sumatra) அடுத்துள்ள தீவான **ஜாவா** (Java) என்பது "**யவத்விபம்**" என்றும், அதற்கு அருகில் இருக்கும் **போர்னியோ** (Borneo) "**புட்பகத்திவு**" என்றும் வழங்கப்பட்டன. **இலங்கை** முன்னர் **சிங்களத் தீவு** என்று வழங்கப்பட்டது. சிங்கத்துக்குப் பிறந்த மகனால் ஆளப்பட்ட தீவு என்ற பொருள் கொண்டு சிங்கத் தீவு என்றும், நாளடைவில் அதுவே சிங்களத் தீவு என்றும் வழங்கப்பட்டது. சிங்கம் என்பது தமிழ்சொல்லே. (**யுவான் சுவாங்**-பக்கம் 170-171)

"சிங்களம் புட்பகம் சாவகம்-ஆதிய
தீவு பலவினும் சென்றேறி-அங்கு
தங்கள் புலிக்கொடி மீன்கொடியும்-நின்று
சால்புறக்கண்டவர் தாய்நாடு.[8]"

—(**மகாகவி பாரதியார்**—செந்தமிழ் நாடு 8)

ஆக, கடாரம் என்னும் சொல் **பர்மாவையும்** பொன்தீவு, **கிரிஸே** தீவு என்னும் சொற்கள் **சுமத்ராவையும்** குறிக்கின்றன என்பது தெரியவருகிறது.

சுமத்ரா தீவின் இருப்பிடம்: 0°·0′ × 100°·0′கி.

வெள்ளித் தீவு என்பது எங்குள்ளது என்பதை ஆராய்வோம்.

பெரிப்ளூஸில் இவ்விடம் **"ஆர்கிரே"** என்று வழங்கப்படுகிறது. **ஆர்கிரே** என்ற சொல் **"ரஜதம்"** என்ற வட சொல்லின் சிதைவே. **"ரஜதம்"** என்ற சொல்லுக்கு **"வெள்ளி"** என்பது பொருள்.

பர்மாவில், பெகு (Pegu) என்ற நகரம் உள்ள இடமே முன்னர் **மெர்குரா** (Mercura) என்று வழங்கப்பட்டது. மெர்குரா என்பது வெண்மை உலோகம் அதாவது பாதரசத்தைக் குறிப்பிடுகிறது. பிளினி (கி.பி. 23-79), பெகுவிலிருந்து தொடங்கும் தென்னசேரின் (Tenneserin) பிரதேசத்தை **அர்ஜெண்டினு ரீஜியோ** (Argentino Regio) என்று வழங்கினூர். **அர்ஜெண்டினு** என்ற சொல்லும் **"ரஜதம்"** என்ற சொல்லினடியாகப் பிறந்ததே. வெள்ளி நாட்டில் முக்கியத் துறைமுகப்பட்டினம் **சிதே** (Sitae) என்று பிளினி கூறுகிறூர். (**பிளினி**: புத்தகம் VI, அதிகாரம் 22). இத் துறைமுகமே இன்று சடாக் (Sadak) அல்லது **டவாய்** (Tavoy) என்று வழங்கப்படுகிறது. இச் சடாக்கின் இருப்பிடம்: 14°·07′ வ × 98°·18′ கி. ஆகையால் தென்னசேரின் என்று வழங்கப்படும் இன்றையப் பிரதேசமே அன்று **வெள்ளி** விளங்கும் **நாடாக** விளங்கிற்று என்பது உறுதியடைகிறது. அதற்கு மெர்குவி (Mergui) என்ற நவீன துறைமுகம் வெள்ளி கிடைப்பதை உறுதிப்படுத்துகிறது.

**தென்னசேரின்** என்பதை **"வெள்ளித் தீவு"** என்று பெரிப்ளூஸின் ஆசிரியர் வழங்கினூர். அதுவும் ஒரு தீவுபோன்று காட்சியளிக்கிறதல்லவா? மெர்குவி ஆர்ச்சிபலகோ என்று பல தீவுகள் அப் பிரதேசத்தின் மேற்கெல்லையில் காணப்படுகிறதன்றோ?

தென்னசேரின் பிரதேசத்தில் உள்ள மலையும் சடாக் ஹில் (Tsadag Hill) என்று வழங்கப்படுகிறது. இப் பெயரே பிளினியால் "சிதே" (Sitae) என்று வழங்கப்பட்டது. சடாக் என்னும் துறைமுகமே இன்று **டவாய்** (Tavoy) என்று வழங்கப்படுகிறது.

சடாக் ஹில்லின் இருப்பிடம்: 15°·00′ வ × 98° 00′ கி.

**32.** டிமிரிகா (Dimirica)

இது தமிழகம் என்பதன் கிரேக்க உச்சரிப்பே. மற்று அதிகாரம் 53, குறிப்பு-16 பார்க்கவும்.

**33.** அந்தந்தத் தீவுகளுக்கு (To the respective Islands)

அயல்நாடுகளிலிருந்து வரும் கப்பல்களில் உள்ள பண்டங்க இங்குக் குவிக்கப்பட்டு, மற்றும் அவை எந்தெந்தத் தீவுகளுக்கு போக வேண்டுமோ, அந்தந்தத் தீவுகளுக்குத் தனிப்படகுக மூலமாக ஏற்றுமதி செய்யப்பட்டு அனுப்பப்படுகின்றன. அவ்வா அனுப்பவேண்டிய பொருள்கள்: நாணய வகைகள், மதுபான குப்பிகள், பட்டுத்துணிகள், மத்தியதரைக்கடல் பவளம் கோதுமை, கண்ணுடிப் பொருள்கள், சில உயர்ந்த வகைக் கற்கள் முதலியன.

**34.** எகிப்து நாடு (Egypt)

எகிப்து நாடே உலக நாகரிகங்களுள் முதன்மைவாய்ந் நாகரிக நாடுகளுள் ஒன்ருகும். அதன் செழிப்புக்கு நைல்நதியே (River Nile) காரணமாகும்.

மற்றும் அதிகாரம் 28, குறிப்பு-1 பார்க்கவும்.

**35.** எபிபி (Epipi)

இது ஜூலை மாதத்தைக் குறிப்பிடும் கிரேக்கச் சொல்லாகும். மற்ற மாதங்களின் பெயர்களுக்கு அதிகாரம் 6, குறிப்பு-24 பார்க்கவும்.

---

# 57. ஹிப்பலஸ்

மேற் குறிக்கப்பட்ட கானே[1] யிலிருந்து இயூடிமான் அரேபியா[2] வரையில் உள்ள தொலைவு முழுவதையும் இவர்கள் சிறிய படகுகளில் ஏறி வளைகுடாவின் ஓரமாகவே அப் படகுகளைச் செலுத்திப் பயணத்தை முடிக்கின்றனர். துறைமுகங்களின் இருப்பிடங்களையும், அங்குள்ள கடலின் வழியாக எவ்வாறு வழியமைத்துக் கொள்வது என்பதையும்

முதன் முதலில் கண்டுபிடித்தவர் ஹிப்பலஸ்[3] என்பவரேயாவர். இவரே மாலுமிகள் யாவருக்கும் தலைமை வகிக்கும் தகுதியுடையவர். ஏனெனில், அக் காலத்தில் ஈடீஷியன் காற்றுகள்[4] எனப்படும் ஒரு பருவக்காற்று நம் பக்கமாக அடித்துக் கொண்டிருக்கும் பொழுது, வேறொரு காற்று இந்திய கடற்கரையிலிருந்து அடிக்கத் தொடங்கிற்று. இத் தென்மேற்குக் காற்றே ஹிப்பலஸ் என்று, அக் காற்றின் வழியைக் கண்டுபிடித்தவரின் பெயராலேயே வழங்கப்பட்டது. அக் காலம் முதற் கொண்டு இன்றைய வரையில் கப்பல்களில் சில கானேயிலிருந்து நேராகப் புறப்பட்டன. சில கப்பல்கள் வாசனைப் பண்டங்கள் நாட்டின் முனையிலிருந்து[5] புறப்பட்டன. டிமிரிகாவிற்கு[6] நியமிக்கப்பட்ட கப்பல்கள் அக் காற்று அடிக்கும் திசைக்குச் சற்று அப்பால் சென்று விடுகின்றன. ஆனால், பாரிகாஸாவிற்கும்[7] சித்தியாவிற்கும்[8] போகும் கப்பல்கள் கடற்கரை ஓரமாகவே சென்று மூன்று நாள்களுக்கும் மேற்படாமலே, தங்கள் பயணத்தைக் கவனமாக முடித்துக் கொண்டன. அதன்பிறகு மற்ற நாள்களுக்கு அவர்கள் அப் புதிய காற்று அடிக்கும் வழியைத் தொடர்ந்து சென்றார்கள். அவர்கள் அவ்வாறு சென்றது கடலின் நடுவழியாகவே அமைந்தது. கடல் ஓரமாகக் கடற்கரையில் இக் காற்று அடிப்பதில்லை. அதனால் தங்கள் கப்பல்களை வளைகுடாவின் வெளிப்புறமாகவே செலுத்தி, புதிய காற்றின் வழியாகச் சென்று, தாங்கள் சேரவேண்டிய நாட்டை அடைகின்றனர்.[9]

## விளக்கவுரை

**1. கானே (Canae)**

இது நவீன ஹிஸன் கோரப் (Hisn Gorab) என்பதைக் குறிப்பிடுகிறது. இதன் பெயர் பிர்அலி (Birali).

பைபிளில் (Bible) கானே குறிப்பிடப்பட்டுள்ளது. (ஏசேக்கியேல்: XXVII-23). இதில் குறிப்பிடப்படும் கானே, ஏடென், சேபியன் இம் மூன்று இடங்களும் அரேபியாவிலேயே உள்ளது.

கானேயின் இருப்பிடம்: 14°·10′ வ × 48°·28′கி.

மற்றும் அதிகாரம் 27, குறிப்பு-4 பார்க்கவும்.

### உ. இயூடிமான் அரேபியா (Eudaemon Arabia)

இது நவீன ஏடென் (Aden) இருக்கும் பகுதியைக் குறிப்பிடு கிறது. இது சிறந்த துறைமுகமாகவும், வாணிகச் சந்தை நகராக வும் விளங்கிற்று.

ஏடெனின் இருப்பிடம் : 12°·48′ வ × 45°·0′ கி.

இதன் முந்தைய பெயர் இயூடிமான் அரேபியா. இந் நகரத் தைக் காரிபியல் (Charibael) என்ற அரசர் (கி.பி. 40-70) அடியோடு அழித்துவிட்டதாக வரலாறு கூறுகிறது.

மற்றும் அதிகாரம் 26, குறிப்பு-5 பார்க்கவும்.

### 3. ஹிப்பலஸ் (Hippalus)

ஹிப்பலஸ் (Hippalus) என்பவர் ரோமநாட்டைச் சார்ந்த ஒரு மாலுமி. அவர் காற்றடிக்கும் திசையையும், தன்மை யையும் கவனித்து, கடல்வழியாகக் கப்பல்களைச் செலுத்தும் புதிய வழியொன்றைக் கண்டுபிடித்தார். அவ்வாறு அவர் கண்டு பிடித்த காலம் கி.பி. 47 ஆகலாம். அதற்கு முன்னர் இந்தியா விலிருந்து கப்பல்கள் ரோம் நாட்டுக்கும் எகிப்துக்கும் கடற்கரை யோரமாகவே சென்றன. ஆனால், இந்த மாதத்தில் இந்தக் காற்றுத் தொடங்கி, இந்த மாதத்துடன் முடிவடைகின்றது என்றும், அக் காற்றின் வழியே சென்று வெகு விரைவில் தம் பயணத்தை முடித்து விடலாம் என்றும் கண்டுபிடித்த பெருமை ஹிப்பலஸ் என்பவரையே சாரும். அதன் காரணமாகத்தான் அக் காற்றுக்கு அவர் பெய ராகிய ஹிப்பலஸ் (Hippalus) என்றே வைக்கப்பட்டது. இதன் பிறகு கப்பல்கள் நடுக்கடல் வழியாகச் செல்லத் தொடங்கின.

பிளினி (கி.பி. 23-79) ஹிப்பலசைப்பற்றிக் குறிப்பிடுகிருர்: "பின்னர், முதல் அரேபிய முனையாகிய சையாகரஸ் என்ற இடத் திலிருந்து பாதலம் (Patala) என்ற இடம் வரைக்கும் ஏற்படும் பயணம் ஏறக்குறைய 1335 மைல்கள் (2156 கிமீ.) ஆகும். அப் பயணத்தை மேற்குக் காற்றின் போக்குவழியாகச் சென்று, சௌகரி யமாக முடிக்கலாம். அம் மேற்குக் காற்று ஹிப்பலஸ் (Hippalus) என்ற பெயரால் வழங்கப்படுகிறது. (பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 26, பக்கம் 80).

### 4. ஈடீஷியன் காற்றுகள் (Etesian winds)

இக் காற்று ஆண்டுதோறும் ஜூலை மாதத்தில் முப்பது நாள்கள் இடைவிடாது அடிக்கும் குளிர் காற்று ஆகும். எகிப்திலிருந்து

பார்பரிகம் (சிந்துந்திக் கழிமுகம்) வருவதற்கு இக் காற்று மிகவும் உதவியாயிருந்தது.

பிளினியும் இக் காற்றை விவரித்துள்ளார் (**பிளினி: புத்தகம் II** அதிகாரம் 47)

மற்றும் அதிகாரம் 39, குறிப்பு-21 பார்க்கவும்.

**5. வாசனைப் பண்டங்கள் நாட்டின்முனை** (Spices-land Cape)

வாசனைப் பண்டங்கள் நாடு என்பது சோமாலிலாந்து, அரேபியா ஆக இரு நாடுகளையும் குறிக்கும். சோமாலிலாந்தின் முனை குர்டாபி முனை (Cape Guardaufi) என்பதாகும்; அரேபியா வின் முனை ஏடென், மூஸா என்பனவாகும். மூஸா என்பது நவீன மோசா (Mocha) ஆகும்.

குர்டாபி முனை இருப்பிடம்: 11°·49′ வ × 50°·20′ கி.

மூஸா (மோசா) இருப்பிடம் : 13°·0′ வ × 4}°·0′ கி.

**6. டிமிரிகா** (Dimirica)

இது தமிழகம் என்பதன் திரிபே. கா என்பது நாட்டைக் குறிக்கும் சொல்லாகும். ஆப்பிரி-கா, இண்டி-கா போன்று. இவ்விடத்துக்கு வரும் கப்பல்கள் ஹிப்பலஸ் காற்றைப் பயன்படுத்த வில்லை.

**7. பாரிகாஸா** (Barygaza)

இது பிருகு-கச்சா என்றதன் இணைப்பே. இன்றைய புரோச் (Broach) என்னும் துறைமுகத்தைக் குறிப்பதாகும்.

மற்றும் அதிகாரம் 41, குறிப்பு-2 பார்க்கவும்.

**8. சித்தியா** (Scythia)

இங்குச் சித்தியா (Scythia) என்பது சிந்துநதியின் கழிமுகத் தைக் குறிப்பிடுகிறது. அங்கு அப்பொழுது இண்டோ-பார்த்தியர் ஆண்டுவந்தனர்.

மற்றும், அதிகாரம் 38, குறிப்பு-12 பார்க்கவும்.

**9. சேரவேண்டிய நாட்டை அடைகின்றனர்** (Reaching their destination)

தாங்கள் சேரவேண்டிய நாடுகள் **அரேபியா**(ஏடென்), **ஆப்பிரிக்கா** (குர்டாபி) முனைகளாகும். மேலே குறிப்பு-5 பார்க்கவும்,

# 58. பராலியா, குமரிமுனை

பகாரேவுக்கும்[1] அப்பால், நல்ல சிவப்பு நிறம் பொருந்திய மலையொன்று[2] காணப்படுகிறது. அதன் பெயர் பைரான்.[3] மற்றொரு மாவட்டம் தெற்கு நோக்கிக் கடல் ஓரமாகவே பரவி நிற்கிறது. அதன் பெயர் பராலியா.[4] இதன் முதலிடம் பாலிநா[5] என்று பெயர்பெறும். அங்கு ஒரு நல்ல துறைமுகமும், கடற்கரை அருகில் ஒரு கிராமமும் காணப்படுகின்றன. இவற்றிற்கும் அப்பால் குமாரி[6] எனப்படும் ஓர் இடம் இருக்கிறது. அவ் இடத்திலேதான் குமரி முனையும்[7] ஒரு துறை முகமும் இருக்கின்றன. இவ்விடத்துக்குத் தனிமை நாடி, தம் மிகுந்த-மிஞ்சிய-வாழ்நாள்களை அர்ப்பணிக்கப் பலப்பல மக்கள் வந்து குழுமுகின்றனர். அவர்கள் இங்கு வந்து நீராடி, விரதம் காத்துத் தனிமையை விரும்பி நிற்கின்றனர்.[8] அதற்குக் காரணம், இங்கு முன்னொருகாலத்தில் தேவதை ஒன்று வாழ்ந்து, தினமும் நீராடி வந்ததாகக் கூறப்படுகிறது.[9]

## விளக்கவுரை

**1. பகாரே** (Bacarae)

இது பராகே எனவும் வழங்கப்பட்டது. பராகே பொரக்காடு (Porakkad) என்பதைக் குறிப்பிடுகிறது. இங்கு மலையாள நாட்டு வாசனைப்பண்டங்கள் யாவும் கொண்டு குவிக்கப்பட்டு, அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன.

பொரக்காடின் இருப்பிடம்: 9°·22′வ × 76°·22, கி.

மற்றும் அதிகாரம் 55, குறிப்பு-1 பார்க்கவும்.

இங்கு மிளகு ஏற்றுமதி அதிகம். இது நவீன ஆலப்புழை (Alleppey) இருந்த இடத்துக்கருகில் முன்னர் ஒரு துறைமுகமாக இருந்தது.

**2. சிவப்பு நிறம் பொருந்திய மலை** (Red coloured Mountain)

இம் மலை செங்குன்றம் என்று குறிக்கப்படுகிறது. இது குட்ட நாட்டைச் சார்ந்தது. இச் செங்குன்றம் சிலப்பதிகாரம் எனும் காவியத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

"அவுணரைக்கடந்த சுடரிலை நெடுவேள்
நெடுவேள் குன்றம் அடிவைத்தேறு"

—[சிலப்பதிகாரம், கட்டுரைகாதை (189-190)]

இங்கு நெடுவேள் குன்றம் என்பதற்கு அடியார்க்கு நல்லார் "திருச்செங்குன்று" என்று விளக்கியுள்ளார். அரும்பதவுரை யாசிரியர் கூறிய 'திருச்செங்கோடு' என்பது பொருந்தாது. இத் திருச்செங்குன்று, இன்று செங்குன்னம் என்று மலையாள மொழியில் கூறப்படுகிறது. இச் செங்குன்னம் (Chengunnam) கொல்லத்துக்கு (Quilon) 58 மைல்கள் (93 கிமீ) தொலைவில், வடகிழக்குத் திசையில் உள்ளது. இம் முருகன் கோயில் அருகிலேயே 3 மைல் (5 கிமீ) தொலைவில், வைணவத் திருமால் தலமாகிய திருப்புலியூர் எனும் தலமும் உள்ளது (அதிகாரம் 56, குறிப்பு-21 பார்க்க).

இந்தச் செங்குன்னம் எனும் இடமே சிவந்த மலையாகப் பெரிப்ளூஸ் ஆசிரியரால் குறிப்பிடப்பட்டது. இம் மலை ஏலக்காய் மலையில் (Cardamon Hills) ஒரு குன்றாக விளங்கிற்று. இதுதான் கண்ணகி வேங்கை மரத்தடியில் ஒதுங்கி நின்ற இடமாகும்.

செங்குன்றின் இருப்பிடம் : 9°·27′ வ × 76°·52′ கி.

## 3. பைரான் (Pyrrhon)

இது ஆனை மலை (Anaimalai) என்பதைக் குறிப்பிடுகிறது. விராணி மலை என்று முன்னர் வழங்கப்பட்ட மலை, பின்னர் அதுவே தமிழர்களால் ஆனை மலை என்று வழங்கப்பட்டது. விராணி என்பதற்குப் பொருள் ஆனை —(Vide Tamil Lexicon, Vol. VI, page 3697) ஆக, விராணி மலை என்பதே கிரேக்க உச்சரிப்பில் பைரான் (Pyrrhon) மலை என்றே வழங்கப்பட்டது. ஏலக்காய் மலை, ஆனை மலையில் ஒரு பகுதி. ஆனை மலைதான் முன்னர் தோன்றிய மலையின் பெயர்; அதன் வட பகுதி ஆனை மலையாகவும் (Anaimalai), தென் பகுதி ஏலக்காய் மலையாகவும் (Cardamon Hills) விளங்கிற்று.

ஆனை மலையின் இருப்பிடம்: 9°·27′வ × 76°·52′கி.

## 4. பராலியா (Paralia)

கன்னியாகுமரிக்குக் கன்னியம்பலம் என்ற பெயர் உள்ளதே போல, திருமால் பள்ளிகொண்ட திருவனந்தபுரம் (Trivandrum) பள்ளியம்பலம் என்று வழங்கப்பட்டது. இதுவே கிரேக்கர்களால் பராலியா என வழங்கப்பட்டது. பரால் (Paral) என்றால் கடற்கரை

என்று பொருள். அங்குள்ள கோயில் பராலியா (Paralia) என்று வழங்கப்பட்டது பொருத்தமே. இங்கு அனந்தபத்மநாபர் திருச் சயனம் கொண்டுள்ளார்.

பராலியா (திருவனந்தபுரத்தின்) இருப்பிடம்: 8°·29′வ × 76°·59′கி.

தமிழ்நாட்டில் இது போன்ற அம்பலங்கள் பல உள்ளன. பொன்னம்பலம், சிற்றம்பலம் முதலியன.

மற்றும், திருமால் பாற்கடலில் பள்ளிகொண்டுள்ளார். அவர் பிரளயம் வந்துற்றபோதும் ஆலிலைமேல் சிறு குழந்தை வடிவமாக உலகங்கள் யாவற்றையும் தம்வயிற்றுள் அடக்கி வைத்திருப்பார் என்று புராண வரலாறுகள் கூறுகின்றன. ஆகவே, அங்கே முதலில் இருந்த பெயர் பிரளய ஈசர் என்பதே. இதுவே பரலீசர் என்ருகி, பரலீசரே 'பராலியா' என்று கிரேக்கர்களால் உச்சரிக்கப்பட்டது என்று சொல்வதும் பொருத்தமானதே.

பரமீசன் (திருமால்) இருந்த இடம் என்பது பராலியா எனப் பட்டதும் உண்டு.

"பண்ணுளாய்! கவிதனுள்ளாய்! பத்தியினுள்ளாய்! பரமீசனே"

—(திருவாய்மொழி: 7-1-6)

திருவனந்தபுரம் (Trivandrum) என்பது. திரு அனந்தசயனன் உள்ள புரம் என்ற பொருள் தரும். இது திருவாங்கூர் பகுதியைச் சார்ந்தது. திருவாங்கூர் எனும் சொல் திருவிதாங்கோடு என்பதன் திரிபே. 'அதங்கோட்டு ஆசான்' என்று தமிழ் இலக்கியம் பேசுகிறது. அதங்கோடு என்பது திருவிதாங்கோடு என்பதன் குறுக்கமே. அதங்கோடு என்ற சொல்லிலிருந்துதான் திருவிதாங் கோடு என்ற ஊர்ப்பெயர் உருவாயிற்று.

### 5. பாலிதா (Balitha)

இப்பெயருள்ள இடம் திருவனந்தபுரத்தை அடுத்த கடற்கரைப் பகுதியில் இருந்திருக்கவேண்டும். கி.பி. 79ஆம் ஆண்டு ஆகஸ்டு 23, 24-ல் வெசூவியஸ் எரிமலை வெடித்ததனுல் ஒரு பெரும் கடற்கோள் ஏற்பட்டதென வரலாற்ருசிரியர்கள் கூறியுள்ளனர். அதனுல் உகிலன் பல இடங்களில் கடல் புகுந்து, கடற்கரைப் பகுதி ஊர்கள் சிலவற்றை அழித்துவிட்டன. அவ்வாறு அழிந்த ஊர்களுள் இதுவும் ஒன்ருகும் (பிளினி: முன்னுரை பக்கம் x)

### 6. குமாரி (Kumari)

இவ்விடம் இன்று குமரிமுனை (CapeCamorin) என்று வழங்கப் படுகிறது. இது குமரித்தெய்வம் தவம்கிடந்த இடமாகும். அதன் காரணமாகத்தான், குமாரி, குமரிமுனை என்று வழங்கப்படுகிறது.

## 7. குமரிமுனை (Cape Kumari or Camorin)

இது கன்னியாகுமரி (Cape Camorin) என்பதைக் குறிப்பிடுகிறது. பழம்பெருங்கால முதற்கொண்டு இம்முனை புகழ்பெற்று விளங்கிற்று.

வரலாற்றுசிரியர்களான ஸ்டிராபோ (கி.மு. 74-கி.பி. 24), தாலமி (கி.பி. 119-161), மார்க்கோபோலோ (கி.பி. 1254-1324) இவர்கள் குமரி முனையைப்பற்றிக் கூறியுள்ளனர். தாலமி இம் முனையைப் புரோமெண்டோரியம் குமாரி (Promentarium Cumarie) என்று வழங்கினர். முன்னர் இது ஒரு நாடாக விளங்கிற்று. இக் குமரியும் அதைச்சார்ந்த நாடும், மலையும் குமரி நாடு எனப் பெயர்பெற்றது.

> "வேங்கடம் குமரித் தீம்புனல் பௌவமென்று
> இந்நான்கெல்லை தமிழது வழக்கே."
>
> —(பழம்பாடல்)

என்ற பாட்டால் குமரி முனையின் இருப்பை அறியலாம். இங்குக் குமரிக்கோடு என்ற ஒரு மலை இருந்ததாகவும், அதன் காரணமாகக் குமரியாறு (குமரித் தீம்புனல்) உண்டானதாகவும், பிறகு மலையையும் ஆற்றையும் சுற்றி நாடு உண்டாயிற்றென்றும், மலையும் வளமிக்க ஆறும் இருந்த காரணத்தால், அந் நாடு எல்லா நலங்களும், செல்வங்களும் நிறைந்து விளங்கிற்று என்றும் வரலாறுகள் கூறுகின்றன. ஆனால், இவையாவும் ஒரு கடல்கோள் காரணமாக அழிந்துவிட்டன என்றும் கூறப்பட்டுள்ளது.

> "பஃறுளி யாற்றுடன் பன்மலையடுக்கத்துக்
> குமரிக்கோடும் கொடுங்கடல் கொள்ள."
>
> —[சிலப்பதிகாரம்-காடுகாண் காதை (19-20)]

இதன்மூலமாக, குமரிநாடு கடல்கோளால் அழிந்தது என்று பெறப்படுகிறது. கடல்கோள் காரணமாக, மேற்குக் கரையிலிருந்த முசிறி, கிழக்கேயிருந்த பாதலம், குமரிநாடு ஆகிய யாவும் சிதைவுற்றுக் கடலில் மூழ்கிவிட்டன. இக் கடல்கோள் நிகழ்ந்த நாள் கி.பி. 79 ஆம் ஆண்டு, ஆகஸ்டுத் திங்கள் 23, 24 ஆகும். இதற்கடுத்து நிகழ்ந்த கடற்கோளால் (கி.பி. 3 ஆம் நூற்றாண்டு இறுதி) காவிரிப்பூம்பட்டினமும், மகாபலிபுரமும் (Mahabalipuram) அதாவது மாமல்லபுரமும் அழிந்துவிட்டன.

ஆக, இக் குமரி நாட்டைச் சார்ந்த எல்லாப்பகுதிகளும் மறைந்தொழிய, அம் முனைமட்டும் இன்றும் குமரிமுனை (Cape Camorin)

என்ற பெயரால் வழங்கப்படுகிறது. (மார்க்கோபோலோ: பக்கம் 50)

**8. தனிமையை விரும்பி நிற்கின்றனர்** (In pursuit of solitude)

குமரிமுனையில் மூன்று கடல்களும் சேர்வதால், அது திரிவேணி சங்கமம் என்றும் கருதப்படுகிறது. அங்கு நீராட இந்தியாவின் பல பாகங்களிலிருந்தும் மக்கள் வருகின்றனர். அங்கே இருக்கும் அமைதியான நிலைமை பயணிகளை வெகுவாக ஈர்க்கிறது. ஆகவே ஆண்டுதோறும் சிலர் அன்றாடத்தொல்லைகளினின்று விடுபட—அமைதிபெற—இக் குமரிமுனைக்கு வந்தவண்ணம் இருக்கின்றனர்.

"குமரியம் பெருந்துறை கொள்கையிற் படிந்து"

—(**சிலப்பதிகாரம்:** அடைக்கலக்காதை 15)

குமரிநீராடுதல் பழம்பெருங்காலந்தொட்டு நடைபெற்று வருகிறது.

**9. தேவதை தினமும் நீராடிவந்தது** (Goddess had her daily bath here)

இது கன்னியா குமரி எனும் கடவுள் கோயில் கொண்டுள்ள இடம் குமரிமுனை. தேவதை நீராடிவந்தது என்பது கன்னியா குமரியின் வரலாற்றின் ஒரு பகுதியாகும்.

"நீலத் திரைக்கட லோரத்திலே—நின்று
நித்தம் தவம்செய் குமரிஎல்லை—வட
மாலவன் குன்றம் இவற்றிடையே—புகழ்
மண்டிக் கிடக்கும் தமிழ் நாடு."

—(**மகாகவி பாரதியார்:** செந்தமிழ்நாடு-5)

இவ்வாறு அழகு பொங்கத் தவம் கிடக்கும் கன்னியா குமரியின் வரலாறு வருமாறு:

"முகாசுரன், பாணுசுரன் எனும் இரு அரக்கர்களின் இன்னலைத் தாங்கமுடியாத தேவர்கள் சிவபெருமானிடம் முறையிட்டனர். சிவபிரான் தேவர்களைக் காப்பதாகக் கூறி, சக்தியாகிய தேவியைக் காளிரூபமாகக் காளிகட்டம் எனும் கல்கத்தாவிற்கும், அம்சமாகிய பகவதியைக் கன்னிகை உருவமாகத் தென்னாட்டுக்கும் அனுப்பிவைத்தார். பகவதி குமரிமுனைக்கு வந்துசேர்ந்தாள்.

கன்னியா குமரியை மணக்கத் திரிமூர்த்திகளும், மற்ற தேவர்களும், கன்னியம்பலம் எனும் இடத்தில் ஒன்றுகூடினர்.

தேவிக்குத் திருமணம் நடந்தால், அவள் சக்தி குறைந்து, அரக்கர்களை அழிக்கமுடியாது போய்விடும் என்ற காரணத்தால், நாரதர் அங்குவந்து, சிவபெருமானுக்கு அம்பிகையை மணக்க மூன்றுநிபந்தனைகளைக்கூறினர். அவை: 1. கண்களில்லாத்தேங்காய் 2. கணுவில்லாதகரும்பு 3. காம்பில்லாத மாங்காய் ஆகிய இவற்றைக் கோழி கூவுவதன் முன்னர்க் கொண்டுவரவேண்டும் என்று நிபந்தனைகளிட்டார். சிவபெருமான் அப் பொருள்களைச் சேகரித்துக் கன்னிக்குமரி இருக்கும் இடத்தை நெருங்கினர். இதை யறிந்த நாரதர் ஒரு கோழி போன்று உருவமெடுத்து, அருகில் இருந்த பாறைமீது ஏறி, விடிவதற்குள்ளாகவே கோழிகூவுவதுபோல் கூவினர். கோழி கூவிவிட்டது என்பதை அறிந்த சிவபெருமான் உடன் திரும்பிவிட்டார். அப் பொருள்களை அப் பாறைமீது விட்டு வைத்துத் திரும்பினர். அப் பாறை இன்றும் ‘வழுக்குப்பாறை’ என்று வழங்கப்படுகிறது.

திருமணக்கோலம் கொண்டிருந்த குமரிதேவி, நீண்டநேரம் காத்திருந்தும், சிவபெருமானைக் காணவில்லை. விடியற்காலை வந்தவுடன், திருமணத்துக்காக ஆக்கப்பட்டிருந்த சாதம் முதலியவற்றை மண்ணுகவும், மணலாகவும் மாறும்படிச்செய்து, அன்று முதல் பரமேஸ்வரனை அடைய கன்னித் திருக்கோலத்துடனே தவமிருந்து காட்சியளித்து வருகிருள். அக் கடற்கரையிலுள்ள மணல், அரிசி, நொறுங்கிய அரிசி, தவிடு ஆகிய உருவில் இருப்பது இன்றும் காணலாம்.

‘வழுக்குப்பாறை’ சுசீந்திரத்திற்கு 1 மைல் ($1\frac{1}{2}$ கிமீ) தொலைவில் கிழக்கில் இன்றும் காணப்படுகிறது. அதில் கோழிக்கால் சுவடும், சிவபெருமானின் திருவடிச் சின்னங்களும் காணப்படுகின்றன.

காசி விஸ்வநாதரை தரிசிப்பவர்கள், அவர்தம் தேவியாகிய கன்னியா குமரியையும் தரிசித்தால்தான் முழுப்பயன் அடைய முடியும் என்ற நம்பிக்கையால், வடநாட்டிலிருந்து பலர் இன்றும் கன்னியா குமரிக்கு வந்து, தேவியின் தரிசனம் பெற்றுச் செல்கின்றனர்.

முற்காலத்தில் யோகியர்களும், ரிஷிகளும் இங்கேயே தம் இருப்பிடங்களை ஏற்படுத்திக்கொண்டு வாழ்ந்தனர் என்றும் கூறப்படுகிறது.

கன்னியா குமரி முன்னர் கேரளநாட்டுடன் இணைந்திருந்தது. இன்று அது ஒரு தனி மாவட்டமாகத் தமிழ் நாட்டுடன் சேர்க்கப்பட்டுள்ளது.

கன்னியா குமரியின் இருப்பிடம் : 8°·4′வ × 77°·36′ கி.

# 59. கோல்கே

குமரியிலிருந்து[1] புறப்பட்டுக் கோல்கே[2] என்ற துறை முகத்தை அடையலாம். அங்கு முத்துக் குளியலிடம்[3] காணப் படுகிறது. அம் முத்துக் குளியல்கள் யாவும் தண்டனைக் குள்ளாக்கப்பட்ட குற்றவாளிகளால் நடத்தப்பெறுகின்றன. அவ்விடம் பாண்டியன்[4] எனும் அரசனைச் சார்ந்ததாகும். கோல்கேவுக்கு அப்பால் மற்றொரு நாடு வருகிறது. அதன் பெயர் கடற்கரை நாடு[5] என்று கூறப்படுகிறது. அது ஒரு விரிகுடாவில்[6] உள்ளது. அந் நாட்டின் உள்ளே சென்றால் ஆர்கரு[7] எனும் ஊர் காணப்படும். இவ்விடத்திற்கு மட்டுமே அக் கடற்கரையில் எடுக்கப்படும் முத்துகள் யாவும் கொண்டு வரப்படுகின்றன. வேறெந்த ஊருக்கும் அவை எடுத்துச் செல்லப்படுவது கிடையாது. மற்றும் அங்கிருந்து 'ஆர்கருத் துணிகள்'[8] எனும் புகழ்மிக்க மஸ்லின் துணிகள் பெரும் அளவில் ஏற்றுமதி செய்யப்படுகின்றன.

## விளக்கவுரை

**1. குமரியிலிருந்து (From Cumari or Cape Camorin)**

இது குமரிமுனை என்று வழங்கப்படும். இது நீராடும் புண்ணியத் தலமாகும். இந்தியா தொடங்கும் இடமும் இதுவே. மற்றும் அதிகாரம் 58, குறிப்பு-7 பார்க்கவும்

குமரிமுனையின் இருப்பிடம்: 8°·4′ வ × 77°·36′கி.

**2. கோல்கே (Colchae)**

இது கொற்கை (Korkai) எனப்படும் இடத்தைக் குறிப்பிடு கிறது. இது தாமிரபருணியின் கழிமுகத்தில் முன்னர் விளங்கிய ஒரு முக்கியத் துறைமுகம். இப்பொழுது இது ஒரு சிறிய கிராமமாகத் திருநெல்வேலி மாவட்டத்தில் விளங்குகிறது. பெரிப்ளூஸ் ஆசிரியர் காலத்தில் (கி.பி. 50-80) இது பாண்டிய அரசர் ஆட்சிக்கு உட்பட் டிருந்தது. இது புகழ்மிக்க துறைமுகமாக விளங்கிற்று. பல நூற்றாண்டுகளாக ஆற்றில் அடித்துவந்த வண்டல்மண் குவிந்த தாலும், கடல்கோளின் இயற்கை இன்னல்களாலும், இத் துறை முகம் மறைந்து, நாளடைவில் ஒரு சிறிய கிராமமாகவே காட்சியளித் தது. மார்க்கோபோலோ (கி. பி. 1254-1324) காலத்தில், காயல்பட் டினம் என்பதே துறைமுகமாயிருந்தது என்றும், முன்னர்த் துறை

முகம் மண்ணால் மறைந்துவிட்டது என்றும் கூறுகிறார் (**மார்க்கோ போலோ:** பக்கம் 46). இப்பொழுது திருநெல்வேலி வாணிகம் யாவும் தூத்துக்குடி (Tuticorin) துறைமுகம் வழியாகவே நடைபெறுகிறது. முன்னர் இப் பகுதியில் முத்து முகிழ்ந்து எடுக்கப்பட்டது. ஆனால் இன்று முத்துச் சலாபம் வாணிகமும், முத்துச்சிப்பி எடுத்தலும் தூத்துக்குடியிலேயே நடைபெற்றுவருகிறது. கொற்கை, பாண்டியரின் துறைமுகம்; மதுரை தலைநகரம். கொற்கை இருந்த இடமே கபாடபுரம் என வழங்கப்பட்டது.–(**தமிழர் வரலாறு:** பி.டி. ஸ்ரீநிவாச ஐயங்கார், பக்கம் 242)

கொற்கையின் இருப்பிடம் : 8°·40′வ × 78·15′ கி

கொற்கை கோமான் கொற்கையம் பெருந்துறை.''—**ஐங்குறுநூறு** (188) என்பதால் இங்கு ஓர் அரசன் இருந்தான் எனத் தெரிய வருகிறது.

**3. முத்துக்குளியலிடம்** (Pearl Fisheries)

முன்னர் கொற்கையில் முத்து எடுத்து வாணிகம் செய்யப்பட்டது. இம் முத்தை எகிப்தியப் பேரழகி கிளியோபாத்ரா அணிந்திருந்ததாக வரலாறு கூறுகிறது. இப்பொழுது அத் துறைமுகமே கிடையாது. காயல்பட்டினம் என்பதே இப்பொழுது துறைமுகமாக விளங்குகிறது. முத்துக்குளித்தலைப் பற்றி மார்க்கோபோலோ விரிவாகக் கூறியுள்ளார்—(**மார்க்கோபோலோ:** பக்கம் 16-19)

**4. பாண்டியன்** (Pandeon)

இந் நாட்டைஆண்டுவந்த அரசன் பாண்டியமன்னர் மரபினன் ஆவான். பாண்டியன் பெயர் கூறப்படவில்லை. பாண்டிய மன்னன் தென்னாட்டுப் பாண்டிய மரபினன் ஆவான். வடநாட்டுப் பாண்டவ வமிசத்தினருடன் ஒன்றுபடுத்திக் குழம்பக்கூடாது. பாண்டியர் என்பது வளைந்தநாட்டை எல்லையாகவுடைய அரசன் என்று பொருள்படும். பாண்டஸ் (Pondus), பாண்டில் என்னும் சொற்களுக்கு வளைந்த எனும் பொருள் உண்டு (**பிளினி:** புத்தகம் VI. அதிகாரம் 22, குறிப்பு-45, பக்கம் 51).

மற்றும் அதிகாரம் 54, குறிப்பு-5 பார்க்கவும்.

''முடி கெழுவேந்தர் மூவருள்ளும்
படைவிளங்கு தடக்கைப் பாண்டியர் குலத்தோர்
அறனும் மறனும் ஆற்றலும் அவர்தம்''

— [**சிலப்பதிகாரம்:** கட்டுரைக்காதை, கட்டுரை (1-3)]

**5. கடற்கரை நாடு** (Coastal Country)

இது சோழமண்டலப் பகுதியைக் குறிக்கிறது. இதுவே கோர மாண்டல் கோஸ்ட் (Coromandal Coast) என வழங்கப்படுகிறது. Chola என்ற சொல்லைச் சோழ என்பதற்குப் பதிலாக, கோல, கோர என்று படித்து, அதை எழுதி, சோழ மண்டலத்தைக் கோர மண்டலம் ஆக்கி, அதை நீட்டித்து, கோரமாண்டல் கோஸ்ட் என்று திரித்துவிட்டனர். சோழ மண்டலம் எங்கே! கோர மண்டலம் எங்கே! எழுதினவன் ஏட்டைக் கெடுத்தான் எனும் பழமொழிக் கிணங்க இது திரிந்தது.

மற்றும், இலத்தீன் மொழியில் K எனும் எழுத்து கிடையாது. முன்னர் இருந்தது. பின்னர் மறைந்துவிட்டது. K எல்லாம் C என்பதைக்கொண்டே எழுதுவர். கான்ஸல்-Consul, குறள்-Cural. கன்ஸோலர்-Consolor, காதரின்-Catherine. சிலியம்-Cilium, சினுரா-Cinara, சிங்கா-Cinga, முதலியன (சி) என்னும் உச்சரிப்பையே கொண்டுள்ளன. கார்டா-Chorda, கோரஸ்-Chorus, கிரிஸே-Chrysae முதலியன (Ch) என்பதை (K) என்ற உச்சரிப்பைக் கொண்டன. —(Vide Latin-English Dictionary, page: 94-95)

ஆகையால் Coramandal என்பதை, Cயை K ஆகக்கொண்டு கோரமாண்டல் என்று உச்சரித்துவிட்டனர். எழுதினது சரியே; உச்சரிப்பில் தவறு காணப்பட்டது; அத் தவறே உறுதியாக நிலைத்து விட்டது.

மார்க்கோபோலோ (கி.பி. 1254-1324) இந்நாட்டை (Maphar Country) என்று வழங்கினர்.—(**மார்க்கோபோலோ:** பக்கம் 13)

**6. ஒரு விரிகுடாவில் உள்ளது** (Interned in a Bay)

இவ் விரிகுடா வங்காள விரிகுடா (Bay of Bengal) என்று வழங்கப்படுகிறது. மற்றும் மன்னுர் வளைகுடாவையும் (Gulf of Munnar) குறிப்பிடலாம்.

**7. ஆர்கரு** (Argaru)

இது உறையூர் (Woriyur) எனும் ஊரைக் குறிப்பிடுவதாகும். உறையூர் சோழரின் தலைநகரமாயிருந்தது. அவர்களுடைய துறைமுகம் காவிரிப்பூம்பட்டினம் (Kaveripoompattinam). மற்றும் அது பூம்புகார் என்றும், புகார் என்றும் வழங்கப்பட்டது.

பிளினி (கி. பி. 23-79) இதை ஒதன்பரோ (உறந்தையூர்) என வழங்கினர்.

—(**பிளினி:** புத்தகம் IV, அதிகாரம் 23, பக்கம் 38-48)

இப்பொழுது இது திருச்சி அருகில் உள்ள ஒரு சிற்றூராக உள்ளது.

"ஊர் எனப்படுவது உறையூரே."

என்பது உறையூரைப்பற்றி வழங்கும் பழமொழி. மற்றும் இவ்வூர் உறந்தை, உறந்தையூர் என்றும் வழங்கப்பட்டது.

"உறையூர் நொச்சி யொருபுடை யொதுங்கி"

—[சிலப்பதிகாரம்: நாடுகாண்காதை 243]

"காவிரிப் படப்பை உறந்தை அன்ன"

—[அகநானூறு: 385]

என்ற அடியால் உறையூர் சோழருடைய தலைநகரமாயிருந்தது என்பது தெரிய வருகிறது. இது கோழியூர் எனவும் நவிலப்படும்.

இவ் உறையூரில் சோழர் காலத்தில் பெரும்புலவர்கள் பலர் வாழ்ந்திருந்தனர்:

(1) உறையூர் இளம் பொன் வாணிகனார் (புறம் 264)
(2) உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் (புறம் 13, 135, 375)
(3) உறையூர் கதுவாய்ச் சாத்தனார் (நற்றிணை 370)
(4) உறையூர் பல்காயனார் (குறுந்தொகை 374)
(5) உறையூர் மருத்துவன் தாமோதரனார் (புறம் 60, 170; அகம் 133, 257)
(6) உறையூர் முதுகண்ணன் சாத்தனார் (புறம் 27-30, 325)
(7) உறையூர் முதுகூத்தனார் (அகம் 137, 329; புறம் 331; குறுந்தொகை 353)

(8) உறையூர் முதுகொற்றனார் (குறுந்தொகை 221, 390) மற்றும் பலர்.

இது அரசன் உறையுள் (தங்கும் இடம்) என்ற காரணத்தால், உறையூர் என்றாயிற்று என்பர். இதுவே சோழர் தலைநகரமாயிருந்தது. திருச்சிராப்பள்ளி நெடுநாள் பின்னர் உருவான நகரமேயாகும்.

உறையூரின் இருப்பிடம்: 10°·49′ வ × 78°·2′ கி.

**8. ஆர்கரு துணிகள் (Argaru cloths and muslins)**

இது அக் காலத்திலேயே உறையூர் சேலைகளுக்குப் புகழ்பெற்ற இடம் ஆகும். சேலை மிக மெல்லிய நூலால் நெய்யப்பட்டிருக்கும். ஒரு புடவையை ஒரு தேங்காய் மூடியில் வைத்து அடக்கி, அயல் நாட்டு அரசிக்குப் பரிசாக அனுப்பிய வரலாறும் உண்டு. ரோமப் பேரரசில் உறையூர் ஆடைகளை, ரோம அரசர்களும், பெண்களும் விரும்பி வாங்கினர் என்று வரலாறு கூறுகிறது. சாதாரண ஆடைகளும், கரைவேய்ந்த, சரிகை வேலைப்பாடுடன் கூடிய ஆடைகளும் கூட அனுப்பப்பட்டன. இன்றைக்கும் உறையூர் சேலைகளுக்குத் தனி மதிப்பு உண்டு.

---

# 60. டிமிரிகா, காமாரா, சோபட்ணு

இந்தப் பிரதேசத்தின் வாணிகச் சந்தை கூடும் நகரங்களில் டிமிரிகாவிலிருந்தும்,[1] வடக்கிலிருந்தும் உள்ள துறைமுகங்களிலிருந்து[2] வரும் கப்பல்கள் தங்குவதற்கு வசதியான இடங்களில் முதன்மைத்தானம் வகிப்பது காமாரா[3] என்பதாகும். அதற்கடுத்தது பொதுகா[4] என்பது. அதற்கடுத்தது சோபட்ணு[5]. இவற்றில் அந் நாட்டுக் கப்பல்கள் கடலோரமாக டிமிரிகா வரையிலும் தங்குகின்றன. ஒரே மரத்தில் செதுக்கப்பட்ட ஒரு கட்டையுடன், மற்றொரு மரத்தில் செதுக்கப்பட்ட வேறொரு கட்டையைப் பிணைத்துவிடப்பட்டதே பெரிய கப்பல் என்று வழங்கப்படும். இதன் பெயர் சங்காரா[6] என்பதாகும். ஆனால், கிரிஸே,[7] கங்கே[8] முதலிய நாடுகளுக்குச் செல்லும் கப்பல்கள் கொலாண்டியா[9] என்று வழங்கப்படுகின்றன. அவை பார்வைக்குப் பெரிய உருவம் படைத்தனவாகவும் காட்சியளிக்கின்றன. இவ்விடங்களில் இறக்குமதி செய்யப்படும் பொருள்கள் யாவும் டிமிரிகாவில்[10] செய்யப்பட்டனவேயாகும். மற்றும், எப்பொழுதேனும், எகிப்திலிருந்து[11] கொண்டுவரப்படும் சரக்குகளில் பெரும்பாகம் இங்கு வந்து குவிக்கப்படுகின்றன. இவை டிமிரிகாவிலிருந்து வாங்கப்படும் பொருள்கள் யாவற்றினோடும், மற்றும் பராலியா[12] வழியாக எடுத்துச் செல்லப்படும் பொருள்களோடும் ஒன்றுசேர்க்கப்பட்டுக் கொண்டுவரப்பட்டனவாகும்.

## விளக்கவுரை

**1. டிமிரிகாவிலிருந்து (From Dimirica)**

இது தமிழகம் என்பதன் கிரேக்க உச்சரிப்பே. இத் தமிழகத்தின் கடற்கரையோரமாக அன்று விளங்கிய முக்கியத் துறைமுகம் மலங்கே (மாமல்லபுரம்), காவிரிப்பூம்பட்டினம், சென்னை திருவல்லிக்கேணி. அயல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட வேண்டிய பொருள்களை ஏற்றிக்கொண்டு கப்பல்கள் தமிழ் நாட்டிலிருந்து காவிரிப்பூம்பட்டினத்துக்கு வந்தன.

**2. வடக்கிலிருந்து வரும் கப்பல்கள் (Ships from northern parts)**

வடக்கிலிருக்கும் பாரிகாஸா முதலிய துறைமுகங்களிலிருந்து கடற்கரையோரமாக வந்த கப்பல்கள் தொண்டி, முசிறி முதலிய துறைமுகங்களுக்குச்சென்று, அங்குள்ள பண்டங்களை ஏற்றிக் கொண்டு காவிரிப்பூம் பட்டினத்துக்கு வந்தன. நிலவழியாகவும் வாணிகப் பண்டங்கள் இங்குவந்து சேர்ந்தன. அன்றைக்கு மிகச் சிறந்த துறைமுகமாகக் காவிரிப்பூம்பட்டினம் விளங்கிற்று.

**3. காமாரா (Camara)**

இச் சொல் காவிரிப்பூம்பட்டினத்தைக் குறிப்பிட்டதாகும். இது சோழநாட்டுத் துறைமுகத்தைப் பற்றிச் சிலப்பதிகாரம், மணிமேகலை, பட்டினப்பாலை முதலிய பழந் தமிழிலக்கியங்கள் விதந்தோதுகின்றன. பிளினியும் (கி.பி. 23-79), தாலமியும் (கி.பி. 119-161) இத் துறைமுகத்தையும் இதைச்சார்ந்த ஊரையும் காபேரிஸ் எம்போரியம் (Chaberis Emporeum) என்று வழங்கினர். காபேரிஸ் என்னும் சொல் காவிரி என்னும் சொல்லின் கிரேக்க உச்சரிப்பாகும். ஆகையால் கி. பி. முதல், இரண்டாம் நூற்றாண்டுகளில் இத் துறைமுகம் மிக்க புகழுடைந்திருந்தது என்பது மேல்நாட்டு வரலாற்றாசிரியர்கள் வாயிலாக அறிகிறோம். இது பூம்புகார், புகார் என்றும் வழங்கப்பட்டது.

தமிழ் இலக்கியங்களில் காவிரிப்பூம்பட்டினம் குறிப்பிடப் பட்டுள்ளது:

"காவிரிப்படப்பை நன்னகர் புக்கேன்"

—(**மணிமேகலை:** ஆபுத்திரனோடு மணிபல்லவம் அடைந்த காதை 16)

"காவிரி நாடுங்காட்டிப் பின்னர்ப்
பூவிரிபடப்பைப் புகார் மருங்கெய்தி"

—(**சிலப்பதிகாரம்:** கடலாடு காதை 31-32)

"காவிரிப்படப்பைப் பட்டினத்தன்ன"

-(அகநானூறு: 205)

"தீம்புகார்த்திரை முன்துறைத்
தூங்கு நாவாய் துவன்றிருக்கை"

—(பட்டினப்பாலை: 173-174)

பிளினி கூறுகிறார்: "அபிரஸ் என்ற நதியும், அதன் கழி முகத்தில் போக்குவரத்துக்கு வசதியான நல்ல ஒரு துறைமுகமும், காந்திப்பிரமா எனப்படும் மிகப்பெரிய துறைமுகமும் காணப்படுகின்றன."

—(பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 25, குறிப்பு-55, 56. பக்கம் 101)

இங்கு அபிரஸ் என்று எழுதினது காபேரிஸ் என்றதன் சிதைந்த உருவமே; காவிரி என்பதன் கிரேக்க உச்சரிப்பே. காந்திப்பிரமா என்பது காஞ்சீபுரத்தைக் குறிப்பிடுகிறது. அன்று காஞ்சியைச் சேர்ந்த மலங்கே (மாமல்லபுரம்) ஒரு பெரும் துறைமுகமாக விளங்கிற்று. இன்றும் அங்குள்ள அழிபாடுகள், கலங்கரைவிளக்கம் முதலியன இதை மெய்ப்பிக்கின்றன.

காவிரிப்பூம்பட்டினத்தின் இருப்பிடம்: 11°·6′வ×79°·54′கி.

கி.பி. முதல், இரண்டாம் நூற்றாண்டுகளில் அரசு செய்த சேரர், சோழர், பாண்டியர் ஆகிய இவ்வரசர்களின் வரலாறு இன்னும் சரிவர முறைப்படுத்தப்படவில்லை. தமிழக வரலாறும், தமிழ்வேந்தர்கள் பெயர்களும் அவர்கள் ஆண்ட காலங்களும் மேலைநாட்டு வரலாறுபோல் இன்னும் நிர்ணயிக்கப்படவில்லை. அப்பொன்னாளை-நன்னாளை-நாம் விரைவிலேயே எதிர்பார்ப்போமாக!

## 4. பொதுகா (Poduca)

இது மலங்கே (Malangae) என்று முன்னர் வழங்கப்பட்டதும், இன்று மாமல்லபுரம் என்று வழங்கப்பட்டுவரும் இடமும் ஆகும். இதைச் சிலர் பாண்டிச்சேரி என்றும், புலிக்கட்டம் என்றும் குறிப்பிடுவது பொருந்தாது. பாண்டிச்சேரி (Pondicherry), புலிக்கட்டம் (Pulicat) ஆகிய இரு இடங்களும் பிற்காலத்தில் விளங்கியனவேயன்றி, முதல் இரண்டாம் நூற்றாண்டுகளில் விளங்கியவை அல்ல.

இது தாலமி (கி.பி. 119-161) என்பவரால் மலங்கே (Malangae) என்று வழங்கப்பட்டது. நிலமங்கை குடிகொண்டிருக்கும் இடம்

ஆதலால், அதுவே கிரேக்கர்களால் மலங்கே என்று உச்சரிப்புத் தெரியாது வழங்கினர்.

போதம் என்றால் மரக்கலம், கப்பல் என்றும், போதவான் என்றால் கப்பலோட்டி என்றும் பொருள்படும் சொல்லாகும். ஆக, இங்குப் பொதுகா என்பது கப்பல் தங்கும் இடத்தைக் குறிப்பிட்டதே யன்றி, குறிப்பிட்ட ஓர் இடத்தின் பெயர் அன்று. ஆனால் கப்பல் தங்கும் இடம் சோழ மண்டலத்தில்-வட பகுதியில்-மலங்கே எனப் பட்ட மாமல்லபுரம் ஒன்றே ஆதலால், அதுவே பொதுகா (Poduca) என்று வழங்கப்பட்டிருத்தல்வேண்டும்.

பொதுகாவின் (மாமல்லபுரம்) இருப்பிடம்: 12°·37′வ × 80°·14′கி

## 5. சோபட்னா (Sopatna)

இது பட்டணம் என வழங்கப்படும் சென்னைப்பட்டினத்தைக் குறிப்பிடும். சென்னைப்பட்டினம் (Madras) சந்திரகிரி அரசரிட மிருந்து கி.பி. 1639-ல் கிழக்கிந்தியக் கம்பெனியாரால் ஒரு கோட்டை கட்ட அனுமதி பெறப்பட்டது. அதன்பிறகுதான் இவ் விடத்துக்கு மெட்ராஸ் (Madras) எனும் பெயர் ஏற்பட்டது. அதற்கு முன் அது மயிலை என்றும், மயிலைத் திருவல்லிக்கேணி என்றும் வழங்கப்பட்டது. சோ-பட்னா என்பது அழகு பொருந்திய பட்டணம் என்று பொருள்படும்.

இது சோ-பத்மா என்று இருந்திருக்கிறது. பத்மா - பத்மம் தாமரை மலரைக் குறிக்கிறது. தாமரை, அல்லி ஒன்றாகவே கருதப்பட்டன. ஆகையால் சோ-பத்மா என்பது அழகிய தாமரை மலர் (அல்லி மலர்) உள்ள இடம் என்று பொருள்படுகிறது. திருவல் லிக்கேணி (Triplicane) என்பதும் திரு-அல்லி-கேணி (அழகிய அல்லிக்குளம் இருக்கும் இடம்) என்பதையே குறிப்பிடுகிறது. ஆகையால் கி.பி.முதல், இரண்டாம் நூற்றாண்டுகளில் சென்னையின் பெயர் திருவல்லிக்கேணி என்றும், மயிலைத் திருவல்லிக்கேணி என்றும் இருந்தது என்பது இதனால் பெறப்படுகிறது.

மார்க்கோபோலோ (கி. பி. 1254-1324) என்பவர் சென்னையை மயிலாப்பூர் என்றே வழங்கினார். 'மயிலையில் மறைந்த முனிவர்' என்று புனிதர் தாமஸைப் பற்றி விரிவாகக் கொடுத்துள்ளார். **(மார்க்கோபோலோ:** பக்கம் 42-46). சாந்தோம் (Santhome)-புனிதர் தாமஸ் முனிவர் மறைந்த இடம்-பிற்காலத்திலே ஏற்பட்ட பெயரே.

மயிலையைத் திருவல்லிக்கேணியுடன்தான் குறிப்பிட்டுவந்தனர்.

"மயிலை மாவல்லிக் கேணியான்"

—(இயற்பா: நான்முகன் 35)

என்று கூறுகிறது நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம். (இதில் மாவல்லிக்கேணி என்று குறிப்பிடுவதைக் கவனிக்கவும்). ஆகையால் அல்லிக்கேணி என்று வழங்கப்பட்ட திருவல்லிக்கேணியையே சோ-பட்ணு என்று கூறிச் சென்ருர் பெரிப்ளூஸின் ஆசிரியர்.

பெரிப்ளூஸ் ஆசிரியர் சேரர், பாண்டியர், சோழர் எனும் தமிழ் வேந்தர்களே, நாடுகளின் இருப்பை முன்னிட்டு வழங்கினர். மற்றும் அவ்வவற்றின் தலைநகரங்களையும் துறைமுகங்களையும் வரிசையாகக் கொடுத்துக்கொண்டு வந்தார்.

ஆக, அவர் காலத்தில் சேர, சோழ, பாண்டியர் ஆகிய மூவேந் தர்களும் ஆட்சி செலுத்தினர் என்று தெரியவருகிறது.

பெரிப்ளூஸ் நூலில் குறிப்பிடப்படும் தமிழ் நாட்டுத்தலைநகரங் களும் துறைமுகங்களும்:

| அரசர் | நாடு | துறைமுகங்கள் | தலைநகரம் |
|---|---|---|---|
| சேரர் | சேரநாடு | திண்டிஸ், முசிறி நௌரா, பாலிதா, பகாரே, (பொரக்காடு) | முசிறி (வஞ்சி) |
| சோழர் | சோழநாடு | காமாரா, பொதுகா, சோபட்ணு | ஆர்கரு (உறையூர்) |
| பாண்டியர் | பாண்டிநாடு | கோல்கே (கொற்கை) | மடுரா (மதுரை) |

சோபட்ணு (திருவல்லிக்கேணி) இருப்பிடம்:

13°·4′ வ × 80°·17′ கி.

**6. சங்காரா (Sangara)**

கயிற்ருல் பிணைக்கப்பட்டிருக்கும் இரண்டு கட்டுமரங்கள் சங்காரா (Sangara) என்று வழங்கப்படும். மலையாள நாட்டில் இவ்வாருன கப்பல்கள் (கட்டுமரங்கள்) ஜங்கார் (Janghar) என்று இன்றும் வழங்கப்படுகிறது. ஜங்கார் என்ற சொல்லையே சங்காரா என்று கிரேக்க உச்சரிப்பில் வழங்கினர் போலும். இங்குக் கண்டெடுக்கப்பட்ட நாணயங்களில் இவ்வாறு இரண்டு பாய்மரங் களுள்ள இரட்டைக்கப்பல்கள் பிணைக்கப்பட்டவாறு சித்திரம்

பொறிக்கப்பட்டுள்ளன. இச் சித்திரங்களே, இவ்விடங்களில் அத்தகைய பிணையல் கட்டுமரங்கள் பயன்படுத்தப்பட்டன என்பதை உறுதிப்படுத்துகின்றன. இத்தகைய கப்பல்கள் சோழமண்டலக் கரையிலும் இருந்தன என வரலாறுகள் கூறுகின்றன. கட்டுமரம் என்ற சொல்லே, இருமரத்திம்மைகள் ஒன்ருகக் கயிற்ருல் கட்டப் பட்டவை என்ற பொருள் தருகிறதல்லவா?

## 7. கிரிஸே (Chrysae)

இது கிழக்கிந்தியத்தீவுகளுள் ஒன்ருன ஸ்வர்ணதீபம் எனப்படும் சுமத்ரா தீவைக் குறிப்பிடுகிறது. கிரிஸே என்ருல் கிரேக்க மொழி யிலும், இலத்தீன்மொழியிலும் பொன் என்று பொருள்படும்.

மற்றும், அதிகாரம் 56, குறிப்பு-31 பார்க்கவும்.

சுமத்ரா தீவின் இருப்பிடம்: 0°·0′ × 100°·0′கி.

## 8. கங்கே (Gangetic Region)

கங்கையின் கழிமுகத்தில் தாமிரலிப்தி (Tamiralipti) எனும் துறைமுகம் புகழ் பெற்றது. அது இப்பொழுது தாம்லுக் (Tamluk) என்று வழங்கப்படுகிறது. இத் துறைமுகத்துக்குக் கப்பல்கள் சென்று, அங்கிருந்த சரக்குகளை ஏற்றிக்கொண்டு கடாரம் (பர்மா), சுமத்ரா தீவு முதலியவற்றிற்குச் சென்றன.

தாமிரலிப்தியின் இருப்பிடம்: 22°·18′வ × 87°·58′கி.

## 9. கொலாண்டியா (Colandia)

இது கலம் (மரக்கலம்) எனும் தமிழ்ச்சொல் அடியாகப் பிறந்தது. மலேயா பகுதிகளில் இச் சொல் மிகுதியாகப் பயன் படுத்தப்படுகிறது. ஃபாஹியான் (கி.பி. 399-414) எனும் சீனப் பயணியும் இத்தகைய பெரிய கப்பல் ஒன்றைக் குறிப்பிடுகிருர்.

(ஃபாஹியான்: பக்கம் 241)

## 10. டிமிரிகா (Dimirica)

இது தமிழகம் என்ற சொல்லின் கிரேக்க உச்சரிப்பே. இச் சொல் தமிழகம் முழுவதையும் குறிப்பிடும்.

மற்றும் அதிகாரம் 53, குறிப்பு-16 பார்க்கவும்.

## 11. எகிப்து (Egypt)

எகிப்திலிருந்து கண்ணுடிப் பொருள்கள், வாசனைப் பண் டங்கள், உயர்ந்த துணி வகைகள் முதலியன இறக்குமதி செய்யப்

பட்டன. பண்டைய நாகரிகம் விளங்கிய இடங்களில் முக்கி மானது எகிப்து (Egypt) ஆகும்.

**12. பராலியா** (Paralia)

இது நவீன திருவனந்தபுரம் (Trivandrum) என்ற இடத்தை குறிப்பிடுகிறது. இது பரலீசர், பரமீசர் என்பதன் திரிபே.

மற்றும் அதிகாரம் 58, குறிப்பு-4 பார்க்கவும்.

---

# 61. தாப்ரபனே

இனிக் கூறப்படும் பிரதேசம், கிழக்குமுகமாக நோக்கி கடலில் முடிகின்றது. மேற்கு முகமாக இருப்பது பாலஸி முண்டு[1] என்று வழங்கப்படும் தீவு ஆகும். இத் தீவு மிகப் பண்டைய மக்களால் தாப்ரபனே[2] என வழங்கப்பட்டது. இதன் வடக்குப் பகுதியையடைய ஒரு நாள் பயணம் போதுமானது; இதன் தெற்குப் பாகம் சிறிது சிறிதாக மேற்குப் புறமாகப் பரந்து செல்கிறது. அது அஜானியா[3] என்ற நாட்டின் கடற்கரையை ஏறக்குறையத் தொட்டேவிடுகிறது. அத் தீவு முத்துகளையும்[4] ஒளியூடுருவிச் செல்லும் படிகக் கற்களையும்,[5] மஸ்லின் துணிகளையும்,[6] ஆமையோடுகளையும்[7] உற்பத்தி செய்கின்றது.

## விளக்கவுரை

**1. பாலஸிமுண்டு** (Palasimundus)

இச்சொல் பாலயோஹினி, பாலசந்நியாசி அதாவது புத்த பிரானுரின் தம்மக் கொள்கை விளங்கும் மலைநாடு என்ற பொருளைத் தரும். ஆக இது புத்த மதம் பரவியிருந்த இலங்கையைக் குறிப்பிடும். மார்க்கோபோலோ (கி. பி. 1254-1324), இலங்கையில் சாகாமான்பர்ச்சான் என்பவர் உடல், ஆதாம் சிகரத்தின் உச்சியில் புதைக்கப்பட்டுள்ளது என்றும், அங்கே அவருடைய திருப்பாதச் சின்னங்கள் (Sree pud) காணப்படுகின்றன என்றும் கூறுகிறார். (**மார்க்கோபோலோ :** பக்கம் 55-57). இவர் கூறும் சாகாமான் பர்ச்சான் (Sagoman Berchan) என்னும் சொல் சாக்கிய முனி தேவன் என்பதன் திரிபே. பர்ச்சான் என்பது கடவுள் அல்லது

தேவன் என்ற பொருள்படும் சொல்லாகும். ஆகையால், இலங்கையைக் குறிப்பிடும்பொழுது, புத்தபிரானுருடன் தொடர்பு கொண்ட வரலாறுகளையும் உட்கொண்டே குறிக்கப்படுவது இங்குக் காணப்படும்.

பாலசிமுண்டு என்ற சொல் 'பாலிய சிம்மேந்திரன்' நாடு என்றதன் திரிபாகவும் இருக்கக்கூடும் எனக் கூறப்படுகிறது.

மற்றும் இச் சொல், பாலி சிம்மத்தீபம் என்ற சொல்லின் கிரேக்க உச்சரிப்பே என்றும் கூறுவர் ஒரு சாரார். இலங்கைக்குச் சிங்களத்தீவு என்றும், சிங்கத்தீவு என்றும் பல பெயர்கள் உண்டு. சிங்களம் என்பதுதான் ஆங்கிலத்தில் சிலோன் (Ceylon) என்று மருவிற்று. அத் தீவு சிங்கமுகம் படைத்த அரசகுமாரன் ஒருவனுல் ஆளப்பட்டது என்ற காரணத்தால், அது சிங்களத் தீவு என வழங்கப்பட்டது. இதற்கு ஆதாரம் புத்தமத நூல்களில் காணப்படும். யுவான் சுவாங் (கி.பி 629-644) எனும் சீனப்பயணி எழுதிய சி-யூ-கி (Si-Yu-Ki) எனும் வரலாற்றில் இலங்கைத் தீவையும் அதன் வரலாற்றையும் விரிவாகவே காணலாம் (**யுவான் சுவாங்:** பக்கம் 170-176). மற்றும் யுவான் சுவாங், இலங்கையில் புத்தமதம் பரவியிருந்ததென்றும், அங்குள்ள ஆதாம் சிகரத்தின் மீது காணப்படும் திருப்பாதச் சின்னங்கள் புத்தபிரானுருடையதே என்றும் கூறியுள்ளார். சிம்மளத்தீவு எனப் பெயர் வந்த வரலாற்றையும் விரிவாகவே கூறுகிருர். சிங்கம் ஒன்று ஒரு மானிடப் பெண்ணை மணந்துகொண்டு, ஒரு மகனைப் பெற்றதாகவும் அச் சிங்கமகனுக்கு முகம் மட்டும் சிங்கமாகவும், உடற்பகுதி யாவும் மானிட உருவமாகவும் இருந்தது என்றும், அச் சிங்கமகன் ஆண்ட நாடே சிங்கமகன் நாடு என்றும் அதுவே சிம்மள நாடு ஆயிற்று என்றும் ஒரு வரலாற்றை விரிவாகவே கூறுகிருர்.

இச் சிங்களத்தீவு அராபிய மக்களால் செரன்தீப் (Serendeep) என்று வழங்கப்பட்டது. செரன் (Seren) என்றல் சிங்கம் என அராபியமொழியில் பொருள்படும். ஆக, சிங்கத்தீவு என்பதையே, அராபியர் செரன்தீப் என்று வழங்கினர். சிந்துபாத் என்ற அராபிய நூலில், செரன்தீப் எனும் சொல் காணப்படுகிறது. (**சிந்துபாத்:** பக்கம் 67). சிந்துபாது (Sindbad, the Sailor) என்பது அராபிய நாட்டு இரவுக் கதைகளுள் (Arabian Nights Stories) ஒன்ருகும். இக் கதை ஒன்பதாம் நூற்ருண்டில், பாரசீக மன்னன் ஒருவனுக்கு ஆயிரம் இரவுகளாக மங்கையொருத்தியால் கூறப்பட்ட கதைத் தொகுதியுள் ஒன்ருகும். இக் கதைகள் பாரசீக மொழியில் "ஆசர் அப்சாளு" (ஆயிரம் கதைகள்) என்று வழங்கப்பட்டது. இவை அரபு மொழியில் மொழிபெயர்க்கப்பட்டபோது, "ஆயிரத்தோர் இரவுகள்" என்று ஆயிற்று.

ஆரூன்-அல்-ரஷீது (Harun-Al-Rasheed) என்பார் கி.பி. 763 முதல் 809 வரை பாரசீக மன்னராக இருந்தார். சிந்துபாது எனும் மாலுமி, தம்மை ஹாருனல்-ரஷீக் எனும் அரசருடன் தொடர்பு படுத்தியே பேசுவதாலும், பாரசீக மன்னரின் பெரும்புகழ் விளங்கிய காலம் கி.பி. 800-809 ஆதலாலும், இக் கதை உருவாகிய காலம் கி.பி. 804 என்று கருதப்படுகிறது. அது அராபிய மொழியில் மொழிபெயர்க்கப்பட்ட காலம் கி.பி. 850, ஆகையால் கி.பி. ஒன்பதாம் நூற்றுண்டுவரைகூட, இலங்கைத் தீவு சிங்களத் தீவு அல்லது சிம்மத் தீவு என்றே வழங்கப்பட்டது என்பது தெரிய வருகிறது. (சிந்துபாது: முன்னுரை)

பிளினி (கி.பி. 23-79) பாலஸிமுண்டு என்பதைக் குறிப்பிடுகிருர்:

"மேற்கூறப்பட்ட குழுவினரிடமிருந்து பல செய்திகளைத் தெரிந்துகொண்டோம். அவற்றுள் தாப்ரபனே என்ற தீவில் 500 நகரங்கள் இருக்கின்றன என்றும், அத் தீவின் துறைமுகம் தெற்கு நோக்கித் தென் கடற்கரையில் உள்ளதென்றும், அந் நகரமே அரசர் தங்கும் இடமென்றும், அங்குதான் அரசாட்சி நடைபெறு கிறதென்றும், அந் நகரத்தில் இரண்டு லட்சம் மக்கள் வசிக்கின்றன ரென்றும் பல செய்திகளை அறிந்தோம்."

—(பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 24, பக்கங்கள்: 70, 76, 81)

பாலஸிமந்து என்பது பாலசிம்ம மந்து என்பதன் குறுக்கமே என்றும், மந்து என்பது மலையைக் குறிப்பிடுகிறதென்றும் (ஒற்றைக் கல் மந்து-Ootacamund என்பதுபோல), ஆக இச் சொல் பால சிம்மன் மலையாகும் என்றும், அதுவே இன்றைய ஆதாம் சிகரத்தைக் (Adam's Peak) குறிப்பிடும் என்றும் கூறப்படுகிறது.

ஃபாஹியான் (கி.பி. 399-414) இலங்கையைப்பற்றி விரிவாகவே கூறுகிருர் தமது போ-கோ-சி (Fo-Kuo-Chi) என்ற நூலில். சிங்களத் தீவு என இரண்டு அதிகாரங்கள் எழுதியுள்ளார்.

"புத்தபிரானுர் இலங்கைக்கு வந்தபொழுது தம் ஒரு பாதத்தை நடு மலைமீதும், மற்றொரு பாதத்தை இலங்கை மன்னரின் தலை நகரின் வடக்கிலும் வைத்தார்; மற்றும் அவ் விரண்டு பாதங் களுக்கும் இடையில் உள்ள தொலைவு 15 யோசனை (Yojana) ஆகும்."

—(ஃபாஹியான்: பக்கம் 219)

இதிலிருந்து ஆதாம் சிகரத்தின் இருப்பிடமும், இலங்கையின் தலைநகரும் ஒருவாறு அறியப்படுகிறது. சீன அளவுப்படி ஒரு

யோசனை (Yojana) என்பது 7½ மைல் (12 கிமீ) ஆகும். இங்குக் குறிப்பிட்டுள்ள அளவான 15 யோசனைத் தொலைவு என்பது 112½மைல்கள் (180 கிமீ) அளவைக்குறிக்கும். அத்தகைய தலைநகரம் யாதாக இருத்தல்வேண்டும்?

ஆதாம் சிகரத்தின் உயரம் 7352 அடிகள் (2205 மீ) ஆகும். இதற்கு வடக்கே உள்ள அனுராதபுரம் (Anuradapura) இன்றும் 115 மைல்கள் (184 கிமீ) தொலைவில் உள்ளன. ஆகையால், இலங்கை மன்னனின் தலைநகரம் அனுராதபுரம் என்பதை ஃபாஹியான் எழுதிய வரலாற்றால் தெள்ளிதின் அறிகிறோம்.

அனுராதபுரம் இருப்பிடம்: 8°·22′ வ × 80°·23′ கி.

ஆதாம் சிகரம் இருப்பிடம்: 6°·49′வ × 80°·30′கி.

இதிலிருந்து ஆதாம் சிகரத்துக்கு நேர்வடக்கே அனுராதபுரம் இருந்ததென்றும், அத் திருப்பாதங்கள் பதியப்பட்டதிசை ஒரே திசை என்றும் தெரியவருகின்றன.

தாலமி (கி.பி. 119–161) எனும் யவனாசிரியர் கூறுகிறார்: 'மிளகு கொண்டுவரப்படும் துறைமுகங்கள் ஐந்து. அவை: பார்தி, (Parti), மங்கரூத் (Mangaruth) சலோபட்ணா (Salopatna), நவோ பட்ணா (Navopatna), புதுபட்ணா (Pudupatna) என்பனவாகும். ஐந்து நாள்கள் கப்பலில் பயணம் செய்தால் செய்லதீப் அல்லது தாப்ரபனே எனும் தீவு தென்படும்."

—(**தாலமி**: புவியியல்)

இவர் கூறும் பட்டினங்கள் யாவும் பெரிப்ளூஸ் நூலில் வந்துள்ளன. சிலபெயர்கள் மாறியுள்ளன. நவோ பட்ணா (Navo patna) என்பது நாகப்பட்டினத்தைக் குறிப்பிடுகிறது; சலோ பட்ணா (Salopatna) என்பது சோ-பட்ணா என்று குறிக்கப் பட்டு, திருவல்லிக்கேணியைக் குறிப்பிடுகிறது; புது பட்ணா (Pudu patna) எனப்படுவது பொதுகே (Poducae) என வழங்கப்பட்டு, வளவன்துறை எனப்படும் வளவனூரைக் குறிப்பிடுகிறது; செய்லத் தீப் (Seila dip) என்பது சிங்களத்தீவு எனும் இலங்கையைக் குறிப் பிடுகிறது. இலங்கைத்தீவு அராபியர்களால் செரன்தீப் (Serendeep) என்று வழங்கப்பட்டது (பக்கம் 271 பார்க்கவும்).

## 2. தாப்ரபனே (Taprobane)

இது தாமிரபருணி எனும் சொல்லின் திரிபாகக் கருதப் படுகிறது. கங்கைக்கரைக் கழிமுகத்தில் இருந்த துறைமுகம் தாமிரலிப்தி (Tamluk) என்று வழங்கப்பட்டது. இரு சொற்களும் தாமிரம் (Copper) என்பதை அடிப்படைச் சொல்லாகக் கொண் டுள்ளது. இந் நதி தாமிர உலோகக் கலப்பால், பெருவியாதி

(leprosy) உள்ளவர்கள் இவ்வாற்றில் நீராடினுல் குறையும் என்ற நம்பிக்கை பண்டைக்காலம் முதற்கொண்டு இருந்து வருகிறது. இலங்கைக்குத் தாமிரபருணி என்ற நதியின் பெயரைக் கொடுத்தவர் விஜயன் என்ற அரசர் (கி.மு. 5ஆம் நூற்றுண்டு) என்று கூறப்படுகிறது. மற்றும் இச் சொல் த்வீப ராவண (Dvipa Ravana) என்றிருந்திருக்கவேண்டும் என்றும், அதுவே கிரேக்க மக்கள் நாவில் புகுந்து தாப்ரபனே என்று மருவிற்று என்றும் மாக்ரிண்டில் எனும் வரலாற்றுசிரியர் கூறுகிறுர். இலங்கையில் இராவணன் குடியிருந்து அரசாண்டான் என்பதுதானே இராமாயண காவியம் கூறும் வரலாறு.

—(**மேக்ரிண்டில்:** அர்ரியன் இண்டிகா)

தாப்ரபனே என்பது இலங்கையைக் குறிப்பிடும் சொல்லாகும். இலங்கையின் தலைநகரம் அனுராதபுரமாக இருந்தது. அதுவே இராவணன் ஆண்ட இடமாகக் கருதப்படுகிறது.

அனுராதபுரத்தின் இருப்பிடம்: 8°·22′வ × 80°·23′ கி.

பிளினி (கி.பி. 23-79) என்பாரால் தாப்ரபனே குறிப்பிடப் பட்டுள்ளது. (மேலே குறிப்பு-1 பார்க்கவும்)

—(**பிளினி:** புத்தகம் VI, அதிகாரம் 24, பக்கம் 70)

மார்க்கோபோலோ பின்வருமாறு குறிப்பிடுகிறுர்:

"அந்தமான் தீவிலிருந்து புறப்பட்டுத் தென்மேற்குத் திசையில் ஆயிரம் மைல்கள் கடற்பயணம் செய்தால், செய்லான் என்ற தீவு கண்களில் தென்படும்."

—(**மார்க்கோபோலோ:** பக்கம் 51)

மற்றும் இவர் இலங்கை நாட்டைப்பற்றியும், ஆதாம் சிகரத்தைப் பற்றியும் பலசெய்திகளைக் கொடுத்துள்ளார். (**மார்க்கோ போலோ:** பக்கம் 51-60)

இலங்கைத்தீவின் வரலாறு பின்வருமாறு வரலாற்றுசிரியர்களால் கொடுக்கப்பட்டுள்ளது:

சிங்களத் தீவு, ஈழம் என்றே வழங்கப்பட்டது. இத் தீவு, சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய நூல்களில் குறிப்பிடப் பட்டுள்ளன. இலங்கை மன்னன் முதலாம் கயவாகு, சேரன் செங்குட்டுவனைச் சந்தித்தவிவரமும், அவன் பத்தினிக்கோயில் கட்டினவிவரமும் விரிவாகவே காணப்படுகின்றன.

"கடல்சூழ் இலங்கைக் கயவாகு வேந்தனும்"

—(சிலப்பதிகாரம்: வரந்தரு காதை, 160)

"இலங்கா தீவத்துச் சமனொளி யென்னும்"

—(மணிமேகலை: கச்சிமாநகர்புக்க காதை 107)

"கங்கைவாரியும் காவிரிப்பயனும்
ஈழத்துணவும், காழகத்தாக்கமும்"

—(பட்டினப்பாலை: 190-191)

"தொன்மா இலங்கைக்கருவொடுபெயரிய
"நன்மா விலங்கை மன்ன ருள்ளும்"

—(சிறுபாணாற்றுப்படை 119-120)

"சிங்களம் புட்பகம் சாவகம்—ஆதிய
தீவு பலவினும் சென்றேறி—அங்கு
தங்கள் புலிக்கொடி மீன்கொடியும்—நின்று
சால்புறக் கண்டவர் தாய்நாடு."

—(மகாகவி பாரதியார்: தமிழ்நாடு 8)

இலங்கை வரலாற்றின்படி வங்கப் பிரதேசத்திலிருந்து வந்த விஜயன் என்பவனே நாட்டின் முதல் அரசன் (கி. மு. 5ஆம் நூற்றுண்டு). அசோகப் பேரரசர் (கி. மு. 263-224) இலங்கைக்குப் புத்தமதக் குருவாகத் தன் மைந்தனையும், மகளையும் அனுப்பி வைத்தார். அவர்கள் இலங்கையிலேயே பற்பல மடங்களையும் சைத்தியங்களையும், விஹாரங்களையும் கட்டிக்கொண்டு புத்த மதத்தைப் பரப்பினர். அவ்வமயம் இலங்கைக்கு அரசனாக இருந்த திஷ்யன் (Thishya) (கி.மு. 247-207) தன் ராஜஸ்தானியாகிய அனுராதபுரத்தில் பற்பல மடங்களைக் கட்டுவித்துப் புத்த மதத்தைப் பரப்பப் பற்பல வழிகளை மேற்கொண்டான். அதற்கடுத்து வந்த துட்டகாமினி (Duttakamini) என்ற மன்னன் (கி.மு 101-77) பற்பல தூபிகளை நாட்டுவித்தான்.

சங்ககாலப் புலவர் பலர் ஈழ நாட்டின் சிறப்பையும், அதில் வரும் பொருள்களையும்பற்றிப் பாடியுள்ளனர். இலங்கையில் தமிழர் குடியேறினர். முல்லைத் தீவு, காரைத்தீவு, மணிபல்லவம் என்பன தமிழர் இலங்கையில் குடியேறி, அவ்விடங்களுக்கு இட்ட பெயர்களாகும்.

கி.பி. 5ஆம் நூற்றுண்டில் தீட்டப்பட்ட அஜந்தா சித்திரங்களைப் போன்று இலங்கையில் உள்ள சிகிரியா (Sigiriya) மலைகளின் குகைகளில் பல வண்ணங்களால் சித்திரங்கள் தீட்டப்பட்டுள்ளன.

ஃபாஹியான் (கி.பி. 399-414) தமது வரலாற்றில் இலங்கையின் வாணிகத்தைப் பற்றிக் குறித்துள்ளார்.

—(ஃபாஹியான்: பக்கங்கள் 215-240)

கி.பி. ஏழாம் நூற்றுண்டில் அனுராதபுரம் இலங்கையின் தலை நகராக விளங்கவில்லை. அதற்குப் பதில் அவர்கள் பொலனறுவை (Polanaruvai) என்ற இடத்தைத் தலைநகராகக் கொண்டனர். யுவான் சுவாங் (கி.பி. 629-645) சிம்மளம் என்ற தலைப்பில் பல அரிய செய்திகளைக் கொடுத்துள்ளார்.—(யுவான் சுவாங்: பக்கம் 170-176)

அதன்பின் இராசேந்திரசோழன் (Rajendra Chola) (கி.பி. 1014–1044) இலங்கை முழுவதையும் வென்றுர். பின்னர் சோழ அரசர்கள் பலம் குன்றிக் காணப்பட்டனர். பிறகு ஜடாவர்மன் சுந்தர பாண்டியன் வட இலங்கையைக் கைப்பற்றி, இலங்கையின் தலை நகரைக் கொழும்பு (Colombo) என்ற இடத்துக்கு மாற்றினுர். ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் கி. பி. 1251 முதல் 1310 வரை அரசாண்டார் —(Vide A History of South India By K.A.Nilakanta Sastry, M.A., pp 206-209). சுந்தரபாண்டியனுக்கும், முறை தவறிப் பிறந்த வீரபாண்டியனுக்கும் போர் நடந்ததில், சடாவர்ம பாண்டியன் கி.பி. 1310ஆம் ஆண்டு மே மாதத்தில் கொல்லப்பட்டார். —(Vide An Advanced History of India By R. K. Mookerji, Page 305).

அதன்பின்னர், போர்ச்சுகீசியர் இலங்கையில் கி.பி. 1505-ல் முதன்முதலாகக் காலடி வைத்தனர். கி.பி. 1517-ல் ஒரு பண்டக சாலையை நிறுவனர். கி.பி. 1658 அளவில் டச்சுக்காரர் ஆட்சி இலங்கை முழுவதும் பரவத் தொடங்கிற்று. கி.பி. 1802-ல் டச்சுக் காரர், இலங்கைப் பகுதியை ஆங்கிலேயருக்குப் போரில் ஏற்பட்ட நிபந்தனைப்படி, இழப்பீடாகக் கொடுத்துவிட்டனர். கி. பி. 1815-ல் கண்டி (Kandy) ஆங்கிலேயர் வசமாயிற்று. கி.பி. 1916-ல் இலங் கைக்குக் குடியரசு அந்தஸ்து வழங்கப்பட்டது. கி. பி. 1946 வரை இலங்கை ஆங்கிலேயரின் ஆட்சிக்குக் கீழ் இருந்தது. கி.பி. 1946-ல் இயற்றப்பட்ட சட்டத்தின்படி, இலங்கை சுதந்திர நாடாக ஆயிற்று. அன்றுமுதல் இன்றுவரை சுதந்தர நாடாக விளங்குகிறது.

சிகிரியா சுவர் ஓவியங்களும் பொலனறுவையிலுள்ள கற்சிலை களும், அவுகன என்ற இடத்தில் உள்ள புத்தர் சிலையும், ஆநாம் சிகரத்தில் உள்ள புத்தரின் திருப்பாதச் சின்னங்களும், புத்தரின் வரலாற்றைத் தெரிவிக்கும் சின்னங்களாகும். மற்றும், அனுராத புரம், இரத்னபுரம் ஆகியவற்றிலும் புராதனச் சின்னங்கள் பல உள்ளன. இலங்கையில் உள்ள கல்வெட்டுகள், கி.மு. 3 ஆம் நூற்றுண்டு முதல் ஏற்பட்டனவாகும் என்று கூறப்படுகிறது.

### 3. அஜானியா (Azania)

ஆப்பிரிக்காவின் வடகிழக்குப் பகுதியாகிய அஜானியாவை, இலங்கையுடன் சேர்ந்தாற்போல் உள்ளது என்று கூறுவது சரியாகவோ, உண்மையைக் கூறுவதாகவோ இல்லை. இவ்விடத்தில் ஏதாவது சில வாக்கியங்கள் விடுபட்டிருக்கவேண்டும். அல்லது அஜானியாவுக்குப் பதில் ஓசானியா (Oceania) என்று இருத்தல் வேண்டும். அதாவது இலங்கையின் கரை எல்லைகள் இந்தியப் பெருங்கடலைத் தொட்டுக்கொண்டுள்ளன என்பதே அதன் பொருள். ஓசானியா என்பது பெருங்கடல் என்ற பொருளையே குறிக்கிறது. அஜானியாவுக்கும் இலங்கைக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை.

### 4. முத்துகள் (Pearls)

இலங்கைக்கும் இந்தியாவுக்கும் இடையேயுள்ள பாக் விரிகுடாவைக் குறிப்பிடுகிறது. இங்கு முத்துச் சிப்பிகளினின்று முத்துகள் எடுக்கப்பட்டு, அயல்நாடுகளுக்கு அனுப்பப்படுகின்றன. மன்னார் வளைகுடாவையும் (Gulf of Mannar) குறிப்பிடக்கூடும்.

### 5. படிகக் கற்கள் (Transparent Stones)

ஊடுருவிப் பாயும் இரத்தினக்கற்கள் இங்கிருந்து எடுக்கப்பட்டு, அயல்நாடுகளுக்கு அனுப்பப்படுகின்றன.

மற்றும் அதிகாரம் 56, குறிப்பு-27 பார்க்கவும்.

### 6. மஸ்லின் துணி (Muslin Cloth)

இங்கு மெல்லிய துணிகள் உற்பத்தி செய்யப்பட்டன. பெரும்பாலும் உள்நாட்டுப் பயனிற்காகவே உற்பத்தி செய்யப்பட்டவை போலும்.

### 7. ஆமை ஓடுகள் (Tortoise Shells)

இங்கிருந்து ஆமை ஓடுகள் ஏற்றுமதி செய்யப்பட்டன. ஆமையோடுகள் உறுதிவாய்ந்தவை.

மற்றும் அதிகாரம் 4, குறிப்பு-11 பார்க்கவும்.

---

## 62. மஸாலியா, தோசரீனி

மேல் குறிப்பிட்ட இடங்களுக்குப் பிறகு மஸாலியா[1] எனும் நாடு காணப்படுகின்றது. அந் நாடு கடற்கரை வழியாக நெடுந்தொலைவும், உள்நாட்டில் நெடுந்தொலைவும் பரவியுள்ளது. இங்குப் பெருவாரியாக மஸ்லின்[2] தயாரிக்கப் படுகின்றது. இந் நாட்டிற்கும் அப்பால், கிழக்குமுகமாக, அருகில் உள்ள வளைகுடாவைக்[3] கடந்து சென்றால், தோசரீனீ[4] எனும் நாடு தென்படுகிறது. இத் தேசத்தில் யானைத் தந்தம்[5] மிகுதியாகச் சேகரிக்கப்படுகிறது. இதற்கும் அப்பால் வடக்கே அகன்று வளைந்து செல்லும் நாட்டில் பலப்பல அநாகரிக முரட்டுச் சாதியினர் வாழ்கின்றனர்.[6] அவர்களுள் சிர்ராதே[7] என்பவர் உள்ளனர்; அவர்கள் தட்டையான மூக்கினையுடையவர்களாகவும், மிகவும் காட்டு மிராண்டிகளாகவும் வாழ்கின்றனர். அத்துடன் மற்றோர் இனத்தினரும் உள்ளனர். அவர்கள் பெயர் பார்க்கிஸி.[8] அவ்விடத்திலுள்ளவர்கள் குதிரைமுகங் கொண்டவர்களாக வும்,[9] நீண்ட முகம் கொண்டவர்களாகவும் உள்ளனர். அவர்கள் மனித ஊன்உண்பவர்களாகக் கருதப்படுகின்றனர்.[10]

### விளக்கவுரை

**1. மஸாலியா (Massalia)**

இச் சொல் மசூலிப்பட்டினம் (Masulipatam) என்று வழங்கப் படும் துறைமுகத்தைக் குறிப்பிடுகிறது. இதையே தாலமி (கி.பி. 119-161) எனும் யவனாசிரியர், மைசாலோ (Maisalo) என்று குறிப்பிட்டார். வடமொழியில் இச்சொல் மௌஸாலா என்பதாகும். பெரிப்ளூஸ் ஆசிரியர் காலத்தில் (கி.பி. 50-80) ஆந்திரநாட்டில் மிகவும் பெரியதும், புகழ் மிக்கதுமான துறைமுகமும் இதுவே.

டிரெவெனியர் வரலாறு கூறுகிறது: "பெகு, சையாம், கொச்சின் சைனா, மெக்கா, ஹார்மஸ், மற்றும் மடகாஸ்கர், சுமத்ரா, மணிலா முதலிய தீவுகளினின்று வரும் கப்பல்களுக்குத் தங்கும் சிறந்த இடமாகவும், துறைமுகமாகவும் மௌசாலோ வங்காள விரிகுடாவில் விளங்குகிறது."

ஃபாஹியான் (கி.பி. 399-414), யுவான் சுவாங் (கி.பி. 629-645) இருவரும் ஆந்திர நாட்டைப் பற்றிக் குறிப்பிடுகின்றனரேயன்றி, இத் துறைமுகத்தைக் குறிப்பிடவில்லை.

மசாலியாவின் இருப்பிடம்: 16°·9′வ × 81°·12′ கி.

**2. மஸ்லின் துணிகள்** (Muslin Cloths)

இத் துறைமுகத்தில் பெருவாரியாக மெல்லிழை ஆடைகள் ஏற்றுமதி செய்யப்பட்டன என்று தெரிகிறது.

**3. வளைகுடாவைக் கடந்தால்** (After crossing the Gulf)

இங்கு இன்றைக்கு எந்த வளைகுடாவும் இல்லை. பெயர் குறிப்பிடப்படவில்லை, விரிகுடா (Bay) என்று இருக்கவேண்டும். அது வங்காள விரிகுடாவைக் குறிப்பிடும்.

**4. தோசரீனி** (Dosarene)

இது நவீன ஒரிஸா என்ற இடத்தைக் குறிப்பிடும். இதைத் தாலமி (கி.பி. 119-161) தோசரன் (Dosaran) என்று குறிப்பிடுகிறார். இது நவீன மஹாநதியைக் குறிப்பிடுகிறது என்பர். ஒரிஸா நாட்டின் தந்தம் பழங்காலத்திலிருந்தே புகழ் பெற்றிருந்தது. அப் பகுதிகளில் யானைகள் மிகுதியாக வாழ்ந்தன.

தோசரீனி இருப்பிடம் : 19°·8′ வ × 85°·25′ கி.

**5. யானைத்தந்தம்** (Ivory)

ஒரிஸாவிலிருந்து முற்காலத்தில் யானைத்தந்தம் ஏற்றுமதி செய்யப்பட்டன.

ஒரிஸா பகுதியில் அடங்கிய கலிங்கப்பட்டினத்தில் (Calinga patnam) அசோகப்பேரரசர், அந் நாட்டைக் கி.மு. 251-ல் படையெடுத்தபோது, அங்கே 700 (எழுநூறு) யுத்தம் செய்யக்கூடிய மிகுந்த வலிமைபடைத்த யானைகள் இருந்தன என்று வரலாறு கூறுகிறது.—(Vide The Early History of India By Vincent A Smith, page 146). ஆகையால் இங்கு யானைகள் மிகுதியாயிருப்பதன் காரணமாக, யானைத்தந்தமும் காணப்பட்டன.

**6. முரட்டுச் சாதியினர்** (Uncivilised sturdy peoples)

அங்கிருந்து வடக்கே சென்றால் நாகரிகமற்ற முரட்டுக் குணமும், வலிமையும் கொண்ட இனத்தவர் காணப்படுகின்றனர் என்று கூறப்படுகிறது. இது இமயமலையடிவாரத்திலுள்ள மலைச்சாதியினரைக் குறிப்பிடுவதாகவே கொள்ளவேண்டும்.

**7. சிர்ராதே (Cirrhadae)**

இது கிராதா என்பதன் கிரேக்க உச்சரிப்பாகும். கிராதா (Kirata) என்பவர் போட்டா (Bhota) இனத்தைச் சார்ந்தவர். சிக்கிம் (Sikkim) மேற்கில் வசித்துவந்த இனத்தவரே கிராதா என்பவர் ஆவர். போட்டா இனம் இருந்த இடமே இன்று பூடான் (Bhutan) என்று வழங்கப்படுகிறது. பிளினி கிராதா என்பவர்களை ஸ்கைரைட்ஸ் (Scyrites) என்று விளிக்கிருர். அவர் கூறுகிருர்: "அவர்களுக்குத் தலையில் துவாரம் உண்டு; மூக்கிற்குப் பதில் துவாரம் தலையில் உள்ளது."—(பிளினி: புத்தகம்VII, அதிகாரம்-2). தாலமி என்பார் இவர்களைக் கிராடியா (Kirradia) என்று வழங்குகின்ருர்.

**8. பர்க்திஸி (Bargysi)**

இது கிராதா இனம் விளங்கும் நாட்டிற்குப் பக்கத்தில் உள்ள நாடு என்றும், அது திபெத்தைச் சார்ந்தது என்றும் கூறப்படுகிறது.

**9. குதிரை முகம் கொண்டவர்களாக (Having Horse's Faces)**

அஸ்ஸாம் விளிம்பில் ஒரு காலத்தில் 'அஸ்வவதனு' என்போர் இருந்ததாகக் காவியங்கள் தெரிவிக்கின்றன. அஸ்வம்–குதிரை; வதனு-முகத்தையுடையவர். ஆகையால் இங்குக் குறிப்பிட்டவர் அஸ்ஸாம், பிரமபுத்திரா நதிப் பகுதிகளில் வாழ்ந்து வந்தவராக இருக்கவேண்டும். இவர்கள் கின்னரர் வகுப்பைச் சார்ந்தவர் என்றும், இசை வல்லுநர் என்றும் கூறப்படுகிறது. கின்னரர் என்போர் மனித உடலும், குதிரை முகமும் உடையவரும் யாழிசை வல்லவருமான ஒரு சாதியார்.

**கின்னரர் :** "...பண்ணெறிந்தாள் கின்னரரும் சோர்ந்தார் அன்றே"

—(சீவகசிந்தாமணி: 647)

**கிராதர்:** "கிராதம் ஐம்பத்தாறு தேசங்களுள் ஒன்று"

—(திருவேங்கட சதகம்: 97)

**கிம்புருடர்:** மானுட முகமும் குதிரையின் உடலும் படைத்த தேவ சாதியினர்.

**10. மனித ஊண் உண்பவர்கள் (Canibals)**

ஓர் உறவினர் இறந்தால், அவர் உடலைத் துண்டமாக்கி, அதையே தெய்வபலியாகக்கொண்டு அதன் உறவினர் அத் துண்டுகளைப் புசிப்பர்.

ஹெரடோடஸ் (கி.மு, 484-425) கூறுகிறார்: "இங்கு மற்றோர் இனத்தினர் படேய் (Padaei) என்பவர் வசிக்கின்றனர். இவர்கள் பச்சை ஊன் உண்பவர்கள். ஒரு மனிதன் உடல் நலமற்றுக் காணப்பட்டால் அவனுடைய நெருங்கிய உறவினர் அவனைக் கொன்றுவிடுகின்றனர். காரணம், அந் நோய் இன்னும் முற்றிப் போய்விட்டால், உடல் சதை எதற்கும் உதவாமல் அல்லவோ போய் விடும் என்பதே. நோயுற்றவர், தனக்கு ஒன்றுமில்லை என்று மறுத்தாலும், அவனை விட்டுவிடுவதில்லை. அதுவே பெண்ணாயின், அவள் பெண் உறவினர்கள், ஆண்கள் செய்வதைப் போலவே செய்துவிடுகின்றனர். எவராவது நோய் நொடி இல்லாமல் பல ஆண்டுகள் இருந்துவிட்டால் அவர் தேவதைக்கென்று பலியிடப்பபட்டு, அவர் ஊனைப் பங்கிட்டுக்கொள்வர்"

—(**ஹெரடோடஸ்:** புத்தகம் III, பக்கம் 217)

மெகஸ்தனிஸ் (கி.மு. 302-296) கூறுகிறார்:

"அவர்கள் மலைச்சாதியினர்; அவர்கள் தங்கள் உறவினர்களின் உடல் ஊனைத் தின்கின்றனர்."

—(மெஸ்தனிஸ்: இண்டிகா)

இவ்வாறு மனித ஊன் தின்பது டேனியல் டீபோ (Daniel Defoe) எழுதிய இராபின்சன் குரூசோ (Robinson Crusoe) எனும் புத்தகத்தில் விரிவாகவே கொடுக்கப்பட்டுள்ளது.—(**இராபின்சன் குரூசோ:** பக்கம் 62-65)

# 63. கங்கை, கிரிஸே தீவுகள்

*இவற்றுக்கும் அப்பால் பயணவழி கிழக்காக மீண்டும் திரும்புகிறது. அங்கிருந்து வலப்புறமாகத் திரும்பிச்சென்றால், இடப்பக்கத்திற்கு அப்பால் கடற்கரை ஒன்றும், கங்கையும்[1] கண்களுக்கெதிரில் காணப்படும். மற்றும் அதற்குப் பிறகு, சற்று அருகிலேயே கிழக்குப் பிரதேசத்தின் கடைசிப் பகுதியாகிய கிரிஸே[2] என்ற நாடு காணப்படுகிறது. அதற்கருகில் கங்கை என்ற நதி[3] இருக்கிறது. அது நைல்நதி[4] போன்று மலையில் தோன்றிக் கடலில் கலக்கிறது. அதன் கரைகளில் வாணிகச் சந்தைகூடும் வணிக நகர் ஒன்று இருக்கிறது.[5] அதன்*

பெயரும் கங்கை நதியின் பெயரே. இந் நதி வழியாக இலவங்கபத்திரியும்[6] கங்கைப் பிரதேசத்துச் சடாமாஞ்சியும்,[7] முத்தும்,[8] மிகவும் உயர்ந்த ரகமுள்ள மஸ்லின் துணிகளும்,[9] கப்பல்களில் எடுத்துச் செல்லப்படுகின்றன. அத் துணிகள் 'கங்கைப்பிரதேசத்துத் துணிகள்'[10] என்றுவழங்கப்படுகின்றன. இவ்விடங்களுக்கு அருகில் பொன் சுரங்கங்கள்[11] இருப்பன வாகக் கூறப்படுகின்றன. இங்கே கால்டிஸ்[12] எனும் பெயர் கொண்ட பொன் நாணயம் செலாவணியில் உள்ளது. இந்த நதிக்கு நேர் எதிராகக் கிழக்குப் பக்கமாக இவ்வுலகத்திலே மிகுந்த மக்கள் நெருக்கமாக உள்ள தீவு ஒன்று உள்ளது. அது சூரியஉதயத்துக்கும் (நிலநடுக்கோட்டுக்கு) கீழே காணப் படுகிறது.[13] அத் தீவின் பெயர் கிரிஸே.[14] அங்குத்தான் எரித் திரியன் கடற்பிரதேசங்களில்[15] கிடைக்கும் ஆமையோடுகளை விடச் சிறந்த ஆமையோடுகள்[16] கிடைக்கின்றன.

## விளக்கவுரை

### 1. கங்கை (Ganges)

இது நதியின் பெயராகவும், அந் நதி பாயும் பிரதேசத்தின் பெயராகவும் கருதப்படுகிறது. அப் பிரதேசம் காஞ்சடிக் ரீஜியோ (Gangetic Regio) என்று வழங்கப்பட்டுவந்தது. ஆனால், ஆசிரியர் இதற்கடுத்தாற்போல், கங்கை நதியைக் குறிப்பிடுவதால், இங்குக் குறிப்பிடப்படுவது கங்கை பாயும் நாடேயாகும்.

### 2. கிரிஸே என்ற நாடு (The Country of Chrysae)

இங்குக் கிரிஸே ஒரு நாடு என்றே கூறுகிறார். தீவு என்று கூறவில்லை. இவ்வதிகாரத்தின் இறுதியில்தான் (குறிப்பு-14) கிரிஸே தீவைக் குறிப்பிடுகிறார். ஆக, இவர் இங்குக் குறிப்பிடுவது இருவேறு நாடுகள். ஆனால் இரண்டும் பொன் (chrysae) என்ற சொல்லை அடிப்படையாகக் கொண்டதாகும். அவ்விரு நாடுகளாவன : (1) ஸ்வர்ணக் கிராமம் (2) ஸ்வர்ணத் தீவு. (ஸ்வர்ணம் எனும் வடசொல்லுக்குப் பொருள் பொன் என்பதே). ஆனால், ஸ்வர்ணத் தீவை இறுதியில் கூறுவதால், இங்குக் குறிப்பிடப்படுவது ஸ்வர்ணக் கிராமமே (Swarnagrama). இது சந்திரகுப்த மௌரியர் காலத்தி லிருந்து (கி.மு. 324-297) வளர்ந்து வந்துள்ளது. குப்தர் காலத்தில்–சந்திரகுப்த விக்ரமாதித்யர் காலத்தில் (கி.பி. 380-413)- அது அப் பகுதியின் தலைநகரமாயிருந்தது. இந்த ஸ்வர்ணக் கிராமம் இப்பொழுது தாமிரலிப்தி (Tamluk) இருக்கும் இடத்திலேயே

இருந்தது எனச் சிலரும், அது ஸோனமுகி (ஸ்வர்ணமுகி) என்ற இடத்தைக் குறிப்பிடுகிறது என்று சிலரும் கூறுகின்றனர். ஸோன் என்பது ஸ்வர்ண என்பதன் திரிபே.

ஸ்வர்ணக் கிராமம் (ஸோனமுகி) இருப்பிடம்: 23°14′வ × 87°·7′ கி.

### 3. கங்கை நதி (River named Ganges)

இங்குத்தான் கங்கை நதி குறிப்பிடப்படுகிறது. இங்கு ஒரு சிறந்த துறைமுகம் இருந்தது. அதன் பெயர் தாமிரலிப்தி. இக் கங்கை நதி நைல் நதிக்கு ஒப்பிடப்படுகிறது.

### 4. நைல் நதி போன்று (Like the River Nile)

நைல் நதி ஆப்பிரிக்காவின் ரூவென்ஸோரி (Ruwen Zori) மலையில் (16,794 அடிகள்–5038 மீ) ஆல்பெர்ட் ஏரியில் (Lake Albert) தோன்றி, மத்திய தரைக் கடலில் விழுகிறது. அது போலவே, கங்கையும் இமயமலையில் உள்ள நந்தாதேவி சிகரத்தில் (Nandadevi-25447 அடிகள்-7634 மீ) வங்காள விரிகுடாவில் கலக்கிறது. இரண்டும் என்றும் வற்ரு நதிகளாகும்.

நந்தாதேவியின் இருப்பிடம்: 30°·23′ வ × 80°·1′ கி.

ரூவென்ஸோரியின் இருப்பிடம்: 0°·42′ வ × 30°·25′ கி.

### 5. வணிக நகர் ஒன்று உள்ளது (A Commercial Market Town)

இங்குச் சந்தை கூடும் வணிக நகர் ஒன்று உள்ளது. இதன் பெயர் தாமிரலிப்தி (Tamiralipti). இதை ஆங்கிலத்தில் இன்று தாம்லுக் (Tamluk) என்று வழங்கி வருகின்றனர். கங்கைப் பகுதியும் தாமிரலிப்தி; அதன் துறைமுகமும் தாமிரலிப்தி. அது போல தமிழ்நாட்டில் உள்ள தாமிரபருணியின் பெயர் தாப்ரபனே (Taprobane). ஆக, இரண்டும் தாமிரம் (Copper) என்ற சொல்லின் அடியாகப் பிறந்த சொற்களே. கிரேக்கர்கள் கங்கையைத் தாம்ரோலிதே (Tamrolithae) என்று வழங்கினர் போலும்.

யுவான் சுவாங் (கி.பி. 629–645) பின்வருமாறு கூறுகிருர்: "சமாதாதாவிலிருந்து மேற்குப் பக்கமாக 500 லித்தொலைவு சென்ருல், தன்-மோ-லிப்-தி (Tan-Mo-Lip-Ti) எனும் நாடு தென்படும். அது 1400-லிச் சுற்றளவு கொண்டது. தலைநகரின் சுற்றளவு 10 லி ஆகும்."

—(**யுவான் சுவாங்:** பக்கம் 140)

ஆக யுவான் சுவாங் காலத்தில்கூட, அப் பிரதேசம் தாமிரலிப்திப் பிரதேசம் என்றே வழங்கப்பட்டது. அதன் தலைநகரமும்,

துறைமுகமும் அந் நாட்டின் பெயரையே கொண்டுள்ளது என்று பெரிப்ளூஸின் நூலாசிரியர் (கி.பி. 50-80) கூறுவது உண்மையே. அக் காலத்தில் இடங்களை எத்துணை நுணுக்கமாக ஆராய்ந்துள்ள னர் என்பது வியப்புக்குரியதே.

## 6. இலவங்கபத்ரி (Malabothram)

இது இலவங்கப்பட்டை, இலவங்க இலை ஆகிய இரண்டையும் குறிப்பிடும். பத்ரி என்ற வடமொழிச் சொல்லுக்கு இலை என்பது பொருள். ஆக, இது இலவங்க இலையைக் குறிப்பிடும். இது இமய மலைப் பிரதேசத்தில் பெருவாரியாக விளைகிறது. கங்கை நதி வழி யாகத் தாமிரலிப்தித் துறைமுகத்துக்குக் கொண்டு வரப்பட்டு, அங்கிருந்து ஏற்றுமதி செய்யப்படுகிறது. தாலமி கூறுகிறார்: "உயர்ந்த இலவங்கபத்ரி சிர்ராடே என்ற இடத்தில் உற்பத்தி செய்யப்படுகிறது." — (**தாலமி**: புவியியல்)

ஹெரடோடஸ் (கி. மு. 484-425) பின்வருமாறு கூறுகிறார்:

"அராபியர்கள் இலவங்கம் எடுக்கப் புறப்படும்பொழுது, தங்கள் முகத்தை மூடிக்கொள்கின்றனர். கண்களை மட்டும் சிறு துவாரத் தால் பார்க்க வசதியாக இருக்கச் செய்கின்றனர். பறக்கும் வௌவால்களினின்று காப்பாற்றிக்கொள்ளவே அந்த உபாயம்.

மற்றும் இலவங்கபத்ரி எடுத்தல் இன்னும் பயங்கரமானது. அது எங்கிருந்து வருகிறது, எந்த நாட்டிலிருந்து வருகிறது என்பது ஒருவருக்கும் தெரியாது. பறவைகள் இவற்றைவைத்துக் கூடு கட்டு வதை அராபியர் பார்த்துள்ளனர். அது இலவங்கமரக் கொப்புகளை வைத்தே கூடு கட்டுகின்றன. உள்ளே இலவங்கபத்ரி இருக்கும். அராபியர்கள் வெட்டிய மாமிசத் துண்டுகளை-பெரிய அளவின தாகவே-கால்-கை-மூட்டுகள் இருக்கும் பகுதியாக—அப் பறவைக் கூண்டுகளுக்குச் சற்றுத் தொலைவில் வைப்பார்கள். அப் பறவைகள் அம்மாமிசத் துண்டுகளைத் தூக்கிக்கொண்டு தம் கூடுகளில் வைக்கும். அத் துண்டுகளின் கனம் தாங்காமல், அக் கூடு நொறுங்கிக் கீழே விழும். சிறிது நேரத்தில் மிகுந்த பாதுகாப்புடன் அவ் இலவங்கக் குச்சிகளையும், இலவங்கபத்ரியையும் சேகரித்து, அப் பறவைகள் துரத்தி வருவதற்குள் ஓடி விடுவர்.

லெடானம் (பிடெலியம்) எடுப்பது இன்னும் விசித்திரமானது. செம்மறி ஆடுகள் (ஆண் ஆடுகள்) சில புதர்களிடம் செல்லும் போது அதன் தாடிகளில் அங்குள்ள வாசனைப் பண்டம் கோந்து போல் ஒட்டிக்கொள்ளும். பின்னர் அவை வெளிவந்தவுடன், அவற்றை மயங்க வைத்து, அவ்வாசனைப் பிசினை எடுத்துச்செல்வர்.

இது வாசனை எழுப்ப உதவும் தூபங்களுக்குப் பயன்படுத்தப்படு கிறது.''

(ஹெரடோடஸ்: புத்தகம் III, பக்கம் 220-221)

மற்றும் அதிகாரம் 56, குறிப்பு-2 பார்க்கவும்.

**7. கங்கைப் பிரதேசத்து சடாமாஞ்சி** (Gangetic Spikenard)

இதுவும் இமயமலைப் பிரதேசத்திலிருந்து கொண்டுவரப்பட்டது. இது நக்கிடா (Nakkida) முதலிய இடங்களுக்கு ஏற்றுமதி செய்யப் பட்டது. அங்கிருந்து ரோம் முதலிய நாடுகளுக்கு வேறு கப்பல் களில் ஏற்றி அனுப்பப்பட்டது.

பிளினி (கி.பி. 23-79) கூறுகிறுர்: ''இச் சடாமாஞ்சியிலே மற்ெருரு வகை உண்டு. அது மிகவும் அருவருக்கத்தக்க நாற்றத் தைக் கொடுத்தது.'' — (பிளினி : புத்தகம் XII, அதிகாரம் 26)

மற்றும், அதிகாரம் 48, குறிப்பு-5 பார்க்கவும்.

**8. முத்து** (Pearl)

இக் கங்கைப்பிரதேசத்தின் வழியாக எடுத்துச் செல்லப்படும் முத்துகள் சிறந்த ரகத்தைச் சேர்ந்தனவல்ல. விலையில் குறைவான மதிப்புடையனவாகும். நிறமும் செந்நிறம். வெண்மை நிறங் கொண்ட முத்தே உயர்ந்த முத்து. இவ்வகை முத்துகள் மன்னுர் வளைகுடாவிலும், கொற்கைத் துறைமுகத்திலும் முகிழ்ந்தெடுக்கப் பட்டன. முத்து என்பது தமிழ்ச்சொல்லே. மற்ற மொழிகளில் இப் பகுதியை ஒட்டியே பல பெயர்களால் வழங்கப்படுகின்றன. பரல் என்ற ஒருவகை முத்தின் பெயரே ஆங்கிலத்தில் பெர்ல் (Pearl) என்ருயிற்று. முத்து அக் காலத்தில் மிகச்சிறந்த வாணிகப்பொரு ளாகக் கருதப்பட்டது.

மற்றும் அதிகாரம் 56, குறிப்பு-22 பார்க்கவும்.

**9. உயர்ந்தரக மஸ்லின் துணிகள்** (High Class and Superior muslin Cloths)

இது டாக்கா (Dacca) மாவட்டத்து மஸ்லின் வகையைக் குறிப் பிடுவதாகும். பழங்காலத்திலிருந்து அப் பகுதிகளில் துணி உற்பத்தி பெரும் அளவில் இருந்தது. மற்றும் அத் துணியை அப்படியே குழல் வடிவமாகத் திரித்து, கைவிரல் மோதிரத்தின் வழியாக நுழைத்துப் பார்ப்பார்கள். அக் குழல்துணி அத் துவாரத்தில் புகுந்து சென்ருல், அதன் தரம் உண்மையாகவே உயர்ந்தது என்று கருதப்படும்.

" " மற்றும் இத்தகைய துணியைப்பற்றி டிரெவெனியர் (Travenier கூறுகிருர்: "ஒரு பாரசீக அயல்நாட்டுத் தூதுவர், பணியாற்றிய இந்தியாவிலிருந்து தம் சொந்த மேலைநாட்டுக்குத்திரும்பிச் சென்ற பொழுது, தேங்காய் ஒன்றை உடைத்து அதனுள் இருக்கும் பருப்பை எடுத்துவிட்டு, இரண்டு வெற்றோடுகளை உலர்த்தி வைத்துக் கொண்டார். தாம் ஊருக்குத் திரும்பும் பொழுது அத் தேங்காயின் வெளிப்பகுதியைப் பற்பல நவரத்தினங்கள் கொண்டு அலங்கரித் தார். உள்ளே ஒரு மஸ்லின் துணியைச் சுருட்டிவைத்து. தேங்காயின் மேல் தோட்டைத் தேங்காயின் முழு உருவமாகவே ஆக்கிவிட்டார். அவ்வாறு அலங்கரித்து எடுத்துச் சென்ற தேங்காயை, தம் நாடு சென்றதும், அரசர் பாரசீக மன்னருக்கு அதை அன்பளிப்பாக அளித்தார். அரசர் அப் பரிசைப் பார்த்தமாத் திரத்திலே அதன் அழகில் தம் மனத்தைப் பறிகொடுத்தார். அத் தேங்காயை உடைக்கலாம் எனும் ஆர்வத்தால், ஒரு சிறிது தட்டினர். அவ்வளவுதான். அது இரண்டாகப் பிளவுபட்டு உள்ளி ருந்து மெல்லிய மஸ்லின் போன்ற ஆடை அவ்வரசர் மடியில் 'பொத்'தென விழுந்தது. அரசர் அம் மெல்லிய துணியை எடுத்துப் பிரித்துப்பார்த்தார். அத் துணி 60 முழம் நீளமிருந்தது. மற்றும், அது தலைப்பாகைக்குரிய சரிகை வேலைப் பாட்டுடன் செய்த மிகவும் மெல்லிய மஸ்லின் துணியாகும்." இதனால் மஸ்லின் துணியின் மென்மைத்தன்மை எவ்வாறிருந்தது என்பது இதனாற் புலப்படு கிறதன்றோ? இது அண்மைக் காலத்திய நிகழ்ச்சி.

எகிப்தியப் பேரழகி கிளியோபாத்ரா (கி.மு. 68-30) தன் மார் பிலும் முகத்திலும் அணியும் இவ்வகை மெல்லியதுணியை இந்தியா விலிருந்தே பெற்று உடுத்தினள் என்று வரலாறு கூறுகிறது. ஆக, அக் காலத்திலே அயல்நாட்டு அரச குடும்பங்களால் இந்திய மஸ்லின் துணி பெரும் அளவில் விரும்பி வாங்கப்பட்டது என்பது இதனால் தெரிய வருகிறது.

### 10. கங்கைப் பிரதேசத்துத் துணிகள் (Gangetic Regio Cloths)

மேற்கூறப்பட்ட துணிவகைகள் "கங்கைப் பிரதேசத்துத் துணி கள்' என வழங்கப்பட்டன. சுருக்கமாக கங்காரிடோ (Gangarito) எனப்பெயர் பெற்றன.

### 11. பொன் சுரங்கங்கள் (Gold Mines)

இது சோணை (சோன்-Son) நதி பாய்ந்த இடத்தில் விளங்கிய சுரங்கங்களைக் குறிப்பிடுவதாகும். சோணைநதிக் கரையில்தான் அசோகப் பேரரசரின் (கி.மு. 263-224) தலைநகரமான பாடலி புத்திரம் இருந்தது. இது நவீன பாட்னா (Patna)வைக் குறிப்பிடுகிறது.

சோணைநதி, இலத்தீன் மொழியில் இரணபோ (Erranaboas) எனும் பெயர் பெறும். அச் சொல் ஹிரண்ய-வாஹா (Hiranya vaha) என்பதன் கிரேக்க உச்சரிப்பே. ஹிரண்யம் என்ற சொல் வடமொழியில் பொன்னைக் குறிப்பிடும். ஹிரண்ய வாஹா என்பது பொன்னைத் தாங்கிச் செல்லும் நதி என்று பொருள்படும். இதேமாதிரி அரணபோ (Auranabo) என்பது. இது இருணம் (Saline soil) என்பதன் அடிப்படையில் பிறந்து, ரான் ஆப் கச் (Rann of Cutch) எனும் பிரதேசத்தைக் குறிப்பிடுகிறது. (அதிகாரம் 40, குறிப்பு-2 பார்க்கவும்.)

ஹெரடோடஸ் (கி.மு. 484-425) என்பார் பொன் அகழும் எறும்புகளைப்பற்றி (Gold digging ants) எழுதியுள்ளார்:

"பொன் இருக்கும் இடங்களை இந்தியர்கள் அடைந்தவுடன், அங்கிருக்கும் பொன்துகளைத் தாங்கள் எடுத்துச் சென்ற மணலுடன் கலந்து கொண்டு, ஒட்டகத்தின் மீதேறி வந்துவிடுவர். காரணம் அங்கிருக்கும் பொன் அகழும் எறும்புகள் மிக வேகமான நடையைக் கொண்டவை. அவற்றினின்று ஒருவரும் தப்ப முடியாது. ஆகையால் பெண் ஒட்டகங்களின்மீது அப் பொன் மூடைகளை ஏற்றி, ஆண் ஒட்டகங்களைப் பின்வருமாறு செய்வர். ஆண் ஒட்டகங்கள் மந்தகதிபோடுபவை; பெண் ஒட்டகங்கள் தாங்கள் விட்டுவந்த குட்டிகளை நினைத்துக்கொண்டு விரைவாகவே ஓடும்."

—(ஹெரடோடஸ்: புத்தகம் III, பக்கம் 218)

பொன் கட்டிகளை அப்படியே ரோம் நாட்டுக்கு அனுப்பி, அவை நாணயங்களாக அடிக்கப்பட்டு மீண்டும் பாரிகாஸா (Barygaza) துறைமுகத்தில் இறக்கப்பட்டன.

பிளினியும் பொன் நாணயங்களைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

—(பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 23, குறிப்பு-115, பக்கம் 65)

பைபிளில் (Bible) பொன் குறிப்பிடப்பட்டுள்ளது:

"They presented unto him gifts; gold and frankincense and myrrh."

—(St. Matthew.2-11)

மற்றும் அதிகாரம் 39, குறிப்பு-11 பார்க்கவும்.

**12. கால்டிஸ் (Caltis)**

இவ்வகை நாணயங்கள் அக் காலத்தில் கால்டிஸ் (Caltis) என்று வழங்கப்பட்டனபோலும்.

### 13. நிலநடுக் கோட்டுக்குக் கீழே (Below the Equator)

கிரிஸே எனப்படும் தீவு இன்று சுமத்ரா (Sumatra) எனப்படுகிறது. அது வடமொழியில் ஸ்வர்ணத்தீவு எனப்பட்டது. இத் தீவு நிலநடுக்கோட்டின் வழியாகச் செல்கிறது. அதன் தென் பகுதிகள் நிலநடுக் கோட்டிற்குக் கீழேயுள்ளன.

கிரிஸே தீவின் இருப்பிடம்: 0°·0′ × 100°·0′ கி

### 14. கிரிஸே தீவு (Island Chrysae)

இது பொன்தீவு என்று வழங்கப்படுகிறது. வடமொழியில் ஸ்வர்ணத்வீபம் (Swarna Dveep) என்றும், ஆங்கிலத்தில் சுமத்ரா (Sumatra) என்றும் வழங்கப்படும். இதைத் தாலமி (கி.பி. 119-161) ஆரி செர்சனீஸஸ் (Aurea Chersonesus) என்று குறிப்பிட்டுள்ளார், இப்பொழுது இத் தீவுகள் யாவும் மலேசியா (Malaysia) என்று வழங்கப்படுகின்றன. வட மலேயாவில் பொன் சுரங்கங்கள் நிறைந்திருந்தன. புத்தபிரானுர் கம்போடியா நாட்டிற்கு விஜயம் செய்ததாகக் கூறப்படுகிறது. புத்தமதம் கம்போடியாவில் பெரும் அளவில் போற்றப்படுகிறது.

மற்றும், அதிகாரம் 56, குறிப்பு-21 பார்க்கவும்.

சுமத்ராவின் இருப்பிடம்: 0°·0′ × 100°·0′கி.

இத் தீவு நிலநடுக்கோட்டின்மீது உள்ளது.

### 15. எரித்திரியன் கடற்பிரதேசம் (Erythrean Sea)

எரித்திரியம் என்றுல் சிவப்பு என்பது பொருள். இச் சொல் செங்கடலைக் குறிப்பிடுகிறது. பின்னர் அராபியன் கடலையும், இந்தியப் பெருங்கடலையும் குறிப்பிடலாயிற்று. இதைப் பிளினி (கி.பி. 23-79) தம் வரலாற்றில் குறிப்பிட்டுள்ளார். (பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 24, குறிப்பு-21 பார்க்கவும்.)

மற்றும் அதிகாரம் 38, குறிப்பு-4 பார்க்கவும்.

### 16. ஆமையோடுகள் (Tortoise Shells)

இங்குக் கிடைக்கும் ஆமையோடுகள், எரித்திரியன் கடற்பகுதிகளில் கிடைக்கும் ஆமையோடுகளைவிட உறுதிவாய்ந்தவை. இவை அழகுபடுத்தும் சாதனப்பொருள்களாகவும், சிறு குப்பிகள் செய்யவும் பயன்படுத்தப்பட்டன.

மற்றும் அதிகாரம் 4, குறிப்பு-11 பார்க்கவும்.

# 64. திஸ், தினே

இந் நாட்டைத் தொடர்ந்து வட திசையில் நீண்ட தொலைவு சென்றால், கடல் திஸ்[1] என்ற நாட்டுடன் முடிவடைகிறது. இங்குத் தினே[2] எனும் பெரிய நகரம் ஒன்று காணப்படுகிறது. அங்கிருந்து பதனிடப்படாத பட்டும்,[3] பட்டு நூலும், பட்டுத் துணியும், கால்நடை வழியாகப் பாக்டிரியாவுக்கும்,[4] பாரிகாஸாவிற்கும்[5] எடுத்துச் செல்லப்படுகின்றன. மற்றும், கங்கை நதி வழியாக டிமிரிகாவுக்கும்[6] ஏற்றுமதி செய்யப்படுகின்றன. ஆனால், திஸ் எனும் நாடு கடப்பதற்கு அவ்வளவு எளிதான நாடல்ல; அங்கிருந்து மிகமிகச் சிலரே வருகின்றனர். அவ்வாறு வருபவர்களும் எப்பொழுதாகிலும் தான் வருகின்றனர். அந் நாடு சிறிய கரடி[7] எனும் நட்சத்திரத் தொகுதியினடியில் காணப்படுகிறது. மற்றும், அந் நாடு பாண்டஸ்,[8] காஸ்பியன் கடல்[9] ஆகியவற்றின் தொலைவான இடம் வரையில் தன் எல்லையைக் கொண்டுள்ளது என்று கூறப்படுகிறது. இதற்கடுத்தாற்போல், மெயாடிஸ் ஏரி[10] எனப்படும் ஓர் ஏரி உள்ளது. இந்த ஏரி நீர் எல்லாம் கடலில் கலந்துவிடுகிறது.

## விளக்கவுரை

**1. திஸ் (This)**

இது தி-ஸன் (Tsin) என்ற சீன நாட்டைக் குறிப்பிடுகிறது. இந்தச் சீன நாடு பல ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகப் புகழ் பெற்றிருந்தது. இந் நாட்டிற்கும், பாக்டிரியா நாட்டிற்கும் (Bactria) ஒட்டகத்தின் மேல் ஏறிச்செல்லும் பாதையொன்று கி.மு. 183-ல் அமைக்கப்பட்டது என்று கூறப்படுகிறது.

**2. தினே (This-ne)**

இது சீனே என்ற சொல்லின் திரிபாகும். சீன நாட்டைக் குறிப்பிடும். மார்க்கோபோலோ காலத்தில் (கி.பி. 1254-1354) சீனாவின் அரசர் குப்ளாய்கான் கான்பாலு எனும் ஊரில் அரண்மனையில் வதிந்ததாக எழுதியுள்ளார். கான்பாலு என்பதுதான் இன்றைய பீகிங் (Peking) (மார்க்கோபோலோ: பக்கம் 117)

கி.பி. 25-28-ல் ஆண்ட குவாஸ்ரோடி (Kuauzroti) எனும் சீனப் பேரரசர், சீனாவை ஓர் இராணுவ நாடாக ஆக்க முயன்றார்.

அவருடைய மகன் மிங்க்டி (Mingti) என்பார், யுசி நாட்டை (Yeuchi) நிர்மாணித்த காட்பிசஸ் (Kadphises) என்பவரைப் போரில் வென்றார். இந்தப் போருக்குப் பின்னரே புத்தமதம் சீனாவில் விரைவாகப் பரவத் தொடங்கிற்று. சீனாவுக்கும் ஆசியாவுக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்பட்ட காலமும் அதுவேயாம்.

பீகிங்கின் இருப்பிடம் : 39°·55′ வ × 116°·24′ கி.

## 3. பட்டு (Silk)

சீனாதான் உலகில் பட்டு உற்பத்தியில் முதலிடம் வகித்திருந்தது. உலகிலே பட்டு முதல் முதல் உற்பத்தி செய்யப்பட்டது சீனாவில்தான். பதனிடப்படாத பட்டு (Raw silk) அயல்நாடுகளுக்குக் கால்நடையாகவே கொண்டுவரப்பட்டு ஏற்றுமதி செய்யப் பட்டது.

பட்டு என்பது பட்டுப் புழுவின் மூலம், அது தன்னைச் சுற்றியுள்ள கூட்டினின்று எடுக்கப்படும் நூலிழையாகும்.

சிர்கே (Sirkeh) என்பது மங்கோலிய மொழிச் சொல். அதிலிருந்துதான் நவீன சில்க் (Silk) எனும் சொல் உருவாயிற்று. சிர்கே என்ற சொல்லின் அடிப்படையான வேரிலிருந்துதான் செரெஸ் (Seres) என்ற சொல் உருவாயிற்று. சேரே நாடு (Seres Country) என்று பிளினி தனியே குறிப்பிட்டுள்ளார். (**பிளினி:** புத்தகம் VI, அதிகாரம் 20). செரஸ் என்னும் தலைப்பிலேயே சீன நாட்டைப் பற்றிப் பிளினி விவரிக்கிறார்.

இங்குக் கூறப்பட்ட செரஸ் (Seres) எனப்படும் சீனர்கள் தங்கள் அண்டை நாடுகளுடன் எப்பொழுதும் சமாதானமாகவே வாழ விரும்புவர். எவராவது நதியைக் கடந்து, வாணிகத் தொடர்பாகத் தங்கள் நாட்டுக்குள் வந்துவிட்டால், அவர்கள் கேட்கும் விலைக்கே தம் பொருளைக் கொடுத்துவிடுவர். எக்காரணம் கொண்டும், சண்டை போடக்கூடாது; சமாதான முறையிலேயே பணியாற்றிச் செல்லவேண்டும் என்பதே அவர்கள் கொள்கையாயிருந்தது. ஆக, இவர்கள் வெளியே வாணிக நிமித்தமாகப் போகாத காரணத்தால், மற்ற மக்களுடன் தொடர்பற்ற நிலையில், நாகரிகம் விரைவாகப் பரவவில்லை.

## 4. பாக்டிரியா (Bactria)

பாக்டிரியா முதல் பாரிகாஸா வரை ஒரு பாதை போடப் பட்டது. அது கி.மு. 2 ஆம் நூற்றாண்டில் போடப்பட்டது. சீன நாட்டு முழு வாணிபமும் தாமிரலிப்தி (Tamluk) வழியாகவே நடந்து வந்தது. பொருள்கள், சிந்துநதிக் கழிமுகத்தில் இருந்த

பாதலத்திலும் (Patala), அதன் கடல் துறைமுகமாகிய பார்பரிகம் (Barbaricum) என்ற இடத்திலும், குவிக்கப்பட்டுக் கிடந்தன. பட்டு நூல்கள் அராபிய வாணிகச் சந்தை நகரங்களுக்கு அனுப்பப் பட்டன. அவை அங்குச் சரிகை, பூ வேலை செய்யப்பட்டு, ரோமப் பேரரசுக்கும், எகிப்துக்கும் அனுப்பப்பட்டன. அராபிய நாட்டுச் சரிகை வேலைப்பாடும், பூப்பின்னலும் ரோமநாட்டு மக்களால்-அரச குடும்பத்தினரால்-பெரிதும் விரும்பப்பட்டன.

**5. பாரிகாஸா (Barygaza)**

பட்டு நூல், பதனிடப்படாத பட்டு, பட்டுத்துணி ஆகியவை பாரிகாஸாத் துறைமுகத்துக்கு எடுத்துச் செல்லப்பட்டன. அங்கிருந்து ரோம் முதலிய நாடுகளுக்கும், அரேபியாவுக்கும் ஏற்றுமதி செய்யப்பட்டன.

பாரிகாஸா என்பதே நவீன புரோச்.

பாரிகாஸாவின் இருப்பிடம்: 21°·41′ வ × 73°·1′ கி.

**6. கங்கை நதி வழியாக டிமிரிகாவுக்கு (Through Ganges to Dimirica)**

கங்கைப் பிரதேசத்திலிருந்து கொண்டுவரப்பட்ட வாசனைப் பண்டங்கள், போளம், சடாமாஞ்சி முதலியன பாரிகாஸாத்துறை முகத்துக்கு, தாமிரலிப்தி (Tamluk) வழியாகக் கொண்டுவரப்பட்டு, அங்கிருந்து தொண்டி, முசிறி, நெல்கிந்தா, பொரக்காடு முதலிய தமிழகச் சந்தை நகரங்களுக்கு அனுப்பப்பட்டன. டிமிரிகா என்பது தமிழகம் என்பதன் திரிபே. மார்க்கோபோலோ, மலையாளக் கடற்கரையில் இறக்குமதி செய்யப்படும் பொருள்கள், ஏற்றுமதி செய்யப்படும் பொருள்கள் ஆகியவற்றைப் பற்றிக் குறிப் பிட்டுள்ளார். —(மார்க்கோபோலோ: பக்கம் 80)

**7. சிறிய கரடி (Little Bear)**

இது 'சிறு கலப்பை மண்டலம்' என்று வழங்கப்படும். பெருங் கலப்பை மண்டலம் உர்ஸா மேஜர் (Ursa Major) என்றும், சிறு கலப்பை மண்டலம் உர்ஸா மைனர் (Ursa Minor) என்றும் வழங்கப்பட்டன. பெருங்கரடி, சிறுகரடி ஆகியவை வடதுருவ நக்ஷத்திரத்தை நோக்கியிருப்பதால், சீனு தேசம் நெடுந்தொலைவு வடபகுதியில் உள்ளது என்பதைக் கூறவே அவ்வாறு குறிப்பிட்டார் போலும்.

**8. பான்டஸ் (Pontus)**

இது கருங்கடல் (Black Sea) என்று வழங்கப்படுகிறது.

பாண்டஸ் யூக்ஸைன் (Pontus Euxinus) என்று கிரேக்கர்களால் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆசியா மைனரில் வசித்த கிரேக்கர்கள், அக் கருங்கடலையொட்டிப் பல குடியேற்றங்களை ஏற்படுத்தினர். மைலீடஸ் (Miletus) நகரத்தைச் சேர்ந்தவர்கள். அதில் பெரும் பங்கு கொண்டனர்.

கருங்கடலின் இருப்பிடம் : 43°·0′ வ × 33°·0′ கி.

**9. காஸ்பியன் கடல்** (Caspian Sea)

இக் கடல், கருங்கடலுக்குக் கிழக்கேயுள்ளது. அங்கே சித்தியர்கள் (Scythians) வாழ்ந்து வந்தனர். அவர்களைத்தான் தினே நாட்டினர் என்று கூறுகிறார் போலும்.

காஸ்பியன் கடலின் இருப்பிடம்: 42°·0′ வ × 52°·0′கி.

**10. மெயாடிஸ் ஏரி** (Maeotis Lake)

இது அஜாவ் கடல் (Sea of Azov) என்பதைக் குறிப்பிடுகிறது. பிளினி (கி.பி. 23-79) இவ்வேரியைக் குறிப்பிட்டுள்ளார். (**பிளினி:** புத்தகம் VII, அதிகாரம் 27, பக்கம் 191) இது கருங்கடலுக்கு வடக்கேயுள்ளது. அங்குள்ள சித்தியர்கள் யாவரும் மெயோடிக மரபினர் (Maeotics) என்றே வழங்கப்பட்டு வருகின்றனர்.

மெயாடிஸ் ஏரி (அஜாவ்) இருப்பிடம் : 47°·0′ வ × 39°·15′கி.

# 65. பிசாடே

*ஒவ்வோர் ஆண்டும் திஸ்[1] என்ற நாட்டின் எல்லைப் பிரதேசத்தில் குள்ளவடிவில் கொண்ட உடலையும், அகன்ற தட்டையான முகங்களையும் உடையவர்களாகக் காணப்படும் ஓர் இனத்தார்[2] கூட்டமாகவே வருகின்றனர். அவர்கள் சாந்த குணமும், ஊண் உடை ஆகியவற்றை மட்டுமே சிந்திக்கும் குணமும் கொண்டவர்களாய்க் காணப்படுகின்றனர். அவர்கள் பிசாடே[3] என்ற பெயரால் வழங்கப்படுகின்றனர். மற்றும், அவர்கள் யாவரும் நாகரிகமற்றவராவர். அவர்கள் தங்கள் மனைவி மக்களுடனும், மூட்டைமுடிச்சுகளுடனும், பச்சைத் திராட்சையின் இலைபோன்று வண்ணமிடப்பட்ட பிரம்புப் பெட்டிகளுடனும் வருகின்றனர். அவர்கள் தங்கள் நாட்டிற்கும், திஸ் என்ற நாட்டிற்கும் இடையேயுள்ள ஓர் இடத்தில் ஒன்றுகூடுகின்றனர். அங்கே அவர்கள் தாம்*

கொண்ட பெட்டிகளையே படுக்கையாகக்கொண்டு, பெரும் விருந்து ஒன்றைச் சில நாள்கள் தொடர்ந்து வைக்கின்றனர்.[4] சில நாள்களுக்குப் பிறகு அவர்கள், உள்ளார்ந்த பகுதியில் உள்ள தங்கள் சொந்த நாட்டிற்கே திரும்பிவிடுகின்றனர். இவ்வாறு அவர்கள் வருவதைக் கண்ட உள்நாட்டு மக்கள் அவர்களுடைய பாய்களை ஒன்றுசேர்க்கின்றனர். அப் பாய்களின் சுருள்களிலிருந்து பத்ரி[5] எனப்படும் ஒருவகை இலைகளைப் பொறுக்கி ஒன்று சேர்க்கின்றனர். அவர்கள் அந்த இலைகளை ஒன்றுசேர்த்து, நெருக்கமாக அடுக்குகளாக அடுக்கிப் பந்து போல் உருண்டையாக ஆக்குகின்றனர். அப் பந்தை, தாங்கள் கொணர்ந்த கயிறுகள் கொண்டு, சிறு துண்டுகளாக ஆக்கி வைக்கின்றனர். இவற்றுள் மூவகை உருண்டைகள் உள்ளன. முதலாவது, பெரிய இலைகளிலிருந்து செய்யப்படும் உருண்டைகள்; இவை பெரிய இலவங்கபத்திரி[6] எனப்படுகிறது. இரண்டாவது, நடுத்தர அளவுள்ள இலைகளிலிருந்து செய்யப்படும் உருண்டைகள்; இவை இடைத்தர இலவங்க பத்ரி என்று நவிலப்படுகிறது. மூன்றுவது, மிகவும் சிறிய அளவுள்ள இலைகளிலிருந்து செய்யப்படும் உருண்டைகள். இவை கடைநிலை இலவங்கபத்திரி என்று வழங்கப்படும். இலவங்கபத்திரியில் மூவகை இலைகள் காணப்படுகின்றன; அவை பக்குவப்படுத்தும் பொருட்டு உள் நாட்டிற்கு எடுத்துச் செல்லப்படுகின்றன.

## விளக்கவுரை

### 1. திஸ் (This)

இது திஸ்ன் (Tisn) எனப்படும் சீன நாட்டைக் குறிப்பிடும். இச் சீன நாடு பல ஆயிரக்காணக்கான ஆண்டுகளாகப் பட்டுத் தொழிலுக்கும் தேயிலைக்கும் புகழ் பெற்றிருந்தது. அயல் நாடுகளிலிருந்து சில வணிகர்கள் இச் சினநாட்டு எல்லைக்கு வந்து, தங்கள் பொருள்களை விற்றுச் சென்றனர்.

### 2. குள்ள வடிவமும், தட்டையான முகங்களும் உடையவர் (Short stature and oval faced people)

இவர்கள் மங்கோலியர்களும் சீனர்களும் ஆவர். இந் நாடுகளிலிருந்து அக் காலத்தில் வெளியுலகிற்கு எவரும் வாராமையால், நாகரிகம் குறைந்தவர்களாகக் காணப்பட்டனர். அதன் காரணமாக,

அவர்களுக்குத் தேவை ஊண், உடை. இவைபற்றி மட்டுமே அவர்கள் சிந்தித்து வாழ்ந்ததாகக் கூறுகிறார்.

### 3. பிசாடே (Besatae)

முன்னர் அதிகாரம் 62-ல் குறிப்பு 7-ல் சிர்ராடே (கிராதா) எனும் மக்கள் குறிப்பிடப்பட்டதே போன்று, இங்குப் பிசாடே எனும் இனத்தவர் குறிப்பிடப்படுகின்றனர். இவர்கள் பின்வருமாறு வர்ணிக்கப்படுகின்றனர்: "இவர்கள் குள்ளர்கள்; குகைகளில் வசிப்பவர்கள்; சிறந்த மலைச்சிகரங்களை வெகு எளிதில் ஏறிக் கடப்பதில் வல்லுநர்; இவர்களுக்கு அம் மலைநாட்டின் பாதையும், காடுகளின் இருப்பிடமும், காட்டில் உள்ள வாசனைப் பண்டங்கள் உற்பத்தியும் நன்றாகத் தெரியுமாதலால், இவர்கள் அங்குள்ள இலவங்கபத்திரி இலையைச் (Malabothrum) சேகரிப்பதில் மிகுந்த ஊக்கம் காட்டுகின்றனர். இவர்கள் தலை மிகப் பருத்தும், உடல் குட்டையாகத் தடித்தும், இவர்கள் தலைமுடி குத்தாக நேராக வளர்ந்தும் காணப்படுகின்றது. இவர்கள் திபெத்து நாட்டிலும், இமயமலை அடிவாரத்திலும் வசிக்கின்றனர். இவர்களது நவீனபெயர் கூர்க்கர் என்பதே."

### 4. பலநாள்கள் தொடர்ந்து விருந்து நடத்தல் (Continuous feast for a number of days)

இது மலைநாட்டுச் சாதியினர் தம் கூட்டத்தினரிடையே செய்யும் ஒரு சடங்காகும். இம் மக்கள் விருந்து படைக்கப்புகை எழுப்புவதைக் கண்ட அந் நாட்டு மக்கள் ஆங்குக்கூடி, அவர் கொண்டுவந்துள்ள பொன்னைப் பெற்றுக் கொண்டு, அதற்குப் பதிலாகத் தங்கள் நாட்டு வாணிகப் பொருள்களைக் கொடுத்து விட்டுச் செல்வர். இம்மாதிரியான விருந்துகள் வாணிகச் சந்தை நகரங்களில் அடிக்கடி நடத்தப்படுவது கண்கூடு. இதேமாதிரி, காட்டு மனிதர் அளிக்கும் விருந்தொன்றினைப் பற்றி ஹெரடோடஸ் (Herodotus) (கி.மு. 484-425) குறிப்பிடுகிறார்.

"லிபியா நாட்டு மக்களுடன் கார்த்தெஜீனியர்கள் வாணிகம் நடத்தும்முறை பின்வருமாறு: இந் நாட்டுக்கு வந்தவுடன் அவர்கள் தங்கள் பொருளை இறக்கிவைத்துவிட்டு, தங்கள் படகுகளுக்குச் சென்று, பெரும்புகை எழுப்புவர். உள் நாட்டு மக்கள் அப் புகையைப் பார்த்தவுடன், பொற் கட்டிகளை அக் கடற்கரையில் கொணர்ந்து வைப்பர். படகில் உள்ள கார்த்தெஜீனியர்கள், தாங்கள் கொணர்ந்த பண்டங்களை அப் பொன்னுக்குப் பக்கத்தில் வைத்து விட்டு மீண்டும் தம் படகுக்கே திரும்புவர். அப் பொன் தாங்கள் வைக்கும் வாசனைப் பண்டங்களுக்குச் சரியான ஈடானதே என்று

நினைத்தால் உடன் தங்கள் நாட்டுக்குத் திரும்பிவிடுவர். சிறிது குறைவு என்று தோன்றினல், தங்கள் படகுகளில் காத்திருப்பர். அதற்குள் உள் நாட்டுமக்கள் இன்னும் சிறிதளவு பொன்னைச் சேர்த்து அங்கு வைப்பர். இருவரும் மனநிறைவு பெற்றவுடன், அவரவர் தத்தம் நாடு திரும்பிவிடுவர். இருவர்தரப்பிலும் நேர்மை, நியாயம் பூரணமாக இருக்கும். மற்றும் அப் பொன் முழுவதையும் கார்த்தெஜீனியர்கள் எடுத்துக் கொண்ட பிறகே, அவர்கள் அதற்காக வைக்கப்பட்டுள்ள வாசனைப் பண்டங்களைத் தொடுவர். அதுவரையில் அவர்கள் அப் பண்டங்களைத் தொடவும் செய்யார்.''

—(ஹெரடோடஸ்: புத்தகம் IV, பக்கம் 307)

**5. பத்ரி (Bothrum)**

இது இலவங்கபத்திரி (Malabothrum) என்று வழங்கப்படும். இது தமால மரத்தின் இலையையும் குறிப்பிடக்கூடும் என்று கூறுகின்றனர். தாலம், தமாலம் இவ்விருவகை மரங்களும் இமய மலையில் உள்ளன. மருந்துக்காக இவற்றின் இலைகள் பயன்படுத்தப் படுகின்றன. மற்றும் அதிகாரம் 56, குறிப்பு-2 பார்க்கவும். இது போளம் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது; இறந்த உடலைப் பாதுகாக்க இது பயன்படுத்தப்பட்டது. மற்றும் அதிகாரம் 39, குறிப்பு-13 பார்க்கவும்.

**6. இலவங்கபத்திரி (Malabothrum)**

இது இலத்தீன் மொழியில் சின்னமோமம் தமாலம் (Cinnamomum Tamalum) என்று வழங்கப்பட்டது. இது அரேபியாவுக்கும் ரோம் நாட்டுக்கும் ஏற்றுமதி செய்யப்பட்டது. இப் பொருள் அரச குடும்பத்தினரால் பெரிதும் விரும்பப்பட்டது.

மற்றும் அதிகாரம் 56, குறிப்பு-2 பார்க்கவும்.

---

# 66. கடத்தற்கரிய தொலைவு நாடுகள்

இந்த இடங்களுக்கு அப்பால் உள்ள நாடுகள்[1] யாவும் கடத்தற்கு மிகவும் அரிதாயுள்ளன. அதற்குக் காரணம், அங்குக் குளிர் மிகவும் அதிகம். அல்லது அவ்விடம் போனல், திரும்ப வழி தெரியாது எங்கோ சென்று விடுவதும் உண்டு. அதற்குக் காரணம் தேவர்களின்[2] தெய்விகச் சக்தியே

அவ்வாறு முன்னேறவிடாமல் தடுத்து நிறுத்துகிறது என்று சொல்லப்படுகிறது.

## விளக்கவுரை

### 1. அப்பால் உள்ள நாடுகள் (Far off Lands)

சிக்கிம், செரெஸ் முதலிய நாடுகளுக்கும் அப்பால் உள்ள நாடுகள் கடத்தற்கு மிக அரியனவாம். அதற்குக் காரணம் இமயமலையின் மிக உயர்ந்த சிகரங்களாகும். இமயமலையில் எப்பொழுதும் பனி மூடியுள்ள காரணத்தால், மலைமீது ஏறிப் போவதென்பது எளிதான செயலன்று. அன்றைக்கு அதற்கப்பால் நாடுகள் இருக்கின்றனவா, இல்லையா என்பது தெரியாமலேயே இருந்தது. மேலும், வழிகள் கிடையா.

### 2. தேவர்களின் தெய்விகச் சக்தி (God's Divine Power)

இமயமலையில் உள்ள மானசரோவர் ஏரியும், கைலாஸ பர்வதத்தில் பனியுருவாகவே காட்சியளிக்கும் லிங்கஸ்வரூபமும், பதிரி நாதர் கோயிலும், அக் கோயில் இருந்த பத்திரிகாசிரமும் அன்றைய மக்களால் மிகவும் பக்திச் சிரத்தையுடன் போற்றப்படலாயின. கைலாசமலையைத் தாண்டிச் சென்றால், ஈசுவரன் அவர்களைத் தண்டித்துவிடுவார் என்றும், அவ்வாறு எவரும் அங்கே முன்னேக்கிச் செல்லமுடியாதவாறு தேவர்கள் அங்குத் தடுத்து நின்றனர் என்றும் கூறப்படுகின்றது. இமயமலையில் பரமசிவன், பார்வதியுடன் வசித்து வருவதாயும், இந்திரன் முருகன் முதலான கடவுளர்கள் இருந்து வருவதாகவும், மற்றும் ரிஷிகள் தவம் செய்து கொண்டுள்ளனர் என்பதாகவும், தேவர்கள் அங்கே சூழ்ந்து நிற்கின்றனர் என்பதாகவும் பல புராண இதிகாசங்களில் காணப்படும் செய்திகளேயாம். தெய்விகத் தன்மையை, இயற்கையன்னையின் பேரருட் சக்தியை எதிர்த்துச் செல்வது ஆபத்தானதே என்ற கொள்கையை வலியுறுத்தவே அத்தகைய விளக்கங்கள் கூறப்பட்டனபோலும்.

"மேருக் குன்றத் தூருநீர்ச் சரவணத்து"

—(மணிமேகலை: உதயகுமரன் அம்பலம்புக்க காதை 92)

"பொதியிலாயினும் இமயமாயினும்"

—(சிலப்பதிகாரம்: மங்கல வாழ்த்துப் பாடல் 14)

"நாசமான பாசம் விட்டு நல்நெறி நோக்கலுறில்
வாசம் மல்குதண் துழாயான் வதரி வணங்குதுமே."

—(பெரிய திருமொழி: 1-38)

இம் மூன்று பாடல்களிலும், மேரு, இமயம், வதரி (பதிரிகாஸ்ரமம்) ஆகிய சொற்கள் வந்துள்ளன. இமயமலை நீண்ட காலமாகவே தேவர் இல்லம் என்று வழங்கப்பட்டு வந்துள்ளது. யமுனை, கங்கை, பிரம்மபுத்ரா, சிந்து ஆகிய நதிகள் யாவும் இமயமலையில் தான் உற்பத்தியாகின்றன.

"மன்னும் இமய மலையெங்கள் மலையே
மாநில மீதது போற்பிறி திலையே
இன்னறு நீர்க்கங்கை யாறெங்கள் யாறே
இங்கிதன் மாண்பிற் கெதிரெது வேறே!
பன்னரும் உபநிட நூலெங்கள் நூலே
பார்மிசை யேதொரு நூல்இது போலே?
பொன்னொளிர் பாரத நாடெங்கள் நாடே
போற்றுவம் இஃதை எமக்கிலை ஈடே."

—(மகாகவி பாரதியார்: எங்கள் நாடு 1)

# முடிவுரை

ஆக, இது காறும் பெரிப்ளூஸ் எனும் நூல் வாயிலாகப் பல அரிய செய்திகளை அறிந்தோம். கி.பி. முதல் நூற்றாண்டில் இந்தியாவிற்கும் எகிப்து நாட்டிற்கும் நடந்தேறிய வாணிப முறைகளும்; பண்டமாற்றுச் செய்து கொண்ட அரிய பண்டங்களின் அட்டவணைகளும்; ஆப்பிரிக்கக் கடற்கரையில் உள்ள முக்கியமான வாணிக நகர்ச் சந்தை கூடும் இடங்களும்; அரேபியாவின் கடற்கரைத் துறைமுகங்களும்; இந்தியாவின் கடல் ஓரங்களில் விளங்கிய அக்காலத் துறைமுகங்களும்; அவற்றின் பெயர்களும்; அவற்றில் ஏற்றுமதி இறக்குமதி செய்யப்பட்ட பண்டங்களும்; சிந்துநதி, கங்கைநதி நர்மதைநதி, பேரியாறு, காவேரி, தாமிரபருணி ஆகிய நதிகளும்; மற்றும் கோதாவிரி, கிருஷ்ணை, ஸ்வர்ணமுகி முதலிய நதிகளின் இருப்பிடங்களும்; அந் நதிகளின் கரைகள்மீது விளங்கிய ஆற்றுத் துறைமுகங்களும்; கழிமுகத்தில் விளங்கிய கடற்கரைத்துறைமுகங்களும்; துறைமுகப்பட்டினங்களும்; இந்தியாவிற்கும் ஆப்பிரிக்காவுக்கும் இடையேயுள்ள பற்பல தீவுகளின் வர்ணனைகளும், ஸ்வர்ணத்வீபம் என வழங்கப்பட்ட மலேயா தீபகற்பமும்; அங்குப் பொன்கிடைத்த வரலாறும்; பற்பல நவமணிகளும் முத்துகளும்; உயர்ந்த வைரம் முதலிய கற்கள் கிடைக்கப்பெற்ற இடங்களும், அவை எவ்வெவ்விடங்களுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன என்பன போன்ற வரலாறுகளும்; ஹிந்துகுஷ்மலை, இமயமலை, மலையாள மலை, விந்தியமலை, பொதியில்மலை, இலங்கை ஆதாம் சிகரம்,

அஸ்ஸாம் மலை, மந்தரிகிரிமலை, மலேயா தீபகற்பமலை ஆகிய வற்றின் விவரங்களைப் பற்றிக் கூறும் வியத்தகு செய்திகளும்; இமயமலையிலும், மலையாள மலையிலும் கிடைக்கப் பெறும் இலவங்கம், இலவங்கபத்ரி, மிளகு, சடாமாஞ்சி முதலிய வாசனைப்பண்டங்களும்; அக் காலத்தில் மக்களால் பெரிதும் விரும்பப்பட்ட ஆமை ஓடுகள், தந்தம், மஸ்லின் துணிகள், காவித் துணிகள், நீலநிறத் துணிகள், பஞ்சு, பித்தளை, இரும்பு, பொன், தேங்காய், மிளகு, இலவங்கபத்திரி, கஸ்தூரி, குங்குமப்பூ, வெள்ளைப் போளம், சந்திரகாந்தக்கல், பவளம், ஒர்க்கோலை, மனோசிலை, சடாமாஞ்சி, நீலாஞ்சனக்கற்கள், போளவகைகள் முதலியனவும்; சிறுத்தை, யானை, பாம்பு, கழுதைப்புலி ஆகியவற்றின் சிலவகைகளும்; சேர, சோழ, பாண்டிய அரசர்களைப் பற்றிய குறிப்புகளும்; அவர்கள் தலை நகரங்களும், அவற்றின் வரலாறுகளும்; ஆப்பிரிக்காவுக்கும் இந்தியாவுக்கும் கப்பல் போக்குவரத்துக்காக உகந்த ஹிப்பலுஸ், ஈடீஷியன் காற்றுகளின் விவரங்களும்; குமரிமுனை, இலங்கைத் தீவு ஆகியவற்றின் வரலாறுகளும்; ஆந்திர நாட்டுக் கடற்கரையும், அன்று அங்கு விளங்கிய துறைமுகப்பட்டினங்களும்; திபெத்து நாடு, சீனநாடு இவை இந்தியாவுக்கு அளித்த முக்கிய மலைப்பொருள்கள், பட்டுநூல், பட்டுத்துணிகள் ஆகிய வற்றின் விளக்கங்களும்; பண்டைய நாளில் நம் தமிழ்நாடு தமிழகம் என்ற பெயராலேயே விளங்கிற்று என்பதற்குச் சரியான ஆதாரங்களும்; தமிழ்ச் சொற்கள், வடமொழிச் சொற்கள் எவ்வாறு ரோமப் பேரரசு வாணிகத்திலும், அரபுச் சொற்கள் எவ்வாறு தமிழில் புகுந்து திரிபுச் சொற்களாகவும் வழூஉச் சொற்களாகவும் விளங்கின என்பன போன்ற செய்திகளும்; கிரேக்கநாடு, ஐரோப்பா கண்டம், ஆசியா கண்டம், ஆப்பிரிக்கா கண்டம், இந்திய நாடு, இத்தாலி நாடு, கிழக்கிந்திய நாடுகள் சீன நாடு ஆகியவற்றை விவரிக்கும்போது, அவற்றுடன் இணைந்த வரலாற்றுச் செய்திகளும்; ஆங்காங்குப் பலப்பல மக்கள் இனங்கள் எவ்வாறு வாழ்ந்தனர், அவர்களுடைய பழக்க வழக்கங்கள் ஆகியவை பற்றிய அரிய செய்திகளும்; எகிப்தில் இறந்த சடலங்கள் எவ்வாறு பல்லாயிரக் கணக்கு ஆண்டுகளாகப் பழுதுருவண்ணம் பாதுகாக்கப்படுகின்றன என்ற செய்திகளும் ஆக இவைபோன்ற இன்னும் பற்பல செய்திகளையும் நாம் இதுகாறும் படித்து மகிழ்ந்தோம். முதல் நூற்றுண்டில் கிடைக்கப் பெற்ற ஆதாரச் செய்திகள் இவை மட்டுமே என்பது முற்றிலும் உண்மை.

மற்றும் பெரிப்ளுஸின் ஆசிரியர் கூறும் இடங்கள், வரலாறுகள் விளக்கங்கள் அவற்றுடன் **ஹோமர், ஹெரடோடஸ் மெகஸ்தனிஸ், ஸ்டிராபோ, பிளினி, யுவான் சுவாங், ஃபாஹியான், மார்க்கோ போலோ, இபின்படூடா** முதலான வரலாற்றுசிரியர்கள் கொடுத்

துள்ள விளக்கங்களை ஒப்பிட்டு, எவை சரியானவை, எவை கேட்டு மகிழ்ந்தவை, எவை பார்த்து மகிழ்ந்தவை என்பன போன்ற ஒப்புமைச் செய்திகள் மேற்கோள் நூல்களுடன் ஆங்காங்குக் கொடுக்கப்பட்டுள்ளன. பெரிப்ளூஸின் ஆசிரியர், பிளினி முதலானவர்கள் வெளியிடும் ஆதாரச் செய்திகளைக் கொண்டு, வரலாறு இன்னும் செப்பனிட வேண்டிய நிலையில் உள்ளது. கி.பி. முதல் நூற்றாண்டில் நிலவிய உண்மையான வரலாற்றை அறிய பெரிப்ளூஸ் மிகவும் பயன்படும் என்பது வெற்றுரையன்று; உண்மை பொதிந்த வாசகமேயாகும். பெரிப்ளூஸில் குறிப்பிடப்படும் நாட்டு வரலாறு, அரசர் வரலாறு, பண்டங்கள் வரலாறு, இயற்கை வரலாறு, மக்கள் வரலாறு ஆகிய யாவும் பொன் எழுத்துகளால் பொறிக்கப்பட வேண்டும் என்பது முக்காலும் உறுதி.

வாழ்க தமிழ்! வாழ்க தமிழகம்! வாழ்க இந்தியப் பண்பாட்டு முறைகள்! வாழ்க வரலாற்றுச் சான்றுகள்!

"தாமின் புறுவது உலகுஇன் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்."

—திருக்குறள்

# பிற்சேர்க்கை IV

## பெரிப்ளூஸ் நூலில் குறிப்பிடப்பட்ட ஊர்ப் பெயர்களின் அகர வரிசை

### 1. இந்தியா

| முன்னர் வழங்கிய பெயர் | தற்போது வழங்கும் பெயர் | இருப்பிடம் நிலநடுக் கோட்டிற்கு தீர்க்கா மிச ரேகை |
|---|---|---|
| அரகோசியா | ஆப்கானிஸ்தானம் | 34°·0′வ × 65°·0′கி. |
| அரணபோ | மால்வான் | 16°·3′வ × 73°·30′கி. |
| அஷ்டசம்பரா | நவ்சார் | 21°·7′வ × 73°·40′கி. |
| ஆகிட்டி | கோவா | 15°·20′வ × 74°·0′கி. |
| ஆர்கரு | உறையூர் | 10°·50′வ × 78°·46′கி. |
| ஈரினுன் வளைகுடா | ரான் ஆப் கச் | 24°·0′வ × 70°·0′கி. |
| ஒஜினி | உஜ்ஜயினி | 23°·9′வ × 75°·43′கி. |
| காஞ்சஸ் | கங்கைநதி | 21°·30′வ × 89°·30′கி. |
| காந்தாரிடிஸ் | காந்தாரம் | 33°·40′வ × 72°·50′கி. |
| காமாரா | காவிரிப்பூம்பட்டினம் | 11°·1′வ × 79°·54′கி. |
| கார்னிதே | சிப்பித்தீவு | 14°·49வ × 74°·4′கி. |
| கிரிஸோலிஸ் | கிருஷ்ணநதி | 15°·55′வ × 81°·10′கி. |
| கிரிஸோனிஸஸ் | கார்வார் | 14°·48′வ × 74°·11′கி. |
| கிரிஸே தீவு | சுமத்திரா தீவு | 0°.0′ × 100°·0′கி. |
| கெட்ரோஷியா | பலுசிஸ்தானம் | 28°·0′வ × 65°·0′கி. |
| கொட்டநாரா | குட்டநாடு | 9°·30′வ × 76°·23′கி. |
| கோல்கே | கொற்கை | 8°·34′வ × 78°·10′கி. |
| சிந்தஸ் | சிந்துநதி | 24°·30′வ × 68°·0′கி. |
| கிம்மோனி | காம்பே வளைகுடா | 20°·42′வ × 71°·1′கி. |
| செசக்ரினே | வெங்கூர்லா பாறை | 15°·23′வ × 70°′23′கி. |
| செமில்லா | சவுல் (சாம்பாவதி) | 18°·34′வ × 72°·55′கி. |
| சோபட்ணு | மயிலாப்பூர், திருவல்லிக்கேணி | 13°·42′வ × 80°·17′கி. |
| சோப்பாரா | சுபாரகா | 19°·25′வ × 73°·40′கி. |
| டிமிரிகா | தமிழகம் | 13°·4′வ × 80°·17′கி. |
| தகரா | தாயிர் | 18°·19′வ × 76°·9′கி. |
| தட்சிணபதேஸ் | தட்சிணப் பிரதேசம் | தென் இந்தியா |
| தாப்ரபனே | தாமிரபருணி (இலங்கை) | 8°·34′வ × 78°·00′ கி. |
| திண்டிஸ் | பொன்னுனி(தொண்டி) | 10°·47′வ × 75°·58′கி. |

| | | |
|---|---|---|
| தோசரீனி | ஒரிஸ்ஸா | 18°·52′வ × 82°·38′கி. |
| நம்மதூஸ் | நர்மதை ஆறு | 21°·38வ × 74°·0′கி. |
| நெல்கிந்தா | நக்கிடா | 9°·22′வ × 76°.22′கி. |
| நௌரா | கண்ணனூர் | 11°·52′வ × 75°·25′கி. |
| பராகா வளைகுடா | காம்பே வளைகுடா | 21°·0′வ × 71°·30′கி. |
| பராலியா | திருவனந்தபுரம் | 8°·29′வ × 76°·59′கி. |
| பாலஸிமுண்டு | இலங்கை | 8°·22′வ × 80°·23′கி. |
| பழைய படுரே | பழையபட்டணம் (தாபிலேஷ்வர்-தாபோல்) | 17°·35′வ × 73°·10′கி. |
| பாபைகா முனை | கோபிநாத் முனை | 21°·0′வ × 71°·30′கி. |
| பாரிகாஸா | பாருகச்சம் (புரோச்) | 21°·49வ × 73°·1′கி. |
| பார்பரிகம் | டட்டா | 24°·44′வ × 67°·58கி. |
| பிரம் தீவு | பெகோனஸ் | 21°·0′வ × 71°·30′கி. |
| புரோமென்டேரியம் குமாரி | குமரிமுனை | 8°·4′வ × 77°·36′கி. |
| பூசிபாலா | ரசுல் | 32°·35′வ × 73°·47′கி |
| பைஜாண்டியம் | விஜயதுர்க்கம் | 16°·26′வ × 73°·26′கி |
| பேதாறு | பைதான் (பிரதிஷ்டானபுரம்) | 19°·29′வ × 75°·26′கி |
| பைரான் மலை | ஆனைமலை | 10°·24′வ × 76°·40′கி |
| பொகாலிஸ் | புஷ்கலபுரம் (பியூகலாடிஸ்) | 34°·8′வ × 71°·46′கி. |
| பொதுகா | மாமல்லபுரம் | 12°·37′வ × 80°·14′கி. |
| மந்தகோரா | மந்தரகிரி | 17°·29′வ × 76°·17′கி. |
| மஸாலியா | மசூலிப்பட்டினம் | 16°·09′வ × 81°·12′கி. |
| மாயிஸ் | மாஹிநதி | 21°·0′வ × 71°·30′கி. |
| மின்னகரம் | நகரி (சித்தூர்) | 13°·13′வ × 79°·8′கி. |
| முசிறிஸ் | முசிறி (கிரேங்கனூர்) | 11°·0′வ × 76°·5′கி. |
| மெலிசீகிரிஸ் | மலையகிரி (ஜைகார்) | 17°·17′வ × 71°·13′கி. |
| லாரிகா | ராஷ்டரிகம் | 22°·0′வ × 73°·30′கி. |
| ஸைராஸ்டிரீன் | சௌராஷ்டிரம் | 22°·0′வ × 71°·00′கி. |
| ஹிரோணி | ரான்ஆப்கச் | 24°·0′வ × 70°·0′கி. |

## 2. அரேபியா

| | | |
|---|---|---|
| அசபான் | ஜெபல்சிபி | 23°·30′வ × 57°·0′கி. |
| அரியகா | அரியா(திராங்கியாறு) | 32°·0′வ × 62°·0′கி. |
| அரேபியா | அரேபியா | 12°·45′வ × 45°·4′கி. |
| ஆர்சினோ | சூயெஸ் | 30°·00′வ × 32°·30′கி |
| இயூடிமான் அரேபியா | ஏடென் | 12°·45′வ × 45°·4′கி. |

| | | |
|---|---|---|
| எரித்திரியா | செங்கடல் | 20°·00′வ × 39°·0′கி. |
| ஓரியா | சோன்மியானி (ராஸ்மலான்) | 25°·0′வ × 65°·0′கி. |
| ஓசெலிஸ் | பாபல் மாண்டப் (அரேபியா பெலிக்ஸ்) | 13°·0′வ × 43°·0′கி. |
| ஓப்சியன் வளைகுடா | ஹக்கிள் பே | 14°·44′வ × 40°·49′கி. |
| ஓமனு | மஸ்கட் | 23°·37′வ × 58°·36′கி. |
| ஓமனு வளைகுடா | கமார் பே | 16°·15′வ × 53°·23′கி. |
| ஔசானிடிக் கடற்கரை | கைட்டி ஹறப்பான் | 14°·0′வ × 49°·0′கி. |
| காலே தீவுகள் | மஸீரா தீவுகள் | 21°·0′வ × 59°·0′கி. |
| கானே | ஹிஸன் கோரப் | 14°·10′வ × 48°·28′கி. |
| காஸ்பியன் ஸீ | காஸ்பியன் கடல் | 42°·0′வ × 52°·0′கி. |
| சபாதா | வாடிராகியா | 11°·0′வ × 49°·0′கி. |
| சாக்கலேடிஸ் வளைகுடா | சுவாஹில் | 25°·0′வ × 56°·0′கி. |
| சாப்பார் | ஸாஆப்பார் | 14°·0′வ × 43°·0′கி. |
| சாரக்ஸ் ஸ்பாஸினி | மொகமாரா | 30°·24′வ × 48°·11′கி. |
| சித்திய நாடு | உஸ்பெக், டாட்ஷிக் | 45°·0′வ × 60°·0′கி. |
| சையாகரஸ்(சைகரஸ்) | ராஸ்பார்டாக் | 15°·36′வ × 52°·12′கி. |
| டோம் ஐலண்டு | குரியா முரியா | 17°·40′வ × 56°·0′கி. |
| தாபே | ஸிநாய் | 35°·0′வ × 29°·0′கி. |
| பர்ட்ஸ் ஐலண்டு | குரியா முரியா | 17°·40′வ × 56°·0′கி. |
| பர்ன்ட் ஐலண்டு | ஜபல்தாயிர் | 15°·35′வ × 41°·51′கி. |
| பாக்டிரியா | ஆப்கன் டர்கிஸ்தான் | 36°·00′வ × 66°·0′கி. |
| பாண்டஸ் யூக்ஸைன் | கருங்கடல் | 43°·0′வ × 33°·0′கி. |
| பாரிசுதே | பாரசீகம் | 30°·00′வ × 55°·0′கி. |
| பாரிசுதே வளைகுடா | பெர்ஷியன் கல்ப் | 26°·00′வ × 53°·0′கி. |
| பார்த்திய நாடு | குரஸான் | 35°·0′வ × 63°·0′கி. |
| பேத்ரா | ரெகெம் (வாடிஎல்அராபா) | 30°·20′வ × 35°·18′கி. |
| முஸெல் ஹார்பர் | மயோஸ் ஆர்மஸ் (ராஸ் அபு முகமத்) | 29°·0′வ × 34°·50′கி. |
| மூஸா | மோசா | 13°·20′வ × 43°·12′கி. |
| மெயோடிஸ் | அஜாவ் கடல் | 46°·0′வ × 37°·0′கி. |
| மோஷா | டாக்வா | 17°·22′வ × 56°·26′கி. |
| யூப்ரடீஸ் | யூப்ரடீஸ் நதி | 30°·30′வ × 47°·50′கி. |
| ராம்பெய்கா | பேலா(பலுசிஸ்தானம்) | 26°·0′வ × 66°·0′கி. |
| லியூகி கோமே | எல்ஹறாலா (செங்கடல் பகுதி) | 25°·7′வ × 37°·13′கி. |
| ஸௌவா | ஸா-ஆப் | 13°·0′வ × 46°·0′கி. |

| | | |
|---|---|---|
| ஹார்மஸ் | ஹார்மஸ் (அரேபியாவடகிழக்கு) | 26°·0′வ × 54°·0′கி. |
| ஹைட்ரமௌத் | ஹைட்ரமௌத் (அரேபியா தெற்கு) | 16°·0′வ × 50°·0′கி. |

## 3. ஆப்பிரிக்கா

| | | |
|---|---|---|
| அகானே | பண்டார் அலூலா | 11°·0′வ × 48°·0′கி. |
| அடுலிஸ் | மஸாவா | 15°·36′வ × 39°·28′கி. |
| அப்பொலோகஸ் | ஒபோலா (ஒபாக்) | 11°·0′வ × 43°·0′கி. |
| அலெக்சாந்திரியா | அலெக்சாந்திரியா (நைல் கழிமுகம்) | 31°·11′வ × 29°·51′கி. |
| அவலேட்டிஸ் வளைகுடா | ஜெய்லா | 11°·0′வ × 44°·0′கி. |
| அஜானியா | எல்ஹாசின் | 7°·44′தெ × 49°·44′கி. |
| ஈதியோபியா | ஈதியோபியா | 10°·00′வ × 40°·00′கி. |
| ஈஜிப்ட் | எகிப்து | 25°·0′வ × 37°·0′கி. |
| ஒபோனி | ஆனேமுனே (ராஸ்ஹாபன்) | 10°·25′வ × 51°·25′கி. |
| கோலோ | கலாபா | 14°·0′வ × 36°·0′கி. |
| செரபியன் | மொகதீஷு | 25°·0′வ × 45°·25′கி. |
| சைனியம் | சென்னூர் | 13°·36′வ × 33°·50′கி. |
| டிஸ்கார்டியா | சொகோத்ரா தீவு | 12°·30′வ × 54°·0′கி. |
| டையடோரஸ் | do | do |
| டையோஸ்பாலிஸ் | கார்னுக் | 15°·36′வ × 32°·48′கி. |
| நைலஸ் | நைல்நதி | 28°·0′வ × 32°·0′கி. |
| பார் அஜ்ஜான் | அஜானியா கடற்கரை | 7°·44′தெ × 49°·44′கி. |
| பானே | ரரஸ்-பின்னு | 11°·12′வ × 51°·07′கி. |
| பிலுக் | ஆனேமுனே (ராஸ்ஹாபன்) | 10°·25′வ × 51°·25′கி. |
| பெரெனிஸ் | ராஸ்பினுஸ் | 24° 0′வ × 36°·0′கி. |
| பெர்பெர் | பெர்பெர் (சூடான்) | 17°·57′வ × 34°·0′கி. |
| மாலோ | பெர்பெரா (சோமாலிலாந்து) | 10° 30′வ × 45°·0′கி. |
| முண்டுஸ் | லாஸ்கோரே (சோமலிலாந்து) | 10°·40′வ × 47°·5′கி. |
| மெரோ | மெரோ (நூபியா) | 19°·0′வ × 32°·0′கி. |
| மோஸைலம் | ராஸெட்டா (நைல் கழிமுகம்) | 31°·0′வ × 30°·30′கி. |
| ராப்தா | டார்எஸ் ஸலாம் (தாங்கனிகா) | 9° 0′தெ × 39°·40′கி. |
| லிபியா | லிபியா | 25°·0′வ × 26°·0′கி. |
| ஜான்ஸிபார் | ஜான்ஸிபார் | 5°·0′தெ × 38°·30′கி. |

## 4. சீனநாடு

| | | |
|---|---|---|
| தினே, த்ஸினே | சீனநாடு | 39°·55′வ × 116°·24′கி. |

## 5. மத்திய தரைக்கடல் நாடுகள்

| | | |
|---|---|---|
| இலாவொடீசியா | லடாகியா (சிரியா) | 35°·35′வ × 35°·48′கி. |
| ஸ்மர்ணு | இஸ்மிர் (டர்க்கி) | 38°·26′வ × 27°·13′கி. |

# மேற்கோள் நூற்பட்டியல்

## (Bibliography)


| | | |
|---|---|---|
| Bhandarkar R. G. | — A peep into the Early History of India | 1920 |
| Bible | — King James Authorised Version | 1955 |
| Cambridge University | — Cambridge History of India Vol I. | 1922 |
| Bury, J.B., M.A. | — History of Greece | 1911 |
| Cunningham A.C. | — Ancient Geography of India | 1910 |
| Gopalan R. | — History of the Pallavas of the Kanchi | 1928 |
| Herodotus | — Histories | 1954 |
| Joseph T.K. | — Trade in Malabar Coast | 1952 |
| Keith, B.A. | — A History of Sanskrit Literature | 1928 |
| Krishnaswamy Iyengar Dr. S., M.A. | — Beginnings of South Indian History | 1918 |
| Majumdar, R.C. | — Outline of Ancient Indian History and Civilisation | 1927 |
| Mc Crindle, J.W. | — Megasthenes (Fragments) | 1926 |
| ,, | — Arrian Indika | 1926 |
| ,, | — The Periplus of the Erythrean Sea | 1914 |
| Marshall, Sir, John | — Taxila | 1952 |
| Mookerji, R.K. Prof. | — An Advanced History of India | 1950 |
| Nilakanta Sastri, K.A., M.A. | — A History of South India (2nd Edn) | 1958 |
| The Oxford University Press | — The Oxford Indian School Atlas | |
| The Oxford University Press | — The Oxford Advanced Atlas | |
| Pliny | — Natural History | 1949 |

| | | |
|---|---|---|
| RamachandraDikshitar— | The Mauriyan Polity | 1932 |
| Samuel Beal, Rev. — | Buddhist Records of the Western World (SI-YU-KI) | 1914 |
| ,, — | Fu-Ko-Chi | 1914 |
| Sathianatha Iyer, M.A.L.T., — | History of India, Vol I. | 1952 |
| Schoff — | Periplus | 1918 |
| Smith, V. A. Dr. — | The Early History of India | 1924 |
| Srinivasa Iyengar, P.T. — | History of the Tamils | 1929 |
| Takaksu J. — | Fa-Hien | 1896 |
| Watters, T. — | On Yuwan Chwang Vols 1 & 2. | 1904 |
| Cassel & Co, London — | Latin-English Dictionary | 1915 |
| இராகவன், வி.எஸ்.வி. — | இராபின்சன் குருசோ | 1959 |
| ,, — | சிந்துபாது | 1968 |
| ,, — | ஃபாஹியான் | 1963 |
| ,, — | பிளினி | 1977 |
| ,, — | புது நாடு கண்ட பெரியார்கள் | 1961 |
| ,, — | மார்க்கோபோலோ | 1968 |
| ,, — | மெகஸ்தனிஸ் | 1977 |
| ,, — | யுவான் சுவாங் | 1959 |
| கிருஷ்ணசாமி ஐயங்கார், டாக்டர், எஸ். — | சேரன் வஞ்சி | 1960 |
| சாமிநாத ஐயர், டாக்டர் உ.வே.— | அகநானூறு | 1954 |
| ,, — | குறுந்தொகை | 1956 |
| ,, — | சீவகசிந்தாமணி | 1949 |
| ,, — | பத்துப்பாட்டு | 1956 |
| ,, — | மணிமேகலை | 1949 |
| சென்னைப் பல்கலைக் கழகம் — | லெக்சிகன் Vols. I to VI | 1926 |
| திருவள்ளுவர் (ஆறுமுகநாவலர் பதிப்பு) — | திருக்குறள் | 1949 |
| வேங்கடசாமி நாட்டார் — | சிலப்பதிகாரம் | 1952 |

# சொற்பொருட் குறிப்பகராதி

---

## மணிவாசகர் நூலகம்

# பதினாறுவதாண்டின்
# சிறந்த வெளியீடுகள் பதினாறு

---

**டாக்டர் வ. சுப. மாணிக்கம்**

| | | |
|---|---|---|
| *ஒப்பியல் நோக்கு* | 5 | 00 |

**கி. வா. ஜகந்நாதன்**

| | | |
|---|---|---|
| *கவி பாடலாம்* | 6 | 50 |

**சதாசிவ பண்டாரத்தார்**

| | | |
|---|---|---|
| *இலக்கியமும் கல்வெட்டுக்களும்* | 5 | 00 |
| *கல்வெட்டுக்கள் கூறும் உண்மைகள்* | 4 | 50 |

**வி. எஸ். வி. இராகவன்**

| | | |
|---|---|---|
| *பிளினி* | 20 | 00 |
| *பெரிப்ளூஸ்* | 16 | 00 |
| *மெகஸ்தனிஸ்* | 16 | 00 |

**ஆர். எஸ். மார்க்கபந்து சர்மா,** எம். ஏ.

| | | |
|---|---|---|
| *சிலம்பின் ரசனை* | 8 | 00 |

**சோமலே**

| | | |
|---|---|---|
| *இமயம் முதல் குமரி வரை* | 8 | 00 |

**டாக்டர் சோ. ந. கந்தசாமி**

| | | |
|---|---|---|
| *தமிழும் தத்துவமும்* | 12 | 50 |

**டாக்டர் என். வி. செயராமன்**

| | | |
|---|---|---|
| *யாப்பியல் திறனாய்வு* | 6 | 50 |
| *பாட்டியல் திறனாய்வு* | 3 | 50 |

**டாக்டர் எம். எல். திருமலை**

| | | |
|---|---|---|
| *தமிழ் கற்பித்தல்* | 7 | 50 |

**மு. வை. அரவிந்தன்**

| | | |
|---|---|---|
| *மொழியியல் சிந்தனைகள்* | 6 | 50 |

**மது. ச. விமலானந்தம்**

| | | |
|---|---|---|
| *சிலப்பதிகாரத் திறனாய்வு* | 5 | 00 |

**எம். வி. வெங்கட்ராமன்**

| | | |
|---|---|---|
| *ஒரு பெண் போராடுகிறாள்* | 20 | 00 |
| *அரும்பு* | 18 | 00 |

**ச. மெய்யப்பன்**

| | | |
|---|---|---|
| *தாகூர்* | 6 | 75 |